# சங்க இலக்கியத்தில் சமய தத்துவக் கூறுகள்

சென்னைப் பல்கலைக்கழக
முனைவர் (பிஎச்.டி.,) பட்டப்பேற்றிற்காக
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சி.சுந்தரமூர்த்தி,** எம்.ஏ., எம்.ஃபில்.

**நெறியாளர்**

முனைவர் **க.சம்பத்குமார்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் மற்றும் மேனாள் துறைத்தலைவர்,
தத்துவத்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030

**இணை நெறியாளர்**

முனைவர் **வா.மு.சே.முத்துராமலிங்க ஆண்டவர்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030






**தத்துவத்துறை**

**பச்சையப்பன் கல்லூரி**

சென்னை - 600 030

**செப்டம்பர் - 2018**

முனைவர் **க.சம்பத்குமார்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் மற்றும் மேனாள் துறைத்தலைவர்,
தத்துவத்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030

## நெறியாளர் சான்றிதழ்

பச்சையப்பன் கல்லூரித் தத்துவத்துறையின் முனைவர் பட்ட ஆய்வாளர் **சி.சுந்தரமூர்த்தி அவர்கள், 'சங்க இலக்கியத்தில் சமய தத்துவக் கூறுகள்'** என்னும் தலைப்பில் ஆராய்ந்து உருவாக்கியுள்ள இவ்வாய்வேடு என் மேற்பார்வையில் அவர்தம் சொந்த முயற்சியின் காரணமாக, ஆய்வு நிகழ்த்தி உருவாக்கப்பட்டது எனவும், இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அடிப்படையாக அமையவில்லை எனவும் சான்று வழங்குகின்றேன்.

இடம் : சென்னை-30 **(க.சம்பத்குமார்)**

நாள் : .09.2018 நெறியாளர்

முனைவர் **வா.மு.சே.முத்துராமலிங்க ஆண்டவர்,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030

# இணை நெறியாளர் சான்றிதழ்

சென்னை, பச்சையப்பன் கல்லூரித் தத்துவத்துறையின் முனைவர் பட்ட ஆய்வாளர் **சி.சுந்தரமூர்த்தி அவர்கள், 'சங்க இலக்கியத்தில் சமய தத்துவக் கூறுகள்'** என்னும் தலைப்பில் ஆராய்ந்து உருவாக்கியுள்ள இவ்வாய்வேடு என் இணை மேற்பார்வையில் அவர்தம் சொந்த முயற்சியின் காரணமாக, ஆய்வு நிகழ்த்தி உருவாக்கப்பட்டது எனவும், இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அடிப்படையாக அமையவில்லையெனவும் சான்று வழங்குகின்றேன்.

இடம் : சென்னை-30 **(வா.மு.சே.முத்துராமலிங்க ஆண்டவர்)**

நாள் : .09.2018 இணை நெறியாளர்

திரு.**சி.சுந்தரமூர்த்தி,** எம்.ஏ., எம்.ஃபில்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்க இலக்கியத்தில் சமய தத்துவக் கூறுகள்'** என்னும் தலைப்பில், சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு, என் சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்றும், இதற்குமுன் எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

இடம் : சென்னை-30 **(சி.சுந்தரமூர்த்தி)**

நாள் : .09.2018 ஆய்வாளர்

# நன்றியுரை

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தத்துவத்துறையில் முனைவர்பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், பச்சையப்பன் கல்லூரியின் முதல்வருக்கும், **'சங்க இலக்கியத்தில் சமய, தத்துவக் கூறுகள்'** என்னும் தலைப்பினில் ஆய்வு நிகழ்த்த அனுமதியளித்த மேனாள் தத்துவத்துறைத் தலைவர் முனைவர் **க.சம்பத்குமார் அவர்களுக்கும் நன்றி கூறி மகிழ்கின்றேன்**.

நல்லதொரு தலைப்பினை எடுத்துக் கொள்ள சுதந்திரம் கொடுத்ததோடு ஆய்வு நெறிமுறைகளை வகுத்துக் கொடுத்துச் சிறப்பாக ஆய்வு செய்ய வழி நடத்திய சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் ஆட்சிக்குழு உறுப்பினரும், பேரவை உறுப்பினரும் நெறியாளருமான முனைவர் **க.சம்பத்குமார் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை** உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

இவ்வாய்விற்கு இணைநெறியாளராக வழி நடத்தி உதவிய தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் **வா.மு.சே.ஆண்டவர் அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை தெரிவித்து** மகிழ்கிறேன்.

இவ்வாய்வு தொடங்கியது முதல் இறுதி வரை ஊக்கப்படுத்தியும், நெறிப்படுத்தியும் பல ஆலோசனைகளைத் தந்து பேருதவியாயிருந்த தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **ப.அனுராதா அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்**. இவ்வாய்வு எந்தவித தடங்கலுமின்றி தொடர உதவி செய்த ஆட்சிக்குழு உறுப்பினர், AUT தலைவர், பச்சையப்பன் கல்லூரி முதல்வர் முனைவர்என்.சேட்டு அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். தத்துவத்துறைத் தலைவர் திரு.முனைவர் V.**சீனிவாசன் அவர்களுக்கும், முனைவர்** B.**தேவன் அவர்களுக்கும் நன்றியினைத்** தெரிவித்து மகிழ்கிறேன்.

மேலும் இவ்வாய்விற்கு துணை நின்ற செம்மொழித் துணைத் தலைவர் **தெ.ஞானசுந்தரம் அவர்களுக்கும், முனைவர் மா.ரா.அரசு அவர்களுக்கும், முனைவர் டி.கே.எஸ்.வில்லாளன்** அவர்களுக்கும், பச்சையப்பன் கல்லூரி மேனாள் முதல்வர் **ப.கந்தசாமி அவர்களுக்கும், பச்சையப்பன் கல்லூரி மேனாள் பொறுப்பு முதல்வர் ஜி.பாலகிருஷ்ணன் அவர்களுக்கும், தோழர் முனைவர் இரா.முருகன்** அவர்களுக்கும், தோழர் இயக்குநர் **கலைச்செல்வன்** அவர்களுக்கும், தோழர் **பெ.அண்ணாத்துரை**

அவர்களுக்கும், திரு.**கோ.ஆறுமுகம் அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைப்** பேராசிரியர்களுக்கும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

இவ்வாய்வினை வெகு விரைவாகவும், நேர்த்தியாகவும் தட்டச்சு செய்து கொடுத்த எனது உறவினர் உதவி இயக்குநர் திரு.**ப.பாரதிராஜா** அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக இவ்வாய்வு செவ்வனே நடைபெற எல்லாவிதத்திலும் உறுதுணையாக இருந்து என்னை ஊக்கப்படுத்திய எனது வாழ்க்கைத் துணைவி திருமதி **சு.சகுந்தலா** அவர்களுக்கும், என் பிள்ளைகளுக்கும், என் குடும்பத்தாருக்கும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

**(சி.சுந்தரமூர்த்தி)**

# சுருக்கக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| களவு. | - | களவியல் |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்சர். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| நூ. | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பட்டின. | - | பட்டினப்பாலை |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரும்பாண். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |

| | | |
|---|---|---|
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| மூ.ப. | - | மூன்றாம் பதிப்பு |
| ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| தொ.ஆ. | | தொகுப்பு ஆசிரியர் |
| P. | - | Page |

# பொருளடக்கம்

# முன்னுரை

உண்மைக்கு உரைகல்லாய் விளங்கும் மிகத் தொன்மையான உலக இலக்கியங்களில் ஒன்றாக திகழ்வன நமது சங்க இலக்கியங்கள். இவை சுமார் கி.மு.ஆயிரம் ஆண்டுகளை உள்ளடக்கிய வரலாற்றுக்கருவூலகங்களாகத் திகழ்கின்றன. உலகின் மிகத் தொன்மையான நாகரிகங்களில் காணப்படும் வீரயுகக்காலத்தோடு ஒப்படடு பார்க்கக்கூடிய செறிவும் செம்மையும் கொண்டவைகளாக விளங்குகின்றன. இந்த சங்க இலக்கியங்களின் வாயிலாகப் பண்டைய தமிழ்ச்சமூகத்தின் வளர்ச்சிப் போக்கில் ஒரு விறுவிறுப்பும் இலட்சிய நோக்கும் தொடர்ச்சியாக நடைபயின்று வருவதை நாம் அறிய முடிகிறது. அதனால் பண்டைய தமிழ் மக்களின் வரலாற்றை அறிய உதவும் கருவியாக இவைகள் விளங்குகின்றன. சங்க இலக்கியங்கள் என்று போற்றப்படுவது எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் ஆகும். இவை அகம் புறம் என்ற மரபுகளால் பாகுபடுத்தப்பட்டுள்ளன. இதில் எட்டுத்தொகை நூல்களை மனதில் பதிய வைக்க ஒரு தனிப்பாடல் உண்டு.

**“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**

**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**

**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறமென்று**

**இத்திறத்த எட்டுத்தொகை”**

இதில் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை போன்றவை அகநூல்கள் பதிற்றுப்பத்தும், புறநானூறும் புறநூல்கள். பரிபாடலில் வையைப் பற்றியன அகப்பாடல்கள் ஏனைய செவ்வேள் திருமால் பற்றிய கடவுள் வணக்கப்பாடல்கள் புறம் பற்றியனவாக அமைகின்றன. இதைப்போலவே பத்துப்பாட்டை குறிக்கவும் ஒரு தனிப்பாடல் உண்டு.

**“முருகு பொருநாறு பாண்இரண்டு முல்லை**

**பெருரு வளமதுரைக் காஞ்சி-மருவினிய**

**கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**

**பாலை கடாத்தொடும் பத்து”**

இவற்றுள் ஆற்றுப்படை ஐந்தும் மதுரைக்காஞ்சியும் புறப்பாடல்களாலும் எஞ்சிய நான்கும் அகப்பாடல்கள். நெடுநல்வாடை அகமா, புறமா என்ற கருத்து வேறுபாடு உண்டு. பட்டினப்பாலை காவிரிப்பூம்பட்டினத்தைப் பற்றி பெறும் பகுதி கூறுவதால் பாலைப்பாட்டு எனப்பாடாமல் பட்டினப்பாலை எனப்பட்டது. இதில் அடி அளவில் சிறியது 103 அடிகளுடைய முல்லைப்பாட்டு. அடி அளவில் பெரியது 782 அடிகளுடைய மதுரைக்காஞ்சி ஆகும். பத்துப்பாட்டின் கடவுள் வாழ்த்துப்போல திருமுறுகாற்றுப்படை அதில் முதற்கண் வைக்கப்பட்டுள்ளது. இந்த சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்த வாழ்வியல் இலக்கணம் தொல்காப்பியப் பொருளதிகாரம்.

தொல்காப்பிய பொருளதிகாரத்தின் திணைக்கோட்பாட்டுமுறை சங்க இலக்க்யங்களை ஒழுங்குபடுத்தி பண்டையை தமிழ்ச்சமூகத்தின் சமூகபடிநிலை உருவாக்கத்த்ஹை விளக்கும் ஒளி விளக்காய் திகழ்கிறது. திணைக்கோட்பாடுமுறை இந்திய தேசியத்திற்கு ஒருமைப்பாட்டு வடிவத்தை தருவதாகவும், பகுத்தறிவு சார்ந்ததாகவும், பின்னாளில் பொதுமைச் சிந்தனை கொண்ட திருக்குறள் உருவாக காரணமாக அமைந்ததையும் வரலாற்றில் நாம் காணலாகிறது. இவற்றையெல்லாம் அடிப்படையாகக்கொண்டு சங்க இலக்கியங்களில் காணப்படும் சமய தத்துவக் கூறுகளை ஆராய்ந்தால் புதுமையான நோக்கும், வேற்றுமை களைந்த நடுநிலைப்பண்பும், சமூக உணர்வும் உருவாகும். இதற்கான முயற்சியாய் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது.

## ஆய்வுத் தலைப்புத் தேர்வு:

சங்க இலக்கியங்கள் தொடர்பாக பல்வேறு தளங்களில் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. சான்றோர்களால் மேற்கொள்ளப்பட்டும் வருகின்றன. அதில் விரவிக்கிடக்கும் சமயங்கள் பற்றியும் தெய்வங்கள் பற்றியும் ஆராய்ந்து சான்றோர்கள் நமக்கு கூறியிருந்தாலும் அதை இன்னும் நுணுகி ஆராய்ந்து பார்த்தால் சங்க காலத்திற்குப் பிறகு வருகின்ற சுமார் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் கால தமிழக வரலாற்றையே தீர்மானிக்கின்ற சமய, தத்துவ முரண்பாடுகள் சங்ககால இலக்கியத்திற்குள்ளே முட்டிமோதிக் கொண்டிருந்தன என்பதை ஊகித்தறிய முடிந்தது. அதனடிப்படையில் ஏற்பட்ட ஆர்வ வேட்கையினால் "சங்க இலக்கியத்தில் சமய, தத்துவக் கூறுகள்" என்னும் ஆய்வுக்கு தலைப்புத் தேர்வானது. மேலும் திணைக்கோட்பாட்டு அடிப்படையில் தமிழ்ச் சமூக உருவாக்கத்தை தொல்காப்பியர் எவ்வாறு விளக்குகிறார் என்பதைப்பற்றி ஆராய்ந்தும், கட்டுரைகளும் எழுதிவரும் எனக்கு தமிழ்ச் சமூக உருவாக்கத்தின் அடிப்படையில் சமய,

தத்துவக் கருத்துக்கள் ஏற்படுத்தும் தாக்கத்தையும், வளர்ச்சியையும் கூற வேண்டிய இன்றியமையாமையாலும் இத்தலைப்புத் தெரிவானது.

**ஆய்வின் நோக்கம்:**

கொற்றவை, முருகன், மால், அணங்கு போன்ற தமிழகத்திற்கே உரிய தெய்வங்களின் தன்மைகளை விளக்குதல், அவைகள் தோன்றுவதற்கான காரணத்தையும், சமூக பின்புலத்தையும் விளக்குதல்.

வைதீகச் சமயத்தின் தாக்கம் தமிழகத்தில் ஏற்பட்டதையும் இவற்றோடு தமிழருக்கே உரிய தெய்வங்கள் இணைக்கப்படுதலும், அவ்வாறு ஏற்பட்ட சமயக்கலப்பால் அன்றைய சமூகத்தில் ஏற்பட்ட மாற்றம் என்ன என்பதையும் விளக்குவது.

வைதீகத்தோடு உடன்படாத சமயங்களான சமணமும், பௌத்தமும் எப்போது தமிழகத்தில் நுழைந்தன, அவைகள் நுழைவதற்கு ஏற்ற வகையில் தமிழகம் எவ்வாறிருந்தது, இவைகளின் நுழைவிற்குப் பின் தமிழகத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் என்ன என்பதை ஆய்வது.

வைதீகச் சமயம் தமிழ்த்தெய்வங்களோடு சமயக்கலப்பாகி தமிழக மன்னர்களின் ஆதரவோடு சமண, பௌத்த சமயங்களோடு எவ்வாறு முரண்பட்டு நின்றன என்பதை விளக்குவது.

காலத்தால் பிந்திய பரிபாடல், கலித்தொகை தவிர மற்ற ஆறுதொகை நூல்கள் தமிழகத்தில் சமயங்களின் வளர்ச்சிகளை எவ்வாறு காட்டுகிறது என்பதை விளக்குவது.

பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு போன்றவற்றில் வளர்ந்துவரும் சமயங்கள் எவ்வாறு நிறுவனமயமாகின்றன என்பதை விளக்குவது.

தமிழ்த் தெய்வங்களோடு இணைந்த வைதீக சமய, தத்துவம் தமிழக மன்னர்களோடு கைகோத்து நிலவுடமை வேளாண்மை உற்பத்தியை சார்ந்து நிற்பதை விளக்குவது, சமண, பௌத்த சமய தத்துவங்கள் வணிக மேலாதிக்கம் சார்ந்து நிற்பதை விளக்குவது, இத்தகைய முரண்பாட்டில் வணிக மேலாதிக்கம் வெற்றிபெறுவதையும் தமிழக மன்னர்கள் வீழ்ச்சியடைவதையும் சமண பௌத்த சமயங்களை ஆதரிக்கும் களப்பிரர்கள் தமிழகத்தைக் கைப்பற்றி ஆட்சி செய்வதையும் விளக்குவது; கி.பி.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு வேளாண்மை உற்பத்தியை மையமாக கொண்டு சைவ, வைணவம் கிளர்ந்தெழுவதும் சுமார் ஆயிரம் ஆண்டுகள் தமிழகத்தை தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதும் விளக்கப்படுகிறது. உள்நாட்டு உற்பத்தியையும்; வேளாண்மை உற்பத்தியையும்

முன்னிலைப்படுத்தும் தத்துவங்களே இந்திய மண்ணிலும், தமிழகத்தில் மக்களால் ஆதரிக்கப்பட்டன என்பதை விளக்குவது.

**ஆய்வின் எல்லை:**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்கள் மட்டுமே ஆய்வின் (முதன்மை ஆதாரங்கள்) எல்லைகளாக வரையறுக்கப்பட்டுள்ளன.

**ஆய்வு மூலங்கள்:**

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்கள் மட்டுமே ஆய்வின் மூலங்களாக கொள்ளப்படுகின்றன.

**துணைமை ஆதாரங்கள்:**

தொல்காப்பியம், இந்திய மெய்யியல், தமிழர்பண்பாடு, தமிழகத் தத்துவ மரபு, தமிழர் மானிடவியல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்ட ஆய்வுகள் துணைமை ஆதாரங்களாக கையாளப்படுகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்:**

சங்க இலக்கியங்களில் காணப்படும் சமய, தத்துவக் கூறுகளை கண்டறிய வரலாற்றுப் பார்வையோடும்; சமூக, சமய, தத்துவப் பார்வையோடும்; மானிடவியல் பார்வையோடும், திணைக்கோட்பாட்டுப் பார்வையோடும் விளக்க முறை ஆய்வாக மேற்கொள்ளப்படுகிறது. இவ்வாய்வில் சங்கப் பாடல்கள் இன்றியமையாத இடங்களில் மட்டுமே எடுத்தாளப்படும். சில இடங்களில் பாடல்களில் பயின்று வரும் சொற்கள் மேற்கோளாகச் சுட்டப்பெறும். மற்ற இடங்களில் பொருள் விளக்கம் கருதி உரையாக வழங்கப்படும்.

**கருதுகோள் :**

1. சமயங்களுக்கிடையேயான முரண்பாட்டிற்குப் பொருளாதாரமே அடிப்படை.
2. ஒவ்வொரு சமயத்திற்கும் அல்லது தத்துவத்திற்கும் ஒரு வர்க்க சார்பு உண்டு.

**ஆய்வேட்டின் அமைப்பு:**

முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாக பிரிக்கப்பட்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

**இயல் ஒன்று** : பழந்தமிழர் தெய்வங்களின் தோற்றமும், வளர்ச்சியும், வழிபாடும்.

**இயல் இரண்டு** : சைவ, வைணவ தாக்கமும்; தமிழகத்தில் ஏற்பட்ட மாற்றங்களும்.

**இயல் மூன்று** : சமண, பௌத்த சமயங்களின் தாக்கமும்; தமிழகத்தில் ஏற்பட்ட மாற்றங்களும்.

**இயல் நான்கு** : சமயங்கள் நிறுவனமயமாதலும் பெருந்தெய்வங்களின் தோற்றமும்.

**இயல் ஐந்து** : சைவ, வைணவ, சமண, பௌத்த சமயங்களின் முரண்பாடுகளும், பொருளியல் பின்னணிகளும்.

**இயல் ஒன்று - பழந்தமிழர் தெய்வங்களின் தோற்றமும் வளர்ச்சியும் வழிபாடும்.**

தாய்வழிச் சமூகத்தின் இறுதி எச்சமாக விளங்கும் இனக்குழுச் சமூகத்தில் தோற்றம் பெறும் கொற்றவைத் தெய்வத்தையும் அதன் தன்மைகளையும் ஆராய்ந்து விளக்கப்படுகிறது. உலகின் பல பாகங்களிலும் பெரும் இனக்குழுச் சமூகத்தில் தமிழகத்தில் தோன்றிய முருகக் கடவுளைப் போன்று குணங்கள் கொண்ட தெய்வங்கள் தோன்றியது சுட்டிக்காட்டப்படுகிறது. குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் கொற்றவை தெய்வத்தின் தொடர்ச்சியாக கொற்றவை மகனாக உருவெடுத்து வருவது விளக்கப்படுகிறது. முருக வழிபாட்டின் முக்கிய அம்சமான வேலன் வெறியாடுதல் விளக்கப்படுகிறது. இனக்குழுக்கள் நிலைத்த நாகரிகமாகவும் பெருங்குழுக்களாக மாறும் காலத்தில் அதாவது குறுஅரசமைப்பு காலத்தில் வலியை, போர்த்திறன், காதல் இயல்பு, இயற்கையை வெல்லும் திறன் இதுபோன்ற தன்மைகள் கொண்ட தெய்வமாக உருவெடுத்தல். தொடரும் அதன் வளர்ச்சிப்போக்கில் தனி சமயமாக உருவெடுக்க முயற்சிக்கும் போது மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு போன்ற குணநலன்களை கொண்ட தெய்வமாக உருவாக்கப்படுவதை விளக்குவது. இனக்குழு அரசமைப்பு வளர்ச்சியடைந்து முன்னேறிய காலத்திலும், காடுகலை அழித்து விவசாய உற்பத்திக்கு முன்னேறிய காலத்திலும் “மால்” தெய்வத்தின் தன்மைகளையும் ஆராய்ந்து விளக்கப்படுகிறது. அணங்கு பற்றிய பழந்தமிழரின் நம்பிக்கைகள் விளக்கப்படுகிறது. நடுகல்வழிபாட்டுமுறை விளக்கப்படுகிறது.

**இயல் இரண்டு - சைவ, வைணவ சமயங்களின் தாக்கமும்; தமிழகத்தில் ஏற்பட்ட மாற்றங்களும்.**

சைவம், வைணவம் என்பனவற்றின் தத்துவ விளக்கம் கூறப்படுகிறது. வைதீக சமயத்தினரின் தமிழக வருகையும், அவர்கள் கொண்டுவந்த சோதிடக்கலை தமிழக மன்னர்களிடத்தில் ஏற்ப்படுத்திய தாக்கத்தையும் ஆராய்ந்து அளிக்கப்படுகிறது. வைதீக சமயத்தினரின் வேள்விமுறைகள், வேதம் ஓதுதல், சடங்குகள், புராண, இதிகாசப் பதிவுகள் போன்றவற்றை விளக்கி ஆராயப்படுகிறது. வைதீகம் தமிழக மன்னர்களின் ஆதரவைப் பெறுவதும். நிலங்களை தானமாகப் பெறுதலும் விளக்கப்படுகிறது. சிவனைப் பற்றிக் குறிப்பிடும் பாடல்களையும், திருமாலைப் பற்றிக் குறிப்பிடும் பாடல்களையும் எடுத்தாளுதல், நிலையாமைப்பற்றிய வைதீக சமயத்தினரின் பார்வை வீடுபேறு பற்றி அவர்களின் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன.

மக்கள் மத்தியில் வைதீக சமயம் அவ்வளவு செல்வாக்கு பெறாத காரணத்தையும், தமிழக மன்னர்களை கட்டுப்படுத்தும் அதிகார மையமாக விளங்கியதையம் கட்டிக்காட்டப்பெறுகிறது. பௌத்தத்திற்கு எதிராந கருத்துக்கள் பாடல்களில் எவ்வாறு வெளிப்படுத்தப்படுகின்றன என்று எடுத்தாளப்படுகிறது. வைதீக சமயத்தினரின் நால்வருணபாகுபாடு கோட்பாடு தமிழக மன்னர்களுக்கும், நில உடமை பெருநிலக்கிழார்களுக்கும் ஏற்ற வகையிலிருந்தால் தமிழகத்தில் அது வலுப்படுத்தப்பட்டது என்பதை ஆராய்ந்து விளக்கப்படுகிறது.

**இயல் மூன்று - சமண, பௌத்த சமயங்களின் தாக்கமும்; தமிழகத்தில் ஏற்பட்ட மாற்றங்களும்.**

சமண பௌத்த தத்துவங்கள் விளக்கப்படுகிறது. சமண, பௌத்த சம்பவத்தினர் தமிழக வருகை வாகைத் திணையில் தொடங்குவது விளக்கப்படுகிறது. அதில் கூறப்படும் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை போன்றவற்றோடு அறம், பொருள், இன்பம், தவம், துறவு போன்றவற்றைத் தொடர்புபடுத்தி கூறும் நிலையாமைக் கருத்துக்கள் விளக்கப்படுகிறது. உலகியல் வாழ்க்கையைத் துய்க்கத் தூண்டும் நோக்கோடு புனையப்பட்ட நிலையாமைக் கருத்துக்கள் எடுத்தாளப்படுகின்றன. நிலையாமையை மட்டுமே வலியுறுத்தும் பாடல் கருத்துக்களும் எடுத்தாளப்படுகின்றது. உலகியல் வாழ்க்கை, அறவாழ்க்கை, வைதீகக் கருத்துக்களை மறுத்து கூறும் உலகியல் வாழ்க்கைப் பாடல்கள்

சிறப்பிடம் பெறுதல் விளக்கப்படுகிறது. வீடுபேற்றை மையமாக கொண்டும், பிறப்பறுப்பை மையமாகக் கொண்டும் ஊழ்வினைக் கருத்துக்கள் ஏற்படுத்தும் தாக்கங்கள் விளக்கப்படுகிறது.

## இயல் நான்கு - சமயங்கள் நிறுவனமயமாதலும்; பெருந்தெய்வங்களின் தோற்றமும்

கலித்தொகை பரிபாடல், பத்துப்பாட்டில் பத்துநூல்களும் சமயங்கள் நிறுவனமயமாவதைச் சுட்டிக்காட்டி நிற்கின்றன. இவைகளில்தான் சிவன், விஷ்ணு சிறப்பிடம் பெறுகின்றனர். சிறப்புற்றிருந்த அந்நேரத்தில் அவை தமக்கு முன்னிருந்த தமிழ்த் தெய்வங்களையும், நம்பிக்கைகளையும், வழிபாட்டு முறைகளையும் இணைத்து ஈடு இணையற்ற தனிபெருந்தெய்வங்களகப் பரிணமித்தது விளக்கப்படுகிறது. சிவ வழிபாடு சிற்ப்புற்றிருந்த நேரத்தில் தமிழ்த் தெய்வங்களான கொற்றவை; சிவனின் சக்தியாகவும், மலைமகளாகவும், மாற்றம் பெறுவதையும், சிவனின் மகனாக முருகன் மாற்றம் பெறுவதையும் புதிய உறவுமுறையும் குல முறையும் உருவாவதும் விளக்கப்படுகிறது. முருகன் அல்லது வேலன் நிறுவனமயக்காலத்தில் கந்தன் சுப்பிரமணியன் ஆறுமுகம் என்று மாற்றம் பெறுவது எடுத்துக் கூறப்படுகிறது. தாய்வழி உரிமை பெறும் தெய்வமாகயிருக்கும் முருகன் வைதீகத் தாக்கத்தால் தந்தை வழி உரிமை பெறும் தெய்வமாக உருமாற்றம் பெறுவது விளக்கப்படுகிறது. பத்துப்பாட்டு நூலாகிய மதுரைக்காஞ்சியிலே சமணப்பள்ளி, பௌத்தப்பள்ளி, அந்தணர்ப்பள்ளி போன்றவை நிறுவப்பட்டிருந்ததன் மூலம் சமயங்கள் நிறுவனமயமாகிவிட்டப்போக்கை உணர்த்துவதாக விளக்கப்படுகிறது.

## இயல் ஐந்து - சைவ, வைணவ; சமண, பௌத்த சமயங்களின் முரண்பாடுகளும், பொருளியல் பின்னனிகளும்

தமிழர் மரபோடு இணைந்த வைதீகம்; மன்னர்களில் மத்தியில் செல்வாக்கு பெற்றிருந்தது விளக்கப்படுகிறது. வணிகர்களின் ஆதிக்கச் செல்வாக்கு அதிகரிக்க அதிகரிக்க நில உடமையாளர்களையும் அவர்கலைச் சார்ந்த மன்னர்களும் தங்களது இருப்பைத் தற்காத்துக்கொள்ள தமிழ்மரபு சார்ந்த வைதீகத்தைத் தூக்கிப்பிடிக்க வேண்டிய கட்டாயத்தை ஆராய்ந்து விளக்கப்படுகிறது. இந்த முரண்பாட்டை பட்டினபாலை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி போன்ற சமயங்கலின் ஆதரவைப் பெற்ற வணிக ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் அதன் போக்கோடு தமிழ் மன்னர்கள் இயைந்து போவதையும் எடுத்துக்காட்டப்படுகிறது. தலைக்கு மேல் வெள்ளம் வந்தது போல் தமிழ் மன்னர்களை வணிக ஆதிக்கம் மூழ்கடிக்கும் சூழ்நிலையில் சுதாரித்து எழுந்த சங்ககால

கடைசிச்சோழன் கோச்செங்கண் சோழன் வைதீகத்தை வெளிப்படையாக ஆதரித்து கோயில்கள் நிறுவி சமன, பௌத்தத்திற்கு எதிர்வினை புரிவதால் ஆதிக்கச் சக்தியாய் வளர்ந்துவிட்ட வணிகத்தால் வன் வீழ்த்தப்படுவதும் விளக்கப்படுகிறது. வணிக, சமன, பௌத்த ஆதரவு சக்தியாக விளங்கும் களப்பிரர்கள் தமிழகத்தில் நிலை நிறுத்தப்படுவதும் விளக்கப்படுகிறது. இதுவரை வனிகச்சார்பை மறைமுகமாக கொண்ட சமண, பௌத்த சமயங்கள் சிலம்பு, மணிமேகலை மூலம் நேரடியாக ஆதரிப்பதையும், அதன் எதிர்வினையாய் நாயன்மார்களில் மூத்தவர் திருநாவுக்கரசர் உழவாரப்படைகொண்டு நேரடியாக நிலவுடமை வேளாண்மை உற்பத்திச் சக்தியை ஆதரிப்பதும் நாயன்மார்களின் இயக்கம் சார்ந்த கூட்டுழைப்பு எழுச்சியால் மறுபடியும் மண்ணின் மைந்தர்களான சோழர்கள் ஆட்சிக்கு வருவதும் வைதீகம் முக்கியத்துவம் பெறுவதும் நிலவுடைமை வேளாண்மை உற்பத்தி முன்னிலைப்படுத்தப்படுவதும் விளக்கப்படுகிறது.

**முடிவுரை**

முடிவுரைப் பகுதியில் மேற்கூறிய ஐந்து இயல்களின் வாயிலாக "சங்க இலக்கியங்களில் சமய, தத்துவக் கூறுகள்" என்ற தலைப்பில் ஆய்வு முடிவுகள் மேற்கொள்ளப்பட்டு, அதன் அடிப்படையில் ஆய்வு முடிவுகள் முடிவுரையில் தொகுத்தளிக்கப்படுகின்றன. மேற்சொல்லப்பட்ட கருதுகோள்கள் ஆய்வின் முடிபாக நிறுவப்பட உள்ளன. புதிய ஆய்வுக்களங்களும் இங்கு பரிந்துரைக்கப்பட்டுள்ளது. இறுதியில் துணைநூற்பட்டியலும், பின்னிணைப்பும் இடம்பெறுகின்றன.

## அறிமுகம்

சங்க இலக்கியத்தையும், தொல்காப்பிய பொருளதிகாரத்தையும் மானிடவியல் பார்வையில் கூர்ந்து நோக்கினால் தாய்வழிச் சமுதாயத்தின் எச்சமாய் விளங்கும் தாய்தெய்வ வழிபாடான கொற்றவை வழிபாட்டையும், தந்தைவழி சமூக அமைப்பு தோற்றத்தின் குறியீடாய் விளங்கும் முருகன் வழிபாட்டையும், இனக்குழு சமூக அமைப்பின் செயல்பாட்டையும், குடும்ப அமைப்பு, வேளாண்மை தொடக்கம், அரசு தோற்றம் இவற்றை விளக்கும் 'மால்' தெய்வ வழிபாட்டையும் தொடர்ச்சியான வரலாற்று நீரோட்டத்தோடு காண முடிகிறது.

## தாய் தெய்வ வழிபாடு

ஏடறிந்த வரலாற்றுக்கு முந்திய வரலாற்றுப் பண்பாட்டுக் கட்டங்களை வரலாற்று மானிடவியலார் மூன்று வகையாகப் பிரிக்கின்றனர்.

1. காட்டு விலங்காண்டி நிலை
2. அநாகரிக நிலை
3. நாகரிக நிலை

காட்டு விலங்காண்டி நிலை, மனித குலத்தின் ஆரம்ப நிலையைக் குறிக்கிறது. மனிதர்கள் தனது முதல் இருப்பிடமாக வெப்ப மண்டல அல்லது அரை வெப்ப மண்டலக் காடுகளில் இயற்கையாய் அமைந்த குகைகளிலும் மரங்களிலும் வாழ்ந்து வந்தனர். ஆதியில் அவர்களது உணவாக பழங்கள், கிழங்குகள், கொட்டைகள் பயன்பட்டது. காலப்போக்கில் வறட்சியின் காரணமாகவும், பருவச் சுழற்சியின் காரணமாகவும் ஏற்பட்ட உணவுத் தட்டுப்பாட்டால் இறைச்சியை உண்டு வாழும் நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். கொடுமையான விலங்குகளுக்கு முன்னால் அவர்களுக்கான உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டியதால் வேட்டைத் தொழிலை அனுபவமிக்க வகையில் கைகொள்ள அவர்களை சூழல்உருவாக்குகிறது. குழுவாக வாழ்ந்த மனித குலத்தில், வேட்டை ஆடுவதற்கு அனுபவம் மிகுந்தவளாக, வயதில் மூத்தவளாக அந்த இனக்குழுவை உற்பத்தி செய்த தாயாக விளங்கிய பெண்ணே விளங்குகிறாள். மேலும் வேட்டைத் தொழிலின் நுட்பங்களையும், விலங்குகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளும் அறிவை அக்குழுவிற்கு தாயே கொடுக்கிறாள். இந்த இனக்குழுக் காலக் கட்டத்தைத்தான் தாய்வழிச்சமூக

அமைப்பு என்கிறோம். இந்த தாய்வழி சமூக அமைப்பின் வழியேதான் தாய் தெய்வ வழிபாடு தொடங்கிற்று என்பது மானிடவியலாளரின் கருத்தாகும்.

> **"சங்க காலத்தில் தமிழ்ச் சமூகமானது மனித குலத்தின் தொடக்கநிலையான தாய்வழி மரபையும், அதனையடுத்து ஏற்பட்ட தந்தைவழி மரபையும் கொண்டதாகும்."[1]**

என்று இலக்கிய மானிடவியல் என்னும் நூல் குறிப்பிடுகிறது.

மேலும்,

> **"தொல்பொருள் ஆய்வுத்துறை பேரறிஞராகிய சர் ஜான் மார்ஷல் என்பார் சிந்துவெளிப் பகுதியில் கிடைத்த அன்னையின் சிலைகளைப் போலவே பாரசீகம், ஏஜியன், எலம், மெசபடோமியா, துருக்கி, சிரியா, பாலஸ்தீனம், சைப்ரஸ், கிரேட் பால்கன், எகிப்து முதலிய பல்வேறு பகுதிகளில் கிடைத்த சிலைகளும் இருப்பதனால் தாய் வழிபாடு மிகப் பழங்காலத்திலேயே பல நாடுகளிலும் பரவியிருத்தல் வேண்டும்"[2]**

அதேபோல்,

> **"கி.மு.7000 ஆண்டுகளுக்குரிய புதிய கற்காலத்திலும் அதற்கு முந்திய காலப்பகுதியான கி.மு.25000 ஆண்டுகளுக்குரியதுமான பழைய கற்காலத்திலும் தாய் வழிபாடு உலகெங்கிலும் காணப்பட்டமைக்கான சான்றுகள் தொல்பொருளியலாளர்களால் வெளிக் கொணரப்பட்டுள்ளன. யேம்ஸ், பிறோபர், மாகறெற்மீட் போன்ற மானிடவியலாளர்கள் பெண்களை முதன்மைப்படுத்தியே கிரியைகளும், சமய நம்பிக்கைகளும் தோன்றின என்கின்றனர்"[3]**

என்று பி.எல்.சாமி குறிப்பிடுகிறார். இதன்மூலம் உலகின் பல்வேறு பகுதிகளிலும் தாய்தெய்வ வழிபாடு தொடக்க நிலையில் இருந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

**கொற்றவை**

கொற்றவை பெண் தெய்வம் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் பேசப்படுகிறது. இந்தியா முழுவதிலும் பல்வேறு தெய்வங்களையும் வழிபட்டாலும் ஒவ்வொரு மாநிலத்திலும் சில தெய்வங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, சிறப்பாகப் பூஜித்து வருகிறார்கள். வங்காளத்தில் துர்காதேவிக்கு முதலிடம் கொடுத்து அம்பிகை வழிபாடு நடத்தி வருவதைக் காணலாம்.

கொற்றவை தெய்வம் திராவிடரின்,

**'வெற்றித் தெய்வம்'**[4]

என பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

கொற்றவை முருகப்பெருமானின் தாய் தெய்வம் எனவும், கொற்றவை வழிபாடு முருகப்பெருமானுக்கு நடைபெற்றதுபோலவே வெறியாட்டுடன் நடைபெற்றதாக சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

கொற்றவைக்குப் பலிகொடுத்து வாழ்த்தியதாகக் 'கொற்றவை நிலை' எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

**"மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**

**கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே"**[5]

**"உருகெழு மரபின் அயிரை பரவியும்"**[6]

மரபுநிலை வழுவாது, அயிரை மலையில் உறைகின்ற கொற்றவைத் தெய்வத்தைச் சேர மன்னர் வழிபட்டு வந்தனர்.

**"அஞ்சு வரும் மரபில் கடவுள் அயிரையின் நிலை இ"**[7]

அச்சம் தருகின்ற முறைமையினை உடைய கொற்றவை உறைகின்ற அயிரமலை எனப் பதிற்றுப்பத்து கூறுகிறது.

**"விடர்முகை அடுக்கத்து விறல்கெழு**

**சூலிக்குக் கடனும் பூணாம்"**[8]

பிளவுகள், குகைகள் இவற்றையிடையே மலைச்சாரலில் எழுந்தருளியுள்ள, வெற்றி நிரம்பிய திரிசூலத்தைக் கையிலே கொண்ட கொற்றவைக்குப் பலிக்கடனை நிறைவேற்றுதல் பற்றி குறுந்தொகை குறிப்பிடுகிறது.

> **"தமிழிலக்கியத்தில் கொற்றவை என்பதற்கு ஆரலைக் கள்வர்களுக்குக் கொற்றம் தருபவள், வெற்றி தருபவள் என்ற பொருள் இருப்பதைக் காணலாம். பழங்கால வேட்டை தெய்வமே பின்னர் இப்படி மாறி இருக்கிறது. உரோமானியரின் கன்னித் தேவதையான டையானாவும் வேட்டைத் தெய்வமே. இவளே ஆற்றுத்துறைகளில் காவல் செய்பவள், காட்டு விலங்குகளையும், வேட்டுவர்களையும் காப்பவளாகக் கருதப்பட்டாள். வில்லும், அம்பும் கையில் வைத்திருப்பாள். தலையில் பிறைநிலா அணிந்திருப்பாள். தமிழிலக்கியத்தில் வரும் கொற்றவையும் டயானாவும் சிலவற்றில் ஒற்றுமையுடன் திகழ்வதை உணர முடியும். இனக்குழு மக்களின் வேட்டைக்குக் கொற்றம் தருபவளான கொற்றவையே பின்னர் வேந்தருக்கு, வீரர்க்கும் கொற்றம் தருபவளாகக் கொண்டாடப்பட்டாள்."[9]**

எனகொற்றவை தோற்றம் பற்றி பி.எல்.சாமி. விளங்குகிறார்.

சிந்துவெளி நாகரிகத்தில் மூன்று கண் உடைய பெண் தெய்வ உருவம் ஒன்று கிடைத்ததாக வரலாற்று ஆசிரியர் குறிப்பிடுகின்றனர். ஹரப்பாவில் கண்டெடுக்கப்பட்ட புதை பொருள்களிலிருந்து அங்கு தாய் வழிபாடும், தாய்த் தெய்வ வழிபாடும் இருந்தது தெரிகிறது. உலகில் பெரும்பாலான மக்களிடையே இறைவன் ஆண்பால் உருவில் வழிபடப்பட்டு வந்திருக்கிறான். ஆனால் தமிழர், எகிப்தியர், இலெமூரியர், சிந்துவெளி மக்கள் ஆகியோரிடையே கடவுள் பெண்பாலாகத் தாய் உருவத்தில் வழிபடப்பட்டு வந்தமையைக் காண முடிகிறது.

தாய் என்பதிலிருந்துதான் தாயம் என்னும் உரிமையைக் குறிக்கும் சொல் வந்தது. தாயம் என்பதிலிருந்து தாய் பாகம் என்ற சொல் சட்டநூலில் இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற கொற்றவை வழிபாடு காலப்போக்கில் உலகெங்கும் பரவி, பல பெயர்களில் மருவி வழங்கப்படிருக்கலாம். கொற்றவை தெய்வம் பழையோள், காடுகாள் ஐயை என பல பெயர்களால் வழங்கப்படும் தாய்தெய்வமாக விளங்குகிறாள். தாய்த் தெய்வ

வழிபாடு வேட்டைச் சமுதாயத்திலிருந்து, புராதனகால உழவுத் தொழில் தோன்றிய காலத்தில் தோன்றியிருக்கிறதென்று மானிடவியலார் கூறுவர்.

> **"உலகின் பல்வேறு பகுதிகளில் தாய்வழிச் சமூகங்களின் தொடர்ச்சி பலவாறாக அறுபட்டுப் போயுள்ள நிலையில், இன்னும்கூட தமிழகத்தில் பதினெட்டுக்கும் குறையாத தாய்வழிச் சமூகங்கள் உள்ளதைக் காண முடிகிறது"**[10]

தென்னிந்தியச் சூழலில் தாய்வழி முறையானது மருமக்கள் தாயம், அறிய சந்தன முறை, கருமதாயிமுறை எனும் பெயர்களில் தன் வடிவத்தைக் காத்து வருகின்றது. பதிற்றுப்பத்தின் மூலம் சேர நாட்டில் தாய்வழிச் சமூகங்கள் இருந்ததை அறிகிறோம். அதற்கும் முன்பே தமிழ் மண்ணில் தாயாட்சி கோலோச்சியதைச் சேய்வழி அழைத்தல் மூலம் அறிகிறோம்.

இவை,

> **"சேய்வழி அழைத்தல் முறையானது தாய்த் தலைமைக் குடும்ப முறையில் எஞ்சி நிலைத்தவையாக இன்றும் பல சமூகங்களில் காணப்படுகிறது. தமிழகம் உள்ளிட்ட இந்தியாவின் சில பகுதிகளிலும், காசி போன்ற தாய்வழி மரபுடைய பழங்குடிகளிலும்கூடத் தாய்வழிச் சமூகத்தின் எச்சங்கள் காணப்படுகின்றன என்பார் டைலர்"**[11]

என்ற பக்தவத்சல பாரதியின் கூற்று இங்கு நோக்கத்தக்கதாகும்.

தாய்வழிச் சமூகங்களில் குழந்தையின் தந்தை இரண்டாம்தர உறவினரே. அவரைக் குறிப்பதற்கு தனி உறவுச் சொல் இருப்பதில்லை. அவ்வப்போது மனைவியத்திற்குப்பார்வைக் கணவராக வந்து செல்லும் அவரை அங்குள்ள தாய்வழிக் கூட்டத்தார் குழந்தைகள் பெயரைக் கொண்டே அழைப்பார்கள். இத்தகைய சேய் வழி அழைத்தல் முறையின் எச்சங்கள் சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் பதிவாகியுள்ளன.

**'ஐயை தந்தை'**[12]

**'அஃதை தந்தை'**[13]

**'ஆதன் தந்தை'**[14]

**'சேந்தன் தந்தை'**[15]

என்று சேய்வழி அழைத்ததை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

எல்லோரையும் பெற்றவர் என்ற அடையாளத்தைக் குறிக்கும் வகையில் தாய் தெய்வத்தின் வயிறு பெரியதாகப் படைக்கப்பட்ட சிற்பங்கள் இந்தியாவிலும் தமிழகத்திலும் கிடைத்துள்ளன.

> **"எல்லோரையும் பெற்ற வயிறு பெரியதாக இருக்க வேண்டும் என்பதற்காகப் பெரிய வயிற்றையுடைய தாய் தெய்வத்தைப் புதிய கற்கால மனிதன் சுட்ட மண்ணில் உருவாக்கினான். சுடுமண் சிற்பங்கள் இந்தியாவிலும், பிற நாடுகளிலும் நிறைய கிடைத்துள்ளன"**[16]

> **"கி.மு.ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆதிச்சநல்லூர் கல்லைப் புதைப் பொருள்களில் உலோகத்தால் ஆன சிறிய தாய் தெய்வச் சிற்பம் கிடைத்துள்ளது."**[17]

> **"கற்கால மனிதன் களிமண்ணால் செய்து சுட்ட தாய் தெய்வ வடிவங்கள் இந்தியாவில் கிடைத்துள்ளன. இத்தெய்வங்களில் வயிறும்கொங்கைகளும் மிகப்பெரிதாக வடிவமைக்கப்பட்டுள்ளதை நோக்கும்போது இவை வளமையோடும் பிறப்போடும் தொடர்புப்படுத்துவதை அறிய முடிகிறது"**[18]

எல்லோரையும் பெற்றவள் என்பது இப்பெருவயிறு உணர்த்தி நிற்கிறது. இதுபோன்ற சிற்பங்கள் மொகஞ்சதாரோவிலும் தென்னிந்தியாவில் ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களிமும் இரும்புக்கால சுடுமண் தாய்த்தெய்வச் சிற்பங்கள் கிடைத்துள்ளன. பெரிய வயிறும், கொங்கைகளும் தாய்மையின் அடையாளங்களை மிகுந்துக் காட்டியே செய்யப்பட்டுள்ளன.

தமிழில் மோடி என்ற பெயர் எல்லோரையும் பெற்றவள் என்ற பொருளில் வழங்கப்படுகிறது. 'மோடு' என்றால் வயிறு என்று பொருள்.

**"எல்லோரையும் பெற்றவள்"**[19]

என்ற பொருளில் நச்சினார்க்கியர் உரை செய்துள்ளார்.

கொற்றவை = கொல்+தவை

தவ்வை என்பது மூத்தவள், முதியோர் என்னும் பொருளைத் தரவல்லது. பழங்காலத்தில் மனிதப் பிறப்பு அல்லது குழந்தைப் பிறப்பு என்பது பெரும் கவனத்திற்குரிய ஒன்றாகக் கருதப்பட்டது. பிள்ளைப்பேற்றிற்கு மனிதனே காரணம் என்பதைத் தொல்மக்கள் அறிந்திருக்கவில்லை. அது இயற்கையை மீறிய ஆற்றல்களால் நிகழும் செயலாகவே அவர்கள் கருதினர். இதனால் இயல்பாகவே பெண்கள் சமூகத்தில் உயர்ந்த இடத்தைப் பெற்று விளங்கினர். ஆண் பெண் சேர்க்கையால்தான் கரு உண்டாகிறது என்பதையும் அதில் ஆணுக்கும் பங்கு உண்டு என்பதையும் மனிதர் முதன்முதலில் அறிந்திருக்கவில்லை. இறந்தவர்கள் பெண்கள் வயிற்றில் மீண்டும் பிறக்கின்றனர் எனவும் அது அதீத செயல் எனவும் நம்பினர். இதுவே தாய்வழித்தலைமை வலுப்பெறக் காரணமாக அமைந்தது. இதன் அடிப்படையில் கொற்றவை தெய்வம் தோற்றம் பெற்றது. மேலும்,

> **"சிரியா, சின்னாசியா, எகிப்து முதலிய இடங்களில் பெண்தெய்வ வழிபாடு தோன்றியதற்கும் இத்தகைய சமுதாய முறையே காரணமாகும். பண்டைய திராவிட மக்களிற் பெரும்பகுதியினர் தாய்வழி உரிமை, தாய்முறை முதலியவற்றைக் கடைப்பிடித்தனர். இதன் காரணமாக பெண் தெய்வ வழிபாடு திராவிட மக்களிடையே பெரு வழக்காயிருந்தது என்று சமூகவியல் அறிஞர் கொள்வர்"**[20]

என்ற கலாநிதி கைலாசபதி அவர்களின் கூற்று சிந்திக்கத்தக்கதாகும்.

## கொற்றவை வழிபாடு

கொற்றவை வழிபாடு பற்றிய விரிவான விளக்கங்கள் சிலப்பதிகார வேட்டுவ வரியில்தான் முதன்முதலில் பதினவானதாகத் தெரிகிறது. எயினர் மறக்குணம் வாய்ந்தவராகவும், அவர்கள் ஆநிரை கவர்ந்து வந்தபின் தம்மைக் கொற்றவைக்கும் பலியிட்டுக் கொண்டதாகவும் வேட்டுவ வரி விவரிக்கிறது. ஆநிரை கவரும்போது போரில் எயினர்க்கு வெற்றி தருபவள் கொற்றவை என்ற குறிப்பு வேட்டுவ வரியின் மையமாக விளங்குகிறது.

**"தமிழிலயத்தில் வரும் கொற்றவையும், டயானாவும் சிலவற்றில் ஒற்றுமையுடன் திகழ்வதை உணரமுடியும். இனக்குழு மக்களின் வேட்டைக்கு கொற்றம் தருபவளான கொற்றவையே பின்னர் வேந்தர்க்கும், வீரர்க்கும் கொற்றம் தருபவளாகக் கொண்டாடப்பட்டாள்"[21]**

என்ற பி.எல்.சாமியின் கூற்றுப்படி உலக முழுவதிலும் தாய்வழி சமூக அமைப்போடு தொடர்புடைய பெண் தெய்வ வணக்கம் இருந்துள்ளதை உணர முடிகிறது.

**"இட்டுத்தலைஎண்ணும்எயினர்அல்லது**

**சுட்டுத்தலைபோகாத்தொல்குடிக்குமரியைச்...**

**............................................................"[22]**

என்றும்,

**"கரியின்உரிவைபோர்த்துஅணங்குஆகிய**

**அரியின்உரிவைமேகலையாட்டி,**

**சிலம்பும்கழலும்புலம்பும்நீறடி,**

**வம்படுகொற்றத்துவாய்வாட்கொற்றவை"[23]**

போன்ற பாடல் வரிகள் மூலம் கொற்றவை வழிபாட்டை அறிய முடியும். கொற்றவையை காட்டிற்குள் வாழும் மறவர்களால் போற்றப்படும் வெற்றிமகள் என்று

**"ஓங்குபுகழ் கான் அமர் செல்வி"[24]**

என அகநானூற்றுப் பாடல் வரி விளக்குகிறது.

கொற்றவை தெய்வத்தின் காட்சிப் பற்றிய குறிப்பு மகளிரின் தைந்நீராடல் பற்றி கூறும் பரிபாடல் பகுதியில் காணப்படுகிறது. தைநீராடும்போது ஒரு பெண்ணுக்கு மற்றொரு பெண் நெற்றியில் செந்நிறத் திலகம் இட்டு, இவள் கொற்றவைபோலக் கனல்விழி படைத்தாள் என்று பாராட்டியதாக வருகின்றது.

**"நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே:**

**கொற்றவை கோலம் கொண்டு ஓர் பெண்"[25]**

என்று முக்கண் கொண்டவளாக விளங்கினாள் என்று கூறுகிறது.

**"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு"**[26]

கொற்றவையின் கோயில் காட்டகத்தே விளங்குவதாக மேற்கூறிய மேற்கோள்களின்மூலம் அறிந்தாலும், அதை உறுதிப்படுத்தும் வகையில்,

**"பூதம் காக்கும் புகல் அருங்கடி நகர்**

**தூதுஉண் அம்புறவொடு துச்சில் சேக்கும்**

**முது மரத்த முரணி களரி"**[27]

**"யானை தந்த முளிமர விறகின்**

**கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து**

**மடமான பெருநிரை வைகுதுயில் எழுப்பி**

**மந்தி சிக்கும் அணங்குடை முன்றில்"**[28]

பேய், பூதம், பிசாசுகள் அக்கோயிலைச் சூழ்ந்து நின்று காவல் புரிகின்றன. அக்கோவிலில் புறாக்களும் தங்கியிருக்கும். வேடர்கள் மரத்து விறகால் தீமூட்டி எரிவிளக்கு வைத்துள்ளனர். அக்கோயில் முற்றத்தில் வந்து உறங்கும் மான் கூட்டங்களை அந்த எரிவிளக்கின் ஒளியில் மந்திகள் எழுப்பி ஓட்டி அதனைத் துடைத்துத் தூய்மை செய்கின்றனவாம் என்று இப்பாடல்களில் கொற்றவையின் கோயில் காட்சிகளை பின்னாளில் வந்த இலக்கியங்களில் காணமுடிகிறது. கோயிலில் கூடியிருக்கும் கொற்றவையின் சுற்றமாகிய பேய்கள் அவளுக்குப் பொழுதுபோக்காக வேடிக்கையான விடுகதைகளை கூறுவதை,

**"பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய் நொடித்தாங்கு"**[29]

என்ற கலித்தொகை உவமையின்மூலம் அறியாலாம்.

கொற்றவையைத் தொழுது அவளுக்குப் பலிக்கடன் செலுத்துபவர் மறவர் முதலியோர் அப்பொழுது காப்பாகத் தம் கையில் நூல் கட்டிக் கொள்ளுதலை,

**"விடர் முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**

**கடனும் பூணாம்; கைந்நூல் யாவாம்"**[30]

என்ற குறுந்தொகை அடிகளின்மூலம் காண முடியும்.

**"அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து,**

**தும்பை சான்ற மெய்தயங்கு உயக்கத்து**

**நிறம்படு குருதி புறம்படின் அல்லது**

**மடை எதிர் கொள்ளா அஞ்சுவரு மரபின்**

**கடவுள் அயிரை......"**[31]

அயிரை மலையில் உறையும் கொற்றவையைக் குறிக்குமிடத்து மார்பிலிருந்து வருகின்ற இரத்தத்தைப் பலியாகப் பெறுவதைத் தவிர பிற பொருளை ஏற்றுக் கொள்ளாத அச்சம் வருகின்ற முறைமையையுடைய கடவுள் என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது. மேலும்,

**"குருதி விதிர்ந்த குவவுச் சோற்றுக் கொன்றொடு**

**உருகெழு மரபின் அயிடை பரைஇ"**[32]

என்று இரத்தம் தெளித்துக் கலந்த திரட்சியான சோற்றுப் பிண்டங்களாய் இந்த அயிரமலைக் கொற்றவையை இளஞ்சேரலிரும்பொறை வழிபட்டான் என்ற செய்தி பதிற்றுப்பத்தில் வருகிறது. மேலும்,

**"உருகெழு மரபின் அயிரை பரவியும்**

**கடல் இகுப்ப வேல் இட்டும்**

**உடலுநர் மிடல் சாய்த்தும்"**[33]

என்னும் பதிற்றுப்பத்து பாடல் வரிகள் அயிரமலையில் உறையும் கொற்றவையைச் சேர மன்னன் முதலில் வழிபட்ட பின்னரே போர் முதலியவற்றில் ஈடுபட்டான் என்பதை விளக்குகிறது.

இவ்வாறாக தாய்வழிச் சமூகத்தின் எச்சமாக தாய் தெய்வ வணக்கம் தொடங்கியதைத் தொடர்ச்சியான வரலாற்று ஆதாரங்கள் மூலம் கொற்றவை தெய்வ வழிபாட்டை அறிய முடியும்.

## முருகு தோற்றம் வளர்ச்சி

தந்தை வழி சமூகத்தின் தோற்றத்தையும் இரும்பின் பயனை மனிதன் அறிந்ததால் வேட்டைத்தொழில் நவீனமான காலத்தையும் குறிக்கும் ஒரு குறியீடாய் முருகக் கடவுளின் தோற்றம் தமிழ்ச்சமூகத்தில் தோன்றியதை ஊகிக்க முடிகிறது. குறிஞ்சி நிலக் கடவுளாக தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படும் முருகன், வேட்டை சமூக அமைப்பு முடிவடைந்து குடும்ப அமைப்பு தோன்றுகின்ற அதாவது கருநிலைக் குடும்ப அமைப்பு உருவாகும் சூழலை

நினைவுப்படுத்துவதாக உள்ளது. மேலும் வேட்டைச் சமூகத்தில் வீரனாகவும், வில், அம்பு போன்ற ஆயுதங்களைக் கையாள்வதில் வல்லமை மிகுந்தவனாகவும், தன் வேட்டைச் சமூகக் குழுவிற்குத் தலைமை தாங்குபவனாகவும், அந்தச் சமூகத்தில் பாதுகாவலனாகவும் விளங்கிய வீரனின் குறியீடாய் முருகன் விளங்குகிறான். இதுபோல் இன்னும் தன் குலத்தில் வீரனாகவும், பாதுகாவலனாகவும் இருந்தவனை குல தெய்வமாக வணங்கும்முறை இருப்பதைக் கொண்டு நாம் தெளியலாம். அய்யனார், விலாவடி அய்யன், மதுரைவீரன், முனியன் போன்ற பல்வேறு குலதெய்வ வழிபாடு தமிழ்நாட்டில் வழங்கி வருவதைக் காண முடியும். பெருந்தெய்வ வழிபாடு சிறப்புற்று விளங்கும் இந்நேரத்திலும் தமிழ் மக்களிடையே குலதெய்வ வழிபாடு முதன்மைபெற்று வருவது பழைய மரபின் தொடர்ச்சி என்பதை எளிமையாய் நாம் புரிந்து கொள்ளமுடியும். குறிஞ்சித் திணைக்கு புறனாக வருகின்ற வெட்சி, கரந்தை புறத்திணையில் கரந்தை திணையில் வேலன் வெறியாடல் முதன்மையாகப் பேசப்படுவதைக் கொண்டும் குறிஞ்சி - வெட்சித் திணை என்பது கருநிலைக் குடும்பம் உருவாக்கத்தின் தொடர்ச்சி என்பதையும் அதில் தந்தை வழி சமூகத்தின் தொடர்ச்சி என்பதையும், அதில் தந்தைவழி சமூகத்தின் குறியீடாய் முருகன் இருப்பதை உணர்ந்து கொள்ளமுடியும். தந்தை வழி சமூகத்திற்கு முந்தையது தாய் வழிச் சமூகம் என்பதற்கு முருகனை கொற்றவை மகன் என்று அழைக்கப்படுவதையும் சங்கப் பாடல்களில் மகனைக் கொண்டு தந்தையை அறியும் வழக்கம் இருந்துள்ளதையும் உணர்ந்துகொள்ள முடிகிறது.

ஐரோப்பிய மானிடவியலார்களுக்கு தமிழ்ச் சமூகத்தின் இந்த தொடர்ச்சியான மனித சமூக உருவாக்க வரலாறு அறிய முடியாமல் போனதால் ஒவ்வொரு குலத்திலிருந்து ஒவ்வொரு மரபு முறையை எடுத்துக் கோர்த்து நிறுவினர் என்பது தெரிகிறது. இவ்வாறு தோன்றிய முருகனும், முருக வழிபாட்டு முறையும் மனித சிந்தனையில் தொடர்ச்சியான வளர்ச்சியின் காரணமாகவும், புறத்தில் அவனுக்குக் கிடைத்த தொழில்நுட்பக் கருவிகளும், அறிவும் அதனால் ஏற்பட்ட உற்பத்தி வளர்ச்சியின் காரணமாக அவனது அறிவு விரிவடைகிறது. மனிதன் தனக்கு புறமாக இருக்கின்ற இயற்கையோடு தாம் கொண்டிருக்கும் தொடர்பையும் உறவையும் மேலும் நுட்பமாக்கிக் கூர்ந்து பார்க்கின்றபோது அவனுக்குப் புதிய சிந்தனைகளும், கருத்துக்களும் தோன்ற ஆரம்பித்தன. இயற்கையின்மீது அவனுக்கு ஏற்பட்ட வியப்பும், அச்சமும், அதன் பயன்பாடும் இவையெல்லாம் தமக்கு அப்பாற்பட்ட சக்தியாய் நடைபெறுகிறது என்ற கருத்தாக்கத்திற்கு வந்த மனிதன் தான் வணங்கி வந்த வேட்டைச் சமூகக்கடவுளோடு தனது இயற்கைச் சார்ந்த கருத்தாகிய முருகு (அழகு) என்பதை இணைத்து முருகன் என்ற கடவுள் உருவாக்கப்படுகிறான்.

முருகு என்றால் அழகு, இளமை, தொன்மை, வீரம், மணம் என்ற பல பொருள்களோடு தமிழக வரலாற்றுத் தொடர்ச்சியின் படிநிலைக் குறியீடாய் முருகக்கடவுள் திகழ்கிறான். அதனால்தான் காதல்நோய் தவிர்ப்பவனாகவும் அதுவும் சங்க அகப்பாடல்கள் முழுவதும் தமது காதல் உணர்வுகளை வெளிப்படுத்த புறமாகிய இயற்கையை உவமைப்பொருளாகவும் தமிழ் மக்கள் கொண்டமைக்கு முருகு என்கிற இந்த இயற்கை சிந்தனையின் விளைவாகத்தான் காதல்நோய் தணிக்கும் கடவுளாய் முருகன் குறிஞ்சிப் பாடல்களில் விளங்குவதை ஊகித்துக் கொள்ளலாம். இந்த இயற்கைச் சார்ந்த மரபின் தொடர் வளர்ச்சியில் சித்தர்கள் என்ற மூலிகை மருத்துவ விஞ்ஞானிகள் தோன்றியதை நாம் விளங்கிக் கொள்ள முடியும். ஆதி சித்தன் சிவன் என்றாலும் முருகனை மையமாக வைத்து போகர் முதலான மூலிகை மருத்துவர்கள் சித்த மருத்துவம் செய்ததாக வரலாறு நமக்கு உணர்த்துகிறது.

### உலகில் தந்தைவழி சமூகத்தோற்றம்

1. **கிரேக்கம்**
2. **தீர்க்கதரிசி மோசாய்**
3. **ஸ்கந்தன்**

> **"தமிழ்நாட்டில் வரலாற்று முற்காலமான ஆதிச்சநல்லூர் தாழி அடக்க காலத்திலேயே இந்த முருக வணக்கமுறை இருந்தது என்பதற்கு அகழ்வாராய்ச்சிச் சான்றுகள் உள்ளன. இங்கே கிடைத்த தங்கவாய் மூடிகளும் இரும்புக் கொழுவும் பாலஸ்தீனத்தில் கிடைத்த கல்லறைச் சாமான்களை ஒத்திருக்கின்றன. இதன்காலம் கி.மு.1150. கிழக்கு மத்திய தரைக்கடல் நாகரிகத்திற்கும் தமிழரது ஆதிச்ச நல்லூர் நாகரிகத்திற்கும் பல பண்பாட்டு ஒற்றுமைகள் உள்ளன. அங்கே கிடைத்தது போன்ற திரிசூலம் இங்கும் கிடைத்தது. காவடியாடுவோர் வாயை மூடப் பயன்படுத்துவது போன்ற தங்கவாய் மூடிகள், திருசூலத்தில் சேவல் உருவங்களும் காணப்பட்டன"**[34]

எனவே ஆரம்பகால முருக வணக்கம் தமிழ்நாட்டில் இருந்தது என்பது கே.கே.பிள்ளை அவர்களின் கருத்து.

இளமை, உற்சாகம், மதுவெறி, அழகுணர்ச்சி, காதல், வீரம், தீமையை ஒழிக்கும் தன்மை, பிறரைக் காத்து நிற்கும் பண்பு இவற்றைத் திரட்டி தெய்வ வடிவாக உலகில் பல பாகங்களிலும் இலக்கியம் செய்திருக்கிறார்கள் பண்டைக்கால மக்கள். இவர்களுள் இந்திய தெய்வங்கள் ஸ்கந்தனும் முருகனும் ஆவர்.

கங்கைச் சமவெளியில் ஸ்கந்த உருவம் கொண்ட அகழ்வாராய்ச்சிச் சான்றுகள் பல கிடைத்துள்ளன. உஜ்ஜயினியில் கி.மு.200, 300க்கு முந்தைய ஸ்கந்த உருவம் அடிக்கப்பட்டக் காசுகள் கிடைத்துள்ளன. 'பிரம்மணிய' 'ஸ்கந்த' என்ற எழுத்துக்களோடு சேவல் கொடியும், மயில் உருவமும் அவற்றில் பொறிக்கப்பட்டுள்ளன. இது குஷான அரச வம்சத்தைச் சார்ந்த ஹீவிஷ்கன் காலத்து நாணயங்களாகும். வேறொரு நாணயத்தில் ஸ்கந்தன் விசாகன் ஆகிய இரு உருவங்களை ஒருவரை ஒருவர் நேரில் பார்ப்பதுபோல நிற்கும் நிலையில் பொறிக்கப்பட்டுள்ளன. எயனதேய கணத்தவர்களும் (யுத்தத்தையே தொழிலாகக் கொண்ட இனக்குழு மக்கள்) 6 தலைகளும் 2 கைகளும் உடைய கார்த்திகேயனுடைய உருவம் பொறித்த காசுகளை விடுத்திருக்கின்றன. இது கி.பி.முதல் நூற்றாண்டில் முதன்முதலாக நடந்திருக்கலாமென்று அறிஞர் பெருமக்கள் கருதுகின்றனர்.

> **"வேத காலத்திற்கு பின்னும், உபநிஷக் காலத்துக்கு முன்னும் இடைக்காலமான ஆரண்யக் காலத்தில் சண்முகன் என்று குறிப்பிடப்படுகிறது"**[35]

இந்த கருத்து பல்வேறு காலக்கட்டங்களில் வைதீகர்கள் தென்னிந்தியாவிற்கு வந்திருந்தாலும் தொடக்க காலத்தில் தமிழகத்திற்கு வந்த வைதீகர்களுக்கு தமிழ்க்கடவுளின் தன்மை தாக்கம் ஏற்பட்டதால் பிற்காலத்தில் அதாவது வடக்கே உபநிடதக் காலத்திற்கு முன்னால் ஸ்கந்தன் தெய்வம் தோன்றியதற்கான சாத்தியக் கூறுகள் உள்ளன. தமிழ்க்கடவுள் முருகனின் தாக்கத்தால் உருவான சண்முகன் ரிக் வேத காலக் கருத்துகளோடு இணைந்து ஸ்கந்த உருவாக்கம் நடந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது என்று சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

> **"கி.மு.மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கங்கைச் சமவெளி மக்களிடையேயும் இளமைக்கடவுள், போர்க்கடவுள், காதல் கடவுள் என்ற தன்மையோடு முருகன் தெய்வக் கருத்து வளர்ச்சிப் பெற்றதைக் காண்பதற்கு திடமான சான்றுகள் கிடைக்கின்றன."**[36]

இக்கூற்று கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் ஸ்கந்தன் தெய்வமும் மக்களிடம் நடைமுறையில் வந்தது என்பதை உணர முடிகிறது. ஆனால் ஆரியர்களின் தமிழக வருகை கி.மு.5 அல்லது கி.மு.6ஆம் நூற்றாண்டு என்ற வரலாற்று ஆசிரியர்களின் கருத்து ஒன்றை தெளிவுப்படுத்துகிறது. வைதீக சமயத்தினர் தமிழகம் வருவதற்கு முன்பே முருக வழிபாடு வேட்டைச் சமுதாயத்தின் எச்சத்தை குறிக்கும் குறியீடாய் முருகன் விளங்குவதை தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் நமக்கு விளக்குகின்றன. அதனால் தமிழகத்திலிருந்து கொண்டு செல்லப்பட்ட முருக வணக்கம் வடக்கே வேதகால புராணங்களோடும், வழிபாடுகளோடும் கலந்து ஸ்கந்தன், சண்முகன் என்ற பெயரில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு தமிழகத்திற்கு வந்ததை ஒருவாறு நாம் ஊகிக்க முடியும்.

> **"தமிழ்நாட்டில் முருக வணக்கம் பழமையானதே. மிகவும் பழமையான தமிழ்நூல்களான அகம், புறம், குறுந்தொகை, நற்றிணை முதலிய நூல்களில் காணப்படும் முருகனது சித்திரத்திற்கும், பிற்கால சங்க நூல்களான பரிபாடல், திருமுருகாற்றுப்படை போன்ற நூல்களில் காணப்படும் சித்திரத்திற்கும் வேறுபாடுகள் உள்ளன"**[37]

மேற்சொன்ன கருத்திற்கு இம்மேற்கோள் அணி சேர்க்கிறது.

டயோனிஸாஸ் என்ற கிரேக்க தெய்வத்திற்கும், ஸ்கந்தனுக்கும் இடையே உள்ள பல ஒற்றுமைகளை ஆரமுதன் சுட்டிக் காட்டுகிறார்.

சோமம் என்பது ஒரு மது, ஸ்கந்தன் அதன் கணிப்பின் உருவம் அதுபோலவே பாக்குஸ் டயோனிஸாஸ் என்ற கிரேக்க தெய்வம் 'ஒயின்' என்னும் மதுவோடு தொடர்புடையவன். பாக்குஸ் தனது தந்தை தொடையிலிருந்து பிறந்தான். சோமனும் அவ்வாறே பலியிடும் ஹோதாவின் தொடையிலிருந்து பிறக்கிறான். பாக்குஸ் அக்கினி குமாரன் ஸ்கந்தனும் அவ்வாறே. இருவரும் பொய்கையில் வளர்ந்தவர்கள். பாக்குஸ் 'சோம்லே' என்ற பொய்கையிலும் ஸ்கந்தன் சரவணம் என்ற ஹேமாலயத்திலும் வளர்ந்தவர்கள். சோமா என்னும் மது உற்சாகத்தையூட்டுவது போல ஸ்கந்தன் வாழ்க்கையில் மகிழ்ச்சியூட்டுகிறான். பாக்குஸ் கன்னியரோடு களித்து அலைகிறான், சோமனும் அப்படியே. பாக்குஸ் டயானா(Moon)வோடு சுற்றியலைகிறான். பாக்குஸ், சோமனைப் போலவே அறிவுத்தானம் செய்கிறான். தமிழகத்திலிருந்து சென்ற முருகக்கடவுள் ஸ்கந்தனாவதும்,

ஸ்கந்தனோடு கிரேக்க மதுக்கடவுள் டயோனிஸாஸ் தன்மைகளில் ஒத்துப்போவதையும் அறியமுடிகிறது. ஆகவே முருகக்கடவுள் தமிழகத்திற்கு மட்டுமின்றி, கங்கைச் சமவெளிக்கும், கிரேக்க நாட்டிற்கும் பொதுவான தெய்வமாக உருமாற்றம் அடைவதை அறிய முடிகிறது.

> **"பழைய ஏற்பாட்டில் வரும் தீர்க்கத்தரிசி 'மோசஸ்' பல தன்மைகளில் ஸ்கந்தனது தன்மைகளோடு ஒன்றுபடுகிறான். மோசஸ்க்கு ஆரன் என்ற படைத்தலைவன் இருப்பதுபோல ஸ்கந்தனுக்கு விசாகன் என்றோர் படைத்தலைவன் இருக்கிறான். ஸ்கந்தன் கிரவுஞ்ச கிரியோடு போராடியதுபோல மோசஸ் பாறையோடு போராடுகிறான்"**[38]

என்ற மேற்கோளின்படி இளமை, உற்சாகம், மதுவொலி, அழகுணர்ச்சி, காதல், வீரம், தீமையை ஒழிக்கும் தன்மை, பிறரைக் காத்து நிற்கும் பண்பு இவற்றையெல்லாம் திரட்டி தெய்வ வடிவங்களாக உலகில் பல பாகங்களிலும் இலக்கியம் செய்திருக்கிறார்கள் பண்டைக்கால மக்கள். இவர்களுள் இந்திய தெய்வங்கள் முருகனும், ஸ்கந்தனும் ஆவர். ஸ்கந்தனின் வேறு பல தன்மைகளைக் கொண்டும் தமிழ்ச்சமூக சூழ்நிலைகேற்பவும், தந்தை வழி சமூக அமைப்பு உணர்த்தும் வேட்டைச் சமூக அமைப்பை விளக்கும் மானிடவியலின் வரலாற்றுப் பார்வைக்கேற்பவும் முருகன் முதன்மையானவனாகத் தெள்ளத்தெளிவாகத் தெரிகிறான். மேலும் ஆதிக் கடவுளாக விளங்கிய முருகனுக்கு ஸ்கந்தனைப் போலவோ, மோசஸ்போலவோ புராண, இதிகாசச் செய்திகள் தமிழில் இல்லை. முருகன் என்கிற தெய்வத்தின் குணத்தையும், அவனை வழிபடும் முறை பற்றி மட்டுமே சங்க இலக்கியங்கள் தோன்றாத காலத்தில் இனக்குழு சமூகத்தில் முருகன் தெய்வமாகிவிட்டதை இக்கருத்துக்கள் உறுதிப்படுத்துகின்றன. இத்தரவுகளின் அடிப்படையில் முருகக் கடவுளின் தன்மை மற்றக் கடவுள்களிலிருந்து முதன்மையானது என்பதை உணர்ந்து கொள்ள முடியும்.

> **"கல் கருவி நாகரிகம் மறைந்து உலோக நாகரிகம் தோன்றி இரண்டும் கலவையாக நிலைபெற்றிருந்த காலத்தில் உலோகக் கருவிகளுக்கும் அக்கருவியைப் பயன்படுத்துவோருக்கும் ஏற்பட்ட மதிப்பினால், 'வேல்'ஐப் பயன்படுத்தும் தெய்வம் பண்டைத்தமிழர் சிந்தனையில் மதிப்பு பெற்றது"**[39]

காலத்தால் முற்பட்ட முதல்நிலைச் சிந்தனையில் தமிழரின் தனிச் சமுதாய வாழ்வின் முத்திரைகளை மேற்கண்ட கருத்துகள் மூலம் அறிய முடிகிறது.

> **"பழங்கால குறவர், எயினர் போன்ற குறிஞ்சி நில மக்கள் புஞ்செய் அல்லது நஞ்செய் பயிர்த்தொழிலை மேற்கண்ட தொடக்கக்காலத்தில் தோன்றிய கடவுள் கருத்து முருகன் ஆகும்"**[40]

போர்வீரனாகவும், வேட்டை தெய்வமாகவும் இருந்த முருகன் பின்னாளில் அவனின் கருத்தாக்கம் விரிவடைவதை பின்வரும் இயல்களில் காணலாம்.

### தொல்காப்பியத்தில் முருகன்

தொல்காப்பிய பொருளதிகாரத்தில் அகத்திணை இயலில்,

> **"சேயோன் மேய மைவர உலகம்"**[41]

என குறிஞ்சி நிலக் கடவுளாக முருகன் குறிக்கப்படுகிறான். அதே தொல்காப்பிய பொருளதிகாரத்தின் புறத்திணை இயலில்

> **"வெறிஅறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
> **வெறியாட்டு அயர்ந்த காந்தரும்"**[42]

என முருகனிடம் வேலன் வெறியாடல் நிகழ்த்துவதை குறிப்பிடுகிறது. இவ்விரு நூற்பாக்களை அடிப்படையாகக் கொண்டே இனக்குழு சமூகத்தின் தந்தை வழிச் சமூக தெய்வமாக முருகனை மானிடவியல் அறிஞர்கள் நிறுவுகின்றனர்.

### சங்க இலக்கியங்களில் முருகன்

சங்க இலக்கியங்களின் பல இடங்களில் 'முருகு' என்னும் சொல் வருகிறது. முருகு என்றால் அழகு. இப்பண்புச்சொல் முருகனைக் குறிப்பதற்கு வழங்கப்படுகிறது. சங்க இலக்கியங்களில் ஒன்றான மதுரைக்காஞ்சி நூலுக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் 'முருகு' என்பதன் பொருள் தெய்வத் தன்மைக் கொண்டது. அது முருகக் கடவுளுக்கு ஆகுபெயராக அமைந்தது எனக் கூறுகின்றார்.

சங்க இலக்கியங்களின் தொடக்கக் கால இலக்கியங்களில் முருகன் கடவுள் போர் தெய்வமாகவும், வெற்றித் தெய்வமாகவும், சீற்றம் கொள்ளும் தெய்வமாகவுமே குறிக்கப்படுகிறது. கால வளர்ச்சிற்கேற்ப முருகன் என்பதன் பொருள் பொருண்மைக்கேற்ப மாற்றமடைவதைக் காண முடிகிறது.

## வெற்றித் தெய்வம்

முருகன் தொடக்க நிலையில் போரிற் சிறந்த திராவிடத் தெய்வமாக வணங்கப்பட்டதை புறநானூற்றுப் பாடல் விளக்குக்கிறது. வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார், மலையமான திருமுடிக்காரியைப் பாடும்போது அவன் வீரத்தைப் புகழும் வகையில் வென்றோனும் புகழ்வான், தோற்றோனும் புகழ்வான் என்னும் பொருள்பட வரும் பாடலின் இறுதி அடியில்,

**"ஒருநீ ஆயினை பெரும பெரு மழைக்கு**

**இருக்கை சான்ற உயர் மலைத்**

**திருத்தகு சேஎய் நிற் பெற்றிசி னோர்க்கே"**[43]

பெருமானே பெரிய மழைக்கு இருப்பிடமான உயர்ந்த மலையையுடைய திருத்தக்க முருகனை ஒப்பாய் நின்னைப் பகையாகவும், நட்பாகவும் கொண்டவர்க்கு என்ற பொருளில் வருகிறது.

இதைப்போலவே கபிலர் வேள்பாரியை பாடும்போது,

**"ஓடுகழல் கம்பலை கண்ட**

**செருவம் சேஎய் பெருவிறல் நாடே"**[44]

என்ற பாடல் பகைவர் புறங்காட்டி ஓடுதல் அறிந்து நாணிப்பின் செல்லாது நிற்கும் முருகன் அணைய வீரனுமாகிய பாரியின் நாடு என்று முருகன் வீரத்திற்கு உவமையாகக் கொள்ளப்படுகிறான். இதைபோலவே, கபிலர் பாடிய மற்றொரு பாடலில் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பற்றிப் பாடப்பட்ட பாடலில்,

**"ஆரணங் காகிய மார்பில் பொருநர்க்கு**

**இருநிலத் தன்ன நோன்மைச்**

**செருமிகு சேஎய் நிற்பாடுநர் கையே"**[45]

மகளிர்க்கு வருத்தும் தரும் மார்பையும் பகைவர்க்கு வலிய நிலம் போன்ற திண்மையையும், போரில் முருகனைப் போன்ற வீரத்தையும் உடைய உன்னைப் பாடுபவர் கைகள் என்று கடுங்கோ வாழியாதனை முருகனோடு ஒப்பிட்டுப் பாடுகிறார்.

இதே அடிகள் அகநானூற்றில்,

**"செருமிகு சேஎய்"**[46]

என்று வருகிறது. இதைப்போலவே,

**"துணை வேண்டாச் செருவென்றிப்**

**புலவுவாள் புலர் சாந்தின்**

**முருகற் சீற்றத்து உருகெழு குருசில்"**[47]

என்னும் பாடல் துணைப்படை வேண்டாத வெற்றியையும், புலால்நாறும் வாளையும், பூசி உலர்ந்த சந்தனத்தையும் முருகன் சீற்றம்போல சீற்றத்தை உடைய தலைவனே என்று பாண்டரங்கண்ணனார். சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாராட்டிப் பாடுகிறார். இதுபோன்ற பாடல் பொருநராற்றுப் படையில் வருகிறது.

**"உருவப் பஃறேர் இளையோன் சிறுவன்**

**முருகற் சீற்றத் துருகெழு குருசில்"**[48]

வென்ற வேலினையும், அழகினையும் பலவாகிய தேர்களையுமுடைய இளஞ்சேட் சென்னியின் திருமகனான முருகனது சீற்றத்தைப் போன்ற தலைவனான கரிகாற் பெருவளத்தான் என்ற பொருளில் வருகிறது. இதைப்போலவே அகநானூற்றுப்பாடல்,

**"முருகி நன்ன சீற்றத்து"**[49]

என்று வருகிறது. பதிற்றுப் பத்தில்,

**"உருகெழு மரபின் கடவுள்"**[50]

அச்சம் தரும் கடவுள் மரபில் வந்தவன் என்று வருகிறது. பிந்தைய காலத்தில் வந்த மலைபடுகடாமில்,

**"வெல்போர் செய்"**[51]

பெரும்பாணற்றுப்படையில்,

**"கடம்பமர் நெடுவேள்"**[52]

போன்ற பாடல்கள் முருகனின் வீரத்தைக் குறிக்கும் பாடல்களாக வருகின்றன.

சங்க நூல்களுக்கு பிந்தியதாகவும், சமயங்கள் நிறுவனமயமானக் காலத்தில் தோன்றிய திருமுருகாற்றுப்படையில் தமிழ்த் தெய்வமாகிய முருகனின் மரபுரசார்ந்த தனித்த இயல்புகள் கூறப்படுகின்றன.

` **"வெற்றிவேல்போர்க் கொற்றவை சிறுவ"**[53]

**"வெல்போர்க் கொற்றவை சிறுவ"**[54]

**"இழையணி சிறப்பிற் பறையோன் குழவி"**[55]

**"குறிஞ்சிக் கிழவன்"**[56]

> **"மொகஞ்சதாரோ - ஹரப்பாவில் கிடைக்கும் பெண் தெய்வ வடிவங்களோடு இக்கொற்றவை வழிபாடு தொடர்புடையதாகல் வேண்டும். கொற்றவையினை வீரநிலை காயக்கடவுள் எனக்கொண்டால், வீரநிலைக் காலத்திற்குப்பின் நாகரிகக் கூறுகள் மிகுதியான காலத்தில் முருக வழிபாடு தோன்றியதோடு வழிவழித் தாம் வணங்கிய கொற்றவையின் மகனாக இம்முருகனைக் குறித்திருத்தல் வேண்டும்"**[57]

மேற்கண்ட மேற்கோள்களின் மூலம், முருகன் தாய் தெய்வத்தினின்று பிறந்த செய்தியும், தாய்வழிச் சேயை அழைத்தல் முறை தமிழ்நாட்டிற்கே உரியது என்பதை உணரலாம்.

## முருகன் அழகின் குறியீடாய் மாற்றமடைதல்

ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து போன்ற காலத்தால் முந்திய இலக்கியங்களில் 'முருகு' என்ற சொல் கையாளப்பட்ட அவன், தெய்வத்தன்மை வாய்ந்தவனாகச் சுட்டப்பெறுகிறான். மேலும் முருக வணக்கம் இயற்கை சார்ந்த வணக்கமாக உருமாறுவதைக் கவனிக்க முடிகிறது. இதை,

> **"பண்டை தமிழ் மக்கள் இயற்கை வழி வாழ்வு செலுத்தி அதற்கு அடிப்படையாய் உள்ள அழகுண்மை கண்டு அவ்வழகால் இயற்கை அழகு பெறுவதை நோக்கி, அவ்வியற்கையை வழிபட்டு முழுமுதற்பொருட்கு அழகு என்னும் பொருள்பட முருகன் என்னும் பெயரளித்தார்கள். அவர்கள்**

**இயற்கை வாயிலாக முருகைக் கண்டு நுகர்ந்த இன்பத்தை அகநானூறு, கலித்தொகை, பத்துப்பாட்டு முதலிய நூல்களில் காணலாம்.”**[58]

என்னும் திரு.வி.க. முருகு வழிபாடு இயற்கை வழிபாடாக உருமாற்றமடைந்ததை குறிப்பிடுகிறார். மேலும்,

**“அன்னை தந்தது ஆகுவது அறிவென்**

**பொன்னகர் வரைப்பில் கன்னம் தூக்கி**

**முருகு என மொழியி மாயின்**

**அருவரை நாடன் பெயர்கொலோ அதுவே”**[59]

அழகிய வீட்டில், வெறியாடி, தாயத்தைக் கட்டி, தலைவியை வருந்தியவன் முருகன் என்று கூறுவானாகில், தலைவியின் காதலனாகிய மலை நாடானது பெயர், அந்த முருகன் என்பது தானா? என்றும் இதைப்போலவே,

**“முருகென மொழியும் ஆயின்**

**கெழுதகை கொல்இவன் அணங்கியோற்கே”**[60]

என்றும்,

**“முருகென மொழியும் வேலன்”**[61]

போன்ற பாடல் அடிகள் முருகன் வீரத் தெய்வமாகவும், இயற்கைச் சார்ந்த தெய்வமாகவும் கலந்த கலவையாய் வெளிப்படுவதைக் காண முடிகிறது.

**“முருகு என்பதன் பொருள் தெய்வத் தன்மை என்றும் அது முருகக் கடவுளுக்கு ஆகுபெயராக அமைந்தது”**[62]

என்று மதுரைக்காஞ்சிக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார்.

## முருகு வழிபாட்டின் வளர்ச்சி

குறிப்பிட்ட நிலத்திற்குரிய தெய்வமாக விளங்கிய முருகன் அனைத்து நிலத்திற்கும் உரிய பொதுத்தெய்வமாக உருவெடுப்பதை புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

**“பருத்தி வேலிச் சீறூர் மன்னன்**

**உழுத்ததர் உண்ட ஒய்நடைப்புரவி**

**...........................................................**

**கலந்தொடா மகளிரின் இகழ்ந்து நின்றவ்வே”[63]**

என்ற பாடல் வேட்டைத் தெய்வமாகவும், வெற்றித் தெய்வமாகவும் விளங்கிய முருகன் அனைத்து மக்களும் வணங்கக்கூடிய அளவிற்கு வளர்ச்சிப் பெற்று விளங்கியதை இப்பாடல் விளக்குகிறது. மேலும்,

**“திருமணி விளக்கின் அலைவாய்ச்**

**செருமிகு சே எயோடு”[64]**

என்ற பாடல் அடிகள் அழகிய மணிவிளக்கு ஒளிரும் திருச்சீர் அலைவாயில் முருகன் கோயில் கொண்டிருக்கிறான் என்று பதிவு செய்கிறது. இதைப்போலவே

**“வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்**

**நெடுவேள்”[65]**

தாழ்ந்த நீரையுடைய கடலின் கண் வெளிய தலையையுடைய திரை அலைக்கும் திருச்செந்திடைத்து உறையும் நெடுவேள் என்ற பாடல் அடிகளும் முருக வணக்கம் கோயில் கட்டி வழிபடும் அளவிற்கு அனைத்து நிலத்திற்கும் பொதுவான பெருந்தெய்வமாக உருவெடுப்பதை அறிய முடிகிறது.

## முருக வழிபாடு

முருக வழிபாடு குறிஞ்சி நிலக்கடவுளாக விளங்கியபொழுது தனித்த வழிபாட்டோடும், அனைத்து நிலக்கடவுளாகப் பொதுமைப் பெற்ற பிறகும் ஆரிய ஸ்கந்த, சண்முக இணைப்பிற்குப் பிறகு ஒருவகை ஆரிய வழிபாடோடு வேறுபட்டு நிற்பதைக் காண முடிகிறது. ஆரியக் கலப்பற்ற தமிழுக்கே உரிய வழிபாட்டு முறையில், காலத்தால் முந்திய சங்க இலக்கியங்களில் காணக்கிடக்கிறது.

## வெறியாட்டு

தமிழர்களின் வழிபாட்டு முறையிலே தனித்தன்மையுடையது வெறியாட்டு ஆகும். முருக வழிபாடு நடைபெறும் இடத்தில் இந்த வெறியாட்டும், கூத்தும் நடைபெறுவதை சங்க

இலக்கியங்கள் பதிவு செய்கின்றன. இந்த வெறியாட்டும், கூத்தும் தமிழரின் இசை வளர்ச்சியோடு தொடர்புடையது, சங்க காலத்தில் பெரு வழக்காகயிருந்த இவ்வெறியாட்டை

**"வெறியறி சிறப்புன் வெவ்வாய் வேலன்**

**வெறியாட் டயர்ந்த காந்தலும்"**[66]

வேலன் வெறியாட்டைச் செய்வானென்று தொல்காப்பியர் இலக்கணம் வகுக்கிறார். மேலும் இனக்குழு சமூகத்தை நினைவுப்படுத்தும் வெட்சி - கரந்தை திணையில் இந்நூற்பா வருவதால் வேட்டைச் சமுதாயக் காலத்திற்கும், விவசாய உற்பத்தி தொடங்கிய காலத்திற்கும் இடையில் இவ்வழிபாட்டுமுறை உருவாகியதை அறிய முடிகிறது. இவ்வெறியாட்டத்தில் கையில் வேலைக்கொண்டு ஒருவன் கூத்தாடுவான். அவன் வேலைக் கொண்டு கூத்தாடுவதால் அவனுக்கு வேலன் என்று பெயர். அவன் முருகனை வாழ்த்தி விளிப்பான். துன்பம் யாவற்றிற்கும் முருகனே காவலாக உள்ளவன் என்று அவனை வழிபட்டு முருகனை வேண்டுவான் வேலன். இவ்வாறு வணங்கும் மரபை மதுரைக் காஞ்சியில் காணலாம்.

**"அருங்கடி வேலன் முருகொடு வளைஇ**

**அரிக்கூடி ன்னியங் கறங்கநேர் நிறுத்துக்**

**.....................................................................**

**மன்றுதொறு நின்ற குரவை"**[67]

மிகுந்த அச்சத்தைத் தரக்கூடிய தோற்றத்தில் இருக்கும் வேலன்; துன்பம் முருகனால் வந்தது என்று கூறுகிறான். தான் கூறிய அச்சொல்லின் கண்ணே கேட்டோரை வளைத்துக் கொண்டு அரித்தெழும் ஓசையையுடைய இனிய வாத்தியங்கள் ஒலிக்க, கார்கலத்து மலராகிய குறிஞ்சியைச் சூடி, கடம்பு அணிந்த முருகனைச் செவ்விதாகத் தன் மெய்க்கண்ணே நிறுத்தி வழிபடுவான். அவ்வாறு வழிபட, மகளிர் தம்முள் தழுவி கைகோத்து மன்றுகள் தோறும் நின்று குரவைக் கூத்து ஆடுவர் இவ்வாறாக வேலன் வெறியாட்டு நடைபெற்றதை மதுரைக் காஞ்சி பதிவு செய்கிறது. மேலும் ஐங்குறுநூற்றில் வெறிப்பத்து என்ற ஒரு பகுதி உண்டு அப்பகுதியில் தலைமகளின் பொலிவற்ற நிலைக்கு முருகனே காரணமெனக் கொண்டு நோயின் காரணத்தை அறிவதற்கு வேலன் முருகனைப் பேணுவான் என்று கூறப்படுகிறது.

**"நாம்உறு துயரம் நோக்கி அன்னை**

**வேலன் தந்தாள் ஆயின்அவ் வேலன்**

**வெறிகமழ் நாடன் கேண்மை**

**அறியுமோ தில்ல செறிஎயிற் றோயே"[68]**

என்றும்,

**"பொய்படு பறியாக் கழங்கே மெய்யே**

**மணிவரைக் கட்சி மடமயில் ஆலும்நம்**

..................................................................

**பூண்தாங்கு இளமுலை அணங்கி யோனே"[69]**

என்றும்,

**"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி**

**யறியா வேலன் வெறியெனக் கூறும்"[70]**

என்றும் தலைமகளின் பொலிவற்ற நிலைக்கு காரணம் முருகனே என்று எண்ணி வேலன் வெறியாடல் நிகழ்த்துதலைக் குறிப்பிடுகிறது.

குறுந்தொகையிலும்,

**"மென்றோ ணெகிழ்த்த செல்லல் வேலன்**

**வென்றி நெடுவே ளென்னும்"[71]**

மெல்லிய தோளை மெலியச் செய்த துன்பம், வெற்றியையுடைய முருகக் கடவுளாய் வந்ததென்று வேலன் சொல்லுவான் என்று வருகின்றது.

அவ்வாறு கூறி,

**"வெண்போழ் கடம்பொடுசூடி இன்சீர்**

**ஐதமை பாணி இரீஇக்கை பெயராச்**

**செல்வன் பெரும் பெயர் ஏத்தி வேலன்**

**வெறியயர் வியன் களம்"[72]**

வெள்ளிய பனந்தோட்டினைக் கடம்ப மலரோடுசூடா இனியசீர் அழகியதாக அமைந்த தாளத்தோடு பொருத்தா வேலன் வெறியாடுவான்.

**"பொய்யா மரபினூர் முதுவேலன்**

**கழங்கு மெய்ப் படுத்து கன்னந்தூக்கி**

**முருகெனமொழியும்"**[73]

வெறியாடும்போது கழற்காயை மெய்யிலணிந்து படிமக் கலத்தைத் தூக்கிக் கொண்டு முருகணங்கின் குறையென வேலன் கூறுவான். கழங்கு பார்த்தல், நெற்குறி பார்த்தல் போன்றது. அதை நெறிக் களத்திலே பரப்பிவிட்டுப் பார்க்கும்பொழுது மூன்றும், இரண்டும், ஒன்றும் படுகை இவ்வாறுபடின் முருகணங்கினால் ஆயிற்று எனக் கொள்வர்.

**"மூன்று - மயில்**

**இரண்டு - சேவல்**

**ஒன்று - வேல்**

**இதனை அடிகொடி உவகை என்று பெயர் கூறுப"**[74]

வெறியாடும் களம் பொன்னகர் போன்றது என்பதை,

**"பொன்னகர் வரைப்பு"**[75]

என்று ஐங்குறுநூறு கூறும், வெறியாட்டு நிகழும் இடம்,

**"பெய்ம் மணற் முற்றம்"**[76]

மணல் கொட்டிப் பரப்பப்பட்ட இடம் என்று ஐங்குறுநூறு கூறுகிறது. வெறியாட்டு நடக்கும் இடம்தோறும் செந்நெல்லினது வெள்ளிய பொரி சிதறிக் கிடப்பதை

**"வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்**

**செந்நெல் வான்பொரி சிதறியன்ன"**[77]

என்று குறுந்தொகை படம்பிடித்துக் காட்டுகிறது. இக்காட்சியினை விளங்கிய கடற்பரப்பினிடத்து நறிஞாழற் பூவோடு புன்னை மலரும் பரவி இருத்தல்போலத் தோன்றும் என்பதை,

**"எறிசுறாக் கலித்த விங்கு நீர்ப்பரப்பின்**

**நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்**

**வெறியயர் களத்தினிற் றோன்றும்"**[78]

என்று குறுந்தொகை கூறுகிறது.

இவ்வெறியாட்டில் தெய்வம் ஏறியதனால் அசைகின்ற அசைவு, உலாவி அசைந்து ஆடுகின்ற மடப்பத்தினையுடைய விறலியின் ஆட்டத்திற்கும் அரிய மணியையிடைய பாம்பின் ஆட்டத்திற்கும் ஒப்பிட்டுப் பார்ப்பதை,

**"இயலின ளொல்கின ளாடு மடமகள்**

**வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்**

**பெருமலை வயின் விலங்கு மருமணி**

**அர வழங்கும்"**[79]

என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

இவ்வெறியாட்டால் ஆட்டின் கழுத்தை அறுத்து தினையரிசியை அதனுடன் கலந்து வைத்து வழிபடுவதை,

**"மறிக்குர லறுத்துத் தினைப் பிரப் பிரிஇ"**[80]

என்று குறுந்தொகை கூறுகிறது. ச்ச்இதையே திருமுருகாற்றுப்படை,

**"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து"**[81]

சிறிய தினை அரிசியைப் பூக்களோடு கலந்து பிரப்பரிசியாக வைத்து, ஆட்டை அறுத்து என்று கூறுகிறது. இதைப்போலவே,

**"பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு**

**சிறுமறிகொன்றிவ ணறுநுத னீவி**

**வணங்கினை கொடுத்தி யாயின்"**[82]

பலவாகிய வேறுபட்ட நிறம் பொருந்திய சோற்றையுடைய பலியுடன் சிறிய ஆட்டுக்குட்டியைக் கொன்று, நோய் உள்ள பெண்ணின் நளிய நெற்றியைத் தடவி, முருகக் கடவுளை வணங்கிப் பலியாகக் கொடுப்பான் வேலன் என்று இந்த குறுந்தொகைப் பாடல் கூறுகிறது. முருகனை வேலன் வரவழைப்பதை,

**"களநன் கிழைத்துக் கண்ணிசூட்டி**

**வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்**

**துருவச் செந்திணை குருதியொடு தூஉய்**

**முருகாற்றுப்படுத்த உருகெழு நடு நாள்"**[83]

வெறியாடும் களத்தினை நன்கு அமைத்து வேலிற்கு மாலைசூட்டி, வளம் பொருந்திய கோயிலில் ஒலியுண்டாகப் பலிகொடுத்து, அழகிய சிவந்த தினையை இரத்தத்துடன் கலந்து தூவி, முருகனை அச்சம் பொருந்திய நடு இரவில் வேலன் முருகனை வரவழைப்பதை இந்த அகநானூற்றுப் பாடலால் அறிய முடிகிறது.

முருகனால் வருத்தமுற்ற மகளிர்க்கு ஆடு அறுத்தாடும் களத்திற் குருதிபாய்வதை,

**'புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப்**

**புன்னி வரிநுதல் சிதைய......**

**.......................................**

**அணங்குறு மகளி ராடுகளங் கடுப்ப"[84]**

அதாவது புள்ளினையும் புகரினையுமுடைய மான் அழிய அம்புபட்டு, அதன் உடலிலிருந்து குருதி பாய்வதற்கு ஒப்புமையாக்கிக் குறிஞ்சிப்பாட்டில் கூறப்படுகிறது.

வெறியாட்டம் மேவிய மகளிரின் தோற்றப் பொலிவு முதலியவற்றை,

**"...................... அதந்தலைப்**

**பைங்கண் மாச்சுனை பல்பிணி அவிழ்ந்த**

**வள்இதழ் நீலம்நோக்கி, உள்ளகைபு**

**ஒழுக கண்ணள் ஆகி....."[85]**

வருந்தி அழுத கண்களை உடையவன் ஆயினான், வேறு நீலமலர்களை எளிதில் கொள்ளலாகும் என நான் சொல்லவும், அவன் அதனை ஏற்கவில்லை. ஆராய்ந்த அணிகலன்களை அணிந்த இவன், ஆண்டுப்போந்த தலைவனிடம், அம்மலரைப் பறித்து உதவுமாறு துணிந்து வேண்டினர் என்றும்,

**"செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்**

**வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்"[86]**

செறிந்த தொடியணிந்த தம் முன்கைகளைக் கூப்பி தெய்வங்களை வழிபடுபவர் என்று வெறியாட்டில் மகளிர் தோற்றத்தை பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

மகளிர் வெறியாடும் அழகை,

**"கடியுண கடவுட் கிட்ட செழுங்குரல்**

**அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்**

**வெறியுறு வனப்பின் வெய்துற்ற நடுங்கும்"**[87]

தெய்வத்திற்குப் பலியாகக் கட்டச் செழுமையான கதிரைத் தெரியாமல் உண்ட மயில் வெம்மையுற்று நடுங்குதற்கு ஒப்ப வெறியாட்டு மகளிர் நடுங்கினர் என்று குறுந்தொகை கூறுகிறது.

**துணங்கைக் கூத்து**

திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம் என்ற பகுதியிலே தமிழ்க் கடவுளாகிய முருகனுக்குத் தமிழ்முறையிலேயே பேய்மகள் ஒருத்தி ஆடிய துணங்கைக் கூத்து காட்சிப்படுத்தப்படுகின்றது.

**"உலறிய கதுப்பிற் பிறம்பற் பேழ்வாய்ச்**

**சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கிற்**

........................................

**நிணம்தின் வாயள் துணங்கை தூங்க"**[88]

அச்சம் தரும் பேய் மகள் துணங்கைக் கூத்து ஆடினாள். அவள் தலைமயிர் காய்ந்து கிடந்தது. கோபத்தாற் சுழலும் விழியையுடைய பசிய கண்ணை உடையவளாயிருந்தாள். அவள் பார்வை கொடுமை செய்யும் தன்மையோடு விளங்கியது பிதுங்கிய கண்ணையுடைய கூகையும், பாம்பும் தூங்குவதனால் முலைகளை வருத்தின அவள் காதுகள், உட்குதல் பொருந்தும் நடையினையும், பெரியவயிற்றையும் உடையவளாயிருந்தாள். உதிரத்தை அளைந்த நகத்தையுடைய கொடிய விரலாலே தோண்டி உண்ணப்பட்ட முடை நாற்றம் மிக்க கருந்தலையை வளைகள் நிரம்பிய கையினாலே ஏந்தியுள்ளாள். எதிர் நின்று கொல்கின்ற வெற்றிக் களத்தைப் பாடித் தோளை அசைத்து நிணத்தைத் தின்கின்ற வாயினை உடையளாய் ஆடினாள் அவளென்று கூறுகிறது.

**குரவைக் கூத்து**

அதே திருமுருகாற்றுப்படையில் குன்று தோறாடல் என்ன பகுதியில் முருக வழிபாட்டுடன் தொடர்புடைய குரவைக் கூத்து கூறப்படுகின்றது.

**"பைங்கொடிநறைக்காயிடையிருழவேல**

**னம்பொதிப்பிட்டில்விரைஇக்குளவியொடு**

**..................................................................**

**குன்றுதொறாடலுநின்றதன்பண்பே"[89]**

வேலன் பைங்கொடியாலே தக்கோலமென்னும் கொடியின் காயோடு சாதிக்காய், காட்டு மல்லிகை, வெண்தாளி முதலியன கட்டிய கண்ணியை அணிந்திருக்கின்றான். அவன் மார்பு சந்தனச் சாந்து பூசப்பெற்று ஒளியுடன் திகழ்கின்றது. கொடுந்தொழிலையுடைய வில்லினாற் கொல்லும் கானவர் மூங்கிலில் விளைந்த தேறலைச் சிறுகுடி மக்களுடன் மகிழ்ந்து மாந்திச் சிறு பறைக்கேற்ப குரவை அயர்கின்றனர். அவர்கள் அருகில் மயிலைப் போன்ற மடநடை மகளிர் காணப்படுகின்றனர். அம்மகளிர் சுனை பூத்த வண்டுபடு பூக்களினால் ஆன கண்ணி அணிந்துள்ளனர். அப்பூக்கள் அவர்களின் விரல்களின் அலைப்பாலே வேறுபடுகின்ற நாற்றத்தை உடையன. அவர்களின் கூந்தல் கோதையோடு விளங்குகின்றது. பெருந்தழையைச் சிறந்த மேகலை விளங்கும் அல்குல் திளைக்க உடுத்தியிருக்கின்றார்கள். அத்தழை கஞ்சங்குல்லையினையும், இலையையிடைய நறிய பூங்கொத்துக்களையும், மராத்திடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களையும் நடுவே வைத்துச் சுரும்புத் தேனை உண்ணும்படி தொகுக்கப்பட்டது பெருமையும் குளிர்ச்சியும் பொருந்தியது. செய்யன் சிவந்த ஆடையை உடுத்தியுள்ளான். அவன் காதிலே அசோகின் குளிர்மை பொருந்திய தளிர் அசைகின்றது. அவன் கச்சினையும், கழலினையும் அணிந்திருக்கின்றான். அவன் வெட்சிக் கண்ணியன் குழலை ஊதுகின்றான். கோட்டையும், பல்லியத்தையும் இயம்புகின்றான். கிடாயைப் பின்னிட்டு மயில் ஏறுபவன் அவன். தொடியணி தோளன். வீணையின் ஓசை ஒத்த மிடற்றையுடைய மகளிர் அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர். அவன் இடையிலே இறுகக் கட்டிய அரைக்கச்சையின்மேலே நறி குளிர்ந்த மென்மையான துகிலை நிலத்தைப் பொருந்தும்படி உடுத்தியுள்ளான். மென்மையான தோள்களை உடைய மயிலெனப் பயிலும் மகளிரோடு குன்றுகளில் அவன் கூத்தாடுகின்றான் என்று முருகனோடு தொடர்புடைய குரவைக் கூத்தை திருமுருகாற்றுப்படை விளக்குகிறது.

## குறமகள் வழிபாடு

திருமுருகாற்றுப்படையின் இறுதிப் பகுதியில் குறமகள் முருகனை வழிபடும் முறைகளும், செயல்களும் குறிப்பிடப்படுகிறன.

**"ஆண்டலைக்கொடியொடுமண்ணியமைவர**

**நெய்யோடையவியப்பிஐதுரைத்துக்**

**.................................................................**

**நறும்புகைஎடுத்துக்குறிஞ்சிபாடி"**[90]

குறமகள் முருகனை அழகு செய்து மாட்சிமைப்பட்ட தலைமையினையுடைய கோழிக் கொடியுடன் மயிலையும் மலைக்கோயிலில் பொருந்த அமைத்து,அலங்கரித்து, வெண்சிறு கடுகை நெய்யுடன் கலந்து தெய்வ சாந்நித்தியம் உண்டாகும் பொருட்டு வாயிற்படி முதலிய இடங்களில் தடவி, தான் வழிபடுவதற்குரிய முருக மூல மந்திரத்தைப் பிறர் செவியிற்படாமல் மெல்ல உச்சரித்து, குனிந்து கைகூப்பி மார்பில் வைத்து வணங்கி அழகிய மலர்களைத் தூவி, அதன்பின்பு நீராடி வந்து, வெவ்வேறு நிறத்தையுடைய இரண்டு ஆடைகளை உடுத்துச் சிவந்த நூலைக் கையில் காப்பு கட்டி, வெண்பொரியைத் தூவி மிக்க வலிமை பொருந்திய, பெரிய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக்கிடாவின் இரத்தத்தோடு சிறுபலியாகப் பலியிடத்திலும், நான்கு திக்குக்களிலும், ஆகாயத்திலும் இட்டு, குறுணி அளவு கொண்ட பலதானிய வித்துக்களாலாகிய நிவேதனப் பொருள்களைப் பல பிரப்பங் கூடைகளில் இட்டுப் பரப்பி படையல் போட்டு, அரைத்த சிறுபசு மஞ்சளோடு சந்தனம் முதலிய நறுமணமும், குளிர்ச்சியும் அமைந்த பிற மாலைகளையும் தம்மில் அளவு ஒக்க நறுக்கிப் பந்தலில் அமையும்படி தொங்கவிட்டுப் பூங்கோயிலாக அமைந்து, நெருங்கிய மலைப்பக்கங்களிலுள்ள முருகன் கோயில் கொண்டு எழுந்தருளிய - நல்ல ஊர்களை இன்புற்று வாழ்க என்று வாழ்த்தி, நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடுகின்றான் என்று குறமகள் வழிபாட்டை திருமுருகாற்றுப்படையின் இறுதிப்பகுதி விளக்குகிறது.

முருக வழிபாடு என்பது மூன்று வகையில் நடைபெற்று வந்ததை மேற்கண்ட பாடல்களின் வழி அறிய முடிகிறது. வேலன் வெறியாடி குறி சொல்வது முதல் வழிபாட்டு முறையாகவும் நாளடைவில் கால, சமூக வளர்ச்சிக்கேற்ப எல்லா நிலத்து மக்களும் வணங்கக்கூடிய சூழல் உருவானபோது யார் வேண்டுமென்றாலும் வழிபாடு செய்து வெறியாட்டு நிகழ்த்தலாம் என்பதை அறிய முடிகிறது.

மேலும் குறவர்களோடும், அவர்களின் குறமகளிரோடும் கூடி கள்ளைக் குடித்து ஊர் மன்றத்தில், வேங்கை மரத்தடியில் கைகோர்த்துக் குரவையாடி முருகனை வழிபடும் முறையும் நடந்து வந்ததை அறிய முடிகிறது. இந்த மூன்று வழிபாட்டு முறைகளும் தமிழுக்கே உரிய தனித்த முருக வழிபாட்டு முறையாக அமைகிறது. வேட்டைச் சமூகத்தில்

அதாவது வெட்சி - கரந்தையில் தோன்றிய முருக வழிபாடு அரசமைப்புத் தோன்றி சமூகத்தில் பெரும் சமயத் தாக்கம் ஏற்பட்டு சமயங்கள் நிறுவனமாகிய காலம் வரை தமிழரின் தனித்த முருக வழிபாடு தொடர்ச்சியாக வளர்ந்து வந்ததை அறிய முடிகிறது.

## மால் தெய்வ தோற்றமும் வளர்ச்சியும்

'மால்' எனும் சொல்லுக்குப் பெரியவன் என்பது பொருள், மாயோன் என்றும் சொல்லுக்குகுரியவன் என்பது பொருள். 'மால்' தெய்வத்தை முல்லைத் திணையின் தெய்வமாக தொல்காப்பியர் சுட்டுகிறார்.

**"மாயோன்மேய காடுறை உலகமும்"**[91]

தொல்காப்பியர் காட்டும் முல்லைத்திணை இனக்குழு சமூக அமைப்பு முடிவடைந்து குடும்பம், அரசு தோற்றக் காலத்தை விளக்குவதாக அமைகிறது. குறிஞ்சி நில மக்களின் களவொழுக்க வாழ்வியல் முறை கற்பியல் வாழ்க்கை முறைக்கு மாற்றமடைவதை இந்த முல்லைத்திணை சுட்டிக்காட்டுகிறது. காடுகளை அழித்து சமவெளி ஆக்குவதும், வேளாண்மை செய்யத் தொடங்குவதும், காட்டு விலங்குகளைப் பழக்கி வீட்டு விலங்குகளாகவும் வேளாண்மை செய்வதற்குப் பயன்படுத்தும் வளர்ச்சிப் போக்கில் மால் தெய்வம் தோற்றமடைகிறது. இயேசுநாதரின் வாழ்வு முல்லைநிலக் காலத்தைக் குறிப்பதால்தான் அவர் மேய்ப்பர் என்று அழைக்கப்படுகிறார். 'மால்' தெய்வத்தைப் பற்றி சங்க இலக்கியங்களில் குறிப்புகள் வருகின்றன.

**"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்"**[92]

'மால்' போன்ற தெய்வத்தைப்போல் உயர்ந்த மலைச்சாரல் என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

**"புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன"**[93]

என்று புறநானூறு 'மால்' தெய்வத்தைக் குறிக்கிறது.

**"தேயா விழுப்புகழ்த் தெய்வம்"**[94]

என்றும்,

**"மலையொடு மார்பு அமைந்த செல்வன்"**[95]

என்றும்,

**"ஆடுகொள் நேமியான்"[96]**

என்றும்கலித்தொகை மால் தெய்வத்தைக் குறிப்பிடுகிறது.

**"நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்"[97]**

என்று முல்லைப்பாட்டு 'மால்' தெய்வத்தைக் குறிக்கிறது.

**"மலையொடு சிமைய மால்வரைக் கவாஅன்"[98]**

என்று பட்டினப்பாலைக் குறிப்பிடுகிறது. சங்கப்பாடல்களில் பெரும்பாலும் திருமால் என்பதற்கு பதிலாக 'மால்' என்றே முல்லைநிலத் தெய்வத்தைக் குறிப்பதைக் கண்டுணரலாம்.

ஏறு தழுவிய தலைவனின் முடிமேலிருந்த முல்லைப்பூவைத் தன் கொம்பினால் எடுத்து வீசுகிறது காளை. அந்த முல்லைப்பூ காதலியின் கூந்தலின்மேல் விழுகிறது. அந்த முல்லைநில ஆயர்மகள் இழந்த பொருளைப் பெற்றாற்போல் மகிழ்வுடன் எடுத்துக் கூந்தலில் வைத்து மறைத்துக் கொள்கின்றாள். இச்செய்தியை அறிந்த அவளுடைய தந்தையும், தமையன் மாரும் ஒன்று கூடி தெய்வமாகிய 'மால்' இவளுக்கு இதனைக் கொண்டு வந்து கொடுத்துள்ளார் என்று மகிழ்ந்தனர். களவொழுக்கம் வெளிப்படாது ஒழுகிய அந்தத் தலைவனுக்கே மணமுடித்துக் கொடுக்க முன்வந்தனர். இந்நிகழ்ச்சியைத் தெய்வச் செயல் என்று போற்றும் ஆயர்கள் 'தெய்வமால் காட்டிற்று' என்று கூறினர் என்பதை

**"மண்ணிமா சற்றநின் கூழையுள் ஏறுஅவன்**

**கண்ணிதந் திட்டது எனக் கேட்டுத் திண்ணிதாத்**

**...............................................**

**ஐயன்மா ரெல்லாம் ஒருங்கு"[99]**

என்று கலித்தொகைக் காட்சிப்படுத்துகிறது. இவ்வாறு வேட்டைச் சமூகத்தில் வெற்றித் தெய்வமாகவும், இரும்பினால் உருவான போர்க் கருவிகளைக் கையாளத் தெரிந்தவனை தம் தலைவனாகவும் பின் தெய்வமாகவும் இனக்குழு சமுதாய மக்கள் கருதினார்களோ, அதுபோல விவசாயம் தோற்றம் பெற்ற தொடக்கக் காலத்தில் காட்டு விலங்குகளை அடக்கி வீட்டு விலங்குகளாகவும் மேலும் அவைகளை விவசாயம் செய்வதற்கும் பயன்படுத்தியவனை தம் தலைவனாகவும் பின் தெய்வமாகவும் மக்கள் உருவகித்துக் கொண்டார்கள் என்பது இப்பாடலின் மூலம் அறிந்து கொள்ல முடிகிறது. களவொழுக்க வாழ்க்கை முடிவுற்று கற்பொழுக்க வாழ்க்கை முறையில்; குடும்ப அமைப்பும், அரசுருவாக்கமும் தோற்றம் பெற்ற

காலத்தில் 'மால்' தெய்வம் மக்களின் சிந்தனை வளர்ச்சிக்கேற்ப உருவாகிறான் என்பதை ஊகிக்க முடிகிறது.

**அணங்கு**

சங்க இலக்கியங்களில் உருவமில்லாத தெய்வமாகவும் ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாகவும் 'அணங்கு' விளங்குகிறது. மேலும் அது வருத்தத்தைத் தரக்கூடியது என்றும் புனிதமானது என்றும் பண்டை தமிழ் மக்களிடையே நம்பிக்கை நிலவியிருக்கிறது. இந்த அணங்கு மரம், செடி, கொடி முதலியவற்றிலும் மனிதரிடத்திலும் தங்கக்கூடியது என்று சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. கற்புடைய பெண்களிடத்திலும், நடுகற்கள், பருவமடைந்த பெண்கள், கைம்பெண்கள் போன்றவர்களிடமும் அணங்கு உறையும் என்று கூறப்பட்டுள்ளது, அணங்கு உறையப்பட்டவர்கள் புனிதத்தோடு விளங்க வேண்டும், அவ்வாறு புனிதமாகயிருந்தால்தான் நல்வழியில் செல்வதற்கும், அதிசயச் செயல்களைச் செய்வதற்கும் முழு ஆற்றலை தரும். அவ்வாறின்றி புனிதம் கெட்டால், அணங்கு அவர்களைவிட்டு வெளியேறும் என்று சங்ககால மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

அணங்கு பற்றி,

**"அணங்குடை முந்நீர்"**[100]

**"அணங்குடைக் கடம்பு"**[101]

**"பேயும் அணங்கும் உருவுகொண்டு"**[102]

**"சூருடைச் சிலம்பின் சுடர்ப்பூ வேய்ந்து**
**தாம் வேண்டுருவின் அணங்குமார் வருமே"**[103]

**"அணங்கு கால் கிளரும் மயங்கிரு நடுநாள்"**[104]

**"அணங்குடை அரவின் ஆர்இருள் நடுநாள்"**[105]

என்று சங்க இலக்கியங்களில் அணங்கு பற்றி பதிவுகள் வருகின்றன. மேலும் சங்க அக இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன. தலைவி பாத்திரத்தை அணங்கு தெய்வத்தோடு ஒப்பிட்டு பாடப்பட்டுள்ளது.

**"அணங்குடை வனமுலை தாஅய நின்"**[106]

என்றும்,

**"................ ஆய்இழைக் குறுமகள்**

**சுணங்குசூழ் அகத்து அணங்குனை உருத்த"**[107]

என்றும்,

**"அணங்கு அன்னாள்"**[108]

என்றும்,

**"அணங்குசால் அரிவை"**[109]

என்றும்,

**"அணங்குசால் கற்பினன்"**[110]

என்று தலைவியோடு அணங்கு தெய்வத்தை ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் அனங்கு என்பது மனிதனின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றதாக விளங்கி உள்ளதை மேற்கூறிய பாடல் அடிகள் உறுதிப்படுத்துகின்றன.

'அணங்குசால் கற்பினன்', 'அணங்குசால் அரிவை' எனும் பாடலடிகள் பெண்களிடம் படிந்து கிடக்கும் ஆற்றலும், தெய்வத்தன்மையும் பெண்களின் கற்புத்திறம் ஓங்கி இருக்கும்வரை இருக்கும் என்பதை கூறுவதாக அமைகின்றன. வேடுவன் தாம் விட்ட அம்பின் குறி தவறியதற்கு அணங்குதான் காரனம் என்று கருதுகிறான். மேலும் மழை பெய்யாமல் போனதற்கு அணங்குதான் காரணமென எண்ணி, மக்கள் அணங்கினை அமைதிப்படுத்த பலியிட்டு வணங்கியதை,

**"பணைத்த பகழிப்போக்கு நினைந்து கானவன்**

**அணங்கொடு நின்றது மலை வான்கொள்க எனக்**

**கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டு எழுந்து**

**கிளையொடு மகிழும் குன்ற நாடன்"**[111]

என்று நற்றிணைப் பாடல் பதிவு செய்கிறது. மேலும் கற்புத்திறனோடு விளங்கிய மகளிருக்கு அணங்கின் ஆற்றல் கைவரப்பட்டது. அதனால் அவர்கள் மழையை வேண்டினால் மழைபெய்யக்கூடிய ஆற்றல் பெற்றவர்களாக ஆனார்கள். அவர்களுடைய கணவரும்

குறித்தப்பாது அம்பை எய்து வேட்டையில் பலன் அடைந்தனர். அவர்களுடைய மலையில் வள்ளிக்கிழங்கு விளைந்தது. தேன்கள் சுரந்தன என்பதை,

> **"வருமுலை புணர்ந்தன வெண்பதனால் என் தோழி**
>
> **அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே**
>
> **..................................................................**
>
> **தாம் பிழையார்தாம் தொடுத்த கோல்"**[112]

என்று கலித்தொகைப் பாடலடிகள் விளக்கி பதிவு செய்கிறது.

கற்புடன் விளங்கிய தலைவிக்கு அணங்கின் ஆற்றல் கைவரப்பட்டது. இதனால், மழைதரும் ஆற்றலைப் பெற்றவளாகிறாள். கற்புடன் கணவனை வனங்கும் திறத்தால், தம் கணவருக்கு வேட்டையால் பலன் கிடைக்கிறது. களவில் புணர்ந்த தலைவியின் ஆற்றலுக்கு மலை வாழ்நர் கேடு செய்ய நினைத்தால் அந்த மலையில் வள்ளிக்கிழங்கு விளையாமல் போகும். தேனீக்கள் தேன்கூடு கட்டாது என்ற செய்தியை மேற்கூறிய பாடலடிகள் விளக்குகின்றன.

> **"தலைவியின் ஆற்றல் குடும்ப நன்மைக்கும 'இனக்குழு நன்மைக்கும் அடிப்படையானதாக அணங்கு வணக்கம் உறுதி செய்கிறது. அணங்கு ஆற்றல் இருக்கும் வரை நன்மையும், நீங்கும்போது தீமையும் விளையும் என்னும் நம்பிக்கை சங்ககால மக்களிடையே வெளிப்பட்டது"**[113]

இவ்வாறாக அணங்கு வழிபாடு கொற்றவை வழிபாட்டின் திரிபாகவும், இயற்கை வழிபாட்டு முறையோடு இயைந்ததாகவும், சிலை வைத்து வணங்காமல் அருவமாக உறைந்து தெய்வத்தன்மையை வெளிப்படுவதாகவும், பெண்களின் கற்பிற்கு முக்கியத்துவம் கொடுப்பதாகவும் அணங்கு தெய்வ வழிபாட்டின் வழி அறிய முடிகிறது.

## நடுகல் வழிபாடு

சங்க இலக்கியங்களில் நடுகல் வழிபாட்டு முறை சிறந்து விளங்கியது. இந்த நடுகல் வழிபாடு இனக்குழு சமூகத்தை உணர்த்தும் வெட்சி-கரந்தைத் திணையிலேயே தொடங்கிவிட்டதை தொல்காப்பியர் பதிவு செய்கிறார்.

**"காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுதல்,**

**சீர்த்தகுசிறப்பின்பெரும்படைவாழ்த்தல்என்று**

**இருமூன்று மரபிற் கல்லொடு புணரச்**

**சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே"**[114]

ஆநிரை கவர்தல், மீட்டல், போர்ச்செயல்களில் இறந்துபட்ட வீர மறவர்களுக்கு நடுகல் நட்டு வழிபடுவதை இந்நூற்பா விளக்குகிறது. காட்சி என்பது கல்லின் அளவு, அதன் தன்மைகளை ஆராய்ந்து கல்லைத் தேர்ந்தெடுத்தல், இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட கல்லிலே ஓர் உருவம் செதுக்கப்படும். அவ்வுருவம் சில விதிகளுக்குட்பட்டு அமைக்க வேண்டும். 'கால்கோள் என்பது அந்தக் கல்லை நடுவதற்குரிய நல்ல நிமித்தத்தைப் பார்த்தல், 'நீர்ப்படை' என்பது அக்கல்லை நீராட்டுதல், 'நடுதல்' என்பது மறவன் இறந்த இடத்திலோ அல்லது வேறு ஏற்ற இடத்திலோ கல்லை நடுதல், 'சீர்த்தமரபில் பெரும்படை' என்பது இறந்துபட்ட மறவனின் வீரச்செயல்களைக் கல்லில் பொறித்தல், 'வாழ்த்துதல்' என்பது கல்லை வணங்கி, வாழ்த்தி, உரைத்தல் என்று நடுகல் வழிபாடு தொடக்கக் காலத்தில் நடைபெற்றிருக்கிறது. இந்த நடுகல் வழிபாடு, பின்னாளில் சமூகப் பொருளாதர வளர்ச்சிக்கேற்ப மாற்றமடைந்து, மரபு வழுவாத தன்மையோடு விளங்கியதை சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது. மேலும் நடுகல் வழிபாடு கி.பி.ஏழாம் நூற்றாண்டு வரை தமிழ் மக்களிடையே தொடர்ந்து வந்ததை தமிழ் இலக்கியங்களும், தொல்பொருள் அகழ்வாராய்ச்சிகளும் நிறுவி இருக்கின்றன.

**"நல்லமர்க் கடந்த நானுடை மறவர்**

**பெயரும் பீடும் எழுதி அதர்தோறும்**

**பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்**

**வேலூன்று பலகை"**[115]

என்று அகநானூற்றுப்பாடல் வீரமறவனின் பெயரையும், அவனது புகழையும் கல்லில்பொறித்து, வழிதோறும் மயில்தோகை அணிந்து, நடுகற்கள் விளங்குகின்றன என்பதை விளக்குகிறது.

**"பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**

**மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொ**

**டணிமயிற் பீலிசூட்டிப் பெயர்பொறித்**

**தினிநட் டனரே கல்லும்"**[116]

பரவிய கல்லாங் காட்டின் மேட்டில், மரல் நாரைக் கிழித்துத் தொடுக்கப்பட்ட சிவந்த பூவால் ஆகிய கண்ணியுடன், அழகிய மயில்தோகை சூட்டி, பெயரை எழுதி இப்பொழுது நடுகல் நிறுத்தினர் என்று புறநானூற்றுப்பாடல் இதே கருத்தைப் பதிவு செய்கிறது.

**"விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்**

**எழுத்துடை நடுகல்"**[117]

குற்றமில்லாத தொடையையுடைய மறவரின் அம்பினால் இறந்தவரது நடுகல்லை ஐங்குறுநூறு பதிவு செய்கிறது.

**"கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த**

**கடவுள்"**[118]

இவ்வாறு இவன் வீரமரணம் அடைந்தான் என்று அவன் பெயரை உலகம் அறியுமாறு பொறித்து, மாமரத்தின் நிழலிலே நட்டு, அதனை தெய்வமாகப் போற்றுவார்கள் என்று மலைப்படுகடாம் கூறுகிறது.

**"கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி**

**நடுகல்லி னரண்போல பெயர் மருங்கறிமார்"**[119]

வீரரின் நினைவாக அருகில் கேடயங்களும், ஈட்டிகளும் வைக்கப்பட்டதை பட்டினப்பாலை பதிவு செய்கிறது.

**"நடுகற்பீலி சூட்டித் துடிப்படுத்தத்**

**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்"**[120]

நடுகற் கடவுளை வழிபடுவதற்கு அந்தக் கல்லில் மயில் தோகைகளைச் சூட்டி, துடி என்னும் இசைக்கருவியை அடித்து நெல்லாளாக்கிய கள்ளோடு செம்மறிக் குட்டியைப் பலி கொடுப்பதை அகநானூறு பதிவு செய்கிறது

**"நடுகற் பீலி சூட்டி நாரரி**

**சிறுகலத் துகப்பவுங் கொள்வன்"**[121]

நடுகல்லின்கண் நாரால் அரிக்கப்பட்ட தேறலைச் சிறிய கலத்தால் படைப்பதும் வழக்கில் இருந்ததை இப்பாடல் பதிவு செய்கிறது. இதுகாறும் இனக்குழு சமூகத்தில் தொடங்கிய இந்நடுகல் வழிபாடு சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கேற்ப வழிபாட்டில் மரபு மாறாத மாற்றத்தோடு வளர்ந்து வந்ததை மேற்கூறிய மேற்கோள்கள் உறுதிப்படுத்துகின்றன.

மேலும்,

> **"இறந்து போனவர்களின் நினைவாக நடப்படும் நடுகற்கள் முன்னோர் வழிபாட்டுடன் தொடர்புடைய நடுகற்கள் மறவர்களின் வீரச் செயலைப் புகழும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளதாக சங்கப் பாடல்கள் தெரிவித்துள்ளன. சங்கப்பண்பாட்டிற்கு முந்தைய சமூகமான பெருங்கற்படைக்கால பண்பாட்டிலேயே இவ்வாக்கம் பெருகி இருந்துள்ளது"**[122]

என்று சிலம்பு நா.செல்வராசு குறிப்பிடுகின்றார்.

மேலும்,

> **"திராவிடப் பண்பாட்டின் முக்கிய கூறாகிய இறந்தவர்களைப் புதைத்து வழிபடுகின்ற வழக்கம் பின்னாளில் பெருங்கற்படைச் சின்னங்கள் உருவாவதற்கு வழிகோலிற்று, நீத்தோர் நினைவாகப் பெரிய கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள் விந்திய மலைக்குத் தெற்கே இந்தியாவின் தீபகற்ப பகுதியில் நிறைந்து காணப்படுகின்றன. பெருங்கற்களைக் கொண்டு நினைவுச் சின்னங்கள் உருவாக்கப்பெற்றதால் இதனைப் பெருங்கற்படைக் காலம் எனத் தொல்லியலார் அழைக்கின்றனர். இப்பெருங்கற்படைக் காலம் தமிழகத்தில் கி.மு.1000 முதல் கி.பி.100 வரை நிலைத்திருந்துள்ளது"**[123]

என்று சிலம்பு நா.செல்வராசு குறிப்பிடுவது நடுகல் தோற்ற ஆய்விற்கு வலுசேர்ப்பதாக உள்ளது.

மேலும்,

> **"நடுகல் வழிபாடு தோன்றியதைப் போன்று கோயிற் கட்டிடக்கலையும் இழவு வினைகளை ஒட்டியே வளர்ந்திருக்கலாம் என அறிஞர் கருதுவர். வட்டமான நிலப்படமுள்ள கோயில்களைக் கவனிக்கும்பொழுது இவற்றின் தொடக்கம் பெருங்கல் வடிவுப் புதை குழிகளிலே அமைந்துள்ளது எனலாம்."**[124]

பின்னாளில் பெருங்கோயிற் கட்டிடக் கலை உருவாவதற்கு இந்த நடுகல் வழிபாடு மூலமாய் அமைந்தது என்று அறிஞர் பெருமக்கள் கருதுகின்றனர். மேலும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு தலத்திற்கும் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டு, இருந்த இடத்தில் எழுந்துள்ளதை நாம் அறிய முடியும். எனவே பண்டைத் தமிழரின் போரிலே வீரமரனம் அடைந்தவரை வணங்கும் வழக்கம் காலமாற்றத்தில் சிறு தெய்வ வணக்கமாக மாறியது என்பதும், இது சமுதாய மாற்றத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதும் பகுத்தறிந்து கொள்ள முடியும். மேலும் கொற்றவை, முருகன், மால் போன்ற சிறு தெய்வங்களின் தோற்றத்திற்கு நடுகல் வழிபாடு அடிப்படையானது என்று ஒருவாறு நாம் ஊகித்து உணர முடியும்.

# தொகுப்புரை

எழுத்துருவாக்க வரலாற்றுக்கு முந்தைய காலக் கட்டத்தை மானிடவியல் அறிஞர்கள் எவ்வாறு பிரித்து வகைப்படுத்துகிறார்கள் என்பதும், தாய்த்தெய்வவழிபாடு தோற்றம் பெற்றதற்கானக் காரணங்களை மானிடவியல் பார்வையிலும் விளக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் கொற்றவைத் தெய்வம் தோற்றம் பற்றியும்; தாய்த்தெய்வ வழிபாட்டிற்கும் சங்க இலக்கிய கொற்றவைத்தெய்வ வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பு விளக்கப்பட்டுள்ளது. கொற்றவை; தமிழரின் வெற்றித்தெய்வம். இவ்வழிபாட்டின் நீட்சியே இந்தியா முழுவதும் உள்ள அம்பிகை, துர்காதேவி, காளி வழிபாடு என விளக்கப்பட்டுள்ளது. முருக தெய்வத்தின் தாயாக கொற்றவைக் குறிக்கப்பட்டு கொற்றவைக்கு ‘வெறியாட்டு’ வழிபாடு நடைபெற்றதை சங்கப்பாடல் வழி விளக்கப்பட்டுள்ளது. சிந்துவெளி நாகரிகத்தில் கண்டெடுக்கப்பட்ட மூன்று கண் உடைய பெண் தெய்வத்திற்கும், கொற்றவைத் தெய்வத்திற்கும் தொடர்பு உண்டு என்பதும், உலகம் முழுவதிலும் தாய்வழிச் சமூகங்களின் தொடர்ச்சி அறுபட்டுப் போயியுள்ள நிலையில் இன்றும் தமிழகத்தில் மருமக்கள் தாயம், அளிய சந்தான முறை, கருமதாயி முறை என்று தாய்வழிச் சமூகமுறை இயங்கி வருவதும் கூறப்பட்டுள்ளது. சேய்வழி அழைத்தல் முறை சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளதும்; மொகஞ்சதாரோ, ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களில் இரும்பு கால சுடுமண் தாய்த்தெய்வ சிற்பங்கள் கிடைத்துள்ளதும்; தாய்வழித் தலைமை வலுப்பெற்றதற்கான காரணங்களும் விளக்கப்பட்டுள்ளது. கொற்றவைத் தெய்வத்தின் தொடக்க கால வழிபாட்டு முறை காலத்தால் முந்தைய சங்க இலக்கியங்களான அகநானூறு, குறுந்தொகை, புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற நூல்களிலும், காலத்தால் பிந்தைய பட்டினப்பாலை, சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலும் வருவது விளக்கப்பட்டுள்ளது. தாய்வழிச் சமூகத்தின் எச்சமாக விளங்கும்தாய்த்தெய்வ வணக்கமாகிய கொற்றவை வழிபாடு தொடர்ச்சியாக சங்க காலத்தில் நடைபெற்று வந்ததை வரலாற்று ஆதாரங்கள் மூலம் அறியலாகிறது. தந்தை வழி சமூகத்தின் தோற்றத்தையும் இரும்பின் பயனை மனிதன் அறிந்து வேட்டைத்தொழில் நவீனமான காலத்தையும் குறிக்கும் குறியீடாய் முருகக் கடவுளின் தோற்றம் தமிழ்ச் சமூகத்தில் உருவானதும்; முருகன் குல தெய்வ வழிபாட்டு முறையின் தொடக்கமாக விளங்குகிறான் என்பதும்;குறிஞ்சித் திணைக்கு புறனாக வருகின்ற வெட்சி, கரந்தைத் திணைகள் என்பது கருநிலைக் குடும்பம் உருவாக்கத்தின் தொடர்ச்சி என்பதும்; தந்தை வழிச் சமூகத்திற்கு முந்தையது தாய்வழிச் சமூகம் என்பதற்கு முருகனைக் கொற்றவை மகன் என்று அழைக்கப்படுவதும், மகனைக் கொண்டு தந்தையை அறியும் வழக்கம்

இருந்ததும் விளக்கப்பட்டுள்ளது. ஐரோப்பிய மானிடவியலாளர்களுக்குத் தமிழ்ச் சமூகத்தின் இந்த தொடர்ச்சியான மனிதச் சமூக உருவாக்க வரலாறு அறிய முடியாமல் போனதால் ஒவ்வொரு குலத்திலிருந்து ஒவ்வொரு குலமரபு முறையை எடுத்துக் கோத்து நிறுவினர். ஆனால் தமிழ்ச் சமூகத்தில் சமூக உருவாக்க வரலாறு தொடர்ச்சியாக இருந்தும் உலகம் அறிய வாய்ப்பின்றி போனது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. தொடக்கக்கால முருக வழிபாட்டுமுறை மனித சிந்தனையின் தொடர்ச்சியான வளர்ச்சியின் காரணமாகவும், புறத்தில் அவனுக்குக் கிடைத்த தொழில்நுட்பக் கருவிகளும், அறிவும் அதனால் ஏற்பட்ட உற்பத்தி வளர்ச்சியின் காரணமாக அவனது அறிவு மேலும் விரிவடைவதாய் முருக வழிபாட்டு முறை இயற்கைச் சார்ந்த கருத்தாகிய முருகு, இளமை, தொன்மை, வீரம், மணம் என்ற பொருளில் வளர்ச்சி அடைவது விளக்கப்பட்டுள்ளது.

தொடக்கக் கால சங்க இலக்கியங்களில் முருகக் கடவுள் போர் தெய்வமாகவும், வெற்றித் தெய்வமாகவும், சீற்றம் கொள்ளும் தெய்வமாகவும் குறிக்கப்பட்டு பின் இயற்கைச் சார்ந்த தெய்வமாக உருமாற்றமடைவது விளக்கப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட நிலத்திற்கு மட்டுமே தெய்வமாக இருந்த முருகன் கோயில் கட்டி வழிபடும் அளவிற்கு அனைத்து நிலத்திற்கும் பொதுவான தெய்வமாக உருவெடுப்பது வரலாற்று வழியாக விளக்கப்பட்டுள்ளது. முருக வழிபாட்டில் ‘வெறியாட்டு’ தமிழர்களுக்கே உரிய வழிபாட்டு முறை என்பதும்; அவ்வழிபாடு எவ்வாறு நடைபெற்றது என்பதும்; முருக வழிபாட்டில் துணங்கைக் கூத்து, குரவைக் கூத்து, குறமகள் வழிபாடு என்று மற்ற வழிபாட்டு முறைகளும் விளக்கப்பட்டுள்ளன. ‘மால்’ தெய்வம் தொல்காப்பியர் காட்டும் முல்லைத் திணையில் இனக்குழு சமூக அமைப்பு முடிவடைந்து குடும்பம், அரசு தோற்றக் காலத்தை குறிப்பதாகவும்; முல்லை நிலக் கடவுளான ‘மால்’ தெய்வம் தொல்காப்பியர் காட்டும் முல்லைத் திணையில் இனக்குழு சமூக அமைப்பு முடிவடைந்து குடும்பம், அரசு தோற்றக் காலத்தைக் குறிப்பதாகவும் விளக்கப்பட்டுள்ளது. முல்லை நிலக்கடவுளாக ‘மால்’ குறிக்கப்படுவது, குறிஞ்சி நில மக்களின் களவொழுக்க வாழ்வியல் முறை கற்பியல் வாழ்வியல் முறைக்கு மாற்றமடைவதை விளக்குவதாக அமைகின்றது. காடுகளை அழித்துச் சமவெளியாக்குவதும், வேளாண்மைச் செய்யத் தொடங்குவதும், காட்டு விலங்குகளைப் பழக்கி வீட்டு விலங்குகளாகவும், வேளாண்மை செய்வதற்கும் பயன்படுத்தும் வளர்ச்சிப் போக்கில் ‘மால்’ தெய்வ வழிபாடு முக்கியத்துவம் அளிப்பதாக விளக்கப்பட்டுள்ளது. ‘அணங்கு வழிபாடு’ சங்க இலக்கியங்களில் உருவமில்லாத தெய்வமாகவும், ஏதாவது ஒன்றில் உறையும் தெய்வமாகவும் விளங்குவது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. நடுகல்

வழிபாடு இனக்குழுச் சமூகத்தை உணர்த்தும் வெட்சி, கரந்தை திணைகளிலேயே தொடங்குவதும், நடுகல்வழிபாடு நடைபெறும் முறை மற்றும் பஞ்சபூதங்களை அடிப்படையாக வைத்துக் கட்டப்பட்டிருக்கும் தமிழகத்தில் உள்ள சிவன் கோயில்களில் ஒவ்வொரு சித்தர் அடக்கம் செய்யப்பட்டிருப்பதைக் கொண்டு பெருங்கோயில் கட்டிடக் கலை வளர்ச்சிக்கு நடுகல் வழிபாடு அடிப்படையாக இருந்திருக்கிறது என்பதுவிளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. பக்தவத்சல பாரதி,இலக்கிய மானிடவியல், ப.43.
2. சி.முத்துப்பிள்ளை, அருள் சுரக்கும் சக்தி ஆலயங்கள், ப.12.
3. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப.41.
4. பட்டின., 250.
5. தொல்.பொருள்., 62.
6. பதிற்., 90: 19.
7. மேலது, 79: 17.
8. குறுந்., 218: 1-2.
9. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப.64.
10. குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்,ஏங்கெல்ஸ் (முன்னுரை).
11. பக்தவத்சலபாரதி,தமிழர்மானிடவியல், ப.5.
12. அகம்., 6: 3.
13. மேலது, 96: 12.
14. புறம், 67: 12.
15. மேலது, 341: 3.
16. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப.40.
17. மேலது, ப.40.
18. மேலது, ப.13.
19. பத்துப்பாட்டு மூலமும்; நச்சினார்க்கினியார் உரையும், ப.257.
20. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.2.
21. பி.எல்.சாமி, தமிழ் இலக்கியத்தில் தாய் தெய்வ வழிபாடு, ப.64.
22. சிலம்பு., வேட்டுவவரி, 20-25.
23. மேலது, 60-64.
24. அகம், 345: 7.
25. பரி., 11; 99-100.
26. கலி., 89: 8.
27. பட்டின., 57-59.
28. புறம்., 247: 1-4.
29. கலி., 89: 8.
30. குறுந்., 218: 1-2.
31. பதிற்., 79: 14-18.
32. மேலது, 88: 11-12.
33. பதிற்., 90: 19-21.

34. கே.கே.பிள்ளை,தென் இந்திய வரலாறு (தொகுதி-1), ப.22.
35. ந.வானமாமலை,தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.12.
36. மேலது, ப.10.
37. மேலது, ப.9.
38. மேலது, ப.8.
39. மேலது, ப.12.
40. மேலது, ப.10.
41. தொல்.பொருள்.அகம்., 5.
42. தொல்.பொருள்.புறம்., 28.
43. புறம்., 125: 18-20.
44. மேலது, 120: 20-21.
45. மேலது, 14: 18-20.
46. அகம், 266: 4.
47. புறம்., 16: 10-12.
48. பொருநர்., 131.
49. அகம்., 158: 16.
50. பதிற்., 21: 5.
51. மலைபடு., 499.
52. பெரும்பாண்., 75.
53. முருகு., 250.
54. முருகு., 258.
55. முருகு., 259.
56. முருகு., 267.
57. கு.வெ.பாலசுப்ரமணியன்,சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப.150.
58. திரு.வி.க,முருகன்அல்லதுஅழகு, ப.18.
59. ஐங்., 247.
60. ஐங்., 245: 2-4.
61. ஐங்., 249: 2.
62. மதுரை., நச்சினார்க்கினியார் உரை: 181.
63. புறம்.: 299.
64. அகம்., 266: 20-22.
65. புறம்., 55: 17-19.
66. தொல்.பொருள்., 60: 1-2.
67. மதுரை., 613-616.

68. ஐங்., 241.
69. மேலது, 250.
70. மேலது, 243: 1-2.
71. குறுந்., 111: 1-2.
72. அகம். 98: 16-19.
73. ஐங்., 245: 1-3.
74. சு.வித்தியானந்தன், தமிழர்சால்பு, ப.18.
75. ஐங்., 247: 2.
76. மேலது, 248: 1.
77. குறுந்., 53: 3-4.
78. மேலது, 318: 1-3.
79. பதிற்., 51: 10-13.
80. குறுந்., 263: 1.
81. முருகு.: 218.
82. குறுந்., 362: 3-5.
83. அகம்., 22, 8-11.
84. குறிஞ்சி., 172-175.
85. குறுந்., 366: 3-6.
86. பட்டின., 154-155.
87. குறுந்., 105: 2-4.
88. முருகு., 47-56.
89. மேலது, 190-217.
90. மேலது, 227-239.
91. தொல்.பொருள்., 5.
92. நற்.: 32-1.
93. புறம், 57: 2.
94. கலி.. 103: 32.
95. மேலது. 108: 55.
96. மேலது. 105: 72.
97. முல்லை., 3.
98. பட்டின.: 138.
99. கலி. 107: 30-35.
100. அகம்: 207, 4.
101. பதிற்.: 88.

102. மதுரை.: 629.
103. அகம். 158, 5-6.
104. நற்., 319, 6.
105. நற்., 168, 8.
106. அகம்., 177: 19.
107. மேலது, 161: 11-12.
108. மேலது, 366.
109. மேலது, 114.
110. மேலது, 73.
111. நற்., 165: 2-5.
112. கலி., 39: 5-15.
113. சிலம்பு.நா.செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப.38.
114. தொல்.பொருள்., 63: 13-16.
115. அகம்., 67: 8-11.
116. புறம்., 264: 1-4.
117. ஐங்., 352: 1-2.
118. மலைபடு., 394-396.
119. பட்டின., 78-79.
120. அகம்., 35: 8-9.
121. புறம்., 232: 3-4.
122. சிலம்பு.நா.செல்வராசு, தொல் தமிழர் சமயம், ப.45.
123. மேலது, ப.57.
124. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.38.

**சமயம் - விளக்கம்**

சமயம் என்பது 'சமைதல்' என்னும் சொல்லிலிருந்து உருவானது என்று அகராதிகள் கூறுகின்றன. மனிதனின் அன்றாட வாழ்விற்கு உதவி புரியும் இயற்கைச் சக்திகளும், வாழ்வினைக் குலைத்திட சில சக்திகளும் இயற்கையாக அமைந்துள்ளன. இவற்றோடு மனிதன் உறவு கொள்ள வேண்டியுள்ளது. இயற்கையின் சில சக்திகளுக்கு அஞ்சி, பலியிட்டு வணங்கினான். நன்மை செய்யும் சில சக்திகளுக்கு நன்றி தெரிவித்து மகிழ்ச்சியில் படையலிட்டு வணங்கினான். இதனால் பல தெய்வ வழிபாடு மனிதனிடத்தே தோன்றியது. இது மனித சமூக உருவாக்க வரலாற்றிலே அந்தந்த காலச் சூழலுக்கேற்ப தாய் தெய்வமாகவும், தந்தை வழித் தெய்வமாகவும் உருமாற்றம் பெற்று வந்ததை உலக மானிடவியல் அறிஞர்கள் நிறுவியிருக்கின்றனர். வழிபாடு செய்து வணங்கி வந்ததன் விளைவாக சமயம் உருவானது. அதாவது,

> **"அறிய முடியாதவற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம், பொருள்கள் தோன்றக் காரணமாயிருப்பவைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை இவை போன்ற மன ஊக்கியிலிருந்து சமயம் தோன்றியிருக்கலாம்"**[1]

என்றும்,

> **"ஒருமைப்பாடு பற்றிய உள்ளுணர்வே சமய அனுபவத்தின் உச்சக் கட்டம் எனலாம்"**[2]

என்று ஆ.வேலுப்பிள்ளை அவர்களின் சமயம் பற்றிய கருத்தாக்கம் இங்கு நோக்கத்தக்கதாகும். மேலும்,

> **"சமயம், மதம் என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் வழங்கப்படவில்லை. எனினும் இச்சொற்களால் குறிக்கப்பெறும் உணர்வுகளும், வாழ்வு நெறிகளும் அக்காலத்தில் இல்லாமலில்லை. மனித இனம் அறிவுத் திறம் பெறத் தொடங்கிய காலத்திலிருந்தே சமயம் இருந்து வருகிறதென்றும், சமய உணர்வு என்பது பல்வேறு வகைகளில் உலகெங்கும் எக்காலத்தும் காணப்படுவதொன்று என்றும் கூறுவர்"**[3]

என்று தமிழ்க் கலைக் களஞ்சியம் சமயத்தை வரையறை செய்கிறது.

மேலும்,

> **"சமயம் ஆகாயத்திலிருந்து குதித்ததாகவோ வெறும் அறியாமையிலும் மூடநம்பிக்கையிலும் பிறப்பதாகவோ கொள்வதில்லை. மாறாக சமயம் சமுதாயத்தின் உறுப்பினர்களாக வாழ்ந்து சமூக முரண்பாடுகளையும், அவற்றால் நேரும் மனப்போராட்டங்களையும் நேரிடையாக அனுபவித்த மாந்தர்களால் புரிந்துக் கொள்ளப்பட்டு உருவாக்கப்படும் ஒன்று; சமுதாய முரண்பாடுகளின் விளைவு."[4]**

எனவே சமூக கருத்துக்கள் மனித அனுபவத்திற்கு அப்பாற்பட்டவையும் அதற்கு புறம்பானவையும் அல்ல; மாறாக மனித வாழ்வுடன் முற்றிலும் ஒன்றியவை. சமயம் வெறும் தனிநபர் உளவியல் சம்பந்தப்பட்டதல்ல சமூக இயல் மூலமாகவே புரிந்துக் கொள்ளக்கூடியது என்பதை சமயத் தோற்றத்தின் வரையறையாக நாம் கொள்ளலாம்.

**தத்துவம் - விளக்கம்**

தத்துவம் என்பதற்கு கொள்கை, சிந்தனை முடிவுகள், வேறுபட்டுச் சிந்தித்தல் என்ற பொருளில் நடைமுறையில் மக்கள் கையாண்டு வருகின்றனர். தத்துவம் என்பதற்கு நேரிடையான பொருள் 'உண்மை' என்பதாகும். 'தரிசனம்' என்னும் வார்த்தைக் கூட தத்துவம் என்ற பொருளில் பயன்படுத்தப்படுகிறது.

> **மேலை நாட்டினர் 'Philosophy' என்ற ஆங்கிலச் சொல்லை 'Philos' மற்றும் 'Sophia' என்ற கிரேக்க வார்த்தைகளின் கூட்டுச் சொல்லாகக்கொண்டு 'ஞானத்தைத்தேடுதல்' (ஞானத்தோடு நட்பு கொளல்) என்று வரையறை செய்துள்ளனர். பாரதமோ தத்துவத்திற்கு நிலைபேறடைதலைப் (immortalizes) பற்றிச் சிந்தித்தல் என்ற பொருளில் இயங்கி வந்துள்ளது.[5]**

சமயத்தின் அடுத்தக் கட்ட வளர்ச்சியாக தத்துவம் உருபெருகிறது.

தத்துவத்தைப் பற்றி,

> **"எல்லாத் தத்துவங்களினுடைய அடிப்படையான கேள்வி... சிந்தனைக்கும் இருப்புக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதே. தங்களது உடலின் அமைப்பு குறித்து அறியாதிருந்த அந்தப் பழங்காலத்தில் மனிதர்கள், கனவுகள் தரும் மாயத் தோற்றங்களை நம்பியவர்களாய், தங்களது சிந்தனைகளும் உணர்வுகளும் உடலின் செயல்பாட்டினால் விளைபவை அல்ல என்று நம்பினார்கள். உடலினுள் ஒரு ஆன்மா அல்லது ஜீவன் வசிக்கிறது என்றும், இறப்பின்போது அது வெளியேறிவிடுகிறது என்றும் நம்பினார்கள். அந்நாளிலிருந்து அந்த ஆன்மாவுக்கும் புறவுலகுக்கும் உள்ள தொடர்பையும் அவ்வாறே கண்டனர். இந்தக் கேள்விக்கு அளிக்கப்படும் விடையின் அடிப்படையில் தத்துவஞானிகள் இரு பிரிவாகப் பிரிந்தனர். ஆன்மாவே இயற்கையைவிட முதன்மையானது என்று கூறியவர்கள் ஆன்மிகவாதிகள் (அல்லது கருத்துமுதல்வாதிகள்) என்றழைக்கப்பட்டனர். இயற்கையே முதன்மையானது என்று கருதியவர்கள் பொருள் முதல்வாதத்தின் பல பிரிவுகளைச் சேர்ந்தவர்களாவர்"[6]**

என்று தேவி பிரசாத் சட்டோபாத்யாயா தத்துவத்தை வரையறை செய்கிறார். இதையே மார்க்சியம் உலகில் தோன்றிய தத்துவங்களை கருத்து முதல்வாதம் என்றும் இயக்கவியல் பொருள் முதல்வாதம் என்றும் இருவகையாகப் பிரிக்கிறது. ஆனால் இந்திய தத்துவ மரபு என்பது அண்டத்தின் பிரமாண்டத்தை, அவற்றின் இயக்க முறைகளில் பிரமித்து, அதிசயத்து, இவை யாவற்றோடும் ஒரு ஒழுங்கு இருப்பது பற்றி சிந்திக்கிறது. எண்ணிலடங்கா விண்மீன்களையும், பல கோள்களையும், சந்திர-சூரிய இயக்கங்களின் ஒழுங்கமைவு மற்றும் வருங்காலங்களின் நிலையான ஓட்ட முறைகளையும் கண்ணுற்று இவற்றையெல்லாம் ஒழுங்குப்படுத்தி இயக்கிச் செல்ல ஒரு மூல காரணன், ஆதி நாயகன் எங்கும் பரவியுள்ள, நிறைந்துள்ள நிலைபேறுடைய பரிபூரண தன்மையுடன் இருந்திட வேண்டுமென்ற எண்ணமே தத்துவம் தோன்றக் காரணமாக அமைந்தன என்பதை விளக்குகிறது.

தத்துவம் என்பது திடீரென்று தோன்றும் கருத்து அல்ல. ஆராய்ந்து ஆராய்ந்து தர்க்கத்திற்குட்படுத்தப்பட்ட ஒரு கொள்கை முடிவே அதுவாகும். ஒவ்வொரு

தத்துவத்திற்கும் ஒருவர் பெயர் குறிப்பிடப்பட்டாலும் கூட்டுச் சிந்தனையின் பரிணாம வளர்ச்சித் தத்துவம் என்பதைக் கூர்ந்து நோக்கினால் தெரியவரும். புத்தருக்குள் பல புத்தர்கள் இருக்கிறார்கள். மகாவீரருக்குள் பல தீர்த்தங்கரர்கள் இருக்கிறார்கள். சங்கரருக்குள் கௌடபாதர் இருக்கிறார். இந்தியத் தத்துவங்கள் இறையோடும், வாழ்வோடும் தொடர்பு கொண்டே வளர்ந்துள்ளன. இங்கு பகுத்தறிவும் கடவுளைப் பற்றி உணர்த்தப் பெற்ற அறிவும் இணைந்தே வருகின்றன. ஆனால், மேனாட்டவரின் தத்துவஞானம் என்பது ஒன்றைப்பற்றி அறிய எழும் இயல்பான விருப்பம் அல்லது வியப்புணர்வு என்ற ஒன்றிலிருந்து தொடங்குகிறது. அது உலகைப் பற்றிய கண்ணோட்டம் அல்லது உட்பொருள் பற்றிய கொள்கை என்னும் பொருளில் விளங்குகிறது. புராதன மனிதன் கூட்டு வாழ்க்கையின் மூலமாகவும், விளைவாகவும் கருவிகளின் பயன்பாட்டை மெல்ல மெல்ல அறிந்து கொண்டான். அந்நிலையில் தனக்குப் புறமாக(object) உள்ள இயற்கையின் ஒழுங்கான இயக்கத்தை உணர்ந்து கொண்டான். தன்னிடமுள்ள சுய அறிவின் மூலமும், தன் வசமிருந்த கருவிகளின் உதவியோடும் இயற்கையை எதிர் கொண்டான். தனக்கேற்றாற்போல் வளைத்துக் கொண்டான். கருவிகள் மேம்பட மேம்பட புதிய வளர்ச்சிப் பாதைக்கு அவன் சிந்தனைகள் மேலும் வளர்ச்சிப் பெற்றன. இதனால் அவன் வாழ்வு விரிவடைந்தது, அவன் இயற்கை பரந்து விரிந்து கிடப்பதைக் கண்ணுற்றான். அவனது சிந்தனையும், உணர்வும் விரிவடைந்தன. இதன் விளைவாக தத்துவங்கள் விளைந்தன.

### சைவம் - ஒரு விளக்கம்

இது சிவனை வழிபடுவதற்கென்று அமைந்த நெறி. இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் சைவத்தைப் பின்பற்றுகிறவர்களைக் காண முடிகிறது. சிவனுக்கென்று ஏற்பட்ட கோயில்கள் எங்கும் ஏராளமாய் உள்ளன. மேற்கு இமாலயப்பகுதியில் அமர்நாத், கேதாரிநாத்; நேபாளத்தில் பசுபதிநாத் தொடங்கி காசி, அவந்திகை, திருவண்ணாமலை மற்றும் பல தலங்கள் வழியாக இலங்கைக்கு வாயிலாய் அமைந்திருக்கும் ராமேஸ்வரம் வரை எங்கும் காணலாம். இவ்வருமையான கோயில்களின் வானோங்கிய கோபுரங்கள் பரந்த, நன்மை பயக்கும் செல்வாக்கிற்கு அத்தாட்சியாய் நின்று நிலவுகின்றன. இந்தியாவில் தோன்றிய மற்றைய சமய நெறிகளால் சிலவற்றைப் போலப் பண்டைக் காலத்திலேயே இந்நெறி சாவகம், பாலி, சம்பா, கம்போடியா போன்ற நாடுகளிலும் பரவியிருந்தது.

சைவ சமயம், தத்துவ அடிப்படையில் பல வகையினதாகப் பிரிந்துள்ளது. அவற்றுள் மிகவும் புகழ் வாய்ந்தனவாக இருப்பவை வடக்கில் வழங்கும் காஷ்மீரச் சைவம்,

கன்னடத்தில் நிலவும் வீர சைவம் என்னும் லிங்காயதம், தமிழகத்தில் திகழும் சைவ சித்தாந்தம் ஆகியன. அவை சிவனைக் கடவுளாக வழிபடும் சமயங்களாக விளங்கி உள்ளன. சைவ சித்தாந்த நூல்கள் அக, புறச் சமயங்களாகக் குறிப்பிடும் பாசுபதம், மகாவிரதம், காபாலம், வாமம், பைரவம், ஐக்கியவாதம் என்னும் ஆறு சமயங்களும் அகச் சமயங்களாகும். இவை குறிப்பிடும் பாஷாணவாதம், பேதவாதம், ஈசுவர அவிகாரவாதம், சிவசமவாதம், சிவ சங்கிராந்த வாதம், சிவாத்துவித வாதம் என்ற ஆறு சமயங்களும் சிவனை முதல்வனாகக் கொண்டவை. சங்கர மடத்தினர் அத்வைதத்தின் பெயரால் சைவ சமயத்தினைப் பின்பற்றுகின்றனர். சைவம் எப்போது தோன்றியது, எங்கே தோன்றியது என்பதில் ஆராய்ச்சியாளர்கள் முரண்பட்டக் கருத்துகளைத் தருகின்றனர்.

## சிந்துவெளி நாகரிகமும் சிவ வழிபாடும்

சிந்துவெளி நாகரிகத்திற்கும், சிவ வழிபாட்டிற்கும் நெருங்கிய தொடர்புகள் இருப்பதைத் தொல்பொருள் அகழ்வாராய்ச்சி முடிவுகள் காட்டுகின்றன. லிங்கம், சிவன், பசுபதி, எருது, முக்கண் உடைய பெண் தெய்வம் போன்ற கற்சிற்பங்கள் அகழ்வாராய்ச்சியில் கிடைத்திருக்கின்றன.

> **“ ‘தென்னாடுடைய சிவனே போற்றி’ என்று திருவாசகம் போற்றுகின்றது. ‘சிவனொ டொக்குந் தெய்வம் தேடினுமில்லை’ என்று திருமந்திரம் கூறுகின்றது. எனினும் சைவ சமய வரலாற்றைத் தேடி நாம் பின்னோக்கிச் செல்லும்போது தென்னாட்டை விட்டுச் சிந்து நதிப் பள்ளத்தாக்கில் கிறிஸ்துவிற்கு முன் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டு சிறப்புற்று விளங்கிய நகரங்களுக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. இன்றைய சைவ சமயத்திலே காணப்படும் லிங்க வழிபாடு, சக்தி வழிபாடு, சிவ (பசுபதி) வழிபாடு முதலியன சிந்து வெளி நாகரிகத்தில் முக்கியமான சமயப் பண்புகளாக விளங்கின என்பது பல அறிஞர்களின் துணிபாகும்”[7]**

என்று சுட்டும் கலாநிதி கைலாசபதி அவர்கள் சைவ சமயம் சிந்துவெளி நாகரிகத்தைச் சார்ந்தது என்கிறார்.

**"யோகிகளுக்கெல்லாம் தலையாய யோகி சிவன். அதனாலேயே அவருக்கு மகாதபஸ், மகாயோகி என்னும் பெயர்கள் அமைந்தன. சைவத்தைப்போலவே யோகமும் ஆரியருக்கு முற்பட்ட மக்களிடையே தோன்றியதாகும். சிவன் தலையாய யோகி மட்டுமல்லர், விலங்குகளுக்கெல்லாம் தலைவர் (பசுபதி) சிவனின் இந்தப் பண்பினையே சிவனைச் சுற்றி நான்கு மிருகங்கள் நிற்பது காட்டுகின்றது. யானை, புலி, காண்டாமிருகம், எருது சிவனைச் சுற்றி நிற்கின்றன. சிந்துவெளிக் கடவுளின் தலையில் அமைந்துள்ள கொம்புகள் பிற்காலத்தில் சிவனின் விசேட முகூர்த்தமொன்றைக் குறிக்கும் திரிசூலமாக மாறியது. இவற்றையெல்லாம் நோக்கும்பொழுது பிற்காலத்திலே சிவனுக்கமைந்த பல அம்சங்கள் தோற்ற நிலையிலே சிந்துவெளி முத்திரைகளில் காணப்படுகின்றன என நாம் கருதலாம்"**[8]

என்று சிந்து சமவெளியை ஆராய்ச்சி செய்த சர் ஜான் மார்ஷல் கூறுகிறார். மேலும் அவர்,

**"சிந்து சமவெளியில் கண்டெடுக்கப்பட்ட மூன்று இலச்சினைகளில் கொம்புடைய கடவுளின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. மொகஞ்சதாரோவில் கிடைத்த ஒரு இலச்சினையில் பொறிக்கப்பட்ட உருவம் சிவனுடைய பசுபதி வடிவம்"**[9]

என்று எடுத்துரைக்கிறார். இதே கருத்தை வலியுறுத்தி,

**"ஹரப்பாவில் கல்லால் செய்யப்பட்ட லிங்கம் மற்றும் பெண்குறிச்சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டது. இது லிச்ச்ங்க வழிபாடு இருந்ததைக் குறிக்கின்றது. இந்த வழிபாட்டு முறை ரிக் வேதத்தில் கண்டிக்கப்பட்டிருந்தபோதும் ஆரியரல்லாதவர் மத்தியில் பரவலாக நிலவியது"**[10]

என்று டி.என்.ஜா ஆரியரல்லாத நாகரிகத்தைச் சார்ந்தது சிந்து வெளி நாகரிகம் என்று பதிவு செய்கிறார்.

சிந்து சமவெளியில் வாழ்ந்த மக்கள் திராவிடர்கள் என்பதை,

> **"சிந்துவெளியிற் காணப்பட்ட எழுத்துக்களையும் மொழியையும் கொண்டிருந்த மக்களே பிற்காலத்தவரால் 'திராவிடர்' எனப்பட்டனர். அவர்தம் மொழி 'திராவிடம்' எனப்பட்டது. அவர்கள் மத்தியதரைக்கடல் பகுதியிலிருந்து கிழக்கு நோக்கி வந்து சிந்துவெளியில் தங்கினர். தமக்கு முன் சிந்துவெளியில் இருந்த ஆஸ்திரேலிய மக்களுடன் கலந்து நெடுங்காலம் ஆயினமையின், தம் வெண்மை நிறத்தையும், உருவ அமைப்பையும் இழந்து இன்றுள்ள திராவிடரைப்போல ஆயினர். அவர் கொண்டுவந்த மொழியும் ஆஸ்திரேலியர் கூட்டுறவினால் சிறிது மாறுபட்டிருக்கலாம், எனினும் சிந்துவெளி எழுத்துக்களே பிற பண்டை நாகரிக நாட்டு மொழிகட்குத் தாய்மொழியாகும். மொகஞ்சதாரோவில் வாழ்ந்த மக்களும் தென் இந்திய திராவிடரும் ஓர் இனத்தவரே, அவர்கள் இரு பிரிவினரும் பேசியமொழி ஒன்றே. சிந்துவெளிமொழி திராவிடம் என்பதில் ஐயமே இல்லை. அது தமிழையே பெரிதும் ஒத்துள்ளது என்று உறுதியாகக் கூறலாம்"**[11]

என்று ஆராய்ச்சியாளர்கள் கூறும் முடிவுகளைக் கொண்டு சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என்று நிறுவுகிறார் மா.இராசமாணிக்கனார். மொத்தத்தில் ஆய்வாளர்கள் மத்தியத் தரைக்கடல் வழியாகத் திராவிடர்கள் சிந்துவெளிப்பகுதியில் குடியேறிய ஆரியப்பண்பாடு அல்லாத தனித்தப்பண்பாடு, வழிபாட்டு முறைகளோடு நாகரிகமாக வாழ்ந்தனர் என்று குறிப்பிடுகின்றனர். அதனால் சில ஆய்வாளர்கள் கடலால் சூழப்பட்டதாகக் கருதப்படும் லெமூரியா கண்டம் என்னும் பகுதியிலிருந்து சிந்துவெளிக்கு திராவிடர்கள் சென்றதாகக் கருதுகின்றனர்.

சிவ வழிபாடு, சைவநெறி, லிங்க வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு என்பது திராவிடர்களின் வாழ்வோடு பின்னிப்பிணைந்து கிடப்பதை அவை வணங்கப்படும் இடங்களில் எல்லாம் வரலாறு நமக்குக் காட்டுகிறது.

இதை உறுதிப்படுத்தும் வகையில்,

> **"தென்னிந்தியாவிற்கும் சிந்துவெளி நகரங்களுக்கும் நேரடியான தொடர்பைக் காட்டாவிட்டாலும், சமய நம்பிக்கை சம்பந்தமான தொடர்புகள் இருப்பதை நாம் கவனிக்க வேண்டும். பெண் தெய்வ (சக்தி) வழிபாடு, மூலச் சிவ வழிபாடு இருந்ததையும், இவற்றின் பிணைப்பாக இலிங்க வழிபாடும் நிலவியது. மொகஞ்சதாரோவிலும், ஹரப்பாவிலும் கணக்கற்ற, நீண்டு குவிந்த அல்லது முக்கோணக் கற்களும், களிமண் பொருள்களும் கண்டெடுக்கப்பட்டன. மார்ஷல் அவற்றைச் சிவலிங்கங்கள் என எடுத்துக் காட்டினார். இலிங்க வழிபாடானது உழவுத் தொழிலை மேற்கொண்டிருந்த பல புராதன நாகரிகங்களில் காணப்படும் வழிபாட்டு முறையாகும். நீண்டு குவிந்த கல் வடிவு ஆண்குறியின் அடையாளமாகவும், அக்கல்லைச் சூழ்ந்த வட்டக் கல் வடிவு பெண்குறியின் அடையாளமாகவுமே முன்னோரால் கருதப்பட்டது"**[12]

என்று கலாநிதி கைலாசபதி சிந்துவெளி இலிங்க வழிபாடு தென்னிந்தியாவோடு தொடர்புடையது என்பதை உறுதிப்படுத்துகிறார். இதுவரைக் கண்ட மேற்கோள்களின் மூலமும், வரலாற்று ஆய்வாளர்களின் மூலமும் சிந்துவெளி நாகரிகம், திராவிடர்களின் நாகரிகம் என்பதும் சிந்துவெளியின் வழிபாட்டுப் பண்பாட்டு முறை திராவிடர்களுக்குரியது என்பது புலப்படும். மேலும் சிந்துவெளி நாகரிகத்தின் சிதைவுக்கு ஆரியர்களின் வரவும் காரணமாக அமைந்தது என்பது பெரும்பாலான வரலாற்று ஆசிரியர்களின் முடிவாகும். அவ்வாறு சிதைவுற்ற சிந்துவெளி நாகரிகத்தின் பண்பாட்டு விழுமியங்களை ஆரியர் உள்வாங்கிக் கொண்டதற்கான சான்றுகள் ரிக் வேதத்தில் காணப்படுகின்றன என்று அறிஞர்கள் கூறுகின்றனர். லிங்க வழிபாட்டைக் கண்டிக்கின்ற ரிக் வேதத்தில் மூன்றாம் தரக் கடவுளாக சிவன் ஏற்றுக் கொள்ளப்படுகிறார். ரிக் வேதத்தில் சிவ வழிபாடு முதலில் உருத்திரன் வடிவத்திலும் பின்னர் மெல்ல சிவ வடிவமாகவும் மாறுவதை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். கி.மு.ஆறாம் நூற்றாண்டு காலத்தில் தமிழகம் வருகின்ற ஆரிய வைதீகர்கள் சிவ வழிபாட்டையும், விஷ்ணு வழிபாட்டையும் முன்னெடுக்கக் காரணம் சிந்துவெளியின் நாகரிகத்தைத் தொடர்ச்சியாய் கைவிடாமல் இருக்கும் திராவிடர்களுக்கு சிவ வழிபாட்டையும், விஷ்ணு வழிபாட்டையும் முன்னெடுத்தால்தான் தங்களைத்

தமிழகத்தில் நிலைநிறுத்திக் கொள்ள முடியும் என்கிற கட்டாயம் ஆரிய வைதீகர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம்.

இதை மேலும் உறுதிப்படுத்தும் வகையில்,

**"சக்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லாம்**

**ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியுமாக**

**வைத்தனன் அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கையெல்லாம்**

**இத்தையும் அறியார் பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்"**[13]

என்ற சிவஞானசித்தியார் தத்துவ விளக்கம் அமைகிறது.

**வைதீக சிவன்**

வைதீக சமயத்தினரின் வேதங்களான ரிக் வேதத்தில் சிவ வழிபாடு தொடங்குவதாகக் கூறப்படுகிறது. ஆனால் சிவன் என்னும் பெயர் குறிப்பிடப்படவில்லை. உருத்திரன் என்றே வருகின்றது. உருத்திரன் விண்ணையும், மண்ணையும் ஊடுருவிச் செல்லும் அம்புகள் உடையவன். பசுக்களையும் மக்களையும் கொல்லும் ஆயுதங்களைத் தாங்கியவன். இடியினால் உயிர்ச் சேதங்கள் உண்டு செய்பவன். நோய்களைக் கொடுப்பவன். அந்நோய்களைத் தீர்ப்பவன். ஆயிரக்கணக்கான மருந்துகள் உடையவன். மருத்துவர்களுக்கும் மேலான சிறந்த மருத்துவன். மனிதனின் அடிமனத்தில் குடிகொண்டிருந்த அச்ச உணர்வின் விளைவாக உருவானவனே உருத்திரன். அவனே பின்னால் மங்கல மயமாக்கப்பட்டுச் சிவன் என்னும் கடவுள் ஆனான் என்பர் ஆய்வாளர்கள்.

**"யசூர் வேதத்தின் ஒரு பகுதியான சதருத்ரியத்தில்தான் உருத்திரன் சிவனாகக் காட்சியளிக்கிறான். 'மங்கல வடிவினனும், அடைந்தாரைச் சிவமாக்கும் மங்கல மிக்க வடிவினனும் ஆகிய நினக்கு வணக்கம்' என்று வணங்கப் பெறுகிறான். பின்னர் சிவன் என்னும் பெயர் வேதங்களின் பிற்பகுதிகளில் சிறப்புப் பெறும் பெயராக வருகிறது"**[14]

என்று இந்திய தத்துவஞானம் என்னும் நூலில் கி.லட்சுமணன் இதனைக் குறிப்பிடுகிறார். ஆகவே திராவிடச் சார்புடைய சிவன் பின்னர் ஆரிய வைதீகரால் கைகொள்ளப்பட்டது

அறியப்படுகிறது. மேலும் தமிழகத்தில் ஆரிய வைதீக சமயத்தினரின் வருகை கி.மு. 6ஆம் அல்லது கி.மு. 7ஆம் நூற்றாண்டு அளவிலானது என்று ஆராய்ச்சியாளர் கூறுவதால் சிந்துவெளி சிவன் ரிக் வேதத்திற்கு பின்னால் வந்த வேதங்களில் சிறப்பிக்கப்படுவதற்கும், தமிழகத்தில் முன்னிலைப்படுத்தப் படுவதற்கும் ஆரிய வைதீகர் தமிழகத்தில் தங்களது மேலாதிக்கத்தை நிறுவுவதற்கே என்று ஊகித்துணரலாம்.

## சங்க இலக்கியங்களில் சிவன்

பண்டைத் தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த பகுதிகளை நிலப்பாகுபாட்டின் அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று திணை (ஒழுக்கம்) அடிப்படையில் பகுத்து வைத்துள்ளனர் என்பதை தொல்காப்பியரின் பொருளதிகாரம் உணர்த்துகிறது. இதில், ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வத்தைத் தொல்காப்பியர் சுட்டுகிறார். இதில் எந்த நிலத்திற்கும் சிவனை தெய்வமாக அவர் வரையறை செய்யவில்லை. இதனால், சிவ வழிபாடு பண்டைய தமிழகத்தில் அவ்வளவு சிறப்புப் பெறவில்லை என்பது புலனாகிறது. ஆரிய வைதீகச் சமயத்தினரின் வருகைக்குப் பிறகுதான் சிவனைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. அதிலும் 'சிவன்' என்னும் பெயரோடு வராமல் 'முக்கண்ணன்' என்றும் 'முப்புரம் எரித்தவன்' என்றும் அடைமொழிப் பெயரோடு சிவன் குறிக்கப்படுகின்றான். சங்க இலக்கியங்களில் சிவன், முக்கண்ணையும், கறைமிடற்றையும், ஒப்புமையாகக் கொண்டு பல பாடல்களில் கையாளப்படுகிறான். முக்கண்ணன் என்பது சினத்திற்கும், கறைமிடறு பேரருளுக்கும் குறியீடாய் விளங்குகின்றன.

> **"கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்**
> **பிறைநுதல் விளங்கும் ஒரு கண்போல**
> **வேந்து மேம்பட்ட பூந்தார் மாற"**[15]

என்று மதுரை மருதன் இளநாகனார் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வலிய தேவர்களுக்கு வெற்றியைத் தந்த நீலகண்டன் ஆகிய சிவபெருமானின் பிறைமுடித்த நெற்றியில் விளங்கும் கண்ணைப்போல சேர, சோழ வேந்தர்க்கு மேம்பட்ட மாலையணிந்த நன்மாறனே என்று பாராட்டுதல் சான்றாகிறது.

> **"மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**
> **முக்கண்ணான் உருவேபோல் முரண் மிகு குராலும்"**[16]

என்னும் கலித்தொகைப் பாடல் வரிகளில் ஒளி விளங்கும் சடை முடியும், பிறைச் சந்திரனைச் சூடிய நெற்றியும், முக்கண்ணும் உடைய சிவபெருமானது உருவம் போலும் குரால் காளைகள் என்று காளைகளுக்கு நிகராக ஒப்பிடப்படுகிறான். அதே போல,

**"அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த**

**பெருந்தன் சண்பகம் போல்"**[17]

என்ற கலித்தொகைப்பாடலில் அரிதிற்பெறும் பெருங்கடவுளாகிய, ஆதிரை நாளுக்குரிய சிவபெருமானது அழகை ஒப்ப மலரும் மிக்க தன்மையுடைய சண்பகம் பருவம் பொய்யாது மலர்வது போல என்று சண்பக மலருக்கு இணையாக சிவன் ஒப்பிடப்படுகிறான்.

**"பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி**

**நீலமணி மிடற்று ஒருவன் போல"**[18]

என்ற புறநானுற்றுப்பாடலில் பிறையை முடியில் சூடியவனும் நீலமணிபோலும் கழுத்தையுடையவனுமாகிய இறைவனைப் போல நீ நிலைப் பெறுவாயாக என்று அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாராட்டிப் பாடுகின்றார் இதைப் போன்றே,

**"ஓங்குமலைப் பெருவில் பாம்பு ஞாண் கொளீஇ**

**ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றிப்**

**பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த**

**கறை மிடற் றண்ணல்"**[19]

உயர்ந்த மலையாகிய பெரிய வில்லைப் பாம்பாகிய கயிற்றைப் பூட்டி ஒப்பில்லாத அம்மைப் கொண்டு மூன்று மதிலையையும் எய்து வலியதேவர்களுக்கு வெற்றியைத் தந்த நீலகண்டன் என்று மதுரை மருதன் இளநாகனார் சிவபெருமானைக் குறிப்பிடுகிறார்.

அதுபோல,

**"நன்றாய்ந்த நிள் நிமிர் சடை**

**முது முதல்வன் வாய் போகாது**

**ஒன்று புரிந்த ஈ கரண்டின்**

**ஆறுணர்ந்த ஒடு முதுநூல்"**[20]

பெரிதாக ஆராய்ந்த நீண்ட சடையையுடைய பெருமுதல்வனாம் சிவபெருமானது வாக்கினை நீங்காது அறம் ஒன்றையே செய்து நான்கு பிரிவுடைய ஆறு அங்கத்தாலும்

அறியப்பட்ட ஒரு பழநெறி என்று வேதநெறியைக் கூறுவதுபோல் என்று ஆவூர் மூலங்கிழார் சோழநாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனைப் பாராட்டிப் பாடுகிறார்.

**பத்துப்பாட்டுத் நூல்களில் சிவன்**

சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டு நூல்களில் சிவபெருமானைப் பற்றியக் குறிப்புகள் நான்கு இடங்களில் மட்டுமே வந்துள்ளன. அந்த நான்கு இடங்களிலும் சிவன் என்ற பெயர் வரவில்லை. சான்றாக,

**"நீரும் நிலனும் தீயும் வளியும்**

**ஆக விசும்பொடு ஐந்து உடன் இயற்றிய**

**மழுவாள் நெடியோன்..."**[21]

என்று நீர், நிலம், தீ, காற்று, ஆகாயம், ஆகிய பஞ்ச பூதங்களைப் படைத்தவன் என்றும் மழு என்னும் ஆயுதத்தை உடையவன் என்றும் சிவனை சிறப்பித்து மதுரைக்காஞ்சி கூறுகிறது.

அதுபோல்,

**"பேரிசை நவிரமோ உறையும்**

**காரி உண்டிக் கடவுள"**[22]

எனப் பெரும் புகழ் வாய்ந்த நவிரம் என்ற இடத்தில் வீற்றிருப்பவன். நஞ்சை உணவாக உண்டவன் என்று சிவபெருமானைச் சிறப்பித்து, மலைபடுகடாம் பாடுகிறது.

இதைப் போலவே திருமுருகாற்றுப்படையில்,

**"...............வெள்ளேறு**

**வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்**

**உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்**

**மூவெயில் முருக்கிய முரண்மிகு செலவன்"**[23]

என வெற்றிதரும் போர்க்களத்தில் அவன் உயர்ந்த இடபக் கொடியை ஏந்தியுள்ளான்; அவன் ஒரு பாகத்தில் உமையம்மை வீற்றிருக்கின்றாள். அவன் அனைவரும் புகழும் திரண்ட தோள்களை உடையவன். இமைத்தல் இல்லாத மூன்று கண்களை உடையவன்; முப்புரங்களை அழித்தவன் என்பதால் சிவபெருமான் போற்றப்படுகிறார். எட்டுத்தொகை

நூல்களில் தனியாகக் குறிப்பிடப்படும் சிவன் அதற்குப் பின்னர் வந்த பத்துப்பாட்டு நூல்களில் உமையம்மையோடு(தாய்வழிபாடு) சேர்க்கப்படுவது சைவ சமய வளர்ச்சிப் போக்கைக் காட்டுவதாக அமைகின்றது. சிவ வழிபாடு மர வழிபாட்டோடு தொடர்புடையது என்பதை,

**"ஆல் கெழு கடவுள்"**[24]

என்னும் வரி காட்டுகிறது. அதாவது, ஆலமரத்தின் அடியில் வீற்றிருக்கும் சிவன் என்று சிவன் போற்றப்படுகின்றான். இதைப்போலவே சிவபெருமானுக்கு கோயில் இருந்ததைச் சுட்டிக் காட்டும் வகையில் அகநானூற்றுப் பாடல் ஒன்று வருகின்றது. அது

**"வைப்பின் யாணர் வளம்கெழு வேந்தர்**
**ஞாலம் நாறும் நலம் கெழு நல் இசை,**
**நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்**
**ஆல முற்றம் கவின் பெறத் தைஇய"**[25]

என்பதாகும். சோழ வேந்தரால் புரக்கப்படும் சிவபெருமான் திருக்கோயில் ஒன்று உள்ளது. சிவபெருமான் உலகமெல்லாம் வணங்கப்படும் நற்புகழ் வாய்ந்தவன், நான்மறைகளும் ஓதியவன், மூன்று கண்களை உடைய தெய்வம், அவனது திருக்கோயில் உள்ள இடம் ஆலமுற்றம் என்னும் பெயருடையது. அத்திருக்கோயிலில் அழகிய சோலையும், அதை அடுத்துப் பொய்கையும் அமைந்துள்ளன என்று பரணர் அவர்கள் சோழ அரசர்களால் நிர்வகிக்கப்படும் சிவன் கோயிலைக் குறிப்பிடுகின்றார். மேற்கண்ட பாடல்களின் மூலம் சிவபெருமானின் உருவத்தைக் காட்சிப்படுத்தும் போக்கு வளர்ந்து சிவனுக்கு கோயில் அமைக்கும் அளவிற்கு வளர்ந்து வந்துள்ளதை அறிய இயலுகிறது. காலத்தால் முற்பட்ட சங்க இலக்கியப் பாடல்களில் சிவபெருமானின் உருவத்தை மனத்தில் பதிய வைக்கும் நோக்கோடு எழுதப்பட்டப் பாடல்களாக இப்பாடல்கள் தோன்றுகின்றன. இது உருவ வழிபாட்டை வலியுறுத்தும் நோக்கோடு பாடப்பட்ட பாடல்களாகத் தோன்றுகின்றன. இது வடக்கே கண்ணன் என்கிற கிருஷ்ண உருவ வழிபாடு தொடங்கியதற்குப் பிறகு அதன் வழிவந்த போக்காக ஊகிக்க முடிகிறது. மேலும் தமிழகத்திற்கு அறிமுகம் இல்லாத சிவபெருமானை மக்கள் மத்தியில் பதிய வைப்பதற்கு எடுத்த முயற்சி ஒரு காரணமாக அமைந்தாலும் இதற்கு மற்றொரு காரணமும் உண்டு. வடக்கே கடவுளை மறுக்கும் சமயங்களான சமணம், பௌத்தம் பெருவீச்சோடு மக்கள் மத்தியில் பரவியபோது அதிலிருந்து தாக்குப்பிடிக்கும் வகையில் கிருஷ்ண வழிபாடு உருவ வழிபாடாக

வளர்ச்சியடைந்தது. இதே நிலை தமிழகத்திலும் ஏற்பட்டது. சமணம், பௌத்தம் வருகைக்குப்பின் தமிழக மக்களின் சிந்தனை மரபில் மாற்றம் நிகழ்ந்ததால் இதிலிருந்து தாக்குப்பிடிக்கும் வகையில் ஆரிய வைதீகர் உருவ வழிபாட்டை முன்னிலைப் படுத்தும் வகையில் சங்கப்பாடல்களால் சிவ, விஷ்ணு உருவங்களை முன்னிலைப்படுத்தினர். இதற்குத் தமிழகத்தில் மேலாதிக்கம் செய்த வேளாளரும் உடந்தையாயிருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்களின் வழி அறிய முடிகிறது. மேலும் காலத்தால் பிந்தைய கலித்தொகையிலும், பரிபாடலிலும் சிவபெருமானைப் பற்றிய புராணக் கதைகளும், குறிப்புகளும் வருகின்றன. அவை சமயங்கள் நிறுவனமயமாதல் இயலில் சுட்டப் பெறுகின்றன.

**வைணவம் ஓர் அறிமுகம்**

விஷ்ணுவைப் பரம்பொருளாகவும், முழுமுதற் கடவுளாகவும், பரப்பிரம்மமாகவும் கொண்ட சமயம் வைணவம். விஷ்ணு என்பதற்கு எங்கும் பரவி வியாபித்து நிற்பவன் என்று பொருள். எல்லாவற்றிலும் தங்கி, எல்லாவற்றையும் தாங்கி, எல்லாவற்றிலும் பரவி நிற்கும் விஷ்ணுவின் தொடர்புடையது வைணவம், வைணவ குரு பரம்பரைக்கு முதல் குரு விஷ்ணுவே, வைணவர்கள் மறந்தும் புறம் தொழாதவர்கள், விஷ்ணுவை மட்டும் வணங்குபவர்கள். விஷ்ணுவை வைத்த மாநிதியாகவும், விஷ்ணுவுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவாது அடிமை செய்வதையே பேறாகவும் கொண்டிருப்பவர்கள். விஷ்ணுக்குச் செல்லப் பிள்ளைகள், விஷ்ணுவைத் தாயாகவும் தந்தையாகவும் கருதுபவர்கள் 'ஸ்ரீமத் நாராயண' என்னும் எட்டெழுத்து மந்திரத்தினால் தன்னை உணர்ந்து ஞானம் வளர்ந்து பாவம் களைந்தவர்கள். நீர் வண்ணனான விஷ்ணு உறையும் திருப்பதிகளில் இருப்பவர்கள். வெள்ளை உள்ளத்தவர்கள். அற்பமான பலன்களுக்கு ஆசைப்படாமல் பரமன் நல்கும் வீடுபேற்றை விழைபவர்கள். பேரின்ப வீடு பெறுவதற்குச் சாதனமான ஞானம், அனுஷ்டானம் என்னும் இரண்டையும் உடையவர்கள். சாரமான அர்த்தத்தை மட்டும் கொள்பவர்கள். மற்றவர்களின் குற்றங்களைக் களைந்து குணங்களை மட்டுமே கொள்பவர்கள். தம்மை அழித்தாயினும் மற்றவர்க்குப் பயன் தருபவர்கள் வைணவம் அல்லது திருமால் நெறி என்பது வடமொழி வேதங்களையும், தமிழ்மொழித் திவ்வியப் பிரபந்தத்தையும் பிரமாணமாகக் கொண்டது. அதனால் அது உபய வேதாந்தம் எனப்படுகிறது. வடமொழியில் உள்ள உபநிடதங்கள், பிரம்மசூத்திரம், பகவத் கீதை ஆகிய மூன்றும் பிரஸ்தானத் திரயம் எனக் கூறப்பெறும் பிரம்ம சூத்திர விரிவுரை (பாஷ்யம்) செய்தே விசிஸ்டாத்வைதத்தை நிலை நாட்டினர். பாஷ்யகாரரான இராமானுசர், வடமொழி வேதங்களில் விளங்காதவற்றை விவரிக்கத் தமிழ் மறையான திவ்வியப்

பிரபந்தத்தைத் துணையாகக் கொண்டார். வைணவத்தின் அடிப்படையான தத்துவங்கள் மூன்று. அவை,

1. சித்து அல்லது சேதனம் அல்லது அறிவுள்ள ஜீவாத்மா
2. அசித்து அல்லது அசேதனம் அல்லது அறிவற்ற பொருள்
3. ஈசுவரன் அல்லது இறைவன் அல்லது பரம் பொருள், பேரறிவும், பேராற்றலும் திவ்விய மங்கள விக்கிரமும் உடைய கணக்கறு நலத்தன.

இம்மூன்றும் இணைபுரிதல் இல்லாத உண்மைப் பொருள்கள் ஆகும். வீடுபேற்றில் விருப்பமுடையவர்கள் இவற்றைத் தேர்ந்து தெளிதல் வேண்டும்.

## சித்து

சித்து என்பது ஞானமாய் விளங்குகின்ற ஆன்மா, உடல், ஐம்பொறிகள், மனம், பிராணன், அறிவு ஆகியவற்றின்னும் வேறுபட்டது. அணுவாகவும், ஆனந்த மயமாகவும், அழிவற்றதாகவும் பெருமானுக்கே அடிமையாகவும் அமைந்தது. புலன்களால் அறியப்படாதது. தன்னொளி வடிவாய்த் (ஸ்வயம் பிரகாசமாய்) திகழ்வது. சித்து என்னும் சேதனர்களில் மூவகையினர் உண்டு. அவர்கள்,

1. **பக்தர்** - இவர்கள் அநாதியான கருமத் தளையினால் கட்டுண்டு சம்சாரத்தில் உழல்பவர்கள்.
2. **முக்தர்** - பகவானின் அருளாலே பாவங்கள் நீங்கப் பெற்றவன். அமர உடல் அடைந்து வீடுபேறு பெற்றவர்கள்.
3. **நித்யா** - பெருமானுடன் இணை பிரியாமல் இருப்பவர். அவருடன் வாழ்ந்து அவரைச் சிறப்பிக்கும் திருவனந்தாழ்வான், கருடாழ்வான், சேனை முதலியோர் போன்றவர்கள்.

என்பவராவர்.

## அசித்து

அசித்து என்பது அறிவற்றதாகவும், உருவ வேறுபாடுகளுக்கு உட்பட்டதாகவும் விளங்கும் பொருள்கள். இது பிரக்ருதி எனப்படும். இது மூன்று வகைப்படும் அவை,

1. **சுத்த சத்வம்:** ரஜஸ், தமஸ் குணங்கள் கலக்காமல் சத்வ குணத்திற்கு மட்டும் ஆதாரமாக விளங்கி ஞான ஆனந்தமயமாய்த் திகழும் நித்திய விபூதியான பரமபதம்.

2. **மிச்ரதத்வம்:** ரஜஸ், தமஸ் குணங்களோடு கலந்த சத்து இல்லம் உடைய லீலா விபூதியான இவ்வுலகு எல்லா அசேதனப் பொருள்களுக்கும் மூலமான பிரக்ருதி இதுதான்.
3. **சத்வசூன்யம்:** ரஜஸ், தமஸ் குணங்களோடு சத்வ குணமும் இல்லாமல் இருக்கும் நொடி, நாழிகை, நாள், மாதம், ஆண்டு என்னும் பகுதிகளைக் கொண்ட காலம் இதைத் திரிகுண சூன்யம் என்பர்.

**ஈசுவரன்**

சித்தையும், அசித்தையும் நியமிக்கும் இறைவனான ஸ்ரீமந் நாராயணன் ஒருவன்தான் ஈசுவரன் ஆவான். இவன் ஞான ஆனந்த மயமானவன். உலகம் யாவையையும் தாம் உள ஆக்கலும், நிலைபெறுதலும், நீக்கலும், நீங்கலா அலகிலா குணங்களைக் கொண்டவன். அளவற்ற கல்யாணக் குணங்களைக் கொண்டவன். பேரொளிமிக்க திவ்விய மங்கள விக்கிரகத்தை உடையவன். இடத்தாலும், காலத்தாலும், பிறவற்றாலும் அளவிடற்கு அரியவன். மலர் மங்கைக்கும் (ஸ்ரீதேவி), மண் மடந்தைக்கும் (பூமி தேவி), இல ஆயர் கொழுந்துக்கும் (நீளாதேவி அல்லது நப்பின்னை) கேள்வனாய் இருப்பவன். சித்தையும் அசித்தையும் உடலாய் விசேஷமாய்க் கொண்டு தனக்கு மேல் வேறொரு பொருள் இல்லாத பரம்பொருளாய் பரப்பிரம்மமாய்த் திகழ்பவன். விஷ்ணுவை, ஹரி, வாசுதேவன், அருந்தன், திருமால் என்றெல்லாம் விளங்கப்படுபவன் ஸ்ரீமந் நாராயணன். இவ்வாறு காலத்திற்கேற்ப பல்வேறு வளர்ச்சி பெற்று தத்துவமாய் விளங்கி நிற்கிறது வைணவம்.

## வேதத்தில் விஷ்ணு

வேதம் என்னும் பெயர் வித் என்னும் மூலத்திலிருந்து தோன்றியது என்பர். இந்த மூலம் அறிதல் என்னும் பொருள் உடையது. எனவே வேதம் என்றால் அறிவு நூல் எனப் பெயராகிறது. தத்துவங்களை விளக்கும் மெய்யறிவு நூல்கள் என்பதால் இப்பெயர் பெற்றது. இந்த வேதங்கள் யாராலும் இயற்றப்படாமல் தாமே தோன்றியன என்றும் பல முனிவர்களால் காணப்பட்டன எனவும் நம்பப்படுகிறது. இந்து சமயம் வேதத்தை இறைவன் வாக்காக ஏற்றுக் கொள்கிறது. வேதங்கள் ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு வகை கொண்டது. ஒவ்வொரு வேதமும் சம்ஹிதை என்றும் பிராமணம் இருபெரும் பிரிவுகளை உடையது. பிராமணம் மீண்டும் பிராமணம், ஆரண்யகம், உபநிடதம் என மூன்று பிரிவுகளைப் பெற்றுள்ளது. சம்ஹிதை என்பது சூக்தங்களின் தொகுப்பு ஆகும். இப்பகுதி மந்திரம் எனவும் பெயர் பெறும். இது இறைவனைப் போற்றும் துதிப்பாடல்கள் நிறைந்த பகுதி ஆகும். மந்திரங்களை உச்சரிக்கும்போது கடைபிடிக்க வேண்டிய கிரியைகளை விளக்குவது

பிராமணம் என்னும் பகுதி ஆகும். ஆரணியகம் என்னும் சொல் காட்டிற்கு உரியது என்னும் பொருள் உடையது. நாட்டில் சடங்காசாரங்களைக் கைக்கொண்டு வாழ்ந்திருந்த ஒருவன் துறவு பூண்டு கானகத்தில் வசிக்கும்போது அடையாளங்களின் வழியாகவோ, மானசீகமாகவோதான் தன் வழிபாட்டு முறைகளை அமைத்துக் கொள்ள நேரும், அப்பேர்ப்பட்ட சூழ்நிலையில் ஒழுகவேண்டிய விதத்தை விளக்குவதே ஆரணியகம் ஆகும்.

இது முற்றிலும் கிரியையான பிராமணத்திற்கும், முழுவதும் ஆராய்ச்சி மயமான உபநிடதத்திற்கும் இடைப்பட்டது ஆகும். எனினும் இதிலும் சடங்கு முறைகள் சில இருப்பதால் பிராமணம், ஆரணியகம் இரண்டையும் ஒன்றாகக் கொள்வதும் உண்டு. வேதங்களின் இறுதிப் பகுதியாக உபநிடத வேதாந்தம் என வழங்கப்படும். இது ஞானத்திற்கு முதலிடம் தரும் பகுதி. எனவேதான் சம்ஹிதை, பிராமணம், ஆரணியகம், ஆகியவற்றைக் கன்ம காண்டம் எனவும், உபநிடதத்தை ஞான காண்டம் எனவும் சொல்வர். வேதங்களுள் சம்ஹிதை பகுதி மட்டுமே இறைவனால் அருளப்பெற்றது என்று நம்பப்படுகிறது. மற்றவை முனிவர்களால் சம்ஹிதையை விளக்க இயற்றப்பட்டது என்று அறிஞர்கள் கூறுவர். சம்ஹிதையில் உள்ள மந்திரங்கள் பெரும்பாலும் இயற்கையின் பகுதிகளாகிய நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றைத் தேவதைகளாக்கிப் போற்றும் வழிபாட்டுப் பாடல்களாக உள்ளன. துன்ப நீக்கமும், இன்ப ஆக்கமும் வேண்டி இயற்கைச் சக்திகளை வழிபட்ட துதிகளே சம்ஹிதைகள். இதில் ருக்வேதம் மிகப் பழமையானதும் மற்ற வேதங்களுக்கு அடிப்படையானதும் ஆகும். இவ்வேதம் ஏறத்தாழ 10,552 மந்திரங்களை உடையது. ஒவ்வொரு பாடலும் ஒரு ருக் எனப்படும். இந்தப் பாடல்களின் யாப்புப் பெயர் ருக் என்பர். வேதத்தில் இந்திரன், வருணன், வாயு, அக்னி போன்ற தெய்வங்கள் முதலில் முக்கிய இடத்தைப் பெற்றிருந்தன. அதனைத் தொடர்ந்து இரண்டாம் தன்மையாக இயமன், ருத்ரன், விஷ்ணு முதலிய கண் தெய்வங்கள் முதன்மைப் படுத்தப்படுகின்றன. கருத்து வளர்ச்சியுற்றக் காலத்தில் **'பிரஜாபதி'** பெயரும் வருகிறது.

> **"தேவர்களில் சாதாரண ஒருவராக இருந்த விஷ்ணு முதல் பெரும் தெய்வமாக உயர்ந்து விடுகிறார். ஏற்கனவே கொண்டாடப்பட்டு வந்த சிவனோடு தேவருத்ரன் இணைக்கப்பட்டார்கள்"**[26]

என்ற கருத்தியலும்,

**"பிந்திய காலத்தில் சிவனும், நாராயணனும் முழுமுதல் தெய்வமாக ஏற்றம் பெற்றனர். இவர்களுக்கு முறையே அழித்தல், காத்தல் ஆகிய துறைகள் ஒதுக்கப்பட்டன. படைக்கும் பிரம்மனும் இதில் உண்டு."**[27]

என்ற கருத்து வேதக்கால இறுதிப் பகுதியிலும், உபநிடதக்கால தொடக்கப் பகுதியிலும் சிவனும், விஷ்ணுவும் சிறப்பு தெய்வங்களாக உருவாகின என்பதை நாம் உணர முடியும். இதை உறுதிப்படுத்தும் வகையில்,

**"இந்திரன், வருணன், பிரம்மா, அக்னி, வாயு, எமன் போன்ற வேதச் சடங்குகளில் வழிபடப்படும் தேவதைகள் இன்றும் மங்கலக் கர்மங்களிலும் அமங்கலக் கர்மங்களிலும் ஓம அக்னியில் மந்திரங்கள் வழிப்படப்படுகின்றனர். இந்தப் பெயர்கள் எல்லாம் ஸ்ரீமந் நாராயணனின் பற்பல பெயர்களுள் உள்ளவையே"**[28]

என்று வலிந்து புகுத்தப்படும் இக்கருத்தும், இதை ஆதரிக்கும் வகையில்

**"எல்லாத் தேவதைகளுமே பரமாத்மா மகா விஷ்ணுவின் திருமேனிகளாகிறபடியால் எல்லா தேவதை வணக்கமும் அவரையே சென்றடைகின்றது என்கிறது வேத சாத்திரம். 'சர்வ தேவதா நமஸ்காரம் கேசவம் பிரதிகச்சதி' இக்கருத்து உபநிடதங்களில் சாரமான பகவத் கீதையிலும் பரமாத்மா ஸ்ரீ கிருஷ்ணரால் மொழியப்பட்டுள்ளது"**[29]

என்ற கருத்தும் மேற்சொன்ன நம் கருத்திற்கு வலு சேர்க்கும் வகையில் உள்ளது. விஷ்ணு தெய்வம் வேத காலத்திற்குப் பிந்தியது என்பதும். வேதத்தில் கூறப்பட்ட தெய்வங்களின் தன்மைகளையெல்லாம் உள்வாங்கிக் கொண்டு முதன்மை பெற்ற தெய்வமாக உபநிடதக் காலத்தில் விஷ்ணு தெய்வம் உருவானது என்பதையும் இதற்கு அடிப்படைக் காரணம் சமண, பௌத்தத்தின் எழுச்சி என்பதும் வரலாற்றின் அடிப்படையில் நாம் விளங்கிக் கொள்ள முடியும்.

இக்கருத்தை உறுதி செய்யும் வகையில்,

> **"வேதத் தெய்வங்களுக்கு ஒரு தனித்தன்மையும், உருவமும் இல்லை. ஆனால் கடவுளைப்பற்றியக் கருத்து, பிற்கால இக்கருத்தில் முழுமையும், மாற்றமும் அமைந்தது. சிவனும், விஷ்ணுவும், மிகவும் தனித்தன்மையும், தனிப்பட்ட உருவமும் ஏற்று இக்கருத்தில் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றனர்"**[30]

என்று காலத்தின் தேவைக்கேற்ப வட இந்தியாவில் நில உடமை சமூக அமைப்பிற்கு ஏற்ற வகையில் சிவ, விஷ்ணு தெய்வங்கள் உருவாக்கப்பட்டன என்பதைப் புரிந்து கொள்ளமுடியும். வேதங்களால் ஏற்பட்ட மாற்றங்களைப் புரிந்து கொள்ள வேத காலத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமாகிறது. வேதங்கள் கடவுளால் அருளப்பட்டதென்றும், அதற்கு கால எல்லை கிடையாது, அநாதியானது என்றும் ஒரு சாரார் கூறி வருகின்றனர். ஆனால் அதற்கும் ஒரு கால எல்லை உண்டு. எதற்கும் ஒரு காரண, காரியம் உண்டு என்பதை முன் மொழிவது இன்றைய நவீன உலகத்தின் அறிவியல் பார்வையாகும்.

## வேதங்களின் காலம்

வேத இலக்கியங்கள் கால அடிப்படையில் பிரிக்கப்படுகின்றன.

> **"வேத இலக்கியங்களைக் கால வரிசை அடிப்படையில் இரண்டு அடுக்குகளாகப் பிரிக்கலாம். கி.மு. 1000 முதல் கி.மு.1500 வரையிலான ஆரம்ப வேத காலத்தில் ரிக் வேதப் பாடல்கள் இயற்றப்பட்டன. மற்ற அனைத்து வேதங்களும் அவற்றின் கிளைகளும் கி.மு.1000 முதல் கி.மு.600 வரையிலான பிந்தைய வேதக் காலத்தைச் சேர்ந்தவை. இந்தியாவில் ஆரிய வர்க்கத்தின் இரண்டு கட்டங்களுடன் அந்த இரண்டு கால கட்டங்களும் பொருந்துகின்றன."**[31]

என்று ரிக் வேதத்தில் கூறப்படும் பண்டைய இந்திய வரலாற்றுக் குறிப்புகள் கொண்டும், பூகோளக் குறிப்புகளைக் கொண்டும் டி.என்.ஜா வேதங்களின் காலத்தை வரையறை செய்கிறார்.

ஆனால்,

> **"ஏடும் எழுத்தும் பயன்படுத்தப்படாத பழைய காலம் வேத காலம். இதை எவரும் அறுதியிட்டுக் கூறவியலாது. கி.மு.5000 முதலாக கி.மு. 3500 என்கிறார்கள். இக்காலம் கி.மு.1500 வரை இருந்திருக்கலாம். பிறகு இதிகாச காலம் இராமாயணம் முதல் இதிகாசமாகும். மகாபாரதம் இரண்டாவது இதிகாசமாகும். இதுவே 5000 ஆண்டுகளுக்கு முன் என்பதால் அதற்கு முந்தையதே வேத காலமாகும்"**[32]

என்ற இக்கருத்து வேதத்திற்கு கால எல்லை கிடையாது என்பதை வலியுறுத்துவதாக உள்ளது. ஆனால், இக்கருத்து இன்றைய நவீன அறிவியல் ஆய்வுலகத்திற்குப் பொருந்தாது. பாரதப்போரோடு கூடிய வரலாற்றுக் குறிப்புகளும், இராமாயணத்தோடு கூடிய வரலாற்றுக் குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் திகழ்கின்றன. சங்க இலக்கியக் காலம் கி.மு. 800-லிருந்து தொடங்குகிறது.

அதனால் மேற்சொன்னக் கருத்து உண்மைக்குப் பொருந்தாது. மேலும் 'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தக்குடி தமிழ்க்குடி' என்னும் கூற்றைப்போல மேற்சொன்னக் கூற்றும் மிகைப்படுத்தப்பட்ட ஒன்றாகும். மேலும் திணைக் கோட்பாட்டின் அடிப்படையில் தமிழ்ச் சமூக உருவாக்கக் காலமும், வேதங்களின் காலமும் ஏறக்குறைய 400, 500 ஆண்டுகளே வேறுபடுகின்றன. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் உள்ள புறத்திணையில் கூறப்படும் வெட்சித்திணை, இனக்குழு சமூகத்தின் ஒழுக்கமாக விளங்கிய 'ஆநிரை கவர்தல்' போல், ரிக் வேதமும் ஆநிரை கவர்தலைக் குறிப்பிடுகிறது.

இதை,

> **"அடிப்படையில் மேய்ச்சல் சமூகமாக இருந்த ஆரம்பகால ஆரியர்கள் பண்டைய அர்த்தத்திலோ அல்லது நவீன அர்த்தத்திலோ அரசு என்று கருத்தாக்க அரசியல் அமைப்பு எதையும் வளர்ந்திருக்கவில்லை. இந்தியக் துணைக் கண்டத்தில் ஆரியர்களின் முதல் விரிவாக்கமாக இருந்த சப்த சிந்துப் பகுதியைச் சிறிய இனக்குழு மன்னராட்சிகள் ஆண்டு கொண்டிருந்தன. அவற்றில் ஐந்து, பஞ்சஜனா என்று ரிக் வேதத்தில் குறிப்பிடப்படுகின்றன. மன்னரும், இனக்குழுத் தலைவரும் ஒருவர்தான். இனக்குழுத்**

**தலைவரைக் குறிக்க ராஜன் என்கிற சொல் பயன்படுத்தப்படுகின்றது. பிரதானமாக ராணுவத் தலைவரான இனக்குழுத் தலைவர், பசுக்களுக்காகவே யுத்தம் செய்தார். நிலப்பரப்பிற்காக அல்ல. அவர் தன்னுடைய மக்களின் (ஜனா) மீது ஆட்சி செலுத்தினார். எந்த ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பிலும் அல்ல. ஆதலால் அவர் மக்களின் காவலர் (கோபா ஜனஸ்யா அல்லது கோபதி ஜனஸ்யா) என்று அழைக்கப்பட்டார். அடிப்படையில் கால்நடை மந்தைகளைக் காப்பவர் என்ற மூலப் பொருள் கொண்ட கோபதி என்கிற சொல் மக்கள் அல்லது இனக்குழுவைக் காப்பவர் என்கிற விரிவாக்கப்பட்ட அர்த்தத்தைப் பெற்றது.''**[33]

என்ற டி.என்.ஜாவின் இக்கருத்து தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டு கால வரையறையும், ரிக்வேதத்தின் கால வரையறையும் ஏறக்குறைய சம காலத்தையது என்பதை உணர்த்துகிறது. மேலும் தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டுச் சமூகப் படிநிலை உருவாக்கம் தமிழ்க்குடிமைக்கு மட்டுமல்லாமல் பாரதம் முழுமைக்கும் பொருந்துவதாக அமைவது இங்கு கருதத் தக்கதாகும்.

**சங்க இலக்கியங்களில் திருமால்**

தமிழகத்தில் குடும்பம், சொத்து, அரசமைப்பு தோற்றத்தை விளக்கும் முல்லைத்திணை தெய்வமான மாயோன் என்று அழைக்கப்படும் 'மால்' நிலவுடைமைச் சமூகத்தில் விஷ்ணுவாகவும், கண்ணனாகவும், நாராயணனாகவும் காட்சியளிக்கிறான். காலத்தால் முந்திய சங்கப்பாடல்களில் விஷ்ணு என்ற பெயர் வழங்கப்படவில்லை. 'மால்', 'மாயோன்' என்ற பெயர்களே வழங்கியிருந்தன. மால் என்பதற்கு பெரியோன் என்றும், மாயோன் என்பதற்குக் கரியவன் என்றும் பொருள் வழங்கப்பட்டது. மதுரைக் காஞ்சியில் மாயோன் என்னும் சொல் வருகின்றது. மற்ற நூல்களில் இப்பெயர் காணப்படவில்லை. எனினும் பாடல்களில் கூறப்படும் பண்புகளைக் கொண்டு அவ்விடங்களில் குறிக்கப்படும் தெய்வம் திருமால் என்பது புலனாகிறது.

**''மண்ணுறு திருமணி புரையும் மேனி**

**விண் உயர் புள்கொடி விறல் வெய்யோன்''**[34]

திருமால் கழுவப்பட்ட அழகிய நீலமணி போன்ற திருமேனியையும் வானுற ஓங்கிய கருடக் கொடியையும் உடையவன் என்று புறநானூற்றுப்பாடல் திருமாலைப் பதிவு செய்கிறது.

**"நீலநிற உருவின் நேமி யோனும்"**[35]

நீல நிறத்தையும், சக்கரத்தையும் ஏந்தியிருக்கும் திருமால் என்றும்,

**"ஆலமர் கடவுள்"**[36]

ஆலிலையின்மேல் அமர்ந்திருக்கும் திருமால் என்றும் புறநானூற்றுப் பாடல் குறிக்கின்றது. இதைப்போல,

**"மாயோ னன்ன மால்வரைக் கவாஅன்"**[37]

மாயோனைப் போன்ற உயர்ந்த மலைச்சாரல் என்று நற்றிணை வருணிக்கிறது.

**"நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல்"**[38]

திருமால் தன்னுடைய கைகளிலே சங்கையும், சக்கரத்தையும் தாங்கியிருக்கிறான் என்றும், தனது மார்பிடத்தே திருமகளை வைத்திருக்கின்றான் என்றும், மாவலி வார்த்த நீர் தனது கையிலே சென்றதாக உயர்ந்தவன் என்றும் முல்லைப்பாட்டு திருமாலைக் காட்சிப்படுத்துகிறது. இப்பாடல் முல்லை நிலத்தில் வணங்கப்பட்ட மால் தெய்வமும் ஆரிய வைதீகத்தால் கொண்டு வரப்பட்ட விஷ்ணுவையும் இணைக்கும் பாடலாக அமைகிறது.

**"வண்டூது பொலிதார்த் திரு ஞெமர் - அகலத்துத்**
**கண்பொரு திகரிக் கமழ்குரல் துழாஅய்**
**அலங்கற் செல்வன்"**[39]

வண்டினம் மொய்த்துத் தேனூறும் அழகிய தாரினை அணிந்ததும், திருமகள் பொருந்தியதுமான மார்பினையும், காண்பார் கண்களைத்தன் ஒளியாலேயே கூசச் செய்யும் ஒளிகொண்ட சக்கரப் படையினையும், மணம் வீசும் கொத்துக்களையுடைய துளசி மாலையணிந்த சிறப்பினையும் உடையவன் திருமால் என்று பதிற்றுப்பத்து திருமாலைக் குறிக்கிறது. இப்பாடலும் முல்லை மாலும், வேத விஷ்ணுவும் இணைதலைச் சுட்டிக்காட்டி நிற்கிறது.

**"அணங்குடை அவுணர் கணம் கொண்டு ஒளித் தெனச்**
**சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது**
**.....................................................................**
**அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கும்"**[40]

பிறரைத் துன்புறுத்தும் அசுரர் கூட்டத்தினர் ஞாயிற்றை மறைத்தனர். தொலைவில் விளங்கும் அஞ்ஞாயிற்றைக் காணாமல் இருளானது உலகத்தாரின் கண்ணொளியை மறைத்தது. அத்துயரை நீக்குமாறு மிக்க வலிமையமைந்த கரிய கண்ணன், அந்த ஞாயிற்றைக் கொண்டு வந்து நிறுத்தினான் என்ற புறநானுற்றுப் பாடலின் மூலம் வேதங்களில் கூறப்பச்ச்ச்டும் சூரிய வழிபாட்டை உள் வாங்கிக்கொண்ட விஷ்ணுவை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

**"காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்**

**பாம்பணைப் பள்ளி யமர்ந்தோன்"**[41]

பாம்பின்மேல் துயிலுகின்ற திருமாலைப்பற்றி முதன் முதல் கூறும் நூல் பெரும்பாணாற்றுப் படையாகும். நீண்ட பூங்கொத்துக்கள் செறிந்த காந்தளையுடைய அழகிய பக்க மலையிலே யானை படுத்திருப்பதுபோல் பாம்பணையாகிய படுக்கையில் அவன் துயில் கொண்டான். அவ்வாறு அவன் பள்ளியமர்ந்தது திருவெஃகா என்னும் திருப்பதியிலாகும் என்று பெரும்பாணாற்றுப்படை குறிக்கிறது.

**"நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்**

**நான்முக னொருவற் பயந்த"**[42]

என நான் முகத்தையுடைய ஒருவனைப் பெற்ற நீல நிறத்தையுடைய திருமால் பிரம்மனைப் பெற்றெடுத்தவன் என்று பெரும்பாணாற்றுப்படைக் குறிக்கிறது.

மேலும்,

**"இரு நிலங் கடந்த திருமறு மார்பின்**

**முந்நீர் வண்ணன்"**[43]

பெரிய நிலத்தை அளந்தவன், திருவாகிய மறுவை அணிந்த மார்பினை உடையவன். கடல்போன்ற நிறத்தையுடையவன் என்று மற்றொரு இடத்தில் பெரும்பாணாற்றுப்படை திருமாலைக் குறிக்கிறது. அதுபோல் மதுரைக் காஞ்சி,

**"திண் கதிர் மதாணி யொண்குறு மாக்களை**

**யோம்பினர்த் தழீகத் தாம்புணர்ந்து முயங்கித்**

**..................................................................**

**பூவினர் புகையினர் தொழுவணர் பழிச்சி"**[44]

எனத் திருமால் சில இடங்களில் கோபக்கனல் கொண்ட தெய்வமாகவும், சில இடங்களில் நன்மை பயக்கும் கடவுளாகவும் காட்சியளிக்கிறான். மதுரைக் காஞ்சியில் அவன் மாநிலத்தின் காவலனாக விளங்குகிறான். ஆண்கள் தம் மனைவி மக்களுடன் நின்று மலரும் தூபமும் கொண்டு அவனை வணங்குவர். ஒளிபொருந்திய பேரணிகலன்களையுடைய அழகிய இளம்பெண்கள் தம் கணவரோடும் தாது மிகுந்த தாமரையையொத்த முகங்களுடைய குழந்தைகளோடும் சென்று காக்கும் கடவுளாகிய திருமாலைப் பூவும் புகையும் கொண்டு வணங்குவர் என்று பதிவு செய்கிறது. மேலும்,

**"கணங்கொளவுணர்க் கடந்த பொலந்தார்**

**மாயோன் மேயவோண நன்னாள்"**[45]

அவுணர் கூட்டத்தை வென்றவனும், பொன்னாற் செய்த மாலையை உடையனுமாகிய திருமால் பிறந்த ஓணமாகிய நன்னாளில் ஊரிலுள்ளோர் விழா எடுப்பர் என்று மதுரைக் காஞ்சி பதிவு செய்கிறது. மேற்கண்ட மேற்கோள்களின் மூலம் முல்லை நிலக் கடவுளாகிய மாலோடு சூரிய வைதீகரின் விஷ்ணு உருவ வழிபாட்டை நிலை நிறுத்தும் வகையில் பாடல்கள் புனையப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. சிவ உருவ வழிபாட்டிற்குச் சூரிய வைதீகருக்கு முக்கியத்துவம் ஏற்பட்டதைப் போலவே மால் வழிபாட்டிற்கும் முக்கியத்துவம் ஏற்பட்டது. மேற்கண்ட சங்கப் பாடல்களின் மூலம் சிவ, விஷ்ணு வழிபாடு திராவிட (தமிழ்) வழிபாடாக இருந்தாலும் தமிழகத்தில் அதை முன்னெடுத்தது ஆரிய வைதீகரே என்பதில் ஐயமில்லை. மேலும் சிவன், திருமாலைப் பற்றிய பாடல்களை நோக்கும்போது அதை இயற்றிய பெரும்புலவர்கள் ஆரிய வைதீகத்தைச் சார்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். மேலும் சிவன், திருமாலுக்கு ஒப்பிட்டுப் பாடப்படும் மன்னர்களும் ஆரிய வைதீகச் சமயச் சார்பு உடையவர்களாகவே விளங்குகின்றனர். திருமாலுக்குரிய பாடல்களில் முல்லை நிலத்தையும், அந்த நிலத்திற்குரிய கடவுளான மாலின் பெயரை மாற்றாமல் மிகக் கவனமாக வைதீக விஷ்ணுவின் பண்புகளோடு இணைக்கப்பட்டது முக்கியமான சமய வரலாற்று நிகழ்வாகும். மேலும் சைவ சமயத்தில் லிங்க வழிபாடு, சிவ வழிபாடு வேளாண்மை உற்பத்தியை முன்னிலைப்படுத்தும் வழிபாடாக அமைவதாலும், அதற்குரிய கடவுளாகிய சிவன் அன்று பெரும்பங்கு வேளாண்மை உற்பத்தியில் ஈடுபட்ட பெருநிலக்கிழார்களாகிய உழுவித்து உண்ணும் வேளாளர்களுக்கும், வேதாந்த சிந்தனையின் மூலம் தமிழகத்தில் சிறப்படைந்த ஆரிய வைதீகருக்கும் இந்த இரு பிரிவினரையும் தூண்களாகக் கொண்டு ஆட்சி செய்த மன்னர்களுக்கும் அவரவர் இருப்பைத் தற்காத்துக் கொள்ளும் ஏற்புடைய

மேல்தட்டு வர்க்கத்தின் அதாவது நில உடைமைச் சமூகத்தின் தெய்வமாக சிவனும், திருமாலும் சங்கப் பாடல்களில் வலம் வருகின்றனர். இதை,

> **"சமூகத்திலே தனி உடைமையும், ஆட்சி நிலைமையும் தோன்றிய போது தனிப்பட்ட இட்ட தெய்வங்களும், வகுப்புகளுக்கான தனிப்பட்ட தெய்வங்களும் உருப்பெற்றன. அந்த நிலையிலேயே சிவன், விஷ்ணு முதலிய தெய்வங்களும் சிறப்புறத் தொடங்கின."**[46]

என்னும் மேற்கோளும் வலியுறுத்துகிறது.

இதனை,

> **"ஆரிய வழக்கிலும் வேதகால முடிவிலேயே சிவன், விஷ்ணுவை, பிரம்மா முதலிய இட்ட தெய்வங்கள் சிறப்படைந்தன. பக்தி மார்க்கத்தின் தொடக்கத்தைக் காட்டுவதுபோல பகவத்கீதையில் கண்ணன் தனித் தெய்வமாக்கப்படுகின்றான். அதைப்போலவே சிவனும் கால கதியே தனக்கென ஒரு குலமுறை இணைக்கப்பெறுகின்றான், வேத வழக்கிற்குப் பிற்பட்ட இதிகாச புராண காலத்திலேயே சிவ, விஷ்ணு வழிபாடு சிறப்படைந்தது. எனவே தமிழ்நாட்டிலும் அவை பிந்திய காலத்தில் பெரு வழக்கடைந்தால் வியப்பில்லையல்லவா? வேத வழக்கிலே சிவன் முதன் முதலிலே உருத்திரனோடு ஒன்றாகப் பேசப்படுவதை நாம் காணலாம். நந்தி, நாகம் முதலியவற்றோடு (இவை ஆரியருக்கு முற்பட்ட குலங்களின் சின்னங்கள்) தொடர்பு படுத்தப்பட்டுச் சிவன் தோன்றும் போது பௌராணிக வழக்கு வளர்த்து விடுகிறது. இந்தக் காலப் பகுதிக்குரிய சிவ, விஷ்ணுவையே பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நாம் காண்கிறோம்."**[47]

என்னும் கலாநிதி கைலாசபதி அவர்களின் கருத்து தெளிவுபடுத்துகிறது. மேலும் அவர், சிவ, விஷ்ணு வழிபாடு அடித்தட்டு மக்களிடம் சென்றடையவில்லையென்றும் அதற்குரிய காரணத்தையும் பின்வருமாறு விளக்குகிறார்.

> **"சங்க இலக்கியங்கள் காட்டும் அக்கால பகுதியிலே சிவ, விஷ்ணு வழிபாடு மக்கள் மத்தியில் அவ்வளவு செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. இதற்கு காரணம் குலங்களாகவும், குடிகளாகவும் (Tribes and clans) மக்கள் வாழ்ந்த புராதனக் கூட்டுமுறை வாழ்க்கையிலே கொற்றவை, வேலன், வருணன் முதலிய தெய்வங்களே சிறப்புடையவையாயிருந்தன. பூசாரிகள், குருமார் எவருமின்றி மக்கள் பலியிடுதல், வெறியாடல் முதலிய முறைகளினால் தாமே கூட்டமாக வழிபடும் நிலையிலேயே சமுதாயக் கடவுளர் தேவையாயிருந்தனர்"[48]**

புராதனக் கூட்டுமுறை வாழ்க்கையிலே பெருந்தெய்வங்களின் தேவையில்லாமல் இருந்தது என்பதை விளக்குகிறார். மேலும் பெருந்தெய்வ உருவாக்க நில உடமைச் சமூகக் காலத்தில் உருவ வழிபாட்டிற்கு கொடுக்கும் முக்கியத்துவத்தைப் பின்வரும் மேற்கோள் விளக்குகிறது.

> **"நில உடமை எழுச்சிச் சூழலில் வேத மரபுச் சிந்தனைகளை, பல்வேறு பழங்குடி சமூகச் சிந்தனைகளுடன் அமைவுற முயற்சிகள் நடைபெற்ற வரலாற்றுக் காலக் கட்டத்தில் எழுந்தவை புராணங்களும், இதிகாசங்களும் ஆகும். இந்தச் சூழலில், கடவுள் என்ற கருத்துநிலை, இயற்கை கூறு என்ற மட்டத்திலோ, பேரறிவால் உணரத்தக்க புலன் கடந்த பொருள் என்ற மட்டத்திலோ மட்டும் அமைவது அக்கால தேவையை நிறைவு செய்வதாக இருக்க இயலாது. சுருங்கக் கூறின், கடவுள் என்பவர் கருத்துப் பொருள் என்ற நிலையிலிருந்து காட்சிப் பொருளாகவும், தொலைவில் எங்கோ இருப்பவர் அருகில் தேவையாயிற்று அத்துடன், பல்வேறு பிரதேச மக்களின் ஆழ்ந்த நம்பிக்கைகளுடன் இணைந்து நிலைபெற்றிட்ட தெய்வங்களை, வேத மரபில் ஏற்று, அவைகளுக்கு மதிப்பான ஓர் இடத்தை வழங்க வேண்டிய அவசியமும் இருந்தது"[49]**

இந்தக் கூற்று சங்க இலக்கிய வைதீக சமயப் பாடல்களுக்குப் போதிய விளக்கங்களைத் தருவதாக அமைகிறது. நிலவுடைமைச் சமூக அமைப்பு நிலை நிறுத்தப்படுவதற்குப் பெருந் தெய்வங்களின் தேவையையும், அது நாட்டில் நிலவும் பல்வேறு குலமுறைச் சிந்தனைகளையும் நம்பிக்கைகளையும் உள்வாங்க வேண்டும் என்பதையும் மிகச் சரியாகப் புரிந்து கொண்டு வேதமரபில் வந்த வைதீகர் அதை மிகச் சீரிய முறையில் தமிழகத்தில் செய்தனர். அதன் வெளிப்பாடுதான் 'மால்' விஷ்ணுவோடு இணைக்கப்படுவதும் சிவனின் குலமுறையாக முருகன், கொற்றவை இணைக்கப்படுவதுமாகும். அது மட்டுமின்றி கருத்துநிலைமயில் இருக்கும் கடவுளைக் காட்சி நிலைக்கு மாற்றும் வகையில் கடவுளின் உருவங்களை வருணித்து, அல்லது வகைப்படுத்தி, மக்கள் மனத்தில் பதியும் வகையில் பாடல்கள் இயற்றப்பட்டன. இதற்குப் புராணங்களும், இதிகாசங்களும் பயன்பட்டன. இதை மேற்கண்ட சங்கப் பாடல்களின் வழி நாம் கண்டோம். இந்த நிலவுடைமைச் சமூக அமைப்பிற்கு ஒரு தேசிய ஒருமைப்பாட்டைக் கொடுத்தவர்கள் வேதமரபில் வந்த ஆரியர்கள் என்றால் அது மிகையாகாது. மேலும் வளர்ந்து வந்த சமண, பௌத்த சமயங்களுக்கான எதிர் வினையும் இதில் உள்ளடங்கி இருக்கின்றன என்பது இனி வரும் இயல்களில் சொல்லப்படுகிறது. தொடக்கத்தில் ஆரிய வைதீக மரபிற்கும், தமிழ் மரபிற்கும் ஏற்பட்ட மோதல் இறுதியில் உடமைச் சமூக அமைப்பில் ஒரு பொதுத் தன்மைக்கு வந்ததை,

**"ஏற்று வலன் உயரிய எரிமருள் அவிர்சடை**

**மாற்றரும் கணிச்சி மணி மிடற்றோனும்**

..................................................................

**கூற்று ஒத்தியே"**[50]

என்பது உணர்த்துகிறது.

அதாவது, காளைக் கொடியை வலமாகப் பிடித்தவனும், தீப்போல விளங்கும் சடையுடையவனும், எதிரிடுவதற்கு அரிய மழுப்படை உடையவனும் ஆகிய சிவபெருமானும், கடலில் வளரும் சங்கு போன்ற வெண்ணிற உடலையும் வலிய கலப்பையையும், பனைக்கொடியையும் உடைய பலதேவனும், கழுவப்பட்ட நீலமணி போலும் நிறத்தையும், ஓங்கிய கருடக் கொடியையும் உடைய கண்ணனும், நீலமணிபோலும் மயில் கொடியை உடைய உறுதியான வெற்றிக் கொண்ட பிணிமுகம் என்னும் யானையை உடைய ஒளிமிக்க முருகனும் என உலகம் காக்கும் வலிமையும், அழியாப் புகழும் உடையவர் நால்வர் ஆவர் என்ற புறநானூற்றுப்பாடல் தமிழ் மரபிற்கும், வேத வைதீக மரபிற்கும் ஒரு சமரசத்

தன்மையையும், சமயப் பொறைத்தன்மையையும் உருவாக்கும் முன்மொழிதலாக இப்பாடல் அமைகிறது. இந்த சமரசமும், பொறையுணர்வும் உருவாக நிலவுடமைச் சமூக அமைப்பு மட்டுமல்ல. கி.மு.மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் தமிழகத்தில் உட்புகுந்த சமண, பௌத்தம் வணிகத்தை முன்னிலைப்படுத்தி தம் தத்துவத்தால் வேரூன்றியதும் முக்கியக் காரணமாகும். வழிபாடுகளை மையமாகக் கொண்ட தமிழ்மரபும், வேத வைதீக மரபும் இணைய ஏதுவாகவும் இவையிரண்டும் வேளாண்மை உற்பத்தியைப் பின்னணியாகக் கொண்டதால் காலம் இவைகளை இணையைச் செய்தன.

**வைதீக சமயத்தினரின் தமிழக வருகை**

வேத வைதீக சமயத்தினர் முதன்முதலில் தமிழகம் வரும்போது நிலைபெற்றுவிட்ட நாகரிகத்தோடும் வேளாண்மை உற்பத்தியை மையமாகக் கொண்ட நில உடமைச் சமூக அமைப்பு இயங்கி வந்ததையும், அயல்நாடுகளில் வணிகத் தொடர்பும் கொண்டிருந்ததையும் காலத்தால் முந்திய சங்க இலக்கியப் பாடல்கள், தொல்காப்பியத் திணை மரபு போன்றவை எடுத்துக் காட்டுகின்றன. புராதன இனக்குழு அரசமைப்பு முடிவடைந்து பூர்வ குடிகளாக சேர, சோழ, பாண்டிய அரசுகள் தோற்றம் பெற்று இயங்கி வந்ததையும், அவற்றிற்கிடையே அவ்வப்போது மோதல்களும் நடைபெற்று வந்தன என்பதையும் அறிய முடிகிறது. வேத வைதீக சமயத்தினர் படிப்படியாகத் தமிழகத்திற்குப் புலம் பெயர்ந்து வந்தனர். இதனை,

> **"கி.மு.எட்டாம் நூற்றாண்டிலிருந்து தென்னிந்தியாவிலே தமிழ் மக்கள் சிறுசிறு கூட்டங்களாகப் பலதரப்பட்ட நாகரிக நிலையில் வாழத் தொடங்கிவிட்டனர் என நாம் கொள்ளலாம். கி.மு.ஐந்தாம் நூற்றாண்டு அளவில் மெல்ல மெல்ல ஆரிய மக்களுடையத் தொடர்பு தமிழ் மக்களுக்கு ஏற்படலாயிற்று"**[51]

என்ற கூற்றின் மூலம் அறிய முடிகிறது.

இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் சங்க இலக்கியங்கள் பழம் தொல் மரபுச் சின்னங்களைத் தாங்கி நிற்கின்றன. அதாவது வேட்டைச் சமூகத்தை நினைவுப்படுத்தும் தாய் வழிச் சமுதாய கொற்றவை தெய்வம், இனக்குழு சமூகத்தின் இறுதிவடிவமாய் விளங்கும் முருகக் குறியீடு, கால்நடை வளர்ப்பு விவசாயத் தொடக்கம் போன்றவற்றின் குறியீடாய் விளங்கும் மால் தெய்வம் போன்றவை வேத வைதீகக் கலப்பில்லாத தமிழ்மரபின் தனித்தன்மையைப் பறைசாற்றி நிற்கின்றன. மேலும், அன்றைய சூழலில் நிலவி வந்த நம்பிக்கைகள், சடங்குகள், பண்பாட்டுச் சிந்தனைகள் வேத வைதீக சமயத்தைச் சாராத

தமிழ் மரபின் தனித்துப் பண்புகளோடு விளங்குவதைக் காணமுடிகிறது. தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டில் குறிப்பிடப்படும் வெட்சி-குறிஞ்சித் திணைகளில் குறிப்பிடப்படும் ஒழுக்க நிலை, வாழ்நிலை என்பது வேறு எந்தப் பண்பாட்டோடும் கலக்காத வேட்டைச் சமூக, இனக்குழு சமூகத்தை விளக்கும் துறைகளைக் கொண்டு விளங்குகின்றன. அடுத்து வருகின்ற வஞ்சி, முல்லைத் திணைகள் குடும்பம், சொத்து, அரசு அமைப்புத் தோற்றத்தை விளக்கும் திணைகளாக நிற்கின்றன. இந்தத் திணைகளின் வழி அறியப்படும் சங்கப் பாடல்களில் வேத வைதீகத்தின் தாக்கம் எதுவும் காணப்படவில்லை. ஆகவே, வெட்சி-குறிஞ்சி, வஞ்சி-முல்லைத் திணைகள் தமிழர்களின் தனித்த நாகரிகத்தை விளக்கி நிற்கும் தொல் மரபுச் சின்னங்களாக விளங்குகின்றன. ஆனால் அதற்கு அடுத்து வருகின்ற உழிஞை மருதத்திணை வளர்ந்து விட்ட சமூக அமைப்பும், வேளாண்மை உற்பத்தியும் மேம்பட்ட காலச் சூழலை விளக்கும் திணைகளாக விளங்குகின்றன. சமூகத்தில் உழைப்பவன், பெருநிலக்கிழார் என்கிற ஏற்றத் தாழ்வுகளும், நிலவுடைமைச் சமூகத்தின் மூலம் கிடைத்த உபரி செல்வத்தால் பரத்தமை ஒழுக்கமும் மித மிஞ்சிக் கிடந்ததை மருதப் பாடல்களின் வழியும், செல்வத்தை நோக்கிய படையெடுப்பாக உழிஞைத் திணை விளங்குவதையும் அறிய முடியும். தொல்காப்பியம் இந்த உழிஞைத் திணையில் வேத வைதீகச் சமயத்தினரின் சோதிடக் கலையைக் குறிப்பதன் மூலம் இந்தக் காலம் தான் வேத வைதீகம் தமிழகத்தோடு தொடர்பு கொண்ட காலமென கொள்ளலாம்.

**"குடையும் வாளும் நாள்கோள் அன்றி"**[52]

குடைநாட்கோள், வாள்நாட்கோள் என்பது குடையும், வாழும் நன்னாள் பார்த்து முதற்கண் புறவீடு செய்தல், நாளும், கோளும் ஆய்ந்து அரசனுக்கு வெற்றியுண்டாகுமாறும், மக்கள் நலம் பேணுமாறும் ஆற்றுதல் என்ற பொருளில் வருகிறது. இந்த உழிஞைத் திணைக்குமுன் சொல்லப்பட்ட வெட்சி வஞ்சித் திணைகளில் சொல்லப்படாத நாளும், கோளும் பார்க்கும் முறை இந்த உழிஞை-மருதத் திணையில் வருவதால் வேத வைதீகர் வருகைக் காலம் இத்திணைகளில் காலம் என்பதை வரையறுக்க முடியும். மேலும் இதனை அடுத்தடுத்து வருகின்ற தும்பை, வாகைத் திணையில் வேத வைதீகச் சமயத்தினர் தமிழகம் முழுவதும் வியாப்பித்ததும், தம் மேலாதிக்கத்தை நிலை நிறுத்தியதும் தெள்ளத்தெளிவாகத் தொல்காப்பியத் திணைமரபு விளக்குகிறது. வாகையின் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு என்று சமணம், பௌத்தத் தாக்கத்தைக் கொண்டு வரையறை செய்யலாம். இக்காலத்தில்தான் சிவ, விஷ்ணு வழிபாடு மேல்தட்டு வர்க்கத்திடம் பிரசித்துப் பெற்று விளங்கியதைச் சங்க இலக்கியப்பாடல் வழி அறிய முடிகிறது. மேலும் கி.மு.ஆறு, ஏழாம்

நூற்றாண்டு வாக்கில் வடக்கே வேத வைதீகத்தோடு உடன்படாத சமண, பௌத்த சமயங்கள் உருவானதால் அவற்றின் எழுச்சியும், சமூகத்தில் அவை ஏற்படுத்திய தாக்கமும் அதன் மூலம் உருவான புதிய வணிக வர்க்கத் தாக்கத்திலிருந்து வைதீகம் தன்னை நிலைநிறுத்திக் கொள்ள அவதாரங்கள் எடுப்பதை உபநிடதங்கள் ஏற்காவிட்டாலும் இதிகாச, புராணக் காலச்சூழல்களாலும், கருத்துப் பொருளாய் இருந்த கடவுள் காட்சிப் பொருளாய் ஆக்க வேண்டிய கட்டாயத்தினாலும் கண்ணனை மையமாக வைத்த அவதாரக் கடவுள் மூலம் கீதை என்னும் சமயக்கொள்கை உருவாக்கம் ஏற்பட்டது. வடக்கில் ஏற்பட்ட நெருக்கடியான இச்சூழலில்தான் வேத வைதீக சமயத்தினர் தென்னிந்தியா வரவேண்டிய சூழல் ஏற்படுகிறது. இந்தச் சூழல் கி.மு.ஆறு அல்லது ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தது ஆகும். மேலும் தென்னிந்திய தொல்மரபுச் சின்னங்கள் வைதீக சமயத்திற்குச் செழுமை அளிக்கும் வகையில் இருந்ததால் அவற்றை உள்வாங்கிக் கொண்டு வழிபாடு, சடங்கு, உலகைப் பற்றிய கருத்தியலோடு வளர்ச்சிப் பெற்றிருந்த வேத வைதீகம் இந்திய மண்ணில் ஒரு மாபெரும் சமயமாக உருவெடுத்துக் கொண்டது. இந்த மாற்றம் குப்தர் காலத்தில் மிக வேகமாக நடைபெற்றது என்பதை வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். இச்சூழல்தான் வேத வைதீக மரபும், தமிழ் மரபும் இணைய காரணமாக விளங்கின. அதனால்தான் திருமாலைக் காடுறை தெய்வமென்றும், திராவிடர்களின் நிறமாகிய கரியவன் என்பதையும் வேத வைதீகம் ஏற்றுக்கொள்கிறது. வைதீகம் இந்தியாவின் முன்னணி சமயமாக உருவாக வேதங்களும், உபநிடதங்களும், தமிழ்மரபும் பேருதவியாய் அமைந்தன. வேத வைதீக சமயத்தினரின் இயற்கைப் பற்றிய சிந்தனையும், வானவியல் அறிவுச் சிந்தனையும் மற்ற இடங்களில் தமது மேலாதிக்கத்தைச் செலுத்த பெரும் துணையாய் அமைந்தன.

> **"சிவனின் ஆலோசனைப்படியே கோள்களையும், அவற்றிற்குரிய ராசிகளையும் வகுத்தார்கள் என்னும் புராணக்கருத்தும் பெறப்பட்டது. இத்தகைய புராணக்கூறுகளை வெளிப்படுத்தும் போக்கும் சங்கப்பாடல்களில் காணப்படுகிறது"**[53]

என்னும் கருத்து ஆரிய வைதீகரின் மேலாதிக்கத்தை நிலைநிறுத்த சோதிடமும் பயன்பட்டது என்பதை அறிந்து கொள்ள இயலும்.

மேலும், முக்தி, கர்மவினைத் தொடர்ச்சி, மறுபிறவி, தியானம், மாய உலகம், மாய வாழ்க்கை போன்ற கருத்துக்கள் உருவாவதற்கு வேத சிந்தனைகள்தான் அடிப்படையாய் விளங்கின.

வேதத்திலிருந்து தோன்றியவை கலைகள். அவற்றுள் சோதிடக் கலையும் ஒன்று. அப்பொழுது வானியலும், சோதிடமும் ஒன்றாயிருந்தன. அனுஷ்டான முறைகளை செய்வதற்கு நன்னாளைக் காணவும், ஆயுளை விருத்தி செய்யவும், கண்டுணரவும், கல்வி, தொழில், திருமணம் போன்றவற்றை அறியவும் சோதிட சாத்திரம் ஏற்பட்டது என ரிக் வேதம் கூறுகிறது.

**"வள்ளற்றன்மை பெற்ற மகன் வேண்டின் பூச நட்சத்திரத்தில் அக்னி ஆகாயம் என்ற சடங்கைச் செய்து கொள்ள வேண்டும். பெண் கணவனின் அன்பை முற்றும் பெற விரும்பினால் தகப்பன் அவனைச் சுவாதி நட்சத்திரத்தில் மனம் செய்விக்க வேண்டும். அதை நட்சத்திரத்தில் உழ வேண்டும் போன்ற செய்திகள் வேதங்களில் ஆங்காங்கே வருகின்றன"**[54]

இச்சோதிட சாத்திரத்தை வகுத்து நடத்தியவர்கள் சுவாயம்பிமனு, உத்தமன் மனு, தாமசமனு, ரைவதன் மனு என்று பதினான்கு மனுக்கள் என்று கூறப்படுகிறது. வேதத்தின் ஆறு பாகங்களில் ஒரு பாகமாக இந்தியாவில் பின்பற்றப்பட்டு வருகிறது. இது மகரிஷி பராசரரின் வழிமுறைப்படி இந்திய சோதிடம் அமைந்ததாகக் கூறப்படுகிறது. பராசரரின் வழித்தோன்றலாக வராக மிரர், பட்டோத்பவர், வெங்கடேசர் போன்றோர் எனக் கருதப்படுகிறது. இதில் குப்தர் காலத்தில் வாழ்ந்த ஆரிய பட்டன் என்பவர்தான் உலகத்திலேயே முதன்முதலில் 'பஞ்சாங்கம்' போடும் முறையைக் கண்டறிந்து, முதல் பஞ்சாங்கத்தை வெளியிட்டார். வானசாஸ்திரம், பஞ்சாங்கம் போன்ற துறைகளுக்கு ஆரியபட்டர் ஒரு வழிக்காட்டியாக இருந்ததனால் தான் இந்தியா பறக்கவிட்ட முதன்முதல் விண்வெளி கப்பலுக்கு ஆரியப்பட்டா என்ற பெயர் சூட்டப்பட்டது. இந்த குப்தர் காலத்தில் தென்னிந்தியாவிற்கு வந்த வைதீக சமயத்தினரின் வானசாஸ்திரம், பஞ்சாங்கம் போன்றவற்றின் தாக்கத்தால்தான் உழிஞைத் திணையில் குடைநாட்கோள், வாள் நாட்கோள் போன்ற துறைகள் தோன்ற காரணமாயிருந்தன. மேலும் வானவியல், சோதிடக்கலைக்கு சொந்தக்காரர்கள் வேத வைதீகர்கள் என்று சொல்லிவிட முடியாது ஏனெனில்,

**"பழங்காலத்தில் நாகரிக வளர்ச்சியில் சிறப்புற்றோங்கியிருந்த கலாச்சார இனங்களில் பாபிலோனியா, மெசபடோமியா, சால்டிய முதலியன குறிப்பிடத்தக்கவை. சோதிடநூலும், அதனால் வானநூலின் தோற்றமும் அங்குதான் தொடங்கின என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றன"**[55]

**"இவ்விடத்திலிருந்து சோதிடவியலானது மேற்கு முகமாக எகிப்து, கிரேக்கம், உரோம் போன்ற நகரங்களுக்கும், கிழக்கே இந்தியா, சீனா போன்ற நாடுகளுக்கும் மற்றும் ஐரோப்பியக் கண்டத்திற்கும் பரவியதாக வரலாற்றுச் செய்திகள் எடுத்தியம்புகின்றன"**[56]

என்ற கருத்துக்களின் மூலம் சோதிடக்கலை உலகம் முழுவதும் பல இடங்களில் தோன்றியிருந்தாலும் அதனை முழுவதுமாய் வேத வைதீக சமயத்தினர் சுவீகரித்துக் கொண்டு சோதிட இயலுக்கும், வான சாஸ்த்திரத்திற்கும், இந்திய மண்ணில் முன்னோடிகளாய் விளங்கினர் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது.

## பண்டைத் தமிழகத்தில் வேதவைதீகர்

பிரபஞ்சத் தோற்றக் கருத்துக்கள், இயற்கை வழிபட்டச் சிந்தனைகள், பஞ்சபூதங்களைப் பற்றிய அறிவு, மனிதப்பிறப்பு, இறப்பு, பிறப்புக்கு முன்னும், பிறப்புக்குப் பின்னும் கர்மவினை, யோகம், தவம், வேள்வி, வீடுபேறு போன்ற முன்னணிச் சிந்தனைகளோடு தமிழகத்திற்கு வந்த வேத வைதீகர்களுக்கு மன்னர்கள் மத்தியிலும், மேல்தட்டு செல்வந்தர்கள் மத்தியிலும், பெருநிலக் கிழார்கள் மத்தியிலும் சிறப்பும், மரியாதையும் கிடைத்தன. அந்த நன்மதிப்பு அவர்கள் தங்கள் மேலாதிக்கத்தை நிலைநிறுத்த ஒரு வழிகோலாய் அமைந்தது. தொடக்கக் காலத்தில் தமிழர்கள் மத்தியில் வேத வைதீகரைப் பற்றியப் பார்வை வியப்பு அளிப்பவர்களாகவும் தோற்றமளித்ததை சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியலாம்.

**"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்"**[57]

அந்தணர் வேதத்தை நன்கு பயின்றவர்கள் அதனால் அவர்கள் அறத்தை விரும்பும் கோட்பாட்டினை உடைய நான்மறை முதல்வர் என்று சிறப்பிக்கப் பெறுவர் என்று புறநானூற்றுப் பாடல் சிறப்பித்துக் கூறுகிறது. அதேபோல்,

**"அறுதொழில் அந்தணர் அறம்புரிந் துஎடுத்த**

**தீயொடு விளங்கும் நாடன்"**[58]

அறுவகைத் தொழிலைச் செய்தவர்கள் அந்தணர். அந்த அந்தணர் அறம் விரும்பி வளர்த்த தீயுடன் விளங்கும் நாட்டையுடையவன் என்று புறநானூற்றில் குறிக்கப்படுகின்றனர்.

மேலும்,

**"அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்**

**முத்தீ விளக்கில் துஞ்சும்"**[59]

என்ற புறநானூற்றுப்பாடல், மாலையில் முக்கோல் கொண்ட அந்தணர்கள் செய்யும் அரிய கடமையாகிய வேள்வித் தீயின் ஒளியில் உறங்கும் என்று வேள்வித் தீ அந்தணர் வளர்த்தலை குறிக்கிறது.

**"கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு**

**அருங்கலம் நீரொடு சிதறிப் பெருந்தகை"**[60]

என்ற பாடல் நல்ல பல நூல்களைக் கேட்டு அறிவு முதிர்ந்த வேள்வி செய்யும் அந்தணர்களுக்கு அரிய அணிகலன்களை நீர்வார்த்துத் தந்து என்ற பொருளில் வருகிறது. மன்னர்களிடையே வேத வைதீகர்கள் எவ்வாறு நன்மதிப்பைப் பெற்றிருந்தனர் என்பதை இப்பாடல் குறித்து நிற்கிறது.

**"ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப் பூவும் பொன்னும்**

**புலால்படச் சொரிந்து"**[61]

என்ற பாடல் பொருள் வேண்டி இருந்து நின்ற பார்ப்பனருக்கு அவர்களுடைய கை நிறையும்படி பொற்காசும், பொற்பூவும், நீருடன் அட்டிக்கொடுப்பவர் என்று புறநானூற்றுப் பாடலில் ஔவையார் குறிப்பிடுகிறார். மேலும்

**"பார்ப்பன மகனே பார்ப் பன மகனே**

**செம்பூ முருககி னன்னார் களைந்து**

**தண்டொடு பிடித்த தாழ்மண் டலத்துப்**

**படிவ வுண்டிப் பார்ப்பன மகனே"**[62]

என்ற அகநானூற்றுப் பாடல், செம்மையாகிய பூவையையுடைய முருக்கின் நல்லப் பட்டையை நீக்கிவிட்டு, அதன் தண்டோடு ஏந்திய தாழ்கின்ற கரகத்தையும், விரத உணவையிமுடைய பார்ப்பன மகனே என்று வேத வைதீகரின் வாழ்வியலை குறுந்தொகை விளக்கி நிற்கிறது. மேலும் காலத்தால் முந்திய குறுந்தொகை போன்ற நூல்களில் வேத வைதீகரை 'பார்ப்பனன்' என்று அழைக்கப்பட்டதும் பின் வேத வைதீகரின் மேலாதிக்கம் ஏற்பட்ட பிறகு 'அந்தணன்' என்ற சிறப்புப் பெயரோடு விளங்குவதையும் பாடல்களின் வழி அறியலாம்.

மேலும் அவர்கள் வாழும் இடங்களை,

**"ஆசி றெருவி னாயில் வியன்கடைச்**

**செந்நெ ல்மலை வெண்மை வெள்ளிழு**

**தோரிற் பிச்சை யார மாந்தி"**[63]

வேத வைதீகர் வாழும் தெரு சுத்தமாகவும், குற்றமற்றும் இருக்கும். நாய்கள் இல்லாத அகன்ற வாயிலை உடையதாக விளங்கும். அங்கே செந்நெற்சோற்று உருண்டைகளும், மிக வெள்ளிய நெய்யும் கிடைக்கும் என்று வளமோடும், செல்வச் செழிப்போடும் வாழ்ந்தனர் என்பதை இக்குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது. அவ்வாறு தமிழக மக்களால் தூரத்துப் பார்வைகளாய் பார்த்தப் பார்வை இனிவரும் பத்துப்பாட்டுப் பாடல்களால் அவர்கள் தமிழர்களோடு நெருங்கிய உறவுகள் கொண்டவர்களாக விளங்குவதைக் காணலாம்.

**"சிறந்த வேதம் விளங்கப் பாடி**

**விழுச்சீ ரெய்திய வொழுக்கமொடு புணர்ந்து**

**......................................................................**

**குன்றுகுயின் நன்ன வந்தணர் பள்ளியும்"**[64]

இப்பாடலின் பொருள் வேதங்களைப் பாடுவர், பயன்தரத்தக்க மிகச் சிறந்த யாகங்கள் முதலியவற்றைச் செய்வர். நான்கு வகையில் அமைந்த நிலத்தை உடைய இவ்வுலகத்தே தாம் ஒப்பற்றவராகத் திகழ்ந்து, உயர்ந்த நிலைமையை உடைய தேவருலகை இவ்வுலகிலே நின்று சேருவர். தரும வழியிலிருந்து பிறழாதவர், எல்லா உயிர்களிடத்தும் அன்பு பொருந்திய நெஞ்சு உடையவர், பெருமையுடன் இனிதாக வாழ்பவர் என்று வேத வைதீகச் சமயத்தினரின் பண்புகளைச் சிறப்பித்துக் கூறும் பாடல் வரிகளாக மதுரைக்காஞ்சி கூறுகிறது. அந்தணருக்குரிய ஆறு தொழில்களையும், அவர்கள் அணியும் பூணூலையினையும், அவர்கள் பின்பற்றும் முத்தீ வேள்வியையும் திருமுருகாற்றுப்படை, தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

**"இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது**

**இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி**

**........................................................**

**நாவியன் மருங்கின் நவிலப்பாடி"**[65]

தமக்கென அமைந்த ஆறு தொழிலையும் தவறாது இயற்றும் இருபிறப்பாளர் திருவேரகத்தில் உள்ளனர். அவரின் தாய், தந்தையர் மரபு சிறப்புடையது. அவர் பழமையும், உயர்ச்சியும் வாய்ந்த குடிப்பிறந்தவர். நாற்பத்தெட்டு ஆண்டுகள் நிறைந்த நல்லமையை விதிமுறையில் கழித்தவர்கள்; வேதங்களைத் தவறாது ஓதுபவர்கள்;. முத்தீயை முறையொடு பேணிப் புகழ் பெறுபவர்கள்;. ஒன்பது இழைகளைக் கொண்ட முப்புரி நூல் அணிபவர்கள். குறித்தக் காலத்திலே வழிபடும் வாய்மை உள்ளவர்கள். சுத்தமான தோய்த்த உடையை உடம்பிலே உயர அணிபவர்கள். கைகளைக் கூப்பிக் கடவுளை வணங்குபவர்கள். அமைதியாக ஆறு எழுத்தை உச்சரிப்பவர்கள் என்று அவர்களின் பண்புநலன்களை புகழ்ந்தும், அவர்களின் வேள்விச் சடங்குகளை உயர்த்திப் பேசுவதையும் திருமுருகாற்றுப்படையில் காண முடிகிறது.

**"செழுங்கன் றியாத்த சிறுதாட் பந்தர்ப்**

**பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்**

**.............................................**

**மறைகாப் பாள குறைபதி"**[66]

என்ற பெரும்பாணாற்றுப் படை பாடல்வரிகள் அந்தணர் வாழும் ஊரைப்பற்றி காட்சிப்படுத்துகிறது. அதாவது சிறிய மரத்தூண்களைக் கொண்ட குடிகளில் பசுக்கள் கட்டப்பட்டுளளன. அவ்வூரிலுள்ள வீடுகள் யாவும் சாணத்தினால் மெழுகப்பட்டிருக்கின்றன. அவ்வீடுகளில் பல உருவங்கள் உண்டு. அவற்றைச் சுற்றியுள்ள இடங்களில் கோழிகளும், நாய்களும் காணப்படாது. வளைந்த வாய்களை உடைய கிளிகளுக்கும் வேதங்களைப் பயிற்றுவிக்கும் வேதக்காப்பாளர்கள் அவ்வீடுகளில் உறைவர் என்று வருகிறது. மேற்கண்ட பாடல்களின் மூலம் வேத வைதீகர்; பத்துப்பாட்டு வெளிவந்த காலத்தில் மற்றவர்களைவிட தம்மை உயர்ந்த குடிகளாகவும், தனித்தப்பண்பு நலன்களைக் கொண்டவர்களாகவும் கருதி ஒரு பண்பட்ட சமூகத்தினராய்த் தங்களை வெளிப்படுத்திக் கொண்டதையும் அதனைச் தமிழ்ச் சமூகம் ஏற்றுக் கொண்ட போக்கையும் காணமுடிகிறது.

இதனூடே வைதீக முனிவர்களைப்பற்றிய குறிப்புகளும் சங்கப் பாடல்களில் வருகின்றன. அதாவது,

**"செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்**

**களிறுதரு விறகின் வேட்கும்"**[67]

என வைதீக முனிவர்கள் அணையாத தீயை வளர்த்து, வெண்கோட்டையுடைய யானைகள் கொண்டு விறகினால் வேள்விச் சடங்குகளைச் செய்வர் என்ற குறிப்பு பெரும்பாணாற்றுப் படையில் வருகிறது.

**"தவப்பள்ளித் தாழ்காவி**

**னவிர்சடை முனிவ ரங்கி வேட்டு**

**மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம்**

**மாயிரும் பெடையோ டிரியல் போகி"**[68]

அந்தணர்ப்பள்ளியில் இருக்கும் அவிர்சடை முனிவர்கள் உருவாக்கும் தீயிலிருந்து மேலெழும் புகையினால் பறவைகள் சோலையை விட்டுப் பறக்கும் என்று பட்டினப்பாலைக் குறிப்பிடுகிறது மேலும்,

**"கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்**

**முக்கோல லசைநிலை கடுப்ப"**[69]

எனக் கல்லிலே துவைத்துக் முக்கோலில் காயப்போடப்பட்ட பார்ப்பானின் ஆடை அசைவதை முல்லைப்பாட்டுக் குறிக்கிறது.

**"சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு**

**வலம்புரி புரையும் வானரை முடியினர்**

**....................................................................**

**துணியில் காட்சி முனிவர்"**[70]

என்ற திருமுருகாற்றுப்பாடல் வரிகள் முனிவர்களின் நடை, உடை, பண்பு, ஆகியவற்றைப்பற்றி விரிவாகக் கூறுகிறது. பெருமை பொருந்திய முனிவர் மரவுரியை உடுத்தியிருக்கின்றனர். அவர்களுடைய வெளுத்த நரைமுடி வலம்புரிச் சங்கை ஒத்திருக்கும் உறுப்புகள் யாவும் மாசின்றி விளங்குகின்றன. அவர்கள் அடிக்கடி உண்ணா விரதம் மேற்கொள்வார்கள். அவர்கள் வெறுப்பும், செற்றம் ஆகியவற்றை நீக்கிய உள்ளத்தினர். கற்றோரும் விரைவில் அறிய முடியாத உண்மைகளை உணரும் ஆற்றல் உடையவர் அறிவிற் சிறந்து விளங்குபவர்கள். விருப்பு வெறுப்பிற்கு ஆட்பாடாமல் நல்லறிவு படைத்தவர்கள். துன்பத்தை அமைதியாகப் பொறுப்பவர்கள் வஞ்சனை இல்லாத உள்ளத்தினர் என்று

முனிவர்களின் பண்பினை விளக்கி வருணிக்கிறது. முனிவர்களின் தியாகத்தை விளக்கும் வகையில்,

**"நிலமிசை வாழ்ந ரலமர நீரத்**

**தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்**

**காலுணவாகச் சுடரொடு கொட்டும்**

**அவிர்சடை முனிவர்"**[71]

பூமியின் மேல் உயிர் வாழ்வார்க்குச் சுழற்சி நீங்கும் பொருட்டு சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தினை தாம் பொறுத்து, காற்றை உணவாகக் கொண்டு அச்சுடருடனே சூழ வரும் விளங்கிய உடையவரென வேத முனிவர்களின் தியாக உள்ளத்தை விளக்கில் புறநானூறு கூறுகிறது. மேற்கண்ட சங்கப் பாடல்வரிகளின் மூலம் வேத வைதீகச் சமயத்தினர் தமிழகத்தில் எவ்வாறு கலந்தனர். தமிழக மக்களால் அவர்கள் எவ்வாறு வியப்போடும் மதிப்போடும் அங்கீகரிக்கப்பட்டனர் என்பதைக் காட்டும் காட்சிப் பிம்பமாக விளங்குகின்றன இக்கருத்தை வலியுறுத்தும் வகையில்,

**"இவர்கள் தமிழ் மக்களோடு தமிழ் மக்களாய்க் கலந்து ஒன்றிவிட்டனர். தங்கள் கொள்கைகளினாலும், ஆசாரங்களினாலும், கலைப் பண்பாட்டினாலும் தமிழ் மக்களை வசீகரித்து விட்டனர். தங்கள் சமயத்தைத் தமிழ் நிலத்தில் ஒன்றாக வேரூன்றச் செய்தனர்"**[72]

என்ற பேராசிரியர் வையாபுரி பிள்ளையின் கூற்று மெய்மைப்படுத்தும் வகையில் மேற்கண்ட சங்கப் பாடல்கள் விளங்குகின்றன.

### வைதீக சமயத்தினரின் நம்பிக்கைகளும் வழிபாட்டு முறைகளும்

வேத வைதீகச் சமயத்தினர் தமிழகத்திற்கு வந்த பிறகு பெரும்பாலும் நகரங்களிலேயே வாழ்ந்தனர். அதனால் அவர்களிடமிருந்த நம்பிக்கைகளும், வழிபாட்டு முறைகளும் அப்போது வாழ்ந்த பொருளாதாரத்தால் உயர்ந்திருந்த மேல்தட்டு வர்க்கத்திடமும், மன்னர்களிடமும் சிறப்புற்று விளங்கின என்பதைச் சங்கப் பாடல்கள் விளம்புகின்றன. பொருளாதரத்தில் பின்தங்கிய மக்கள் தமிழரின் தொல்மரபு நம்பிக்கைகளையும், வழிபாட்டு முறைகளையும் தொடர்ந்து பின்பற்றி வந்தனர் என்பதையும்

சங்கப்பாடல்கள் விளக்குகின்றன. உலகத்தைக் குறித்த வைதீக தத்துவக் கருத்துக்கள் தமிழ்நாட்டில் புகுந்தமைக்குப் பெரும்பாணாற்றுப் படையில் சான்று உள்ளது.

**"நாவலந் தண்பொழில்"[73]**

என்று அது உலகத்தைக் கூறுகின்றது. வேள்வி செய்து வழிபடும் முறையை,

**"ஆறுதொழி லந்தண ரறம்புரிந் தெடுத்த**

**தீயொடு விளங்கு நாடன்"[74]**

என்னும் புறநானூற்றுப் பாடலில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் சிறப்பிக்கும் எரிக்காட்டூர்த்தாயங்கண்ணனார் அவனுடைய நாட்டில் எங்கும் வேள்வி நடத்தியதைக் குறிப்பிடுகின்றார்.

**"நெய்ம்மலி யாவதி பொங்கப் பன்மாண்**

**வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி**

**யூபம் நட்ட வியன்களம் பலகொல்"[75]**

பாண்டிய மன்னன் ஒருவன் பல்யாகச் சாலைகள் அமைத்து வேள்வியைப் போற்றி வளர்த்தான். அதனால் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பட்டப் பெயர் அவனுக்கமைந்தது. அவனைப் பாராட்டிப் பாடிய நெட்டிமையார் பல மாட்சியமைக்கப்பட்ட கெடாத தலைமையை உடைய யாகங்களை முடித்து, தூண்கள் நடப்பெற்ற அகன்ற வேள்விச் சாலைகள் பல கொல் என வினவுகின்றார். இதிலிருந்து அவன் பல யாகங்கள் செய்தது புலனாகும்.

**"அறம் அறக்கண்ட நெறிமாண் அவையத்து**

**முறை நற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த**

**……………………………………………………**

**வேத வேள்வித் தொழில் முடித்த தூஉம்"[76]**

சோழன் கரிகாற்பெருவளத்தான் செய்த வேள்விகளைக் கருங்குழலாதனார், அறத்தைத் தெளிய உணர்ந்த ஒழுக்கம், மாட்சிமைக்கப்பட்ட அந்தணரது அவைக் களத்தின் கண் வேள்விக்குரிய முறைமையை முன்னின்று காட்டினர். பலராலும் புகழப்பட்ட தூய இயல்பு பொருந்திய கற்பொழுக்கத்தை உடைய குற்றந் தீர்ந்த குல மகளிர் சூழ்ந்து நின்றனர். வட்டமாகிய வடிவினையுடைய பலபடையாற் செய்யப்பட்ட மதில்கள் வேள்விச்

சாலையைச் சூழ்ந்திருந்தன. அச்சாலையுள் பருந்து வடிவமாகச் செய்யப்பட்ட இடத்தில், யூபமாகிய நெடிய கம்பத்தை நாட்டி, வேள்வியைச் செய்து முடித்தான் கரிகாலன் என்று குறிப்பிடுகிறார். மேலும் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் செய்த வேள்வியைச் சிறப்பித்து ஆவூர் மூலங்கிழார் பாடிய பாட்டில் வேள்வி செய்யும் முறைகள் மிக விரிவாகத் தரப்பட்டுள்ளன.

**"காடு என்றா நாடு என்றாங்கு**

**ஈரேழின் இடமுட்டாது**

**நீர் நாணப் பலவேட்கும்**

**மண் நாணப் புகழ்பரப்பியும்**

**அருங்கடிப் பெருங்காலை**

**விருந்துற்றநின் திருந்துருந்து நிலை**

**என்றும்.........."**[77]

விண்ணந்தாயன் தன் மனைவியரோடு கூடி வேள்வி செய்வதற்கு வேண்டிய தோல் உடையை அணிந்து அம்மகளிர் துணைபுரிய வேள்வி செய்தார். அவ்வேள்வியில் நீர் நாணும்படி நெய் சொரிந்தான், வேள்வியின் பெருவிருந்து நிகழ்ந்தது. இவ்வாறு அவன் செய்தன எண்ணில் அடங்காதவை. எண்ணிக்கையில்லாத பல வேள்விகளைச் செய்து மண் முழுவதும் புகழ் பரப்பினார் என்று இவனைப் புலவர் பெருமக்கள் பாடுவர், சேரமன்னன் பெருஞ்சேரல் இரும்பொறை

**"கேள்வி கேட்டுப் படிவம் ஒடியாது**

**வேள்வி வேட்டனை உயர்ந்தோர் உவப்பச்**

**.......................................................**

**வீறுசால் புதல்வன் பெற்றனை"**[78]

யாகம் செய்வதற்குரிய விதிகளைக் கேட்டு, விரதம் மேற்கொண்டு, தன் கற்புக்கரசியோடு வேள்வி செய்தான். இதன் பயனாக அவன் வயிற்றிலிருந்த குழந்தை கருவிலிருந்தே அரசுத் துறைக்கு வேண்டுவன எல்லாவற்றையும் பெற்று நல்ல அறிவோடு விளங்கியது என்று பதிற்றுப்பத்து கூறுவதன் மூலம் வேத வைதீகச் சமயத்தினரின் நம்பிக்கைகளை தமிழ் மன்னர்கள் ஏற்றுப் பூண்டனர் என்பது தெளிவாகிறது. மேலும் வேத வைதீக சமயத்தினர் நகரங்களில் சிறப்புற்று விளங்கினர் என்பதைக் காட்டும் முகமாக,

**"அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியு**

**நல்லானொடு பகடோம்பிய**

**நான் மறையோர் புகழ் பரப்பியும்"[79]**

தேவர்களைப் போற்றியும், யாகங்களின் மூலம் தேவர்களுக்குப் பலியிட்டும், நல்ல பசுக்களோடு, எருதுகளைக் காப்பாற்றியும் நான்கு வேதங்களையும் பரவும்படி செய்தனர். உழவுத்தொழிலை விரும்புகின்ற உழவர்களாகிய வேளாளர்கள் என்று வருவதன் மூலம் பெருநிலக் கிழார்களும், வைதீக சமயத்தினரும் நகரத்தில் கைகோத்து வைதீக சமயத்தினரைப் போற்றினர் என்பது புலனாகும். இவ்வாறு வேள்விகள் செய்து வைதீகத்தை வளர்த்த வேத வைதீகர்களுக்கு நகரங்களிலும், பெருநிலக்கிழார்களிடையேயும், மன்னர்களிடையேயும் செல்வாக்கு அதிகரித்தது. அந்த செல்வாக்கே தமிழக மன்னர்களைக் கட்டுப்படுத்தும் ஆயுதமாக எழுந்ததைப் பின்வரும் சங்கப் பாடல் வரிகள் விளக்குகின்றன.

**"இறைஞ்சுக பெருமநின் சென்னி, சிறந்த**

**நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே"[80]**

அரசனின் முடி சிறந்த நான்கு மறைகளில் வல்ல அந்தணர்களின் வாழ்த்தும் கைகளை வணங்குவதாக என்று காரிக்கிழார் புறநானூற்றில் பாடுகிறார். இதைப்போல்

**"கடல்கொளப்படாஅது உடலுநர் ஊக்கார்**

**கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே**

**அழல்புறந் தரும் அந்தண ரதுவே"[81]**

கடலாலும் கொள்ளப்படாது, பகைவரும் துணிந்து வாரார். வீரக்கழல் அணிந்த சிறந்த அடியையுடைய காரியே நின்நாடு, வேள்வித் தீயைக் காக்கும் அந்தணருடையது என்று கபிலர் மலையமான் திருமுடிக்காரியிடம் பாடுகிறார்.

**"............... ஆறு புரிந் தொழுகும்**

**அறம்புரி யந்தணர் வழிமொழிந் தொழுகி"[82]**

ஓதலும், வேட்டலும் இவற்றை பிறரைச் செய்வித்தலும், ஈதலும், ஏற்றதும் என்று சொல்லப்படும் அந்தணர்குரியவான ஆறு ஒழுக்கங்களைப் புரிந்தவராக ஒழுகி வருகின்ற, அறத்தோடு பட்டவையே விரும்பிச் செய்யும் அந்தணர்களது சொல்லுக்கு 'அவ்விதமே' என்று

கூறி அவ்வாறே நடந்து கொள்வாய் என்று கட்டளையிட்டுச் சொல்வது போல் பதிற்றுப்பத்தில் வருகிறது. அதுமட்டுமின்றி

**"பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே"[83]**

அறுவகைப்பட்ட ஒழுக்கங்களையும் பேணி வாழ்தலை உடையவரான பார்ப்பார்க்கு அல்லாது பிறருக்கு பணிதலை நீதான் என்றுமே அறிந்ததில்லை என்ற பாடல் வரிகள் மூலம் வேத வைதீகச் சமயத்தினர் மன்னர்களிடையே ஆதிக்கம் செலுத்தும் அளவிற்கும், அவர்களைக் கட்டுப்படுத்தும் அளவிற்கும் வளர்ச்சிப்பெற்று நின்றதை மேற்கண்ட சங்கப் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

**மன்னர்களிடம் தானம் பெறுதல்**

பண்டைத் தமிழகத்தில் வைதீக சமயத்தினர் காலப்போக்கில் தமிழக அரசர்களுக்கு சோதிடக்கலை நிபுணராகவும், யாகம் வளர்த்து வேள்வி செய்யும் புரோகிதர்களாகவும், மந்திரிகளாகவும் இடம் பெற்றனர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கண்ணனார் பத்துப் பாடல்களால் புகழ்ந்து பாடினார். அவை 'புண்ணுமிழ் குருதி' முதலாக 'அட்டு மலர் மார்' ஈறாக பத்துப்பாடல்களாகும். அது,

**"பெருவிரல் மூதூர்த் தந்து பிறர்க் குதவி**
**அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்றாள்**
**இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனைக்**
**குமட்டூர் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு"[84]**

என வருவதாகும். அதைக் கேட்டு மகிழ்ந்த அம்மன்னன் குமட்டூர் கண்ணனார் அந்தணர் என்பதால் அவருக்குப் பிரமதாயமாக நிலம் வழங்கியதாக அறிய முடிகிறது. அதாவது உம்பற்காட்டுப் பகுதியிலுள்ள ஐந்நூறு ஊர்களைத் தானமாக வழங்கினான். அத்துடன் முப்பத்தெட்டு ஆண்டுகள் தென்னாட்டு வருவாயில் பங்கும் கொடுத்தான் என்ற செய்தி வருகிறது. அதேபோல் காப்பியாற்றுக் காப்பியனார், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலை சிறப்பித்துப் பாடிய நான்காம் பத்திற்காக நாற்பது நூறாயிரம் பொன் கொடுத்து, தான் ஆள்வதில் பங்கும் கொடுத்தான் என்று குறிப்பு வருகிறது. அதே போல் செல்வக்கடுங்கோடு வாழியாதனைக் கபிலர் சிறுபுறமென நூறாயிரம் காணம் பெற்று நன்றா என்னும் குன்றேறி நின்று, அரசன் கண்ணில் கண்ட நாடெல்லாம் கவனம் பெற்றார் என்ற குறிப்பும் வருகிறது.

அதேபோல பகைவரை வென்று, பல நாடுகளைக் கைப்பற்றி, பல யாகங்களைச் செய்து, பேரரசனாக விளங்கிய பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதி தன்னுடைய யாகங்களைச் செய்து வைத்த தன் புரோகிதனாகிய கொற்கைக் கிழான் கொற்றன் என்றும் அந்தணருக்கு வேள்விக்குடி என்னும் ஊரைத் தானங்கொடுத்தான் என்னும் செய்தியைச் செப்பேட்டுச் சாசனம் மூலம் மயிலை சீனி.வேங்கடசாமி எடுத்துக்காட்டுகிறார்.

> **"கொல்யானை பல ஓட்டிக் கூடா மன்னர் குழாத் தவிர்த்த பல்யானை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய திராசனாக மா மலர்ச்சோலை நளிர் சினைமிசை வண்டலம்பும் பாகனூர்க் கூற்றமென்றும் பழனக் கிடக்கை நீர் நாட்டுக் சொற்கணாளர் சொல்லப்பட்ட ஸ்மிருதி மார்க்கம் பிழையாத கொற்கை கிழானற் கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்க கேள்வி அந்தணர் முன்பு கேட்க என்றெடுத்துரைத்து வேள்வி சாலை முன்பு நின்று வேள்விகுடி என்றப் படியைச் சீரோடு திருவளரச் செய்தார், வேந்தன் பொழுதேய நீரோட்டிக் கொடுத்தமையா ணீடு புக்தி துய்த்தபின்"**[85]

மேற்சொன்ன மேற்கோள்களில் சில கூற்றுகள் மிகைப்படுத்தப்பட்டதாகத் தோன்றினாலும் வேத வைதீக சமயத்தினர் பிரமதேயமாக பல நிலங்களையும், ஊர்களையும் தமது வேள்வி முறைகளாலும், வழிபாட்டு முறைகளினாலும், சோதிட அறிவாலும் தானமாகப் பெற்றனர் என்பது உறுதியாகிறது. இவ்வாறு அவர்கள் தானம் பெற்றதன் மூலம் தமிழகத்தில் இருந்த வேளாள பெருநிலக்கிழார்களுக்கு நிகராக வைதீக சமயத்தினரும் பெரும் நிலக்கிழார் ஆயினர். ஒரு சிலர் சிறு அரசுகளுக்கு அரசர்களாகவும் விளங்கினர். இச்சூழலிலேயே சிவ, விஷ்ணு வழிபாடு பெருநிலக் கிழார்களுக்கும், மன்னர்களுக்கும் ஏற்ற வழிபாடாக வளர்ச்சி பெற்றன. மேலும் வேளாள, வேத வைதீக பெருநிலக்கிழார்கள் வேளாண்மை உற்பத்தியைப் பின்புலமாகக்கொண்டு விளங்கியதால் அவர்கள் சார்ந்த வைதீக சமயம் வேளாண்மை உற்பத்தியை, மேலாதிக்கத்தை முன்னிலைப்படுத்தும் சமயமாக விளங்கியது.

## வைதீக படைக்கு எதிரான போர்

வேள்விகள் மூலமும், நிமித்தங்கள் மூலமும் மன்னர்களின் உள்ளத்தைக் கவர்ந்தும், வழிபாட்டு மூலமாகவும், சடங்குகள் மூலமாகவும் தமிழ் மண்ணின் மைந்தர்களாகிவிட்ட வைதீக சமயத்தினர் ஒருபுறம் இருக்க, மறுபுறம் இவர்களைப் பின்பற்றி வந்த மேலும் பெருந்திரளான வைதீகர்கள் தமிழகத்தைக் கைப்பற்றும் நோக்கோடு வந்ததையும், அவர்களைத் தமிழக மன்னர்கள் முறியடித்த வரலாறும் சங்கப்பாடல்களில் வருகின்றன. சோழ நாட்டிலிருந்த வல்லம் என்னும் ஊர்க்கோட்டையின் மேல் ஆரியப்படை படையெடுத்து வந்து முற்றுகையிட்டபோது, சோழ அரசன் அந்த ஆரியப் படையுடன் போர் செய்து வென்று துரத்தினான் என்று,

**"................ வென்வேல்**

**மாரியம்பின் மழைத்தோல் சோழர்**

**வில்லீண்டு இறும்பின் வல்லத்துப் புறமினை**

**ஆரியர் படையின் கூடைக"**[86]

அகநானூறு பாடல் கூறுகிறது.

முள்ளூர் நாட்டின் தலைநகரமான முள்ளூர்க் கோட்டை மேல் இன்னொரு ஆரியப்படை வந்து முற்றுகையிட்டபோது அந்நாட்டு மன்னனாகிய மலையமான் அந்தப் படையை வென்று ஓட்டினான் என்று,

**"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்**

**பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது**

**ஒருவேற்கு ஓடி யாங்கு"**[87]

என்னும் வரிகள் கூறுகின்றன.

அதேபோல்,

**"ஆரியம் அலறத் தாக்கிப் பேரிசைத்**

**தொன்றுமுதிர் வடவரை வணங்கு விற்பொறித்து"**[88]

என்பதும் குறிக்கத்தக்கது.

இதில் குறிக்கப்படும் ஆரியர் என்பது ஆரியப்படையாகும். வென்ற அரசன் பெயரைக் கூறாமல் ஆரியர் என்று பொதுவாகக் குறிப்பிடுகிறது, இந்த அகநானூற்றுப்பாடல். பாண்டிய நாட்டின் தலைநகரமான மதுரையின் மேல் ஒரு ஆரியப்படை வந்து போர் செய்தபோது பாண்டியன் நெடுஞ்செழியன் அப்படையுடன் போர் செய்து வென்றான் என்றும் அதனால் அப்பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று பெயர் பெற்றான் என்று சங்கப்பாடல் வழி அறிய முடிகிறது. இவ்வாறு சங்கப் பாடல்களில் ஆரியப்படை, தமிழகத்திற்கு வந்து போர் செய்ததை அறியலாகிறது. இதன் மூலம் தமிழகத்தைக் கைப்பற்றி ஆளும் நோக்கமும் அன்றைய வைதீகரிடையே இருந்தது என்பதும் புலனாகிறது.

**நால் வருண பாகுபாடு**

நால் வருண பாகுபாடு வேத சமயத்தினரின் ரிக் வேதத்திலேயே தொடங்கிவிட்டது என்றும், அது மனித குண இயல்புகளை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்டது என்றும் ஆய்வாளர்கள் கூறுகிறார்கள்.

> **"வருணங்கள் பிராமண, ஷத்திரிய, வைசிய, சூத்திர என நான்கு வகையெனப் பண்டையோர் பிரித்தனர். வர்ண தருமத்தின் முளை ரிக் வேதத்திலேயே உள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மனித குண இயல்பினை, சத்துவ, ராஜஸ, தமோ ஆகிய பிரிவுகளாகக் கண்டு இதனடிப்படையில் நாலுவர்ணத்தைப் பிரித்தனர். ஆனால் பின்னாளில் குண இயல்பை வர்ணம் பிரதிபலிக்கவில்லை. மாறாக பிறப்பே வர்ணத்தைத் தீர்மானித்தது. பிராமணன் மகன் பிராமணனாகவும், சூத்திரன்மகன் சூத்திரனாகவும் கருதப்பட்டு நடத்தப்பட்டனர். ஆளும் வர்க்கமான ஷத்திரியர்களும் ஆள்வோரை அண்டி வாழும் பிராமண வர்க்கமும் வர்ண தருமத்தை மிகக் கெட்டியாகச் சமூகத்தில், தன் மேலாண்மைத் தன்மையை நிறுவிக்கொண்டது"**[89]

என்பது அதற்கான ஒரு சான்றாகும்.

இதன்வழி கீதை உருவான காலத்திலும், மனுதர்மம் தோன்றிய காலத்திலும் குண இயல்பைக் கொண்டு பிரிக்கப்பட்ட வருண பாகுபாடு; பிறப்பு அடிப்படையிலான பாகுபாடாக

மாற்றப்பட்டது என்பது அறிய முடிகிறது. இப்பிரிவு ஆள்பவர்களுக்கும், அவர்களை அண்டி இருப்பவர்களுக்கும் ஏதுவாக மிகவும் பயன்பட்டது என்பதும் புலனாகும்.

**தமிழகத்தில் சாதி பாகுபாடு**

தமிழகத்தில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு மூவேந்தர்களின் மோதல் உச்சம் அடைந்த காலமாகும். சமண, பௌத்த சமயத் தாக்கங்கள் பெருமளவில் ஏற்பட்டதால் அதனைத் தடுக்கவும், வேத வைதீகம் தன் மேலாதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்கும் பெருநிலக்கிழார்களான வேளாளரோடும், மன்னரோடும் வைதீகர் இறுகக் கைக்கோர்த்துக் கொண்ட காலம் அது. இந்தக் காலத்தைத்தான் தொல்காப்பியர் வாகைத்திணை என்று வரையறுக்கிறார்,

**"வாகைதானே பாலையது புறனே**

**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**

**பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப"**[90]

என்னும் நூற்பா கேடில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்குள்ள இயல்பினை வேறுபட மிகுதிப்படுத்துதல் என்று கூறுகிறார். இது வைதீக சமயக் கொள்கைக்கும், சமண, பௌத்த கொள்கைக்கும் தமிழகத்தில் ஏற்பட்ட முரண்பாட்டை எடுத்துக் கூறுவதாகத் தோன்றுகிறது. இந்தக் காலச் சூழல்தான் நால்வருணப் பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டு தமிழகத்திற்கு ஏற்றவாறு சாதிப் பாகுபாடு வலுப்படுத்தப்பட்டது. இதனை,

**"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்**

**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**

………………………………………………………

**நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்"**[91]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

சமூகத்தில் மன்னர்களைவிட முன்னணி நிலைக்கு வந்துவிட்ட வேத வைதீகருக்கு ஆறு வகையான ஒழுக்க நிலைகள் கூறப்படுகிறது. வேதம் ஓதுதல், ஓதுவித்தல், வேள்வி செய்தல், வேள்வி செய்வித்தல், பிறர்க்குத் தானம் செய்தல், பிறர் செய்யும் தானங்களை ஏற்றல் என்றும், அரசர்க்குரிய ஐந்து ஒழுக்கங்களாக வேதம் ஓதுதல், வேள்வி செய்தல், தானம் செய்தல், படை வழங்குதல், மக்களைப் பாதுகாத்தல் என்றும், வணிகர்க்கு உரிய

ஆறு ஒழுக்கங்களாக வேதம் ஓதுதல், வேள்வி புரிதல், ஈதல், உழவு செய்தல், வணிகம் செய்தல், நிரை பாதுகாத்தல் என்றும், வேளாளர்களுக்கு உரிய ஆறு ஒழுக்கங்களாக உழவு செய்தல், உழவு ஒழிந்த ஏனைய தொழில் புரிதல், விருந்தோம்புதல், பகடு, எருது, புறந்தருதல், வழிபாடு, வேதம் ஒழிந்த கல்வி பெறுதல் என்று தொல்காப்பியம் வரையறுக்கிறது. இந்த ஒழுக்க நிலைப் பிரிவுகளில் வேத வைதீகர், மன்னர், வணிகர் என்று இந்த மூன்று பிரிவினருக்கும் மட்டும் வேதம் ஓதுதல் வேள்வி செய்தல் ஒதுக்கப்படுகிறது. வேளாளருக்கு அவ்வுரிமை வழங்கப்படவில்லை ஏனைய வைதீகரும், வணிகர்களும் வடக்கிருந்து வந்தவர்கள் என்பதாலும், அதில் வணிகர்கள் வைசிய வருணத்திலிருந்து வந்தவர்கள் என்பதாலும், மேலும் அவர்கள் வைதீகத்தோடு உடன்படாத சமயங்களைத் தாங்கி வந்தவர்கள் என்பதாலும், வேதங்களை அறிந்தவர்கள் என்பதாலும் அரசனோடு, வணிகருக்கும் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. வேளாளர்கள் உள்ளிட்ட தமிழர்கள் பெரு நிலக்கிழார்களாய் இருந்தாலும் வேத வைதீக வருணாசிரமப்படி சூத்திரர்கள் என்பதால் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் உரிமை வழங்கப்படவில்லை என்பது தெரிகிறது. இதை உறுதிப்படுத்தும் வகையில் அகத்திணையில் பிரிவின் தன்மைகளை உணர்த்த வந்த தொல்காப்பியர்

**“உயர்ந்தோர்க்கு உரிய ஓத்தினான்”**[92]

ஒத்து என்பது வேதத்தை உணர்த்தும். வணிகர் வேதம் கற்றல் பொருட்டாக பிரிவு கொள்வதால் மூவருணத்தினராகிய அந்தணர், அரசர், வணிகர், ஆகியவர்கள் வேதம் ஓதுவதற்கு உரியவர்கள் என்பது கூறப்பட்டது. வேளாளர் வேதம் ஓதுதலிலிருந்து விலக்கப் பட்டமையாகவும், வேளாளார் என்போரை உழுவித்து உண்போர் எனவும் இருவகையாகப் பிரிந்து உழுவித்து உண்ணும் வேளாளர் உயர்ந்தோர் எனக் கொண்டு வேதம் ஓதுதல் புரிவர் என்று உரையாசிரியர்கள் உரைநலம் காண்பர், இதன் மூலம் உழைத்து உண்ணும் உழைப்பாளர்களும், அவர்களைச் சார்ந்த தொழில் பிரிவு வர்க்கங்கள் இருந்தன என்பதும் இவர்களின் உழைப்பில் சுரண்டி வாழ்ந்த பெருநிலக்கிழார் வேளாளர்கள் சங்ககால நில உடமைச் சமூக அமைப்பில் வர்க்கப் பிரிவுகளாக இருந்தனர். இந்த வர்க்கப்பிரிவை மேலும் வலுப்படுத்த சாதிய வர்க்கமாக உருமாற வைதீகத்தின் நால்வருண பாகுபாடு அமைந்தது. தமிழகத்தில் சாதிய வர்க்கம் உருவாக, வேளாள பெருநிலக்கிழார்கள், வைதீகர்கள், மன்னர்கள் என்ற நில உடமைச் சமூக அமைப்பில் வர்க்கப் பிரிவுகளாக இருந்தனர். இந்த வர்க்கப் பிரிவை மேலும் வலுப்படுத்த சாதிய வர்க்கமாக உருமாற வைதீகத்தின் நால்வருண பாகுபாடு அமைந்தது. தமிழகத்தில் சாதிய வர்க்கம் உருவாக வேளாள பெருங்கிழார்கள்,

வைதீகர்கள், மன்னர்கள் என்ற நில உடமைச் சமூகத்தில் மேல் தட்டு வாக்கம் முக்கிய காரணிகளாக இருந்திருக்கின்றன. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில்,

> **"கொலைபுலை நீக்கமாட்டாராய் அறவொழுக்கத்திற் றாழ்ந்து நிற்போரான மற்றைத் தமிழ்க் குடிகளைத் தமது உழவுத் தொழிலுக்கும் தமக்கும் உதவியாகும் பல கைத்தொழில்களைப் புரியும்படி ஏவி, அவர்களை பதினென் வகுப்பினராவர் பிரித்து வைத்தவர்களும் வேளாளர்களேயாவர், அப்பதினென் வகுப்பினராவர், கைக்கோளர், தச்சர், கொல்லர், கம்மாளர், தட்டார், கன்னார், செக்கார், மருத்துவர், குயவர், வண்ணார், துன்னர், ஓவியர், பாணர், கூத்தர், நாவிதர், சங்கறுப்பாளர், பாகர், பறையர் என்பவரேயாவர்"**[93]

என்ற மறைமலையடிகள் கூற்று அமைகிறது. இதன் மூலம் நிலவுடைமைச் சமூக அமைப்பில் இருந்த வர்க்கப்பிரிவை சாதிய வர்க்கப் பிரிவாக மாறுவதற்கும், இறுக்கமடைவதற்கும் தமிழகத்து பெருநிலக்கிழார்களாகிய வேளாளர்களும், மன்னர்களும், வைதீகரும் முன்னிலை வகித்தனர் என்பது உறுதியாகிறது. மேலும் இன்று கூட வேளாளர்கள் சமூகம் வாழும் கிராமங்களில் ஒவ்வொரு வேளாளக் குடிக்கும், வண்ணான்குடி, தச்சன் குடி, குயவர் குடி, பறையர்குடி, என்று சேவகம் செய்வதைக் காணமுடியும். இது சங்ககால நடைமுறையில் வந்த எச்சங்களாகும். மேலும் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் வேளாளர்களுக்கு மறுக்கப்பட்ட காரணத்தினால் அதிலிருந்து கிளர்ந்தெழுந்த உத்வேகம்தான் தென்னகத்தில் பின்னாளில் சைவ சித்தாந்தமும், உபயவேதாந்தமும் உருவாகக் காரணமாக அமைந்தது என்று கருதத்தோன்றுகிறது.

மேலும் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைக் குறித்து நிற்கும் வாகைத் திணையில் அந்தணர் ஆதிக்கத்தைக் குறிக்கும் வகையில் 'எழுவகைத் தொகை உரைத்தல்' முதலில் வருகிறது. அதன் பின் அதே திணையில் சமண, பௌத்த தாக்கத்தைக் குறிக்கும் வகையில் அறத்துறைப் பற்றிய ஒன்பது துறைகள் வருகின்றன. தொல்காப்பியர் வாகையைக் குறிக்கும் போது, 'தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப் பாடுபட மிகுதிபடுத்தல்' என்கிறார். இது இந்த வைதீக, சமண, பௌத்த சமயங்களின் கொள்கை முரண்பாட்டைத்தான் குறிக்கிறது என்பதும் புரியும்.

**நிலையாமையைப் பற்றிய வைதீகக் கருத்து**

வட இந்தியச் சமயங்கள் அனைத்தும் நிலையாமையை எடுத்துக் கூறுகின்றன. அதிலும் சமணத்திலும், பௌத்தத்திலும் நிலையாமைச் சிறப்பிடம் பெறுகிறது. எனினும்,

> **"நிலையாமைக் கொள்கையை ஓரளவு வற்புறுத்தி, பிராமணர், வேள்வி முதலியன செய்வதால் மனோரதங்களை நிறைவேற்றலாம். அமைவதற்குரியவற்றை அடையலாம் என்னும் கொள்கையுடைய வராயிருந்தனர்"**[94]

என்ற பேராசிரியர் ஆ.வேலுப்பிள்ளை அவர்கள் கூற்றுப்படி வைதீக சமயத்தினர் பெரிய அளவிற்கு நிலையாமையைத் தமிழகத்தில் வற்புறுத்தவில்லை என்பது தெரிய வருகிறது.

நிலையாமையை வற்புறுத்தி அதற்குப் பரிகாரமாக பிராமணரை ஆதரித்தால் நல்வினைக் கிடைக்கும் என்னும் பொருள்பட,

> **"கார் எதிர் உருமின் உரறிக்கல் என**
>
> **ஆர் உயிர்க்கு அலமரும் ஆராக் கூற்றம்,**
>
> **...................................விரகினானே"**[95]

என்றும் வரிகள் அமைகின்றன. அதாவது, 'கார் காலத்துத் தோன்றும் கடியைப் போல் விரைந்து தோன்றி ஆரவாரத்துடன் அரிய உயிர்களைக் கொல்வதற்குச் சுழலும் கூற்றமே, உன் வருகைக்கு அஞ்சான், நல்ல பல நூல்களைக் கேட்டு அறிவு முதிர்ந்த வேள்வி செய்யும் அந்தணர்க்கு அரிய அணிகலங்களை நீர்வார்த்துத் தந்து பெருந்தக்கது எனின் சிறந்த இரவலர்க்கு வழங்குபவன்............ எனினும் நிலையாமையை உணராதவன் அல்லன், ஆதலால் நிலைத்தல் இல்லாத உலகியல்பை நீ எடுத்துரைத்தல் வேண்டுவதில்லை. தலைமை சான்ற அவன் இளம் பருவத்திலேயே முழுதுணர்ந்த கேள்விச் செல்வன். பேரறிவினன்' என்று புறநானூற்றுப் பாடலில் கயமனார் கூற்றத்திற்கு எதிராகக் கூக்குரலிடுகிறார். வேள்விகள் செய்தால் நிலையாமையை நினைத்து அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை என்னும் பொருள் படவும், நிலையாமையை வலிந்து கூறும் பௌத்தத்திற்கு பதில் உரையாகவும் பின்வரும் பாடல் அமைகிறது.

**"ஆறு ணர்ந்த ஒரு முதுநூல்**

**இகல் கண்டோர் மிகல் சாய்மார்**

**..........................................................**

**உரைசாய் சிறப்பின் உரவோர் மருக"[96]**

ஆவூர் மூலங்கிழார் சோழநாட்டு பூஞ்சாற்றூர் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தானைப் பாடும்போது நான்கு பிரிவுடைய ஆறு சங்கத்தாலும் அறியப்பட்ட ஒரு படி நெறிக்கு மாறுப்பட்டவற்றைக் கண்டோர் செருக்கை அழிக்க விரும்பி, அவரது மெய்போன்ற பொய்யை உணர்ந்து, அப்பொய்யை மெய்யென்று கொள்ளாது மெய்யைக் கொண்டு இருபத்தொரு துறைகளையும் குறைவில்லாமல் செய்து முடித்த உயர்ந்தோர் வழியில் வந்தவனே என்று சிறப்பித்துப் பாடுவதன் மூலம் வைதீகம், நிலையாமைக்கும், ஊழ்வினைக்கும் அவ்வளவு முக்கியம் தரவில்லை என்பதும் வளர்ந்து வரும் சமண, பௌத்த சமயங்களுக்கு எதிரான கருத்தாக்கமாகவும் மேற்கண்ட பாடல் வரிகள் விளங்குகின்றன.

# தொகுப்புரை

தத்துவம் என்பதற்கு விளக்கம் சான்றுகள் வழி தரப்பட்டுள்ளது. தத்துவம் தோன்றக் காரணம் என்ன, அது கால மாற்றத்திற்கேற்ப எவ்வாறு தம்மை வடிவமைத்துக் கொள்கிறது என்பதும் விளக்கப்பட்டுள்ளது. சைவ சமயத்தின் தத்துவ விளக்கம், அது காஷ்மீர சைவம், வீர சைவம் என்கிற லிங்காயுதம், சைவ சித்தாந்தம் போன்ற பிரிவுகளாக வளர்ச்சியடைந்ததும் விளக்கப்பட்டுள்ளது. சிந்துவெளி நாகரிகத்தில்தான் சிவ வழிபாடு தோற்றம் பெறுகிறது என்றும், சிந்துவெளி நாகரிகத்திற்கும், தமிழகத்திற்கும் நேரடியான தொடர்பு இல்லாவிட்டாலும் நம்பிக்கைகள் அடிப்படையிலும், வழிபாட்டு முறையிலும், பண்பாட்டு அடிப்படையிலும் தொடர்பு உண்டு எனவும்; சிந்துவெளி நாகரிக வீழ்ச்சிகளுக்குப் பிறகு அதனுடைய லிங்க வழிபாடு, சிவ வழிபாடு, தாய்தெய்வ வழிபாடு போன்றவற்றை உள்வாங்கிக் கொண்டது வேதவைதீகம் எனவும் விளக்கப்பட்டுள்ளது. லிங்க வழிபாட்டைக் மறுக்கிற ரிக் வேதம், சிவனை மூன்றாம் தரக் கடவுளாக ஏற்றுக் கொள்வதும், சிவ வழிபாடு முதலில் ருத்திரன் வடிவத்திலும் பின் மெல்ல மெல்ல சிவ வடிவமாக வேதங்களில் மாற்றம் பெறுவதும் கொண்டு சிந்துவெளி நாகரிகத்தின் பண்பாட்டு விழுமியங்களை உள்வாங்கிக் கொண்டு சிவ, விஷ்ணு என்னும் பெருந்தெய்வ வழிபாடாக மாற்றமடைகிறது என்பது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

கி.மு.ஆறாம் நூற்றாண்டு காலத்தில் தமிழகம் வந்த வேத வைதீகர்கள் அவர்களின் மேலாதிக்கத்தை நிறுவவும், தமிழகத்தில் தங்களை நிலை நிறுத்திக் கொள்ளவும் சிந்துவெளி நாகரிகத்தோடு பண்பாட்டுத் தொடர்புடையவராக இருந்த தமிழர்களிடத்தில் சிவ வழிபாட்டையும், விஷ்ணு வழிபாட்டையும் முன்னெடுத்தனர் என்று விளக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் சிவ வழிபாடு பெரும்பான்மையாகச் சிறப்புப் பெறவில்லை என்பதையும், வேத வைதீகருக்குப் பிறகுதான் சிவ வழிபாடு தமிழகத்தில் தொடங்கியது என்பதும்; காலத்தால் முந்தைய சங்கப் பாடல்களில் சிவபெருமானின் உருவத்தை மக்கள் மனத்திற்குக் காட்சிப்படுத்தும் வகையிலும், உருவ வழிபாட்டை நிலைநிறுத்தும் வகையிலும் கருத்துக்கள் உரைக்கப்பட்டுள்ளன என்பதும் எடுத்தாளப்பட்டுள்ளது. வட இந்தியாவில் கீதையின் கிருஷ்ண வழிபாடு தோற்றத்திற்கும், தமிழகத்தின் உருவ வழிபாட்டுத் தோற்றத்திற்கும் தொடர்பு உண்டு என்பதும்; கடவுளை மறுக்கும் சமயங்களான சமணம், பௌத்தம் பெரும் வீச்சோடு வந்து தமிழகத்தில் தத்துவ ரீதியில் மாற்றத்தை ஏற்படுத்தியபோது அவற்றிலிருந்து தாக்குப்பிடிக்கவும், தங்களை நிலைநிறுத்திக் கொள்ளவும் வேத வைதீகர் உருவ வழிபாட்டை முன்னிலைப்படுத்தும் வகையில் சிவ, விஷ்ணு, முருகன்

உருவங்கள் முன்னிலைப்படுத்தப்பட்டன என்பதும் விளக்கப்பட்டுள்ளது. வைணவச் சமயத்தைப் பற்றிய அறிமுகத்தோடு அதன் தத்துவ விளக்கமும்; வேதகாலத்தின் இறுதிப் பகுதியிலும், உபநிடதக்கால தொடக்கத்திலும் சிவனைப்போலவே விஷ்ணுவும் சிறப்புத் தெய்வமாக உருவாகினார் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

வேதக்கால இறுதியில் இந்திரன், வருணன், பிரம்மா, அக்னி, வாயு போன்ற அனைத்தும் நாராயணன் வடிவங்கள் என்று தொகுத்ததை விளக்கப்பட்டுள்ளது. வேதங்களின் காலத்தை இரு பிரிவாகப் பிரித்து, ரிக் வேதம் கி.மு.1500 முதல் கி.மு.1000 வரை என்றும், மற்றைய வேதங்கள் கி.மு.1000 முதல் கி.மு.600 வரை என்றும் மேற்கோள்கள் மூலம் வரையறுக்கப்பட்டுள்ளது. ரிக் வேதமும் இனக்குழு சமூக அமைப்பிலிருந்தே தொடங்குகிறது என்றும், தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டு முறை ரிக் வேத காலத்திற்கும் பொருந்தும் என்றும் எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் திருமால் வழிபாடு குடும்பம், தனிச்சொத்து, அரசு தோற்றத்தை விளக்கும் முல்லைத் திணையில் தொடங்குவதையும், தொடக்கத்தில் மால் ‘மாயோன்’ என்று தமிழ்மரபோடு தனித்து இருந்த திருமால் வழிபாடு விஷ்ணு வழிபாடாக மாறக் காரணம் கூறப்பட்டுள்ளது. தொடக்க சங்கப் பாடல்களில் திருமாலின் உருவத்தை மக்கள் மனத்தில் பதிய வைக்கும் வகையில் உடல் உறுப்புகளையும், கையில் உள்ள கருவிகளையும், உடம்பில் அணியும் அணிகலன்களையும் காட்சிப்படுத்தும் நோக்கோடு தெய்வங்களின் உருவங்களை வருணிக்கும் பாடல்களாகவும் விளங்குவது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. நிலவுடமைச் சமூக அமைப்பு நிலை நிறுத்தப்படுவதற்குப் பெருந்தெய்வங்களின் தேவையையும், அது பல பகுதிகளில் நிலவும் குலமுறை வழிபாடுகளையும், சிந்தனைகளையும், நம்பிக்கைகளையும் உள்வாங்க வேண்டும் என்பதையும் மிகச் சரியாகப் புரிந்து கொண்ட வைதீகர்கள் அதை மிகக் கூரிய முறையில் தமிழகத்தில் செய்தது மேற்கோள்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளது. மேலும் கருத்து நிலையில் இருக்கும் கடவுளைக் காட்சி நிலைக்கு மாற்றும் வகையில் சிவ, விஷ்ணு தெய்வங்களில் உருவங்களை வருணித்து அல்லது வகைப்படுத்தி மக்கள் மனத்தில் பதியும் வகையில் பாடல்கள் இயற்றப்பட்டதும், இதற்கு புராணங்களும், இதிகாசங்களும் பயன்பட்டன என்றும் சங்கப்பாடல்களின் வழி எடுத்தாளப்பட்டுள்ளது. அன்றைய நிலவுடமைச் சமூக அமைப்பிற்கு வைதீகர் ஒரு தேசிய ஒருமைப்பாட்டைக் கொடுத்தனர் என்றும் வேத மரபிற்கும், தமிழ்மரபிற்கும் தொடக்கத்தில் மோதல் ஏற்பட்டாலும் உடமைச்சமூக அமைப்பின் காரணமாக நாளடைவில் அவை ஒரு பொதுத்தன்மைக்கு சமரசத்தோடு வந்தன என்பதும், இவைகள் பொதுத் தன்மைக்கு வருவதற்கான சமூகப்

பொருளியல் காரணிகள் அடுத்தடுத்த இயல்களில் விளக்கப்படுகின்றன. வைதீகர் தமிழகம் வந்தபொழுது தமிழர்கள் நிலைபெற்ற ஒரு நாகரிகத்தோடு வாழ்ந்தனர் என்றும்; கி.மு.எட்டாம் நூற்றாண்டிலிருந்து படிப்படியாக கி.மு.ஐந்து வரையில் மெல்ல மெல்ல வைதீகர்களின் தொடர்பு தமிழ் மக்களுக்கு ஏற்பட்டதென்றும் விளக்கப்பட்டுள்ளது. தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டு வரையறையின் அடிப்படையில் நோக்கும்போது உழிஞைத் திணையில் வைதீக சமயத்தினரின் சோதிடக் கலை குறிக்கப்படுவதன் மூலம் வைதீகர் தமிழகத்திற்கு வந்த காலம் கி.மு.ஐந்து அல்லது கி.மு.ஆறு அல்லது வாகைத் திணையின் காலம் என்று நிறுவப்படுகிறது. இதை நிறுவ வாகைத்திணைக்கு முன் வரும் திணைகளும் வைதீகத் தாக்கம் இல்லாமல் இருப்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. மேலும் உழிஞைத் திணைக்கு பின்வரும் திணையாகக் குறிப்பிடப்படும் வாகைத் திணையில் வைதீக சமயத்தினர் தமிழகம் முழுவதும் வியாபித்ததையும், தம் மேலாதிக்கத்தைச் செலுத்தியதையும் அத்திணையின் துறைகள் மூலம் விளக்கப்பட்டுள்ளது. வைதீகம் பண்டைய இந்தியாவின் முன்னணி சமயமாக உருவாக வேதங்களும், உபநிடதங்களும், தமிழ் வழிபாட்டு மரபும் பேருதவியாக அமைந்ததையும், வைதீகச் சமயத்தினரின் இயற்கைப்பற்றிய சிந்தனைகளும், வானவியல் அறிவுச் சிந்தனைகளும் மற்ற இடங்களில் தங்கள் மேலாதிக்கத்தைச் செலுத்த பெரும் துணையாய் அமைந்ததும் விளக்கப்பட்டுள்ளது. சோதிடக்கலை வேதத்தில் தொடங்குகிறது என்றும் ஆரியப்பட்டரின் உலகின் முதல் பஞ்சாங்கம் வெளிவந்ததைக் குறிப்பிட்டும் உலகில் பல மூலைகளிலிருந்தும் வந்த சோதிடக் கலையை வைதீகச் சமயத்தினர் உள் வாங்கிக் கொண்டு சோதிட இயலுக்கும், வான சாஸ்த்திரத்திற்கும் இந்தியாவில் முன்னோடிகளாய் விளங்கினர் என்றும் விளக்கப்பட்டுள்ளது. பிரபஞ்சத் தோற்றக் கருத்துக்கள், இயற்கை வழிப்பட்ட சிந்தனைகள், பஞ்ச பூதங்கள் பற்றிய அறிவு, மனித பிறப்பு, இறப்பு, கர்மவினை, யோகம், தவம், வேள்வி, வீடுபேறு போன்ற முன்னணிச் சிந்தனைகளோடு தமிழகத்திற்கு வந்த வைதீகர்கள் மன்னர்களின் மத்தியிலும், மேல்தட்டு செல்வந்தர்களின் மத்தியிலும், பெருநிலக்கிழார்களின் மத்தியிலும் செல்வாக்குப் பெற்று தம் மேலாதிக்கத்தை நிறுவியது விளக்கப்பட்டுள்ளது. தொடக்கத்தில் தமிழர்களிடத்தில் வைதீகர்கள் பற்றியப் பார்வை வியப்பு அளிப்பவர்களாகவும், புதிய சிந்தனை உடையவர்களாகவும் தோற்ற மளித்ததை சங்கப் பாடல்களின் வழி எடுத்தாளப்பட்டுள்ளது. தொடக்கத்தில் பார்ப்பனர் என்று குறிக்கப்பட்ட வைதீகர்கள் தமிழ்ச்சமூகத்தில் நன் மதிப்பும், மேலாதிக்கமும் வந்தபோது அந்தணர் என்று சிறப்புப் பெயரோடு விளங்கியது பாடல்களின் வழி சுட்டிக்’ காட்டப்பட்டுள்ளது. பத்துப்பாட்டு நூல்களின் காலத்தில், வைதீகர் மற்றவர்களைவிட தம்மை உயர்ந்த குடிகளாகவும், ஒரு பண்பட்ட சமூகமாக தங்களை

வெளிப்படுத்திக் கொண்டதையும் சங்கப் பாடல்களின் வழி விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு தமிழ்ச் சமூகத்தில் செல்வாக்குப் பெற்ற வைதீகர்கள் ஒரு கட்டத்தில் மன்னர்களையே கட்டுப்படுத்தும் அதிகாரத்தைப் பெற்றனர் என்பதைப் பாடல்களின் வழி விளக்கப்பட்டுள்ளது. சோதிடக் கலை நிபுணர்களாகவும், யாகம் வளர்த்து வேள்வி செய்யும் புரோகிதர்களாகவும், மந்திரிகளாகவும் விளங்கிய வைதீகர்கள் தமிழ் மன்னர்களிடம் பெற்ற தானத்தின் மூலம் அவர்கள் நிலவுடமையாளர்களாக மாறியதை சங்கப் பாடல்கள் வழியும், வரலாற்றுக் குறிப்புகள் வழியும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. சமயத்தொடர்பாக வந்த வைதீகரைத் தவிர்த்து தமிழகத்தைப் பிடித்து அரசாளும் நோக்கோடு வந்த ஆரியப்படைப் பற்றியும் அவர்களைத் தமிழக மன்னர்கள் எவ்வாறு வென்றனர் என்பதும் பாடல்களின் வழி எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. நால்வருண பாகுபாடு வேதத்தில் தொடங்கினாலும் அது மனித குண இயல்புகளின் அடிப்படையில் பிரிக்கப்பட்டது என்றும் கீதை உருவான காலத்தில்தான் குண இயல்பு பாகுபாடு பிறப்பு அடிப்படையிலான பாகுபாடாக மாற்றப்பட்டது என்றும் விளக்கப்பட்டுள்ளது. முன்னர் குறிப்பிட்ட வாகைத்திணையின் காலமாக உள்ள கி.மு.மூன்றாம் நூற்றாண்டு - கி.மு.ஐந்தாம் நூற்றாண்டு கால இடைவெளியில்தான் நால்வருணப் பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டு சாதிப் பாகுபாடு வலுப்படுத்தப்பட்டது என்றும், வாகைத் திணைதான் நால் வருணத்தார் செய்ய வேண்டிய ஒழுக்கங்களை பட்டியல் இடுகிறது என்பதையும் அதில் வைதீகர், மன்னர், வைசியர் தவிர மற்றவர் சூத்திரர் என்ற நிலை உருவாக்கப்பட்டதென்றும் விளக்கப்பட்டுள்ளது. வேளாளர்கள் எவ்வாறு சூத்திரர்கள் ஆனார்கள் என்றும் அதில் உழுவித்து உண்ணும் வேளாளர் எவ்வாறு சிறப்பு அங்கீகாரம் பெற்றார்கள் என்பதும் விளக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் வேளாள பெருநிலக்கிழார்கள், வைதீகர்கள், அரசர்கள் என்று நிலவுடமை சமூகத்தின் மேல் தட்டு வர்க்கம் சாதிய வர்க்கம் உருவாக முக்கியமான காரணிகளாக விளங்கின என்றும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. நிலையாமை, ஊழ்வினைக் கருத்துக்களுக்கு சங்க இலக்கியங்களில் வைதீகர் அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கவில்லை என்றும் வேள்விகள், பரிகாரங்கள் செய்வதன் மூலம் நம் தீவினைகளைக் போக்கிக் கொள்ளலாம் என்ற கருத்தாக்கத்தோடு விளங்கியதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அன்றைய சூழல் ஊழ்வினைக்கு எதிரான முற்போக்கு சிந்தனையாய் இது விளங்கியதும் விளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. ஆ.வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப.3.
2. மேலது, ப.5.
3. தமிழ்க் கலை களஞ்சியம், ப.452.
4. ஜார்ஸ் தாம்ஸன், சமயம் பற்றி, ப.7.
5. இ.எஸ்.டி, ஞானம், தத்துவ தரிசனங்கள், ப.viii.
6. தேவி பிரசாத் சட்டோபாத்யாயா, இந்தியத் தத்துவம் ஓர் அறிமுகம், ப.187.
7. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வு வழிபாடும், ப.1.
8. Sir John Marshall, Moheenjadaro and the Indus Civilization, Vol1.
9. மேலது.
10. டி.என்.ஜா, பண்டையக் கால இந்தியா, ப.42.
11. மா.ராசமாணிக்கனார், மொஹெஞ்சொதரோ அல்லது சிந்துவெளி நாகரிகம், ப.251.
12. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வு வழிபாடும், ப.4.
13. சிவஞான சித்தியார் பாடல்கள், ப.10.
14. கி.லட்சுமணன், இந்தியத் தத்துவ ஞானம், ப.156.
15. புறம்., 55: 4-6.
16. கலி., 104: 11-12.
17. மேலது, 150: 20-21.
18. புறம்., 91: 5-6.
19. மேலது, 55: 1-4.
20. மேலது, 166: 1-4.
21. மதுரைக்காஞ்சி, 453-455.
22. மலைபடுகடாம், 82-83.
23. முருகு., 151-154.
24. மேலது, 256.
25. அகம்., 181: 14-17.
26. இ.எஸ்.டி., செ.ஞானன், தத்துவ தரிசனங்கள், ப.15.
27. மேலது, ப.15.
28. மேலது, ப.31.
29. மேலது, ப.33.
30. சர்வபள்ளி ராதாகிருஷ்ணன், கீழைமேலை நாடுகளின் மெய்ப்பொருள் இயல் வரலாறு, ப.41.
31. டி.என்.ஜா, பண்டையக்கால இந்தியா, ப.49.
32. இ.எஸ்.டி, செ.ஞானன், தத்துவ தரிசனங்கள், ப.31.

33. டி.என்.ஜா, பண்டையக்கால இந்தியா, ப.54.
34. புறம்., 56: 5-6.
35. மேலது, 58: 15.
36. மேலது, 198: 9.
37. நற்., 32: 1.
38. முல்லை., 1-3.
39. பதிற்., 31: 7-9.
40. புறம்., 174: 1-5.
41. பெரும்பாண்., 371-373.
42. மேலது, 402-403.
43. மேலது, 29-30.
44. மதுரை., 461-466.
45. மேலது, 590-591.
46. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப:14.
47. மேலது, ப:14.
48. மேலது, ப:14.
49. நா.சுப்பிரமணியன், கௌசல்யா, இந்தியச் சிந்தனை மரபு, ப.48.
50. புறம்., 56: 1-11.
51. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.7.
52. தொல்.பொருள்., 69.
53. முனைவர்.ப.அனுராதா, சங்கப்பேழை, ப.112.
54. டாக்டர் தி.மகாலட்சமி, சோதிட இயல், ப.26.
55. வே.தமயந்திரன், ஜோதிடம் அறிவியலா, ப.40.
56. டாக்டர் தி.மகாலட்சுமி, சோதிட இயல், ப.18.
57. புறம்., 93: 7.
58. மேலது, 397: 20-21.
59. மேலது, 2: 22-23.
60. மேலது, 361: 4-5.
61. மேலது, 367: 4-5.
62. குறுந்., 156: 1-5.
63. மேலது, 277: 1-3.
64. மதுரைக்காஞ்சி, 468-474.
65. முருகு., 177-187.
66. பெரும்பாண்., 296-300.
67. மேலது, 498-499.

68. பட்டினப்பாலை, 53-56.
69. முல்லை., 37-38.
70. முருகு., 126-137.
71. புறம்., 43: 1-4.
72. பேரா.எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காவிய காலம், ப.70.
73. பெரும்பாணாற்றுப்படை, 465.
74. புறம்., 397: 20-21.
75. மேலது, 15: 19-21.
76. மேலது, 224: 4-9.
77. மேலது, 166: 19-26.
78. பதிற்., 74: 1-21.
79. பட்டின.: 200-202.
80. புறம்., 6; 19-20.
81. மேலது, 122; 1-3.
82. பதிற்., 24: 7-8.
83. மேலது, 63: 1.
84. மேலது, இரண்டாம் பத்து.
85. Krishna Sastri. H.Rao Bahadur, Epigraphia indica and Record of the archaeological survey of india, Vol.XVII, P.291-309.
86. அகம்., 336, 19-22.
87. நற்., 170: 6-8.
88. அகம்., 396: 16-17.
89. இ.எஸ்.டி, செ.ஞானன், தத்துவ தரிசனங்கள், ப.73.
90. தொல்.பொருள், 73.
91. மேலது, 74.
92. மேலது, 33.
93. மறைமலையடிகள், வேளாளர் நாகரிகம், பக்.14-15.
94. பேரா.ஆ.வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப.21.
95. புறம்., 361: 1-23.
96. மேலது, 166: 4-9.

**சமணம் ஓர் அறிமுகம்**

இந்திய தத்துவக் கொள்கைகளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். வேதங்களுக்கு உடன்பட்ட தத்துவங்கள் வைதீகம் என்றும், வேதங்களோடு முழுமையாய் உடன் படாத தத்துவங்களை அவைதீகம் என்றும் பெயரிட்டு அழைப்பர். உலகாயதம், சமணம், பௌத்தம் போன்ற இத்தத்துவங்களின் வேதங்களை முழுமையாய் ஒத்துக் கொள்வதில்லை. எனவே இவற்றை அவைதீகம் என்ற பிரிவில் அடக்குவர். இதில் சமண சமயம், ஜைனசமயம், ஆருகத சமயம், நிகண்ட சமயம், அநேகாந்தவாத சமயம், ஸியாக்வாத சமயம் என்ற பெயர்களோடு விளங்குகிறது. சமணர் என்றால் (ஸ்ரமணர்) என்றால் துறவிகள் என்பது பொருள். துறவை வற்புறுத்திக்கூறி துறவு பூண்டோரே வீடு பெறுவர் என்று சமண சமயம் கூறுகிறது. எனவே, துறவு எனப் பொருள்படும் சமணம் என்னும் பெயர் இந்த சமயத்திற்குச் சிறப்புப் பெயரால் வழங்கப்படுகிறது.

சமண சமயக் கொள்கைகளை அவ்வப்போது உலகத்திலே பரவச் செய்வதன் பொருட்டுத் 'தீர்த்தங்கரர்கள்' என்னும் பெரியார்கள் அவ்வப்போது தோன்றுகின்றார்கள் என்பது சமண சமயக் கொள்கை. இதுவரை இருபத்து நான்கு 'தீர்த்தங்கரர்கள்' தோன்றியுள்ளார்கள் என்பதும், இனியும் இருபத்து நான்கு 'தீர்த்தங்கரர்கள்' தோன்றப் போகிறார்கள் என்பது சமண சமயத்தின் நம்பிக்கையாகும். விருஷபதேவர் தொடங்கி வர்த்தமான மகாவீரர் வரை இருபத்து நான்கு 'தீர்த்தங்கரர்கள்' தோன்றியுள்ளனர். இதில் இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரராகிய பார்சுவநாதர் சமண சமயத்தை உண்டாக்கினார் என்றும், அவருக்குப்பின் வந்த வர்த்தமான மகாவீரர் சமண சமயத்தைச் அமைத்தார் என்றும் வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றார்கள்.

> **"இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரராகிய பார்சுவநாதர் கி.மு.எட்டாம் நூற்றாண்டில் இருந்தவர். இவருக்குப் பின்னர் 250 ஆண்டுகளுக்குப் பிறகு வர்த்தமான மகாவீரர் தோன்றி 72 ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தார். இவர் கி.மு.599 முதல் கி.மு.527 வரையில் இருந்தவர். வர்த்தமான மகாவீரர் காலத்திலே, பௌத்தமதத்தை உண்டாக்கிய கௌதம புத்தரும், ஆசிவகமதத்தை உண்டாக்கிய மற்கலியும் இருந்தார்கள். இவர்களில் மகாவீரர் வயதில் மூத்தவர். மற்கலி, மகாவீரருடன் ஆறு ஆண்டு ஒருங்கியிருந்தார், பிறகு மகாவீரருக்கு மாறுபட்டு**

**ஆசீவகமதம் என்னும் புதிய மதத்தையுண்டாக்கினார். இதனால், பௌத்த மதமும், ஆசீவக மதமும் மகாவீரர் காலத்தில் தோன்றிய மதங்கள் என்பதும் இவ்விரு மதங்களுக்கு முற்பட்டது சமண மதம் என்பதும் விளங்குகிறது.'"**[1]

இவ்வாறு சமண சமய வரலாற்றினை மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிடுகின்றார்.

**சமணத் தத்துவம்**

சமணம் இந்த உலகத்தைப் பற்றி கூறுவது. இந்த உலகம், யாராலும் படைக்கப்பட்டதல்ல. இயல்பாகவே எப்போதும் இருப்பதாகும். இதற்கு முதலோ, முடிவோ கிடையாது என்றும், என்றும் நிலைத்திருக்கும் உலகில் இடையறாது மாற்றங்கள் நேர்ந்து கொண்டிருக்கும். இதைத் தவிர்த்து அது இல்லாமல் போவதில்லை என்பதாகும்.

இவ்வுலகம் ஆறு பொருள்காளல் ஆனது. உலகைப் பகுத்தறிந்தால், அறுவகைப் பொருள்களைத் தவிர வேறு பொருள்கள் கிடைக்காது. இந்த அறுவகைப் பொருள்களைத்தான் சமணம் திரவியங்கள் என்றும் குறிக்கின்றது. அவை உயிர், உயிரல்லவை அதாவது ஜீவன்-அஜீவன் என இரண்டு பகுதிக்குள் அடங்கும். உயிர் தனியாகவும், உயிரல்லவை என்பதில் - புத்கலம், தருமம், அதருமம், ஆகாயம், காலம் என ஐந்தும் அடங்கும். இந்த ஆறின் சேர்க்கைதான் உலகம். இந்த அறுவகைப் பொருள்களைப் பற்றிய மிக விரிவான விளக்கம்தான் சமண தத்துவம் ஆகும். இதை விளக்கும் முறை மிகச் சிறப்பானதாகவும், மறுத்துரைக்க முடியாததும் முன்னுக்குப்பின் முரண் இல்லாததுமாக இருக்கிறது என்று தத்துவ அறிஞர்கள் கூறுகின்றனர். இந்த அறுவகைப் பொருள்களைத் திரவியங்கள் என்றும் இவற்றில் காலத்தைத் தவிர்த்து மற்ற ஐந்தையும் அத்திகாயங்கள் என்றும் விளக்கப்படுகின்றது.

**1. உயிர்**

இவ்வுலகில் எண்ணற்ற உயிர்கள் உள்ளன. உயிர்களின் மிகுதியைக் குறிக்க 'அனந்தானந்தம்' என்ற சொல்லைப் பயன்படுத்துவதால் உலக உயிர்களின் மிகுதியை ஒருவாறு உணரலாம். உயிர்த்தொகுதியை இரண்டாகப் பிரிக்கலாம். ஒன்று வீட்டுயிர் என்பது, மற்றொன்று மாற்றுயிர் என்பது. இவற்றை **'மோட்சஜீவன்'** என்றும் **'சம்சாறி ஜீவன்'** என்றும் சமண ஆகமங்கள் கூறுகின்றன. வீட்டுயிர் என்பது வினைகள் அனைத்தும் நீங்கப் பெற்று தனது இயல்குணங்களான கடையிலா அறிவு, கடையிலா காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயிறின்மை, அழிவின்மை ஆகிய எண்

குணங்களுடன் என்றென்றும் உலகுச்சியில் நிலைத்திருப்பதாகும். மாற்றுயிர் என்பது தனது மாறுபட்ட குணங்களான சினம், செருக்கு, வஞ்சம், ஆசை ஆகியவை காரணமாய், வினைகளைச் சேர்த்துக்கொண்டு அவைகளுக்கேற்ப பல்வேறு உடல்களை மாறி மாறி ஏற்று நால்வகைப் பிறவிகளில் உழன்று கிடக்கும். இந்த மாற்றுயிர்களே தனது இயல் குணங்களை உணர்ந்து முயன்று தனதல்லாததும், தன்னோடு இருந்த தன்னை அலைக்கழிப்பதுமாகிய நால்வகைக் குணங்களை ஒழித்து, தூய்மை எய்தி வீடுபேறு அடைவது என்பதாகும்.

**2. புத்கலம்**

நுண்ணிய அணுக்களே புத்கலமாகும். அறிவு மயமாகிய உயிர்க்குணங்களில் ஒன்று கூட இதற்குக் கிடையாது. புத்கல் அணுக்களைப் பரமாணு என்றும் அதன் சேர்க்கையை கந்தங்களென்றும் அவை பலவகைப்படும் என்றும் கூறப்படும். உயிருடன் சேர்ந்து அதன் இயல்குணங்களை மறைக்கும் வினைகளாகப் பிணித்தும், உடலாக நின்றும், தனது பயனைக் கொடுத்துப் பிரிந்தும், மீண்டும் உயிருடன் இணைந்தும் மாறி மாறி செயல்படுவதாகும். இதன் பல்வேறு சேர்க்கைதான் ஒலி, ஒளி, நிழல், காற்று, வெயில், நீர், மண், கல் என எண்ணற்ற உருவப்பொருள்களாகும். மற்ற திரவியங்கள் அனைத்தும் அருவப்பொருள்களேயாகும்.

**3. தருமப்பொருள்**

இது உலகம் எங்கும் நிறைந்திருக்கும் அருவப்பொருள், உலகிலுள்ள உயிர் புத்கலப்பொருள்களின் இயக்கத்திற்குத் துணை புரிவதாகும். இந்தத் திரவியம் இல்லையேல் எந்த ஒரு பொருளும் இடம்விட்டு இடம் மாறுதல் இயலாது.

**4. அதருமம்**

இதுவும் அருவப்பொருளாகும். உலகெங்கும் நிறைந்திருப்பது. உயிர், புத்கலப்பொருள்களின் இருப்பிற்கு அதாவது ஒரு இடத்தில் (ஈர்ப்பு விசை போன்றது).

**5. ஆகாயம்**

எங்கும் பரவி நிற்கும் அருவப்பொருள், ஆகாயம் மற்ற அனைத்து திரவியங்களும் இருப்பதற்கு இடம் கொடுப்பதாகும். தானும் தளர்வின்றி நிற்கும் தன்மையுடையது.

**6. காலம்**

உயிர், புத்கலப் பொருள்களின் மாற்றத்திற்குத் துணையாக நிற்பதாகும். தருமம், அதருமம், ஆகாயம், கால் ஆகிய இவைகள் துணை புரியும் என்று கூறினாலும்

இவைகளாக முயன்று துணைபுரிவதில்லை. இவற்றின் இயல்பே, இயங்க, நிலைக்க, இருக்க, மாறுதல் பெறச் செய்வதுதான். எனவேதான் இவற்றை **'உதாசீனசஹகாரி'** என சமண ஆகமங்கள் கூறுகின்றன.

இதுவரை கூறிய ஆறு பொருள்களில் காலத்தைத் தவிர்த்து மற்ற ஐந்து பொருள்களும் அத்திகாயங்கள் எனப்படும். காலத்திற்கு மட்டும் காயத்துவம் இல்லை தனித்தனி அணுக்களால் அமைந்தது காலம். கால அணுக்கள் தம்முள்ளும் ஒன்று சேராது மற்ற புத்கல அணுக்களுடனும் இணையாது. அவை ஒன்றாக இணைவதும் இல்லை. தம் இனத்தை விட்டுப் பிரிவதும் இல்லை.

உயிர் பலவாயினும் ஒவ்வொரு உயிரும் காயத்துவம் பெறுகின்றது. கருமம், அதருமம், ஆகாயம், ஆகியவையும் ஒரே பொருளாய் எங்கும் நிறைந்திருந்து காயத்துவம் பெறுகிறது. காயம் என்பது உருவமோ அருவமோ எப்படி இருப்பினும் ஒரு பொருளாகக் கருதப்படுவது.

அடுத்து இந்த ஆறு பொருள்களும் இருக்கும் இடமே உலகம் எனப்படும், நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் ஆகாயத்தில் தருமம், அதருமம் ஆகிய இரண்டும் எவ்வளவு இடத்தை ஏற்றுள்ளதோ அத்த அளவிற்குத்தான் உயிர், புத்கலம் இவை இரண்டும் இருத்தல் இயலும். காலமும் அவ்வாறே, எனவே தான் இந்த ஆறு பொருள்களாலும் அமைந்ததே உலகமாகும். உலகில் இருக்கும் இந்த ஆறைத் தவிர்த்து வேறு ஒன்றுமில்லை என்பதாகும். ஆனால், ஆகாயம் மட்டும் உலகத்திற்கு அப்பாலும் இருப்பதை **'அலோகாயம்'** என்றும் கூறப்படும்.

தருமப்பொருள், அதருமப்பொருள் என்பதற்கு நாம் கொள்ளும் நல்லவை, தீயவை என்பது அல்ல. ஆறு திரவியங்களில் கூறப்படும் தருமம், அதருமம் பெயர் ஒற்றுமையே தவிர பொருளால் அவற்றில் வேறுபட்டதாகும்.

**நலபதார்த்தங்கள்**

ஆறு பொருள்களில் கூறப்பட்ட உயிர், புத்கலம் அவ்விரண்டுடன் இவ்விரண்டின் சேர்க்கையால் உண்டாகும் புண்ணியம், பாவம், ஊற்று, செறிப்பு, கட்டு, உதிர்ப்பு, வீடு ஆகிய ஏழும் சேர்ந்து **'நலபதார்த்தம்'** எனப்படும்.

காற்று, செறிப்பு, கூட்டு, உதிர்ப்பு என்பன வினை தொடர்பானவை. உயிரின் விபாவ குணங்களுக்கேற்ப வினைகளாகும், தன்மைக்குரிய புத்கலங்கள் வினைகளாக மாறுவதை 'ஊற்று' என்றும், அவ்வாறு மாறாமல் தடுத்தலைச் **'செறிப்பு'** என்றும் வினைகள் உயிருடன்

இணைதலை 'கட்டு' என்றும் கட்டப்பட்ட வினைகள் உதிர்தலை **'உதிர்ப்பு'** என்றும் கூறப்படும். இந்த வினைகள் அனைத்தும் நீங்கப்பெற்ற உயிர் தனது இயல் குணங்களுடன் உலகுச்சியை அடைந்து அங்கேயே நிலைத்திருத்தலை 'வீடு' என்றும் குறிக்கப்படும். அடுத்து இப்பிழை உயிரை நல்வழிப்படுத்தும் வினைகளை புண்ணியம் என்றும், மேலும் மேலும் தீமை செய்யும் வினைகளைப் பாவம் என்றும் கூறப்படும். சமணத் தத்துவத்தின் மிகச் சுருக்கமான குறிப்புகளே இவை. இவற்றின் ஒவ்வொன்றின் தன்மைகளை மிக விரிவாக சமண ஆகமங்கள் விளக்குகின்றன. உயிர்களின் தகுதிக்கேற்ப **'மாற்றுயிர்' 'வீட்டுயிர்'** எனக் கூறப்படுகிறது. மாற்றுயிர்தான் வீட்டுயிர் என்னும் தகுதியைப் பெறுகின்றது. வீட்டுயிர் மீண்டும் மாற்றுயிராவதில்லை, மாற்றுவில் தனது மாறுபட்ட குணங்களின் ஆட்சிக்குட்படுகின்றது. அம்முயற்சியின் வெற்றிதான் வீடு எனப்படும்,

### மும்மணிகள்

சமணத்தின் தத்துவத்தைத் தெளிவாக விளக்கவும், மற்றவர்கள் நன்கு உணரவும் ஜைனச் சான்றோர்கள் கைக்கொண்ட முறைகள்தான்,

1. **அனேகாந்தம்**
2. **சியாத்வாதம்**
3. **சப்தபங்கி**
4. **நயவாதம்**

முதலியவை.

சமணத் தத்துவத்தில் உறுதியாகக் கூறப்பட்ட உலகம் அமைவதற்கான ஆறு பொருள்கள், ஐந்து அத்திகாயங்கள், ஒன்பது பதார்த்தங்கள் ஆகியவற்றைத் தெளிவாக உணர்ந்து, தனது இயல் குணங்களுடன் மாறுபட்ட குணங்களான சினம், செருக்கு, வஞ்சம், ஆசை ஆகியவற்றால் வினைக்கட்டிற்கு ஆட்பட்டு, நான்கு கதிகளில் உழலும் மாற்றுயிர் வாழ்வின் தகுதியை அறிந்து அதிலிருந்து விடுபட்டு வீடு பெறும் தகுதிவாய்ந்த மனிதப்பிறவியின் மாண்பினை நன்கு உணர்ந்து அப்பிறவிப் பயனாகிய வீடு பெற்று உய்வதற்கு ஏற்கும் நெறிகள்தான் **'மும்மணிகள்'** எனப்போற்றப்படும் **'நற்காட்சி', 'நல்ஞானம்', 'நல்லொழுக்கம்'** என்பவைகள் ஆகும். இதில் அருகப்பெருமானிடம் கொள்ளும் அசையாத நம்பிக்கையே நற்காட்சியாகும். அவற்றில் ஐயம் இல்லா தெளிந்த அறிவே நல்ஞானமாகும். இவற்றைத் தவறாது மேற்கொண்டு ஒழுகுவதே நல்லொழுக்கமாகும்.

மும்மணிகள் எனப்படும் இம்மூன்றையும் இல்லற வாழ்விற்கேற்பவும், துறவு நிலைக்கேற்பவும் மேற்கொள்ளுதல் வேண்டும். இல்லறத்தான் ஏற்க வேண்டியதை அணுவிரதமென்றும், துறவிகள் மேற்கொள்வதை மகாவிரதமென்றும் வகுக்கப்பட்டுள்ளன. மும்மணிகள் ஒன்றி இணைந்து இருத்தல் வேண்டும். இவற்றின் ஒன்றில் தளர்ச்சி ஏற்பட்டாலும் பயன் இல்லை. வீழ்ச்சியே நேரும் என்பதை சமணம் உறுதியாகக் கூறுகின்றது. மும்மணிகள் உறுதியாக ஒன்றுபடும் போதுதான் வினைகளும், உயிரின் மாறுபட்ட குணங்களும் நீங்கி இயல் குணங்களாகிய கடையிலா அறிவு, கடையிலா காட்சி, கடையிலா வீரியம், கடையிலா இன்பம் ஆகியவை துலங்கும்.

இந்நிலையில் வீடுபேறு உறுதியாகின்றது. பல பிறவிகள் முயன்று அருந்தவமியற்றி இந்நிலை எய்தியவரே அருகர் எனப் போற்றப்படுகின்றனர். அருக நிலை எய்தியோர் அருளிய அறம் தான் சமணமாகும். இதை அருளியவர்தான் தீர்த்தங்கரன் எனப்போற்றப்படுகிறார். தீர்த்தங்கரன் என்றால் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேற்றுபவன் என்று பொருள்படும்.

**தமிழகத்திற்கு சமணர் வருகை**

மகாவீரர் வீடுபேறடையும் வரையில் தாமே சமண சமயத் தலைவராக இருந்தார். அவருக்குப் பின்னர் அவர் சீடர் கௌதம் இந்திரபூபதி என்பவர் சமயத் தலைவராக இருந்தார். அவருக்குப் பிறகு மகாவீரரின் மற்றொரு சீடராகிய - சுதர்மர் என்பவர் சமயக் குரவராக இருந்தார். அவருக்குப் பின்னர் அவரின் சீடராகிய சம்பு சுவாமி சமயக் குரவராகயிருந்தார். அவருக்குப் பிறகு விட்டுணு நந்தி என்னும் விட்ணுதேவர் சமயத் தலைவர் ஆனார். அவருக்குப் பிறகு நந்திமித்திரரும் அவருக்குப் பின்னர் அபராசிதரும் அவருக்குப் பிறகு கோவர்த்தனரும் அவருக்குப்பின்னர் பத்திரபாகு முனிவரும் சமயக் குரவராக இருந்தனர் என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர். பத்திரபாகு முனிவர் காலத்தில்தான் சமண சமயம் தமிழ்நாட்டிற்கு வந்தது என்பர் வரலாற்றறிஞர். பத்திரபாகு முனிவர் கி.மு.317 முதல் கி.மு.397 வரையில் சமண சமயத் தலைவராக இருந்தவர்.

இவர் சமண சமயத் தலைவராக இருந்ததோடு அல்லாமல் பேர் பெற்ற சந்திரகுப்தன் (கி.மு.322 - 298) என்னும் மௌரிய அரசனுக்கு மத குருவாகவும் இருந்தார். இந்த சந்திரகுப்த மௌரியன் கிரேக்க அரசனாகிய மகா அலெக்சாண்டர் காலத்தவர். இந்தியாவை அரசாண்ட சக்கரவர்த்தி அசோக சக்கரவர்த்தியின் பாட்டன் ஆவார். இந்த சந்திர குப்த அரசனுக்குச் சமயக் குருவாக இருந்த பத்திரபாகு முனிவர், மகதநாட்டில்

பன்னிரெண்டு ஆண்டு வற்கடம் (பஞ்சம்) வரப்போவதையறிந்து அச்செய்தியை அரசனுக்கு அறிவித்து வரப்போகும் வற்கடக் கொடுமையிலிருந்து தப்பிக்கக் கருதித் தம்மைச் சார்ந்திருந்த பன்னீராயிரம் சமண முனிவர்களை அழைத்துக் கொண்டு தென் திசை நோக்கிப் புறப்பட்டு வந்தார். சந்திரகுப்த அரசனும், அரசைத் துறந்து துறவு பூண்டு பத்திரபாகு முனிவரின் சீடனாகி அவருடன் வந்தார். தென்திசை நோக்கி வந்த பத்திரபாகு முனிவர், மைசூர் நாட்டில் வந்து சமணர் வெள்ளைக்குளம் என்னும் பொருள்படும் சிரவணபெறிகொள என்று இப்போது பெயர் வழங்கப்படுகிற இடத்தில் தம்முடன் வந்த முனிவர்களுடன் தங்கினார். தங்கின பிறகு, தம் சீடர்களில் ஒருவரான விசாக முனிவரை அனுப்பிச் சோழ, பாண்டிய நாடுகளில் சமண சமயக் கொள்கைகளைப் பரவச்செய்தார். இச்செய்திகளைச் சமண சமய வரலாறுகள் கூறுகின்றன.

> **"கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் பத்திரபாகு முனிவரின் சீடராகிய வைசாக முனிவரால் தமிழ்நாட்டிலே சமண சமயம் பரவச் செய்யப்பட்டது என்று அறிகிறோம். பாண்டிய நாட்டிலே மதுரை மாவட்டத்தில் காணப்படுகிற பிராமி கல்வெட்டெழுத்துக்கள் சமணரால் எழுதப்பட்டவை என்றும், அவை கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்டவை என்றும், அரசாங்க ஆர்க்கியாலஜி ஆராய்ச்சியாளர் கூறுகிறபடியால், சமண சமயம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் வந்திருக்க வேண்டும் என்று துணியப்படும். இவர்கள் காலமும், பத்திரபாகு முனிவர் தென்திசை நோக்கி வந்த காலமும் ஒத்திருப்பதும் கருதத்தக்கது."**[2]

என்று மயிலை சீனி.வேங்கடசாமி சமணர்களின் தமிழக வருகையைக் குறிப்பிடுகிறார்.

இதே கருத்தை,

> **"மூன்றாம் நூற்றாண்டில் வடபுலத்தைத் தாக்கிய கடும் பஞ்சம் மகத நாட்டில் பன்னீராயிரம் ஆண்டுகள் நிலைகொண்டதால் பல ஆயிரக்கணக்கான சமண முனிவர்கள் 'பத்திரபாகு முனிவர்' தலைமையில் தென்னகத்தில் கர்னாடக மாநிலத்தில் சிரவண பெறிகுளத்தில் வந்து தங்கினர் என்றும் பிறகே தமிழகத்திற்கும் ஜைனம் பரவியதென்றும், தமிழகத்தில் அச்சமயம் சமணம் என்ற பெயரை ஏற்றது என்றும் கூறுவர்."**[3]

இக் கருத்தை மேலும் வலியுறுத்தும் வகையில்,

**"கிறித்து பிறப்பதற்கும் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே சமணரும், பௌத்தரும் தமிழ்நாட்டுக்கு வந்து விட்டனரெனச் சாசனங்களால் அறியலாம்.**

i. Madras Epigraphical Reports 1907 (P60-61) and 1910 (pp 77-78)
ii. Bhattiprola Inscription (2nc cont.B.C) | DigionEpigraphia India vol II. P.32 3-329.
iii. Asokan edicts - ediccti rock edict iii and also maski and southeren India inscriptions.
iv. se also M.S.Ramaswami Ayyangar; studies in South Indian Jainism, chapters I to III"[4]

என்று சாசனங்களைக் குறிப்பிட்டு சமணர் தமிழக வருகையை சு.வித்தியானந்தர் தமிழர் சால்பு என்னும் நூலில் குறிப்பிடுகிறார். இதைப்போலவே,

**"போக்குவரத்துக் கஷ்டங்கள் முதலியன இந்தியாவின் தென்கோடியிலுள்ள தமிழகத்திற்குச் சமணத் துறவிகள் வருவதைத் சிறிது காலம் தடை செய்திருக்கலாம். ஆயின் கி.மு.மூன்றாம் நூற்றாண்டுக்குரியவனாகக் கருதப்படும் மதுரை, திரு.நெல்வேலி ஜில்லாக்களிலுள்ள குகைச் சாசனங்கள் சமண, பௌத்த துறவிகளால் வரையப்பட்டன என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்."[5]**

என்று பேராசிரியர் ஆ.வேலுப்பிள்ளை குறிப்பிடுகிறார். இதுபோன்ற ஆராய்ச்சியாளர்களின் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் தொல்காப்பியரின் திணை கோட்பாட்டு முறை அமைந்திருக்கிறது. கி.மு.மூன்றாம் நூற்றாண்டு சங்ககால தமிழகத்தின் முக்கியமான காலக்கட்டமாகும். இக்காலக்கட்டத்தைப் பிரதிபலிக்கும் விதமாக மூவேந்தர்களின் உச்சக்கட்டப் போரையும், சமய மோதல்களின் உச்சத்தைப் பறைசாற்றும் விதமாக புறத்திணையின் ஐந்தாவது திணை திகழ்கிறது.

**"வாகை தானே பாலையது புறனே**

**தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**

**பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப"[6]**

குற்றமற்ற கொள்கையால் தத்தமக்குரிய அறிவு, ஆண்மை, பெருமை முதலிய ஆற்றல் கூறுபாடுகளை ஏனையோரிலும் மிகுத்து மேம்படுத்தல் வாகை என்னும் ஒழுக்கமென்று நூற்பா விளக்குகிறது. இந்நூற்பா சமய மோதல்களைக் குறியீடாய் விளக்குகிறது என்பதை அதன் பின் வரும் எழுவகைத் தொகை நிலை உரைத்தல் நூற்பாவின் மூலமும் அதன் பின் வரும் துறைகளைச் சுட்டும் நூற்பாவின் மூலமும் விளங்கிக் கொள்ள முடியும். எழுவகைத் தொகை நிலை என்பது வைதீக சமயத்தினரின் ஆதிக்கத்தைக் குறிக்கும் வகையில் அமைந்திருக்கின்றன. அடுத்து வருகின்ற துறைகளை உரைக்கும் நூற்பாவில் ஒன்பது அறத்துறைகளைத் தொல்காப்பியர் விளக்குகிறார். இதற்கு முன்னால் உள்ள புறத்திணைகளில் சொல்லப்படாத அறத்துறைப்பேச்சு இந்த வாகைத் திணையில் தான் வருகிறது. எனவே ஆராய்ச்சியாளர்கள் குறிக்கும் குறிப்பின் மூலமாகவும், வாகைத்திணையில் காணப்படும் குறிப்புகள் மூலமாகவும் ஒருங்கிணைத்துப் பார்த்தால், வாகைத் திணையின் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு என்று கூறமுடியும். மேலும் தொல்காப்பியரின் திணைக்கோட்பாட்டு முறையில் தமிழ்ச்சமூகப் படிநிலை உருவாக்க ஆய்வுப்பார்வை சரியானதுதான் என்பதும் உறுதியாகிறது. அந்த அறத்துறைகள் பின்வருமாறு,

**"பகட்டி னானும், மாவி னானும்**

**துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்,**

**............................................................**

**இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே"[7]**

இந்நூற்பாவின் பொருள்.

1. எருது, எருமை மற்றும் யானை, குதிரை ஆகிய விலங்குகளால் உழவஞ்சாமையும், பகையஞ்சாமையும் ஆகிய சிறப்பினையுடைய ஆன்றோரது வெற்றி.
2. பிறர்மனை நயவாமையாகிய பேராண்மை.

3. வாழ்க்கை முறையினை நன்மை விளங்கச் செய்யும் குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் உடமை, வாய்மை, தூய்மை, நடுவு நிலைமை, அழுக்காறாமை, அவா இன்மை எனப்படும் எட்டு வகையைக் கருதிய அவையின் கண் முந்தி இருப்பவரது வெற்றி.
4. இல்வாழ்க்கையில் பின்பற்றும் அடக்கம் உடமை, ஒழுக்கம் உடமை, நடுவு நிலைமை, பிறன்மனை நயவாமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினை அச்சம், அழுக்காறாமை, பொறையுடமை என்னும் எட்டு ஒழுக்கம்.
5. பிறர் புகழ் பரவாது தன்புகழ் பரவும் வகையில் இடையீடு இன்றிக் கொடை செய்யும் வென்றி. இது புகழ்மிக உடமையால் மூப்பு, பிணி, இறப்புகளுக்கு அஞ்சாமையாய் வாகை ஆயிற்று.
6. தமக்கு குற்றம் புரிந்தோரைப் பொறுத்துப் பாதுகாத்தலும், அவர்க்கு வறுமை முதலான ஏதம் வராமலும் பாதுகாக்கும் வெற்றிக்கு அடிப்படை நெறியாகும்.
7. அரசர்க்கு உரியவாகிய படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு முதலியனவும், புதல்வரைப் பெறுதல் ஆகிய பொருள் திறத்துப்பட்ட வாகைப் பகுதியாகும்.
8. ஓர் உயிர்க்கு இடர்வந்த இடத்துத் தன்னுயிரைக் கொடுத்துக் காத்தலும், அதன் வருத்தத்தைத் தனதாகக் கருதி வருந்துதலும் ஆகிய அருளுடமை கொண்ட கருணை உள்ளம்.
9. உலகின் கண் ஆசையை நீக்கிப் பற்றற்ற வகையில் நிலவுதல் என்று மேற்கண்ட நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் உரை வகுக்கின்றனர். இதில் சொல்லப்பட்ட ஒன்பது அறக்கருத்துக்களும் சமண பௌத்தமாகிய இரண்டு சமய கொள்கைகளுக்கும் உடன்பட்டதாய் இருந்தாலும் சமண சமயத்தினர் தமிழகத்திற்கு முதலில் வந்தவர்கள் என்பதாலும், வாகைத் திணையை அடுத்து வருகின்ற காஞ்சித்திணை நிலையாமையை முதன்மையாகக் கொண்டு விளங்குவதாலும் இந்த ஒன்பது அறத்துறைகளும் சமணத்தால் வழங்கப்பட்டது என்று உரிமை கொடுக்கலாம். மேலும் பௌத்தம் தமிழகத்தில் நிலையாமைக் கொள்கையை முதன்மையாகக் கொண்டு இயங்குகிறது. சமணம் ஊழ்வினையை (கர்மவினை) முதன்மையாகக் கொண்டு இயங்குவதை அறியலாம், சமணத்தில் சொல்லப்படுகின்ற **'மாற்றுயிர்'** என்பது உயிர் தனது மாறுபட்ட குணங்களான சினம், செருக்கு, வஞ்சம், ஆசை ஆகியவற்றில்

காரணமாய் வினைகளைச் சேர்த்துக் கொண்டு பல்வேறு உடல்களை மாறிமாறி ஏற்று நால்வகைப் பிறவிகளில் உழன்று கிடக்கிறது. இதிலிருந்து உயிர்கள் விடுபட நால்வகைக் குணங்களை ஒழித்து, மனிதப் பிறவியில் தூய்மை எய்தி வீடுபேறு அடையலாம் என்று சமணம் கூறுகிறது. இந்த நால்வகைக் குணங்களை ஒழிக்க இல்லறத்தான் பத்து ஒழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும். இதற்கு அணுவிரதம் என்பர். இந்த அணுவிரதக் கொள்கையைத்தான் தமிழ்ச் சூழலுக்கேற்ப மாற்றங்களுடன் வாகைத் திணையில் கூறப்படும் அறத்துறைகள் என்று ஒருவாறு நாம் ஊகித்துக் கொள்ள முடியும்.

## சங்கப் பாடல்களில் சமணம்

சங்க காலத் தமிழகத்தில் வைதீக சமயத்திற்கு எதிராக சமண, பௌத்த சமயங்கள் வலுவான தாக்கத்தை உண்டு பண்ணின என்பதை சோழநாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனைச் சிறப்பித்து ஆவூர் மூலங்கிழார் பாடிய பாடலில் இக்கருத்து வருகிறது.

**"நன்றாய்ந்த நீள்நிமிர்சடை**

**முது முதல்வன் வாய்போகாது**

**.................................................**

**உரைசால் சிறப்பின் உரவோர் மருக"[8]**

இப்புறநானூற்றுப்பாடலில் வரும் உட்கருத்து வேத நெறிக்கு மாறுபட்டவர்களின் வலிமை குன்றும் படியாக, அவர்கள் கூறும் மெய்போன்ற பொய்மொழிகளை உணர்ந்து, உண்மை அறிந்து இருபத்தொரு வகைப்பட்ட வேள்விகளைச் செய்து உயர்ந்தோர் வழியில் வந்தவனே என்று கூறுகிறார். இதில் முதுநூலுக்கு **"இகல் கண்டோர்"** எனப்படுபவர் சமண, பௌத்த சமயத்தைச் சார்ந்தவர்களையே குறிக்கிறது. ஏனெனில் வேள்வியையும், உயிர்க்கொலையையும் மறுத்து, எல்லா உயிர்களுக்கும் கருணை காட்டும் கொள்கையுடையது. சமண, பௌத்த சமயங்களே. 'இகல் கண்டோர் மிகல்சாய்மார்' என்பதற்கு 'வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலாயின புறச்சமத்தோரது மிகுதியைச் சாய்க்க வேண்டி' என்று பழையவுரைக்காரர் விளக்கம் தருகிறார், அதனால் சங்ககால தமிழகத்தில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு சமண பௌத்த சமயங்கள் வலிமையுடனும், வனப்புடனும் விளங்கியது என்பதை அறியலாம்.

**"உண்ணாமையின் உயங்கிய மருங்கின்**

**ஆடாப் படிவத்து ஆன்றோர் போல**

**வரைசெறி சிறுநெறி நிரையுடன் செல்லும்**

**கான யானை கவின் அழிகுன்றம்"[9]**

என்ற அகநானூற்றுப்பாடல் சமண சமய முனிவர்கள் உண்ணாது பட்டினி நோன்பு கடைபிடித்ததால் வாடிய தோற்றத்தை உடையவராகவும், இவர்கள் நீராடாத ஒழுக்கத்தையும் மேற்கொண்டவர்களாய் இருப்பதுபோல் அழகு மழுங்கிய தோற்றத்தில் குன்றம் இருக்கிறது என்று உவமைப்படுத்துகிறார். காவிரிப் பூம்பட்டினத்துக் காரி கண்ணனார் தொடக்கக்கால சமண சமயத்தைச் சார்ந்த ஆன்றோர்களைத் தமிழர்கள் பார்க்கும் போது மனத்தில் தோன்றிய கருத்துப் படிவமாக இப்பாடல் விளங்குகிறது. இதைப்போலவே,

**"சிறப்புடை மரபில் பொருளும் இன்பமும்**

**அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல**

**இருகுடை பின்பட ஓங்கிய ஒரு குடை"[10]**

இப்பாடலின் பொருள், சிறப்படைந்த வழிமுறையால் பொருளும், இன்பமும் அறத்தின் பிற்பட வருவதுபோலச் சேரர், பாண்டியர் குடைகள் பின்னே வர உயர்ந்து விளங்கும் உன்கடை என்று கோவூர் கிழார் அவர்கள் சோழன் நலங்கிள்ளியைப் பாராட்டிப் பாடும் பாட்டில் சமணர் மேற்கொள்ள வேண்டிய விரதம் வருகிறது. இல்லறத்தான் பத்து விரதங்களைத் தவறாது ஒழுக வேண்டும் என்று சமண நூல்கள் கூறுகின்றன. இதில், 1.கொல்லாமை, 2.பொய்யாமை, 3.கள்ளாமை, 4.பிறன்மனை விரும்பாமை, 5.பொருள்வரைதல், இவை ஐந்தும் அணுவிரதம் என்று கூறப்படும் இதில் பொருள் வரைதல் என்னும் விரதத்தைதான் மேற்கூறிய பாடல் விளக்குகிறது. பொருள் வரைதல் என்பது பொருளை இவ்வளவுதான் ஈட்ட வேண்டும் என்று வரையறுத்துக் கொண்டு அவ்வரையறைப்படி பொருளை ஈட்டுவதாகும். நிலபுலம், வீடுவாசல், பணம், பொன், பொருள், தானியம், ஆடு, மாடு முதலிய பொருள்கள் இவ்வளவுதான் ஈட்டுவேன் என்று அறநோக்கோடு பொருள் சேர்க்க இப்பாடலின் உவமை குறிக்கிறது. இதைப்போலவே, வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை மக்கள் நிலத்திற்குச் செலுத்த வேண்டிய வரிப்பாக்கியில் இருந்து விலக்குப் பெற்றதற்காகப் பாராட்டிப் பாடப்பட்ட பாட்டில்,

**"அறம் புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து**

**முறைவேண்டு பொழுதில் பதன்எளியோர் ஈண்டு**

**..........................................................................**

**குடிமறைப் பதுவே"**[11]

அறமே உருக்கொண்டு வந்து ஆள்வதுபோல் அரசு செய்கையில் நீதியைக் கேட்க வேண்டும் பொழுதில் உடன்மழைப் பெற்றவர் ஆவர். கதிரோனை மேலே கொண்ட கருமுகில் வானின் நடுவே நின்று வெயிலை மறைத்தாற்போலக் கணுத்திரண்டு விளங்கும் வெண்கொற்றக்குடை வெயில் மறைக்கப் பிடிக்கப்பட்டது. அன்று; வருந்தும் குடிகளின் வருத்தம் ஒழிக்கப் பிடிக்கப்பட்டது ஆகும். மன்னர் அறத்தோடு வாழ்வதின் இன்றியமையாமையையும், மக்கள் நலமே மன்னனின் அறம் என்பதையும் எடுத்துக் காட்டுவதாக இப்பாடல் அமைகிறது.

**"விடர்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூண்**

**சுரும்பு ஆர் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்**

**......................................................................**

**நீ தோன்றினை"**[12]

என்ற மாறோக்கத்து நப்பசலையார், மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பாராட்டிப் பாடும்போது புலி முத்திரை பொறித்த கோட்டையையும், ஒளிவிடும் அணிகலன்களையும், வண்டுகள் மொய்க்கும் மாலையையும் உடைய நின் முன்னோனாகிய தந்தை இங்கே செய்த நல்வினைப் பயனை நுகர்வதற்காக வானவர் உலகம் அடைந்தனன். ஆதலால், வழி செல்வாரை வருத்துவதலால் பக்கமெல்லாம் கவலைப் பட்டுச் செல்வார் துயரம் நீங்க நீ தோன்றினை என்று நல்வினைப் பயனைக் கூறிப் பாடுகிறார். சமணத்தில் மாற்றுயிர் தன்னோடு இருந்து தன்னை அலைக்கழிக்கும் நால்வகைக் குணங்களை அழித்து நல்வினையின் மூலம் வீடுபேறு அடைவதைக் குறிக்கும் பாடலாக இப்பாடல் அமைகிறது.

பற்று அறுத்தலை மையமாகக் கொண்ட பாடலாக புறநானூற்றின் பாடல் இவ்வாறு அமைகிறது,

**"அதள் எறிந் தன்ன நெடுவெண் களரின்**

**ஒருவன் ஆட்டும் புல்வாய் போல**

**ஓடி உய்தலும் கூடுமன்**

**ஒக்கல் வாழ்க்கை தட்டுமா காலே"**[13]

உரித்த தோல் உட்பக்கம் மேற்பக்கமாகப் பரப்பி வைத்தாற் போன்ற பரந்த வெண்ணிறக் களர் நிலத்தில் ஒருவன் வெருட்டும் மான்போல ஓடித்தப்பவும் கூடும். ஆனால், சுற்றத்துடன் வாழும் வாழ்வு அவ்வாறு ஓட விடாமல் காலைத் தடுக்கும் என்ற பொருளைத் தரும் இப்பாடல் சமண சமயத்தில் கூறப்படும் மாற்றுயிர்களின் மாறுபட்ட குணங்களான சினம், செருக்கு, வஞ்சம், ஆசை என்னும் குடும்ப வாழ்வுப்பற்றைக் குறிக்கிறது. ஒருவன் விரட்டுகின்ற மான்கூட அவனிடமிருந்து தப்பிப் பிழைத்து ஓடிவிடக்கூடும். ஆனால் இல்லற வாழ்வில் மூழ்கியோர் துறவு நெறியை நாடுதல் அவ்வளவு சுலபமல்ல. கடினமானது என்று துறவு வாழ்வுக்குப் பற்றறுத்தல் மிக முக்கியமானது என்று மேற்கண்ட பாடல் விளக்குகிறது.

அரசின் வெற்றி என்பது அறநெறியை அடிப்படையாகக் கொண்டது என்பதை விளக்கும் நோக்கோடு,

**"ஓங்கு மலைப் பெருவில் பாம்பு ஞான் கொளீஇ**

**ஒருகணை கொண்டு மூஎயில் உடற்றிப்**

**..............................................................**

**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"**[14]

கடிய சினமுடைய கொல்லும் யானையும், விரைந்து செல்லும் மனச் செருக்குடைய குதிரையும் நீண்ட கொடி விளங்கும் உயர்ந்த தேரும் வலிய புகழ் வாய்ந்த வீரரும் என்னும் நான்கு படைச் சிறப்புடையதாயினும், பெருமைமிக்க அறநெறியை அடிப்படையாகக் கொண்டதே அரசின் வெற்றியாகும்; அரசின் வெற்றிப்பலம் என்பது அறநெறியைப் அடிப்படையாகக் கொண்டது என்பதை இப்பாடல் விளக்குகிறது. மேலும் அசோகரின் கல்வெட்டில் இப்பாடலின் கருத்தையும் நாம் ஒப்பிட்டுக் காண முடியும்.

இதைப்போலவே,

**"எழுமதி வாழ்க நின் உள்ளம் அறிந்தோர்க்கு**

**ஏமம் ஆகுநின் தாள் நிழல் மயங்காது**

**..............................................................**

**விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே"**[15]

புல்லாற்றூர் எயிற்றியனார், கோப்பெருஞ்சோழன், அவன் மக்கள் மீது போரிடச் சென்ற போது போர் வேண்டாம், போரை ஒழிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு பாடப்பட்டப் பாடலில், உன் உயர்ந்த உள்ளம் வாழ்வதாக அஞ்சிய உயிர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் உன் முயற்சியை மயக்கம் இல்லாமல் நன்றாகச் செய்தல் வேண்டும். பெறுதற்கு அரிய விண்ணவர் உலகினர் விருப்புடன் உன்னை விருந்தினராக வரவேற்பதற்கு விரும்புவர், உயிர்களைக் காக்கும் கடமையில் வீடு பேறு அடையலாம் என்ற நோக்கத்தோடு எழுதப்பட்டப் பாடலாக மேற்கண்ட பாடல் அமைகிறது.

**"குன்றுதலை மணந்த மலைபிணித் தியாத்தமண்**

**பொதுமை சுட்டிய மூவர் உலகமும்**

**………………………………………………**

**இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே"**[16]

குன்றுகள் கூடிய மலையைக் கொண்ட மண்ணுலகைப் பொது எனக் குறிக்கப்பட்ட மூவேந்தர் நாடுகளையும் அப்பொதுத்தன்மை இல்லாமல் தமதாக ஆண்டவர்க்கும் வாழ்நாட்கள் அகன்றன அல்ல. வைத்த வளமும் துணைக்கு வரவில்லை. சிறந்த துணையாக வருவது நல்வினையே. அந்த நல்வினை எனப்படும் மிதப்பினைக் கைவிட்டவர்க்கு உற்றார் உறவினர் வருந்த உயிரைக் கொண்டு போகும்போது இவ்வுலகிலிருந்து அவ்வுலகுக்குத் துணையாவது வேறு இல்லை, நல்வினை மட்டுமே என்று, பிரமனார் அறவினைதான் வீடுபேறு உலகுக்குத் துணையாவது என்று வலியுறுத்தி மேற்கண்ட புறநானூற்றுப் பாடல் மூலம் விளங்க வைக்கிறார். இதைப்போலவே வீட்டுயிரை வலியுறுத்தி,

**"பருதி சூழ்ந்தஇப் பயங்கெழு மாநிலம்**

**ஒருபகல் எழுவர் எய்தி அற்றே;**

**…………………………………………**

**விடாஅ தோரிவள் விடப்பட் டோரே"**[17]

ஞாயிறு உலாவும் இப்பயமிக்க பெரிய உலகம், ஒரு நாளில் பலரை ஆள்வோராகக் கொண்டது. உலகையும், தவத்தையும் ஆராய்ந்தால் தவத்துக்கு உலகம் கடுகளவும் ஒப்பாகாது. ஆதலால், வீட்டின்பம் விரும்பினோர் இல்வாழ்வில் பற்றுவிட்டனர், திருமகள் தன்னிடத்துப் பற்றுவிட்டவரை விடாமல் பற்றிக்கொள்வாள் இவளால் பற்றிக் கொள்ளப்படாதவர் இல்வாழ்க்கை என்பது அவ்வளவு எளிதாய் விட்டு வரக்கூடியதல்ல என்று அதன் கடினத் தன்மையை விளக்கி, வீட்டுயிர் மூலம் வீடுபேறு அடைவதற்குத் துறவு

பூண்ட தவத்தைத் தவிர வேறு வழியவில்லை என்னும் பொருளில் பிரமனார் மேற்கண்ட புறநானூற்றுப் பாடல் எழுதிப் பதிவு செய்கிறார்.

**வடக்கிருத்தல் அல்லது சல்லேகனை**

வடக்கிருத்தல் என்பது சமண சமயத்தவருக்கே உரிய பண்பாகும் அனைத்தையும் துறத்தல் என்ற அடிப்படையில் வருவது ஆகும். துறத்தல் என்றால் தமக்குரிய நிலபுலன்களையும், உற்றார் உறவினர்களையும் மட்டுமல்ல, அணிகலன்களையும், ஆடையையும் துறந்து நிர்வாண நிலையைப் பெறவேண்டும், உட்புற வெளிப்புறப் பற்றுக்களை அடியோடு ஒழித்தல் வேண்டும், உட்புறப்பற்று என்பது மனத்தால் வருவது; வெளிப்புறப்பற்று என்பது பொருள்களால் வருவது. இவ்வாறு அகப் புறப்பற்றுகளை அறவே நீக்கிய துறவியர், உணவையும் மிகக் குறைந்த அளவே நீண்ட நேர இடைவேளைக்குப் பிறகு உண்பர். தங்களுடைய உயர்நெறிகளுக்கு உதவும் உயிர் வாழ்க்கை நெறிகளை மேற்கொண்ட ஒழுக்க சீலர்களிடையே அத்தகைய உணவினை ஏற்பார்கள். இந்த நியதியிலிருந்து சமணத் துறவிகள் தவறுவது இல்லை. அவர்களுடைய ஒழுக்க நெறியில் நீக்குப்போக்கு என்பதே கிடையாது. தவிர்க்க முடிக்காமல் தாங்கள் மேற்கொண்ட மார்க்கத்தில் ஒழுக இயலவில்லை என்றால் உண்ணாநோன்பு கொண்டு தம் வாழ்வை முடித்துக் கொள்வார்கள். அத்தகைய முடிவுதான் 'சல்லேகனை' அல்லது 'வடக்கிருத்தல்' எனப்படும். இவ்வாறு வடக்கிருத்தல் தமிழகத்தில்,

> **"வடக்கிருத்தல் எப்போது செய்யவேண்டும் என்பதை அருங்கலச் செப்பு என்னும் சமண சமய நூல் இவ்வாறு கூறுகிறது. இடையூறு, ஒழிவில் நோய், மூப்பு இவை வந்தால் கடைதுறத்தல் சல்லேகனை அதாவது பொறுக்க முடியாத மனவேதனையைத் தருகிற இடையூறு தீராத நோய், மிகுந்த மூப்பு இவை உண்டான காலத்துச் சல்லேகனை செய்து உயிர்விடலாம் என்பது சமணக் கொள்கை"**[18]

என்று ஆய்வறிஞர் மயிலை சீனி.வேங்கடசாமி அருங்கலச் செப்பிலிருந்து குறிப்பெடுத்து சல்லேகனையை விளக்குகிறார். சல்லேகனை செய்வோர் தருப்பைப் புல்லின்மேல் வடக்கு நோக்கி அமர்ந்து சாகிற வரையில் உணவு கொள்ளாமல் இருக்க வேண்டும். வேண்டுமானால் நீர் மட்டும் உட்கொள்ளலாம். சல்லேகனை இருக்கும் போது எதையும் மனத்தில் நினைக்காமலும், விரும்பாமலும் தூய மனதோடு தீர்த்தங்கரர் அல்லது அருகறைத்

தியானித்துக் கொண்டிருக்க வேண்டும். சல்லேகனை செய்வது தற்கொலை செய்வதற்குச் சமமானது என்று பௌத்த காவியமாகிய குண்டலகேசி மறுத்துரைக்கிறது. அதேபோல் சிலப்பதிகாரத்தில் கூறப்படும் சமண சமயத் துறவியாகிய கவுந்தி அடிகள் என்னும் மூதாட்டியார் மதுரை எரியுண்டு அழிந்து போனதற்கு தான் தான் காரணம் என்னும் குற்ற உணர்ச்சியால் உண்ணா நோன்பிருந்து உயிர்விட்ட செய்தியை சிலம்பு கூறுகிறது. இதைப்போலவே தென்னிந்தியாவிற்கு சமண சமயத்தைப் பரப்ப வந்த விசாக முனிவர் அவரோடு வந்த சந்திரகுப்தர், முதல் தீர்த்தங்கரர் ஆதிநாதர், நேமிநாதர் போன்றவர்கள் வடக்கிருத்தல் மூலம் உயிர் விட்டவர்கள் என்று சமண நூல்கள் கூறுகின்றன.

சங்க காலத் தமிழகத்திலும் இந்த வடக்கிருத்தல் பழக்கம் இருந்து இருந்துள்ளதை,

**"உலவுத் தலை வந்த பெருநாள் அமையத்து**

**இருசுடர் தம்முள் நோக்கி ஒரு சுடர்**

**.............................................................**

**நாள்போல் கழியல ஞாயிற்றுப் பகலே"**[19]

என்ற புறநானூற்றுப் பாடலும்,

**"கரிகால் வளவ,**

**சென்று அமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற**

**...............................................................**

**புறப்புண் நாணி வடக்கு இருந்தோனே"**[20]

என்ற புறநானூற்றுப் பாடலும் வடக்கிருந்தல் நிகழ்ச்சியை விளக்குகிறது. சேரமான் பெருஞ்சேரலாதனும், சோழன் கரிகாற் பெருவளத்தானும், வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் போர் செய்தனர். அப்போரில் சேரமான் பெருஞ் சேரலாதன் முதுகில் புறப்புண் ஏற்பட்டது. புறப்புண் ஏற்பட்டதால் துயரமடைந்து உண்ணாவிரதம் இருந்து வடக்கிருந்து உயிர் விட்டான். இந்த வரலாற்றுச் செய்திதான் கழாத்தலையார் மூலமும், வெண்ணிக்குயத்தியர் மூலமும் புறநானூற்றில் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆகவே, இந்த வடக்கிருத்தல் பண்பு மூலம் சமணசமயம் தமிழகத்தின் மன்னர்கள் வரை பெரிய அளவில் தாக்கத்தை ஏற்படுத்தியதைப் புரிந்து கொள்ள முடிகிறது. அது போன்றார்களிடம் சமண சமயத்தின் தாக்கம் பெரியதளவில் ஏற்பட்டதை அவர்களின் பாடல்கள் வழி அறிய முடிகிறது. எனவே சங்க காலத் தமிழகத்தில் மன்னர்களிடையேயும், புலவர்களிடையேயும் சமணம் பெருமளவு

தாக்கத்தை உண்டு மட்டுமின்றி சங்கப் புலவர்களான பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார், பொத்தியார், கண்ணகனார், கரூவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூத நாதனார் போன்றோர் சமணம் சார்ந்து இருந்ததை அறிய முடிகிறது.

## ஊழ்வினை அல்லது கன்மவினை

தமிழகத்தில் சமண சமயம் ஊழ்வினைக் கொள்கையை முதன்மைப்படுத்தியே அமைகிறது. தமிழகத்தில் பௌத்தம் நிலையாமையை முதன்மைப்படுத்தியே அமைகிறது. ஒருவன் செய்யக்கூடிய செயல்களின் பலன்களை அதே பிறவியிலும், அடுத்து வரக்கூடிய பிறவிகளிலுமாக அனுபவிப்பது ஊழ்வினை எனப்படுகிறது. ஒரு செயலின் நோக்கம், அந்தச் செயலின் பலன், அப்பலனை அனுபவித்தல் ஆகியவை கரும வினை என்று விளக்கப்படுகின்றன.

இந்த ஊழ்வினையை அல்லது கரும வினையை கன்மம் என்று சமணம் குறிக்கிறது. சமணர் பிறப்புப் பலவென்றும், ஒரு சிறப்பின் கன்ம பலன்களுக்கு ஏற்ப மறுபிறப்பு அமைகின்றதென்றும் கொள்வர். இதனை வைதீகரும் ஒத்துக் கொள்வர். ஆனால், வைதீகர் அவரவர் செய்த கன்மங்களின் பலன்களை அவரவர் அனுபவிக்கும்படி செய்வது கடவுளின் தொழில் என்பர். ஆனால், சமணர் கடவுள் ஒருவர் உள்ளார் என்பதை ஏற்காதவர்கள். சீவன்களை அவற்றின் கன்ம பலன்களைப் அனுபவிக்கச் செய்ய ஒரு கடவுள் வேண்டாம். கன்மங்கள் தாமாகவே தத்தம் பயன்களைத் தரவல்லன என்பது சமணர் கொள்கை. தத்துவ ஞானிகளுள் கன்மத்தை ஒரு பௌதீகப் பொருளாக, ஒரு சடப்பொருளாகக் கொள்பவர் சமணரைத் தவிர்த்து வேறு எவரும் இல்லை. சமணர் மட்டுமே கன்மத்தை சடப்பொருளின் சூக்குமமான நுண்துகள்களாக, நுண் அணுக்களாகக் கொள்வர். இது புற்கல இயல்பாகும். அது தொழில்படுவதற்கேற்ற அதிசூக்கும பௌதீகப் பொருள் பிரபஞ்சம் எங்கும் நிறைந்துள்ளது. கன்மம் இரு வகையானது. ஒன்று சீவனோடு ஒன்றுபட்டது. இதற்கு பாவகன்மம் என்று பெயர். மற்றது உடலோடு சேர்ந்தது. இது திரவிய கன்மம் எனப்படும். இந்த உடலில் நீங்கும் போது கூடக் கன்மம் சீவனைவிட்டு நீங்குவதில்லை. சீவன் மோட்சம் அடையும் வரை கன்மம் சீவனோடேயே இருக்கும். உடலைவிட்டுப் பிரிந்த சீவனுக்குக் கன்மம் ஒரு சாரீரமாக அமைந்து விடுகின்றது. அதனைத் கர்மவினை சாரீரம் என்பர் சமணர். மறுபிறப்பு எடுக்கும் வரையே சீவன் இக்கர்ம சாரீரத்தோடு உலாவும். சமணர் கருத்துப்படி கன்மம் ஒரு சாரீரம் மட்டுமன்று அது சீவனோடு இரும்பும் சூடும் போலவும், நீரும் பாலும் போலவும் எங்கும் செறிந்து, கலந்து அச்சீவனை மாசுபடுத்தும் இயல்புடையது.

கன்மம் சீவனுக்குள் சென்று செறிதல் ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. வீடு பேற்றை அடைய வேண்டுமானால் பின்பற்ற வேண்டியவை இரண்டு உள்ளன. புதுக்கன்மம் ஏற்படாதவாறு நிறுத்துவது ஒன்று. இதனைச் சமுவரம் என்பர். மற்றது ஏற்கனவே சேர்ந்த கன்ம ஈட்டத்தை அழிப்பது, இதனை நிர்சீசரம் என்பர். புதுக்கன்மத்தைத் தடுப்பது பழம் கன்மத்தை அழிப்பது ஆகிய இரண்டையும் சாதிப்பதற்குரிய சாதனங்கள் மூன்று. அவை;

1. **சரியான கொள்கை**
2. **சரியான ஞானம்**
3. **சரியான சீலம்**

இவை மூன்றையும் சமணர் மூன்று இரத்தினங்கள் என்பர். இவற்றுள் சரியான சீலம் என்பது மிக முக்கியமானது. இதனை அடைய ஐந்து விரதங்கள் பேசப்படுகின்றன. துறவிகளுக்குக் கடும் விரதங்களையும் (மகா விரதம்) இல்லறத்தார்க்கு சற்று இலகுவான விரதங்களையும் (அனுவிரதம்) கடைபிடிக்க வலியுறுத்துகிறது. ஐந்து விரதங்களில் தலையாய விரதம் அகிம்சை. இதனடிப்படையில் ஊழ்வினை சமண சமயத்தின் மிக முக்கிய கொள்கையாக அமைகிறது.

**சங்கப்பாடல்களில் ஊழ்வினை**

சங்க காலத் தமிழர் ஊழ்வினையை பால், முறை, ஊழ், விதி எனத் குறிப்பிட்டு வந்துள்ளனர். இவற்றுள் 'பால்' என்னும் ஊழ்வினையைக் குறிக்கும் சொல் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தொல்காப்பியரும் 'பால்' என்ற சொல்லையே குறிப்பிட்டுள்ளார். 'பால் வரை தெய்வம்' என்ற ஒன்றினையும் சுட்டுகின்றார். இதற்கு விளக்கமாக சேனாவரையர்,

> **"பால்வரை தெய்வமென்பது எல்லார்க்கும்**
>
> **இன்பத் துன்பத்திற்குக் காரணமாகிய**
>
> **இருவினையும் வகுப்பது"**[21]

என்று கூறியுள்ளார்.

தலைவனும், தலைவியும் எதிர்பட்டுக் காதல் கொள்வதற்கு ஊழ்வினையே காரணம், அவர்களுடைய ஊழ்வினைதான் அவர்களைச் சந்திக்க வைக்கிறது என்பதை தொல்காப்பியர்,

**"ஒன்றே வேறே என்று இரு பால்வயின்**

**ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்**

**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**

**மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே"**[22]

ஒருவனும், ஒருத்தியுமாய் இருந்து இல்லறம் மேற்கொண்ட விடத்து மறுபிறப்பில் அவ்விருவரையும் ஒன்றுபடுமாறும் அல்லது வேறுபடுமாறும் ஆகிய இருவகையான ஊழின் தன்மையிலும் அவ்விருவர் உள்ளமும் பிறப்புத்தோறும் ஒன்றி, நல்வினைக்கண் நிகழ்ந்த ஊழினிது ஆணையின் வழிமுறையால், பிறப்பு முதலாகிய பத்துக் குணங்களினாலும் தலைவனும் தலைவியும் எதிர்ப்படுவர். ஒத்த தன்மையில் தலைவன் மிகுந்து விளங்கினாலும் குற்றமில்லை என்று தலைவனும், தலைவியும் காதல் வயப்படுவதற்கு ஊழ்வினையே காரணம் என்று தொல்காப்பியர் விளக்கம் தருகிறார். சங்கப் பாடல்களிலும் ஊழை வலியுறுத்தி பல பாடல்கள் வந்துள்ளன.

**"யாதும் ஊரே, யாவரும் கேளிர்;**

**தீதும் நன்றும் பிறர்தர வாரா;**

**.................................................**

**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"**[23]

என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடல் ஊழ்வினை என்கிற கன்மத்தை விளக்கவந்தப் பாடலாக உள்ளது. எல்லா ஊரும் எம் ஊரே, எல்லோரும் எமது உறவினரே, தீமையும், நன்மையும் பிறர் தருவதால் நமக்கு வருவதில்லை. துன்பத்தில் வருந்துவதும், இன்பத்தால் மகிழ்ச்சியடைவதும் நம் கையில் இல்லை. வானத்திலிருந்து மழை பெய்வதால் மலையிலே மழை பெய்து அருவியாகப் பெருக்கெடுத்து ஆறாக ஓடி வருகிறது. அவ்வாறு ஓடிவரும் வெள்ளத்தில் மிதந்து வருகின்ற தெப்பம் தண்ணீரின் போக்குப்படியே மிதந்து செல்லும். அதுபோல நம் உடலில் உள்ள உயிரும் ஊழ்வினைப்படியே இயங்கும், தீமை வருவது, நன்மை வருவது இன்பதுன்பங்களை அனுபவிப்பது, ஏழையாவது, பணக்காரர் ஆவது ஆக எல்லாமே ஊழ்வினை வலிமையால் தான் நடைபெறுகின்றன என்றும்; அதனால் உயர்ந்தோரை வியந்து பாராட்டுவதும் தேவையில்லை, தாழ்ந்திருப்போரை இகழ்ந்து ஒதுக்குவதும் தேவையில்லை என்று கூறுகிறது இப்பாடல், இன்று உலகம் முழுவதும் வணிகம் செய்வோருக்கு ஏற்ற கொள்கை விளக்கமாகவும் இப்பாடல் அமைகிறது. இது தமிழுக்கும், தமிழருக்கும் பெருமை

சேர்ப்பதாகும். சமணம் தமிழுக்குத் தந்த பெருங்கொடை இப்பாடல் என்றால் அது மிகையாகாது. இதைப்போலவே,

**"கோடியர் தலைவ கொண்டது அறிந**

**அறியாமையின் நெறிதிரிந்து ஒரா அது**

**ஆற்றெதிர்ப் படுதலும் நோற்றதன் பயனே"**[24]

பொருநனே உன்னை நான் வழியில் சந்திக்கும்படி செய்தது உன்னுடைய ஊழ்வினைப் பயன் என்னும் கருத்தைத் தாங்கி இப் பொருநராற்றுப்படை பாடல் வரி அமைகின்றது.

**"ஏனை உலகத்தும் இயைவதாய் நமக்கென**

**மானமர் நோக்கம் கலங்கிக் கையற்று"**[25]

என்ற குறிஞ்சிப்பாட்டுப் பாடல் ஊழ்வினையின் வலிமையால் தன்னுடைய தலைவனுடன் மறு உலகத்தில் இணையக்கூடிய வாய்ப்பு தனக்கு உண்டு எனத் தலைவி ஒருத்தி எண்ணுவதாக இப்பாடல் வரி விளக்குகிறது. ஒருவர் முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளுக்கேற்ப பிறப்பில் இப்பிறப்பில் இன்ப, துன்பங்கள் நிச்சயிக்கப்படுகின்றன என்பதை,

**"யாம் செய் தொல்வினைக் கெவன்பே துற்றனை**

**வருந்தல்; வாழி! தோழி…"**[26]

என்ற நற்றிணைப் பாடல் வரி ஊழ்வினையின் வலிமையை வலியுறுத்துகிறது. மேலும்,

**"இவனிவள் ஐம்பால் பற்றவும் இவளிவன்**

**புன்றயை யோரி வாங்குநள் பரியவும்**

**…………………………………………………**

**மணமகி ழியற்கை காட்டி யோயே"**[27]

இளமையில் செவிலியர் தடுக்கவும் விலகாமல் சண்டையிட்டுக் கொண்டிருந்த தலைவன்; தலைவியை இரட்டை மலர் மாலைபோல இன்று இல்லறத்தில் ஈடுபடுத்தியது ஊழே என்று குறுந்தொகை கூறுகிறது.

ஒருவன் அரசுரிமை எய்தியதற்கு ஊழே காரணம் என்பதை,

**"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**

**பாற்றர வந்த பழவிறற் றாயம்**

**எய்தின மாயி னெய்தினஞ் சிறப்பென"**[28]

என்ற புறநானூற்றுப் பாடல் வழி அறியலாம்.

ஒவ்வொருவரும் வாழ்வதற்குரிய நாள் முன்னரே விதியால் வரையறை செய்யப்பட்டுள்ளது என்பதை,

**"......புகழொடுங் கழிகளும் வரைந்த நாளென"**[29]

என்று மலைபடுகடாம் கூறுகிறது. முன்பு ஒருவரையொருவர் அறியாதத் தலைவன், தலைவியை மெய்யுறு புணர்ச்சிக்கு கூட்டியது ஊழே என்பதை,

**"காதற் காமம் காமத்துச் சிறந்தது**

**விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி"**[30]

என்று பரிபாடல் அடிகள் கூறுகிறது. மெய்யுறு புணர்ச்சிக்கு கூட்டிய ஊழே அவளைத் திருமணம் புரிந்து கொள்ளவும் துணை நிற்கும் என்பதனை,

**"பொன்னிறம் விரிவும் பூக்கெழு துறைவனை**

**என்னை என்றும் யாமே இவ்வூர்**

**பிறிதொன் றாகக் கூறும்**

**ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே"**[31]

என்று ஐங்குறுநூறு பாடல் வரிகள் கூறுகின்றன. இப்பிறப்பில் நண்பர்களாக கூடி இன்புற்றிருந்தவர்களை மறுபிறப்பிலும் கூடி இன்புறச் செய்வதும் ஊழேயாகும் என்பதை,

**"இம்மை போலக் காட்டி யும்மை**

**இடையில் காட்சி நின்னொடு**

**உடனுறை வாக்குக வுயர்ந்த பாலே"**[32]

என்று புறநானூற்றுப்பாடல் கூறுகிறது.

இவ்வாறு சமண சமயம் சங்கப்பாடல்களில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்கு பிறகு புறப் பாடுபொருள்களில் பெரும் தாக்கத்தை உண்டு பண்ணியது. அதுவரை ஊழ்வினை, நிலையாமை, அறம், நல்வினை, தனிமனித ஒழுக்கம், உயிர்க்கொலை புரியாமை, புலால் உண்ணாமை, வீடுபேறு என்கிற மோட்சம் போன்றவற்றைப் பேசாத வைதீகத்தைப் பேச வைத்தது சமண சமயத்தின் மாபெரும் வெற்றியாகும்.

## பௌத்தம் ஓர் அறிமுகம்

உலகின் பெரிய சமயங்களில் ஒன்றாகவும் ஆசியாவின் மிக உயர்ந்த சிந்தனைமிக்கத் தத்துவமாகவும் பௌத்தம் விளங்குகின்றது. அதனாலேயே பௌத்த மதத்தைத் தோற்றுவித்த கௌதம புத்தர் 'ஆசிய ஜோதி' என்று அழைக்கப்பட்டார். கி.மு.ஆறாம் நூற்றாண்டில் இமயமலைச் சாரலிலுள்ள கபிலவஸ்துவில் சுத்தோதன மன்னருக்கும், மாயோ தேவிக்கும் மகனாக அவதரித்தார் புத்தர். வாழ்வினுடைய நிலையாமையைக் கண்டும், துன்பங்களையும் கண்டு மனம் மறுகி துன்பத்தை நீக்கும் நிர்வாண முக்தி நிலையை அடைய தன் இளமையான மனைவி யசோதரையையும், தன் குழந்தை ராகுலனையும் பிரிந்து துறவு பூண்டார். சமண, ஆசீவக, வைதீக மதக்குருக்களைச் சார்ந்து நோன்பிருந்து உடலை வருத்தித் தவம் செய்து ஒரு பயனும் இல்லையென உணர்ந்து கொண்டார். தம்மில் தாமே ஆராய்ந்து உலக இயல்பினை உணர்ந்து, காரண காரியக் கோட்பாட்டைத் தேர்ந்து, புதிய ஞானம் பெற்றார். மனித குலம் முழுவதையும் நேசிக்கும் அன்பும் அருளும் பரிவுணர்வும் மிக்க புதுநெறியை உபதேசம் செய்தார். புத்தரின் வாழ்க்கை வரலாற்றை **'லலித விஸ்தரம்'**, அசுவ கோசரின் கி.பி.முதலாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட புத்த சரிதம், சௌந்தர நந்தம் போன்ற வடமொழி நூல்கள் விரிவாக விளக்கிக் கூறுகின்றன. புத்தரின் சீடர்கள் சாரிபுத்திரர், மௌத் கல்யாயனர், காசியபர், ஆனந்தர் முதலிய பேரறிஞர்கள் ஆவார்கள். புத்தரும் அவரது சீடர்களும் தமது ஞான உபதேசத்தை மக்கள் மொழியாக விளங்கிய மகத மொழியில் உபதேசித்தனர். அம்மொழியே பிற்காலக்கில் **'பாலி'** என்ற பெயரைப் பெற்றது. புத்தர் பரிநிர்வாணமடைந்த பிறகு, அவர் தம் சீடர்களோடு உரையாடிய செய்திகளும், நிகழ்ச்சிகளுக்கான உபதேசங்களும் பாலி மொழியில் அவரது மறைவுக்குப் பின் தொகுக்கப்பட்டன. முதன்முதலில் பீகார் மாநிலத்திலுள்ள நளந்தாவுக்கு அருகில் ராஜகிருகம் எனும் பிம்பிசார மன்னனின் தலைநகரில் சபை கூடியது. அஜாத சத்துருவின் தந்தை பிம்பிசாரன், புத்தர் நிர்வாணமடைந்த சில ஆண்டுகள் கழித்து மகா காசிபர் தலைமையில் பிட்சுகள் கூடி, புத்தரின் உபதேங்களை இங்கே தான் தொகுத்தனர். பிறகு இரண்டாவது தடவையாக சில நூற்றாண்டுகள் கழிந்த பிறகு **'வைசாலி'** நகரத்தில் சர்வ காம மகாதேரர் தலைமையில் எழுநூறு பிட்சுக்கள் அமர்ந்து, ஆராய்ந்து திரிபிடகங்களைத் தொகுத்தனர். மூன்றாவது முறையாக சாம்ராட் அசோகன் புத்த மதத்தை ஏற்று அம்மதத்தைப் பரப்புரை செய்த காலத்தில் மொக்கலிபுத்ததிஸ்ஸ என்ற பிட்சுவின் தலைமையில் ஆயிரம் பிட்சுகள் கூடி அபிதம்ம பிடகத்தைத் தொகுத்தார்கள். இத்திரிபிடகங்களும் பாலிமொழியில் அமைந்தவையாகும். அவற்றைப் பிட்சுக்கள் கர்ண

பரம்பரையாக வேதத்தைப் போலவே பாதுகாத்து வந்தனர். கி.பி.முதலாம் நூற்றாண்டில் இலங்கையில் 'ஆலுவேன' எனும் இடத்தில் வட்டகாமினி அரசன் ஆதரவில் கூடிய பிட்சு சபையால் திரிபிடகங்களை எழுத்துருவில் பதிப்பித்தனர். இதுவே இன்று கிடைக்கும் திரிபிடகங்களின் மூலமாகும். கி.பி.முதலாம் நூற்றாண்டில் நாகர்ஜூனர் மாத்ய மிகவாதம் தோற்றுவித்தார். கி.பி.நான்காம் நூற்றாண்டில் அசகர், வசுபந்து எனும் பௌத்த பேராசிரியர்களான சகோதரர்கள் இருவரும் விஞ்ஞான வாதம் எனும் பிரிவினைத் தோற்றுவித்தனர். பௌத்தம் கி.பி.முதலாம் நூற்றாண்டு அளவில் மகாயானம், ஹீனாயானம் என்று பிரிவுற்றது. மகாயான பௌத்த நூல்கள் சமஸ்கிருத மொழியிலும் ஹீனாயான பவுத்த நூல்கள் பாலி மொழியிலும் உள்ளன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் திக்நாதர், தரும் கீர்த்தி போன்றோர் தருக்கத்தில் சிறந்து விளங்கி பல சிறந்த நூல்கள் யாத்துள்ளனர். திரிபிடகம் (மூன்று கூடைகள்) முழுவதற்கும் 'அட்டகதா' எனப்படும் விளக்க உரைகள் இயற்றப்பட்டுள்ளன.

### பௌத்தத் தத்துவம்

> **"நாகார்ஜூனரின் மத்யமிக சாஸ்திரம், விக்கரஹ வியாவர்த்தனி அசகரின் மஹாயான சூத்ராலங்காரம், வசுபந்துவின் அபிதரும் கோசம், விக்ஞய்திமாத்ரதாசித்தி தரும் கீர்த்தியான பிரமாணவார்த்திகள் இரத்தின கீர்த்தி, சர்வக்ஞசித்தி, ஈஸ்வரசாதனதூஷணம், கணபங்க சித்தி மற்றும் சாந்தி ரக்ஷிதரின் தத்வசங்கிரகம் முதலிய சமஸ்கிருத மொழியிலுள்ள தத்துவ நூல்களும், புத்த கோசரின் விசுத்திமங்கள் முதலிய பாலி நூல்களும் கி.மு.முதலாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற கிரேக்க மன்னன் மினான்டருக்கும், நாக சேனர் என்ற பிட்சுவுக்கும் நடந்த உரையாடலாக அமைந்த மலிந்த பண்ஹா (மினாட்டரின் கேள்விகள்) என்ற நூலும் பௌத்த தத்துவத்தின் சிறந்த நூல்களாக மதிக்கப் பெறுகின்றன"**[33]

என்னும் மேற்கோள் காலத்திற்கேற்ற வகையில் பௌத்தம் தம் தத்துவத்தைச் செம்மைப் படுத்தி வளர்ச்சிப் பெற்று வந்துள்ளது என்பதை அறியலாம். இதற்கெல்லாம் புத்தரின் மூல உபதேசம் அடிப்படையாக அமைந்தன. பௌத்த தத்துவம் தருக்கத்தை அடிப்படையாகக்

கொண்டது. பௌத்த தத்துவத்தில் இறைமைக் கோட்பாடு இல்லை. உலகையோ, உயிர்களையோ படைத்தக் கடவுள் என்ற ஒரு தத்துவம் சமணத்தைப் போலவே பௌத்தத்திலும் இல்லை. ஆனால் பிற்காலத்தில் புத்தரையே கடவுளாக்கிவிட்ட நிலையை மகாயானத்தில் காண்கிறோம். பௌத்தம், காரண காரியவாதத்தை அடிப்படையாகக் கொண்ட தத்துவம் ஆதலால், காட்சி (பிரத்தியட்சம்), கருதல் (அனுமானம்) ஆகிய அளவைகளை ஏற்கும் சப்தபிரமானம் என்னும் உறையளவையை ஏற்பதில்லை. புத்தர் தம் சீடர்களுக்கு தான் சொன்னதைக் கூட பகுத்தறிந்து ஏற்றுக் கொள்ள வேண்டுமே தவிர என் மேலுள்ள கௌரவத்தாலோ, பற்றினாலோ ஏற்கக்கூடாது என்றே கூறியுள்ளார். மேலும் அப்பாலைத் தத்துவம் சம்பந்தப்பட்ட புலன் கடந்த கேள்விகட்கு மவுனம் சாதித்து அவை தேவையற்ற ஆய்வு என்று கூறினார். இவ்வுலக வாழ்வை நேசித்து மனிதன் துன்பத்திலிருந்து விடுதலைப் பெற்று அனைவரும் நலமுடனும், இனிதாகவும், அருள் உணர்வோடும் வாழ வேண்டும் என்று போதித்தார்.

**கணபங்க வாதம்**

ஒவ்வொரு கணமும் பொருள் அழிகின்றது. ஆதலால் நிலைபேறுடைய பொருளோ, உலகமோ, ஆத்மாவோ, கடவுளோ இல்லை. நாம் ஓர் ஆற்றைப் பார்க்கிறோம். ஆற்றில் நீர் இருப்பது போல் தோன்றுகிறது. ஆனால் அது பிரவாகமாக ஓடிக்கொண்டிருக்கிறது. நிலைத்திருப்பதில்லை. ஆற்றில் ஓரடி எடுத்து வைத்து மற்றோரடி வைக்கும் முன்பே, முன்புள்ள நீர் சென்று புதிய நீர் வருகிறது. அகல் விளக்கில் சுடர் எரிவதாகத் தோன்றுகிறது. உண்மையில் ஒவ்வொரு கணமும் சுடர் தோன்றியழிந்து கொண்டே இருக்கிறது. நமது உடலும் கணந்தோறும் தோன்றியழிந்து மீண்டும் தோன்றி வளர்சிதை மாற்றத்தால் தொடர் நிகழ்வாக உள்ளது. ஆனால் நாம் அதை உணர்வதில்லை, முட்டையில் கணந்தோறும் மாற்றம் நிகழ்ந்தாலும் நமக்குத் தெரிவதில்லை. திடீரென்று குஞ்சு வெளிவரும்போது மாற்றம் நிகழ்ந்தது என்று நினைக்கிறோம். மனித உடலும் குழந்தை, இளமை, முதுமை என மாறி மரணத்தில் முடிகிறது. மீண்டும் அது வேறொரு உருவத்தை அடைகிறது. இந்தப் பிறவிச் சூழலை சம்சாரம் என்பர். இந்தவிதமான மனிதனும், இவ்வுலகமும் மாற்றமடைவதே உண்மை. நிலைபேறு என்பது எதுவும் இல்லை. ஆன்மா கூட மாறும் வஸ்துவேயன்றி வேதாந்திகள் கூறுவது போன்ற நிலைபேறான பொருள் அன்று. ஆனால், சமணம், வைதீகம், ஆன்மா என்ற ஒன்று நிலைபேறுடையது என்பதை ஏற்றுக் கொள்கின்றன. சாருவாகர்கள் ஜடப் பொருள் அன்றி தனித்த ஆன்மா என ஒன்றில்லை என்பர். ஜடப்பொருளின் பரிணாமமே ஆன்மாகவப் புலப்படுகிறது என்பது அவர்கள் கருத்து.

ஆனால், பௌத்த சமயம் அத்தகைய ஜடப்பொருள் தத்துவமாக அதன் பரிணாமமாக ஆன்மா உள்ளதாகக் கூறவில்லை. பௌத்தம் அனாத்மா வாதம் பேசுகிறது. மாற்றமே உண்மையாதலால் மாறும் தன்மையுடைய வைதன்னிய உணர்வை மட்டுமே ஏற்கிறது. சமண பரிபாஷையில் 'புத்கலம்' என்பது ஜடப்பொருள் என்று பொருள்படுகிறது. பௌத்தத்தில் 'புத்கலம்' என்பது மனித ஜீவன், பிராணி என்று பொருள், அதுவும் மாற்றம் உடையதே. இம்மனிதன் பல பிறவி எடுப்பதாக பௌத்த நூல்கள் கூறுகின்றன. புத்தரே பல பிறவி எடுத்ததாகவும் புத்த ஜாதகக் கதைகள் மூலம் தம் முற்பிறவிகள் தமக்குத் தெரியும் என்று கூறியதாகக் கூறப்படுகிறது. ஆகையால் பௌத்தத்தின் சிறப்புக் கோட்பாடான நிலைபேறு (சத்) என ஒன்றில்லை. எல்லாமே மாற்றமே என்ற கணபங்க வாதத்தின் அடிப்படையில் தான் பௌத்தம் கட்டப்பட்டுள்ளது. இது இயக்கவியல் பொருள் முதல்வாதத்திற்கு நெருங்கிய கருதுகோளாக அமைகிறது. மாற்றம் மட்டுமன்றி மாற்றத்திற்குரிய ஒரு அடிப்படையான மெய்ப்பொருட்கள் புத்கலம்(ஜடம்), ஜீவன்(ஆன்மா) என இருநிலையான சத்வஸ்துக்கள் உள்ளதாக சமணமும், சாக்கியமும் கூறுகின்றன. வேதாந்தமோ நிலையான ஆன்மப்பொருளான சத்வஸ்து மட்டுமே உள்ளது என்று கூறுகிறது. ஆனால் பௌத்தம் மட்டும் ஜடமோ, ஆன்மாவோ எதுவுமே என்றுமுள்ள சத்வஸ்துவாக இல்லை என்று கூறுகிறது. ஆனால் மாற்றம் மட்டும் இருப்பதாகக் கூறுகிறது.

## பிரதித்ய சமுத்பாதம்

பௌத்தத்தின் மற்றொரு சிறப்புக் கோட்பாடு பிரதீத்ய சமுத்பாதம் எனப்படும். இது கணபங்கவாதத்தில் விளைந்த கருதுகோளாகும், இது உலக இயக்கத்திற்கு அளிக்கும் புதிய விளக்கமாக அமைந்திருக்கிறது. உலகைப் படைக்கும் கடவுளும் இல்லை. நிலைபேறுடைய ஆன்மாவும் இல்லை. ஆனால் உலகில் இயக்கம், படைப்பு. வாழ்க்கை, பிறவிச் சுழல், இன்பதுன்பங்கள் எல்லாம் உள்ளன. இதற்கு புத்தர் பிரதீத்ய சமுத்பாதக் கோட்பாட்டின் மூலமே விளக்கம் தருகிறார். இதுவே காரண காரிய வாதமாகும். காரணம் என்பது காரியத்திற்கான தூண்டுகோள். ஒரு காரியத்திற்கு எது தேவைப்படுகிறதோ அதுவே காரணமாகும். ஒரு காரியமே மற்றொரு காரியத்திற்கு காரணமாகும். பிரதீத்யம் என்றால் முன்னால் இருப்பது என்று பொருள், சமுத்பாதம் என்றால் அதிலிருந்து பிறப்பது. அதாவது முன் இருக்கும் பொருள் அழிந்து, அதிலிருந்து பின் வந்த பொருள் தோன்றுவது என்பது கருத்து. மண் அழிந்து குடம் ஆகிறது. விதை அழிந்து செடியாகிறது. ஒவ்வொரு காரியத்திற்கும், பொருளுக்கும், நிகழ்ச்சிக்கும் அதன் முன்னைய நிலையே காரணம். இக்காரண காரியத் தொடர்புடைய சார்புடைய தத்துவத்தை பன்னிரு நிதானங்களாகப்

பௌத்தம் பகுத்துள்ளது. நிதானம் என்பது காரணம் என்றே பொருள்படும். அவை அவித்தை, சமஸ்காரம், விஞ்ஞானம், நாமரூபம், சடாயதனம், பரிசம், வேதனா, கிருஷ்ணா, உபாதானம், பவம், ஜாதி, ஜராமரணம் என்னும் பன்னிரெண்டு நிதானங்களாகும்,

இதனைச் சீத்தலைச் சாத்தனார் மணிமேகலையில் தமிழ்ப்படுத்தியுள்ளார்.

**"பேதைமை, செய்கை, யணர்வே, யருவுரு**

**வாயிலூறே, நுகர்வே, வேட்கை**

**பற்றே, பவமே, தோற்றம், வினைப்பயன்**

**இற்றென வகுத்த இயல்பீராறும்"[34]**

இந்த பனிரெண்டில் பேதைமை, செய்கை இரண்டும் முதல் கண்டம் எனவும், உணர்வு, அரு உரு, வாயில், ஊறு, நுகர்வு எனும் ஐந்தும் இரண்டாம் கண்டம் எனவும், வேட்கை, பற்று, பவம் என்னும் மூன்றும் மூன்றாம் கண்டம் என்றும், தோற்றம், வினைப்பயன் என்னும் இரண்டும் நான்காம் கண்டம் என்றும் பகுத்துரைக்கப்படுகிறது. இந்தச் சங்கிலித் தொடர் போன்ற பன்னிரு நிதானங்களும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. வினைப்பயன் ஆகிய இறுதிக் காரணமாகிய வாழ்க்கைக்குக் காரணம் பிறப்பேயாகும். பிறப்பு இல்லையென்றால் வினைப்பயனும் இல்லை. இந்த பிறப்புக்கே காரணம் பவம் ஆகும். பவம் என்பது உயிர்களின் தோற்றத்தைக் குறிக்கும். பவம் இல்லாவிட்டால் பிறப்புமில்லை. பவம் ஏன் ஏற்பட்டது என்றால் பற்றினால் ஏற்பட்டது. பற்றுக்குக் காரணம் வேட்கையாகும். அதற்குக் காரணம் பரிசம், அதற்குக் காரணம் சடாயதனம் (ஐம்புலன்களும் மனமும்) ஆகும். அதற்குக் காரணம் நாமரூபம் (பெயரிட்டழைக்கப் பெறுவதும், உருவமுடைய உலகப்பொருள்கள், உயிர்கள்) ஆகும். அதற்குக் காரணம் விஞ்ஞானம் (அறிவு, உணர்வு) ஆகும். அதற்குக் காரணம் செய்கை ஆகும். அதற்குக் காரணம் அவித்தை (பேதமை) ஆகும். இந்தக் காரணங்கள் நீங்கினால் காரியங்களும் நீங்கும். இது இல்லாவிட்டால் இதுவும் இல்லை. பிறவி இல்லாவிட்டால் வினைப்பயன் இல்லை. இந்தக் காரண காரியத் தொடர்பான சார்புக் கொள்கை புத்தரின் மேலான பகுத்தறிவார்ந்த சிந்தனைத் திறனைக் காட்டுகிறது.

## ஐந்து கந்தங்கள்

உயிர்கள் எல்லாம் ஐந்து கந்தங்களின் சேர்க்கையால் அமைந்தவையென்று பௌத்தம் கூறுகிறது.

**"உருவு, நுகர்ச்சி, குறிப்ப, பாவனை,**

**உள்ள அறிஇலை ஐங்கந்தமாவன"[35]**

என்ற சீத்தலைச் சாத்தனார் கூற்றுப்படி ரூபம், வேதனை, சம்ஞை, ஸ்ம்ஸ்காரம், விஞ்ஞானம் என்பவை அவை ரூபஸ் கந்தம். உருவுடைய பௌதீக வஸ்துக்களாகிய நிலம், நீர், காற்று, தீ எனும் நான்கு பூதங்கள் ஆகும். ஆகாயம் பூதம் என்று பௌத்தர்கள் ஏற்பதில்லை. இந்த நான்கு பூதத்தால் ஏற்படும் உருவங்களும், ஐந்து புலன்களும் ரூபகந்தமாகும். வேதான் ஸ்கந்தம் ஐந்து புலன்கள் மூலமாக ஏற்படுகின்ற உணர்வு சம்ஸ்காரஸ்கந்தம், மனம், வாக்கு காயமாகிய முக்கரணங்களாலும் செய்யப்படும் வினையாற்றும் பரிபாக நிலையாகும். விஞ்ஞானஸ்கந்தம்; புலன் அறிவுக்கு ஆதாரமாக நான் எனும் உணர்வோடு கூடியிருக்கும் அடிப்படையான ஞானத் தத்துவமாகும். இந்த ஐந்து ஸ்கந்தங்களின் கூட்டுறவே உயிர் வாழ்க்கை. இந்த ஐந்து ஸ்கந்தங்களும் இல்லாவிட்டால் தனியாக ஆன்மா என்ற பொருளும் இல்லை. மனிதன் மரணமடையும் போது இந்த ஐந்து ஸ்கந்தங்களும் தங்களுடைய மூலச் சேர்க்கைகளில் பிரிந்து போய் விடுகின்றன. அவனது நல்வினை, தீவினைகளாகிய செயல்கள் விஞ்ஞானஸ்கந்தத்தில் வித்துப்போல உள்ளடங்கியிருந்து பின் மறுபிறப்பில் மீணடும் நான்கு ஸ்கந்தங்களோடு கூடி புதுப்பிறவியைத் தருகிறது. இது ஒரு பிறவிச் சூழல் தொடர்ச்சி என்று பௌத்தம் கூறுகிறது.

**நான்கு வாய்மைகள்**

உலக வாழ்க்கையை நுண்ணிதின் ஆய்ந்து உடலாலும் உள்ளத்தாலும் ஏற்படும் துன்பங்களை நீக்கி மன அமைதியுடைய இன்பம் பெறுவதே புத்தரின் நோக்கமாகும். துக்கம் உடையது எது? அதற்கு காரணம் யாது? அதனை நீக்கும் வழி யாது? என்பதை ஆரிய சத்தியம் என்பர். துக்கம், துக்கோற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் எனும் நான்கும் உயர் வாய்மைகள் ஆகும். இங்கு துக்க நிவாரணமே நிர்வாணம் எனப்படுகிறது.

**துக்கம்**

பிறவித் துன்பம், பிணிமூப்பு, மரணம் ஆகிய துன்பங்கள் பிரிவுத் துன்பம், பகைமைத் துன்பம், விரும்பியது பெறாமையால் துன்பம் என உலகம் துன்பங்கள் நிறைந்தது.

### துக்க உற்பத்தி

இந்த துன்பங்களுக்கு காரணம் பற்று ஆகும். இதுவே பிறப்புக்கும் காரணம் ஆகும். புலனின்ப நாட்டம், தான் நிலைத்து வாழ விருப்பம் முதலிய ஆசைகள் துக்க உற்பத்திக்கு காரணமாகும்.

### துக்க நிவாரணம்

ஆசையை ஒழித்தலே துக்க நிவாரணம் ஆகும். துக்க நிவாரணம் நிர்வாணம் எனப்படும். எல்லா வகைத் துன்பங்களிலிருந்தும் விடுபடுவதே நிர்வாணம்.

### துக்க நிவாரண மார்க்கம்

துக்கத்திலிருந்து விடுபடும் பெரும் வழியே ஆரிய அட்டாங்க மார்க்கம் எனப்படும். இது எட்டு உறுப்புகளை உடையது. 1.நல்காட்சி, 2.நல்லெண்ணம், 3.நல்லுரை, 4.நற்செயல், 5.நல்வாழ்முறை, 6.நல்முயற்சி, 7.நல்லூற்றம், 8.நல்சமாதி என்பதாகும். கொல்லாமை, திருடாமை, பொய்யாமை, பிரம்மச்சாரியம், மது முதலிய போதைகளைத் தவிர்த்தல் எனும் பஞ்சசீலத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும், பஞ்சசீலம் எல்லா சமயத்தாரும் ஏற்கும் அறமாகும். போதி ஞானம் பெற ஏழு அங்கங்களைப் பின்பற்ற வேண்டும். போதி ஞானத்தைப் பெறத் தடையாக உள்ள பஞ்ச நவரனங்களை நீக்க வேண்டும். இவற்றையெல்லாம் பின்பற்றி பிரம்ம விஹாரம் என்கிற நேயம், இரக்கம், மகிழ்வு, சமநிலை, அதாவது அன்பு, அருள், இரக்கம், சமநோக்கு இவைகளைப் பின்பற்ற வேண்டும், நிறைவான பத்து நற்பண்புகள் கொள்ள வேண்டும். 1.பிறருக்கு ஈதல், 2.தூயஒழுக்கம், 3.தன்னலம், 4.அகந்தையின்றி இருத்தல், 5.முயற்சி, 6.பொறுமை, 7.நேர்மை வாய்மை, 8.கருணை, நட்புடன் இருத்தல், 9.பணிவும், நட்பும் கூடியிருத்தல், 10.சமநிலை இந்த பத்து நற்குணங்களையும் பெற முயற்சிக்கவேண்டும். இந்த நன்னெறிகளைக் கடைபிடித்து புத்தர், சங்கம், தருமம் என்று மும்மணிகளையும் ஈடுபாட்டோடு சரணடைதல் வேண்டும் என்று பௌத்த தத்துவம் விளக்குகிறது. இவ்வாறு கால வளர்ச்சிக்கேற்பவும் மற்ற சமய வளர்ச்சிகளுக்கேற்பவும் அவ்வப்போது தம்மை புதுப்பித்துக் கொண்டு ஆசியாவின் மிகச் சிறந்த தத்துவமாக விளங்கி வருகிறது. இது பௌத்தத் தத்துவத்தின் சுருக்க விளக்கமாகும்.

**பௌத்தம் தமிழகம் வருகை**

சமணமும், பௌத்தமும் சமகாலத்தில் தமிழகத்திற்கு வந்தவைகளாகும். சமணம் சற்று முன்னரும், பௌத்தம் அதற்கு பின்னரும் வந்ததற்கானச் சான்றுகள் உள்ளன. சமணம் குப்தர் காலத்தின் இறுதியிலும், பௌத்தம் அசோகர் காலத்திலும் வந்தவைகளாக வரலாற்றுச் சான்றுகள் நிரூபிக்கின்றன. இவைகளின் தமிழக வருகை கி.மு.மூன்றாம் நூற்றாண்டு என்று வரலாற்று ஆதாரங்களை அடிப்படையாக வைத்து கூற முடியும். பௌத்த சமய வருகையை

> **"கௌதம புத்தரால் உண்டாக்கப்பட்ட பௌத்த மதம் கி.மு.மூன்றாம் நாற்றாண்டில், அசோக சக்ரவர்த்தி காலத்தில் தமிழ்நாட்டில் பரவியது. பௌத்த மதத்தைத் தமிழ்நாட்டில் பரப்பியவன் மகேந்திரன் என்பவன். மகேந்திரனை மகிந்தன் என்று பாலி மொழி நூல்கள் கூறுகின்றன. தமிழ் நாட்டிலும் தென்னிந்தியாவிலும், இலங்கைத் தீவிலும் பௌத்த மதத்தைப் பரப்பியவன் இவனே"**[36]

என்று மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிடுகிறார்.

நா.வானமாமலை அவர்கள்,

> **"அசோகன் சாசனங்களிலிருந்து, தனது ஆட்சிக்கப்பாலுள்ள நாடுகளிலும் தன் அறவெற்றி பரவியிருந்ததாகக் கூறும் செய்தியை அவர்கள் சான்று காட்டி அப்பேரரசன் காலத்தில் தமிழ்நாட்டிற்கு முதன் முதலாக பௌத்தப்பிட்சுகள் வந்து அறம்போதித்தனர் என்று கூறுகிறார்கள். அவர்கள் மேற்கோள் காட்டும் சாசனம் பின் வருமாறு:**
>
> **தரும் விஜயம் (அறவெற்றி) என்னும் வெற்றியே மாட்சிமிக்க அரசரால் (அசோகனால்) முதல் தரமான வெற்றியென்று கருதப்படுகின்றது. இந்த வெற்றி இந்த ராச்சியத்திலும் இதற்கப்பாற்பட்ட அறுநூறு யோசனைத் தூரத்திலுள்ள ஆன்டியோக்கஸ் என்னும் யவன அரசனுடைய தேசத்திலும்,**

> **அதற்கப்பால் டாலமி, ஆன்டிகோனஸ், மகஸ், அலெக்ஸாந்தர் என்னும் பெயருள்ள நான்கு அரசர்களின் தேசங்களிலும், இப்பால் தெற்கேயுள்ள சோழ, பாண்டிய, தாப்பிரபன்னி (இலங்கை) வரையிலும் இந்த வெற்றி அரசரால் கைப்பற்றப்பட்டது. மேலும் சோழ, பாண்டிய, சத்தியபுத்திர, கேரளபுத்திர தேசங்களிலும் அரசன், மக்களுக்கும், விலங்குகளுக்கும் மருத்துவ சிகிச்சைக்கு ஆதுலர், சாலைகளை அமைத்த செய்தியை அசோகனது மற்றோர் சாசனம் கூறுகிறது. என்பதை எடுத்துக்காட்டி இச்சாசன காலமான கி.மு.358-க்கு முன்னரே பௌத்தி பிட்சுகள் தமிழ் நாட்டில் அறத்தொண்டிலும், மருத்துவத் தொண்டிலும் ஈடுபட்டிருந்தார்கள் எனக் கூறுகிறார்கள்”[37]**

போன்ற சான்றுகளைக் காட்டி, நா.வானமாமலை அவர்கள் நிறுவுவதைக் கொண்டு பௌத்தம் தமிழ்நாட்டிற்கு கி.மு.மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் வந்ததென்று இதனை தமிழகத்தில் கொண்டு வந்து புகுத்தியவர்கள் அசோக மன்னரும், அவரது உறவினரான மகேந்திரரும் மற்றும் அவரைச் சார்ந்த பிக்குகளும் என்று மகாவம்ச நூலைக்கொண்டு மயிலை சீனி.வேங்கடசாமி அவர்கள் கூறுவதை நா.வானமாமலை ஏற்றுக்கொள்கிறார். இவ்வாறு தமிழ்நாட்டின் முதன்முதலில் புகுந்த பௌத்தம் அசோகன் ஆதரித்த ஹீனயான பௌத்தமே (தேரவாதமே) என்பதும் இதன் மூலம் அறியப்படுகிறது.

இந்த வரலாற்று ஆதாரங்களை நிரூபிக்கும் வகையில் தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டு தமிழ் சமூக உருவாக்க சிந்தனையும் ஒத்துப்போகிறது. புறத்திணைகளாகக் குறிக்கப்படும் வாகைத்திணையும், காஞ்சித்திணையும் குறைந்தபட்ச கால இடைவெளியே கொண்டுள்ளதாக விளங்குகிறது. வைதீகத்தின் மேலாதிக்கத்தையும், சமணத்தின் தாக்கத்தையும் வாகைத்திணை துறைகளாகக் கொண்டு விளங்குவதால் வாகைத்திணையின் காலம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று வரையறுக்கலாம். வாகைத்திணைக்கு அடுத்து வரும் திணையாகக் காஞ்சித்திணை அமைகிறது. காஞ்சி என்றாலே நிலையாமை என்னும் பொருளை உள்ளடக்கியது. பௌத்தநெறி நிலையாமை என்னும் கோட்பாட்டை அழுத்தமாகக் கொண்டு எழுந்த சமயம் என்பதை அதன் தத்துவத்தின் மூலம் அறியலாம். மாற்றம் ஒன்றுதான் மாறாதது. ஒவ்வொரு அணுவும் ஒவ்வொரு கணமும் மாறிக் கொண்டே இருக்கிறது என்பதை பௌத்தம்

வரையறுக்கிறது. அதனால் கணபங்கவாதம் என்பது தமிழகத்தில் நிலையாமை என்னும் பொருளில் தொடக்கத்தில் வழங்கி வந்ததை சங்கப் பாடல்கள் வழி அறிய முடியும். அதனாலேயே புறத்திணையின் ஆறாவது திணையாகிய காஞ்சித்திணையை பௌத்தச் சமயத்தைக் குறிக்கும் திணையாக தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

**"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**
**பாங்கருஞ் சிறப்பின் பன்னெறி யானும்**
**நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"[38]**

இதன் பொருள் காஞ்சி என்னும் புறத்திணை; பெருந்திணை என்னும் அகத்திணையின் புறத்திணை ஆகும். பல வழியிலும் நிலையில் உலகத்தைப் பலவகையான சிறப்பினால் பொருந்தியது நிலையாமை என்று பொருள் கூறுகிறார். தொல்காப்பியர் நிலையாமை என்பது, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என மூன்று என்று உரையாசிரியர்கள் கூறுகின்றனர்.

இதில் 'நில்லா உலகம்' என்பது நிலைபேறுடைய உலகம் என்பது இல்லையென்றும் மாற்றம் என்பதுதான் உண்மையானது என்றும் கணபங்கவாதக் கொள்கையை உள்ளடக்கியதாக இந்நூற்பா விளங்குகிறது. மேலும் எந்த நெறியிலும் நில்லாத உலகத்திற்குப் பொருந்துகின்ற நெறியைக் கூறுதல் என்பதால், கி.மு.மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் மூவேந்தர்களின் (சேர, சோழ, பாண்டிய) உச்சக்கட்டப் போர் நடைபெற்றதை மையமாக வைத்துப் போரைத் தவிர்க்க ஏற்ற நெறியைக் கூறுவது என்னும் பொருளும் இதற்குள் அடங்கியிருக்கிறது. முன்னர் குறிப்பிட்ட மேற்கோளில் அசோகரின் போர் வெற்றியைவிட அறவெற்றியே முதல் தரமான வெற்றி என்றும் சாசனங்கள் குறிப்பிடுவது இங்கு கருதத்தக்கது. இந்த காஞ்சி திணையில் வரும் இருபது துறைகளில் வஞ்சி காஞ்சி, மகட்பாற் காஞ்சி ஆகிய இரு துறைகளைத் தவிர ஏனைய பதினெட்டுத் துறைகளும் போரில் நிகழ்ந்த இறப்பைக் குறித்தும், அதில் பத்துத் துறைகள் உலகியல் இறப்பையும் முதன்மைப்படுத்தி நிலையாமையை வலியுறுத்துவதாக அமைகிறது. ஆகவே நிலையாமையைக் கூறும் காஞ்சித்திணையை பௌத்த சமயத்திற்குரியத் துறையாகக் நாம் கொள்ளலாம். காஞ்சித் திணையில் வரும் துறைகள்;

**"மாற்றரும் கூற்றம் சாற்றிய பெருமையும்,**
**கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்,**

**.........................................................................**

**நிறையருஞ் சிறப்பின் துறை இரண்டு உடைத்தே"[39]**

இந்நூற்பாவில் ஆண் பற்றியும், பெண் பற்றியும் பத்துப்பத்துத் துறைகளாக அமைக்கப்பட்டுள்ளது. 1.எவராலும் தடுத்தற்கு அரிய கூற்றுவன் வருவன் என்று சொல்லப்பட்ட முதுக்காஞ்சி, 2.அறிவுடையோர் ஏனோர்க்குக் காட்டிய முதுக்காஞ்சி, 3.நற்பண்புறும் தன்மையால் தன்பால் உள்ள புண்ணைக் கிழித்துக் கொண்டு இறந்துபடும் மறக்காஞ்சி, 4.போர்க்களத்தில் பாதுகாக்கும் சுற்றம் இல்லது புண்பட்ட மறவனைப் பேய்கள் காத்தலால் பேய்க்காஞ்சி, 5.இன்ன மன்னைக் காஞ்சி, 6.இச்செயலைச் செய்யேனாயின் இத்தன்மையாவேன் எனக்கூறும் வஞ்சினக் காஞ்சி, 7.தன்னைத் தழுவிய கணவன் இறந்துபட்ட நிலையில் பேய்கள் தொடாதவாறு காத்த தொடாக் காஞ்சி, 8.கணவன் உயிரைப் போக்கிய வஞ்சிக்காஞ்சி, 9.பெண் கொள்ளுதற்குத் தகுதியிருந்தும் கொடாது மறுக்கும் மகட்பாற் காஞ்சி, 10.கணவன் இறந்த இடத்துத் தன் மார்பகத்தையும், முகத்தையும் மனைவி பதித்து உயிர் துறந்த தலையொடு முடிந்த நிலை என்பன பத்துத் துறைகளாகும்.

அடுத்தப் பத்துத் துறைகள் 1.தன் கணவன் இறந்துபட்ட நிலையில் அவன் புகழைப்பாடி, ஏனோர் கூடி, அழ தான் கொள்ளும் பூசல் இயக்கம், 2.மனைவி எய்திய தாங்கரும் பையுள் (வருத்தம், துன்பம்), 3.கணவனோடு உடன் இறந்த மனைவியைக் கண்டு ஒன்றுபட்ட அன்பினைக் குறித்துக் கொண்டோர் கொள்ளும் மூதானந்தம் 4.கொடிய பாலை வழியில் தன் கணவனை இழந்து தனியாளாய் நின்று வருந்தும் முதுபாலை, 5.இறந்தோரைக் குறித்து எண்ணி வருந்தமுறும் கையறுநிலை, 6.மனைவியை இழந்த கணவனது தடிதார நிலை, 7.தன் கணவன் இறந்த இடத்து மனைவி வருந்திக் கூறும் தாபத நிலை, 8.தன் கணவன் இறந்தபோது தானும் அரிபுக, ஏனோர் தடுத்துக் கூறிய இடத்து மனைவி வருந்தி நோக்கும் பாலை நிலை, 9.தன் புதல்வன் புறமுதுகிட்டு இறந்துபட்டதால் தாய் வருத்தி அவனைத் தழுவிக் கொள்ளும் தலைப் பெயர் நிலை, 10.அகன்ற உலகத்தில் நிலையாமைப் பண்பு விளங்குமாறு பலரும் இறந்து படவும், தான் இறந்து படாது ஊரின் புறத்தே நின்று சுடுகாட்டை வாழ்த்துதல் ஆகிய பத்துத்துறைகளாகும். இந்த இருபது துறைகளும் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை என்னும் மையக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட துறைகளாக விளங்குகின்றன. கி.மு.மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் சேர, சோழ, பாண்டியர்களால் மோதல் உச்சநிலையில் இருந்தபோது பௌத்த சமயத்தின் கொள்கைகள் போரைத் தவிர்க்கவும், நாட்டில் அமைதி நிலவவும், அருமருந்தாய் விளங்கியதால் பௌத்தம் எவ்வித நெருக்கடியும் இன்றி தமிழகத்தில் வேரூன்றியது என்பதை இந்தக் காஞ்சித் திணையின் மூலம் தெள்ளத்தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

**சங்க இலக்கியப்பாடல்களில் பௌத்தம்**

சமண, பௌத்த சமயங்கள் தமிழகத்தில் புகுந்தபோது, தமிழகத்தில் உலகியல் வாழ்க்கையே சிறப்புற்றிருந்தது. காதல், போர், மது, மாமிசம் என்பனவற்றையே மக்கள் நாடினர். மக்களை ஆன்மீகத்துறையில் செலுத்துவதற்கு, அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலுள்ள ஈடுபாட்டைத் தகர்க்க வேண்டியிருந்தது. வாழ்க்கையின் பற்றை அறுப்பதற்கு நிலையாமை ஒரு கோடாரியாகப் பயன்பட்டது. தொடக்க காலத்தில் தமிழ்க்கவிஞர்கள் நிலையாமைத் தத்துவத்தை சுயநலத் தன்மைக்கு ஏற்றவாறு புரிந்து கொண்டு வேறு விதமாகக் கையாண்டனர். அதாவது பரிசில் பெறுவதை நோக்கமாக் கொண்ட கவிஞர்கள் நிலையாமையை தம் படைப்புகளில் வெளிப்படுத்தி மன்னர்களிடம் கொடையை வற்புறுத்தும் நோக்கோடு செயல்பட்டனர் என்பதை சங்கப் பாடல்கள் வழி அறியலாம்,

**"சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்**

**நூற்றிதழ் அலரி நிரைகண்டு அன்ன**

**..........................................................**

**எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக் கேட்பல்"**[40]

சேற்றில் வளரும் தாமரைப் பூத்த அழகிய இதழ்களையுடைய மலர் வரிசைபோல், உயர்வு தாழ்விலா உயர்குடியில் பிறந்து ஆட்சி புரிந்த அரசரை எண்ணும்போது பாராட்டுரையும், பாட்டும் கொண்டவர் சிலரே. பலர் அத்தாமரை இலைபோல் போயினர். புலவர்களால் பாடப்படும் புகழை உடையவர் தாம் செய்யும் நல்வினை முடித்து, இயக்குவோன் இல்லா வானவூர்தியையும் பெறுவர் என்பர் என்று உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியையும் பரிசில் வேண்டி பாடும்போது புலவர்களால் பாடப்படும் புகழை உடையவனும், நிலையாமையை உணர்ந்து நல்வினையையும் செய்யும் மன்னன் இயக்குவோர் இல்லா வானவூர்தியைப் பெறுவான் என்று குறிப்பிடுகிறார். இப்பாடலை இயற்றிய புலவர் முதுகண்ணன் சாத்தனார் பௌத்த சமயத்தைச் சார்ந்தவர் என்பதை சாத்தனார் என்னும் அவர் பெயர் நமக்குக் காட்டுகிறது. 'சாத்தன்' பௌத்தப் பெயரைக் குறிக்கும் சொல்லாக சங்க காலத்தில் விளங்கியது.

அதுபோலவே

**"................ விழாவில்**

**கோடியர் நீர்மை போல முறைமுறை**

**ஆடுநர் கழியுமிவ் வுலகத்துக் கூடிய**

**நகைப்புறன் ஆகநின் சுற்றம்**

**இசைப்புறன் ஆகநீ ஓம்பிய பொருளே"**[41]

திருவிழாவில் ஆடும் கூத்தர்கள் வேடம் மாறி மாறி ஆடிச் செல்லுதல் போல, முறை முறையே தோன்றி இருந்து மறையும் உலகில் மகிழ்வுடன் இருப்பதாக உன்சுற்றம், நீ பாதுகாத்தப் பொருள் புகழுக்குரியது. இவ்வுலகம் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டிருக்கிறது என்னும், கணபங்கவாதக் கருத்தை மையமாகக் கொண்டு நிலையாமைக் கருத்தை முதுகண்ணன் சாத்தனார் பதிவு செய்கிறார்.

**"தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி**

**வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்**

........................................................

**துய்ப்பேம் எனினே தப்புந பலவே"**[42]

என்ற பாடல் தெளிந்த நீர் சூழ்ந்த உலகத்தைப் பொதுவானது என்பது இல்லாமல் தமக்கே உரியதாக ஆட்சி நடத்தும் ஒருவருக்கும் இடையாமத்திலும், நடுப்பகலிலும் உறங்காதவனாக விரைந்து செல்லும் விலங்குகளை வேட்டையாடுவதற்கு எண்ணும் அருளிலா ஒருவனுக்கும் உண்ணும் பொருள் நாழி அளவே ஆகும். உடுப்பவை இரண்டேயாகும். மற்றவையும் இருவருக்கும் ஒப்பானவையே யாகும். ஆதலால் செல்வத்தைப் பெற்றதன் பயன் கொடுப்பதேயாகும். அதனை நாமே நுகர்வோம் எனின் இழந்துபோவன பலவாகும் என்று மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார் அவர்கள் நீர் சூழ்ந்த இவ்வுலகத்தைப் பொதுவானது என்று எண்ணாமல் ஆட்சி செய்யும் மன்னனுக்கும், சாதாரண வேடனுக்கும் உண்பது நாழி அளவே, உடுப்பது இரண்டே என்றும் தம்மைச் சுற்றியிருக்கும் செல்வம் நிலையற்றது என்றும் கூறி, செல்வத்தின் பயன் அதைக் கொடுப்பதில் இருக்கிறது என்று நிலையாமைத் தத்துவத்தைக் கூறி கொடையை வற்புறுத்தும் பாடலாக அமைக்கிறார்.

மேலும்,

**"நினக்கும் வருதல் வைகல் அற்றே;**

**வசையும் நிற்கும், இசையும் நிற்கும்;**

**..........................................................**

**ஈண்டு நீடு விளங்கும் நீ எய்திய புகழே"[43]**

என்ற புறநானூற்றுப் பாடல் எப்பேர்பட்டவரும் சுடுகாட்டை வந்தடைவர் என்று கூறி உனக்கும் அந்நாள் வரும் என்பதை உணர்த்தி இவ்வுலகில் அவரவர் செய்த பழியும் நிற்கும், புகழும் நிற்கும், அதனால் பழியை நீக்கிப் புகழை நிறுவியும், விருப்பு, வெறுப்புக் கொள்ளாது நடுவுநிலை பேணியும் வெண்ணிறக் கொம்புடைய யானையும், குதிரையும், தேரும் இரவலர் கொள்க எனக் குறைவில்லாமல் கொடுத்து விடுத்தால், நீ மேலுலகு சென்ற பின்னும் உன் உயர் புகழ் இவ்வுலகில் நிலைத்து விளங்கும் என்று இவ்வுலகில் எந்த நிலையில் இருந்தாலும் பேய்கள் வாழும் இடுகாட்டை வந்தேயடைய வேண்டும். அதனால் நிலையற்ற இவ்வாழ்வில் அறத்தோடு வாழ்ந்து இரவலர்க்கு பரிசில் கொடுத்து நிலைத்தப் புகழை அடைவாயாக என்று நிலையாமையை வற்புறுத்தி கொடை வழங்க இப்பாடல் வலியுறுத்துகிறது.

**"பெரிது ஆராச் சிறுசினத்தர்**

**சில சொல்லால் பலகேள்வியர்**

**..................................................**

**பலர் வாய்த்து இராஅர் பகுத்துண் டோரே"[44]**

என்று சங்கவருணர் என்னும் புலவர் நாகரயைர் தந்துமாறனைப் பாடும்போது, சிலர் பெரியவற்றை நுகரமாட்டார். சினத்தையும் குறைப்பர். சிலர் சொல்வர்; பலர் கேட்பர், நுண்ணிய அறிவினால் பெருங்கொடையும் புரிவர். கலங்கிய கள்ளும், குளிர்ந்த தேனும் தன்னிடமிருந்தால் வழங்குவர். நல்ல தாளிப்புடன் வளமான ஊன் வழங்குவர். பணிவை விரும்பித் தழுவிப் பேசுவர், பலருக்கும் பயன் உண்டாகுமாறு செயல் புரிவர். இவ்வாறு பாதுகாப்பாக இந்நிலத்தை ஆட்சிப் புரிந்தவர் சிலரே ஆவர். அதனால் நான் சொல்வதைக்கேள். நான் சொன்னதை அறிந்து கொள்ளாதோர் பலர். அவர்களின் செல்வமும் நிலைத்து நிற்காது. அச்செல்வத்தின் நிலையாத் தன்மை அன்றுபோய் இன்றும் அப்படியே இருக்கும். அதனால் பரிசு வேண்டி வருபவர்களுக்கு அவர்கள் வேண்டும் பொருளைத் தருக, சுடுகாட்டில் பாடையை வைத்த பின்பு கள்ளும், சோறும் படைத்து

அதைப் பகுத்துண்ணும் குணம் உடையவர் என்றாலும் அவர் புகழ் அடையமாட்டார் என்று கூறி, கொடையை வற்புறுத்தி நிலையாமைக் கருத்தை இப்பாடல் வழங்குகிறது. எனவே சங்க காலப் புலவர்கள் தொடக்க நிலையில் மன்னர்களின் கொடை வழங்கும் உள்ளத்தை மேம்படுத்தும் வகையில் நிலையாமைக் கருத்தினைப் பயன்படுத்தினர் என்பதை மேற்கண்ட பாடல்களின் மூலம் அறியலாம். அதேபோல் நிலையாமை தத்துவத்தை மட்டுமே வலியுறுத்தும் பாடல்களும் சங்கப்பாடல்களில் உள்ளன.

**பௌத்த நிலையாமையை விளக்கும் பாடல்கள்**

**"ஓரில் நெய்தல் கறங்க, ஓரில்**

**ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்;**

**.........................................................**

**இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே"[45]**

பக்குடுக்கை நன்கணியாரின் இப்பாடல், உலகியல் வாழ்க்கையின் நிலைகளை எடுத்துக்கூறி நிலையாமையை மட்டுமே வலியுறுத்தி வருகின்ற பாடலாக இப்பாடல் அமைகிறது. ஒரு வீட்டில் துயர்மிக்க நெய்தல் பறை ஒலிக்கவும், மற்றொரு வீட்டில் இனிய மணத்தில் முழுக்கும் குளிர்ந்த முழவு ஒலிக்கவும், தலைவனோடு கூடியவர் பூவும், அணிகளும் அணியவும்; தலைவனைப் பிரிந்தவர் வருந்தும் கண்கள் கண்ணீர் வடிக்கவும் என இருவேறாகப் படைத்த படைப்பாளன் மிகவும் பண்பில்லாதவனாம். உலக வாழ்க்கை கொடுமையானதாகும். அதன் இயல்பை உணர்ந்தோர் இன்பம் அடைதற்குரிய வழி காண்பாராக என்று உலகியல் வாழ்வு என்பது இன்பம், துன்பம் நிறைந்த நிலையில்லா வாழ்வாகும். அந்தக் கொடுமையான வாழ்விலிருந்து விடுபடுவதற்கு அதற்கான வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று வலியுறுத்துகிறார். இதைப்போலவே,

**"இரும்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்**

**உடை இலை நடுவணது இடைபிறர்க்கு இன்றித்**

**.....................................................................**

**முந்நீர் வரைப்பகம் முழுவதுடன் துறத்தே"[46]**

பெரிய கடல் சூழ்ந்த பெரிய இடத்தை உடைய உலகத்தில் உடை மரத்தின் சிறிய ஓர் இலை அளவு இடங்கூட பிறர்க்கு இல்லாமல் இருக்கே உரியதாக ஆட்சி செய்த பாதுகாப்பு அமைந்த மன்னர்கள்; அலைக்கொழித்துத் தள்ளும் மணலைவிட பலர் ஆவார்கள். அவர்கள்

பிணம் சுடும் சுடுகாடே தம் தம் இடமாகப் போய்த் தங்கள் நாடுகளைப் பிறர் கொள்ளுமாறு இறந்துபட்டனர். அதனால் நீயும் கேட்பாயாக. அழியாமல் என்றும் உயிரோடே வாழும் வாழ்வினரை நாம் கண்டதில்லை. இறப்பு என்பது உண்மை. இதில் குழப்பமில்லை. கள்ளிபரவிய முள்ளுடைய சுடுகாட்டில் கையில் கொண்டு பின்புறம் பாராது எரியூட்டுபவன் நிலத்தையே உண்கலமாக ஊட்டும் வேண்டாத உணவை உண்ணும் கொடிய பொழுது வருவதற்கு முன்னமே கடல் உலகம் முழுவதும் பற்றின்றித் துறந்து, நீ விரும்பிய தவம் ஆகிய செயலைச் செய்வாயாக என்று உலகியல் வாழ்க்கையின் நிலையாமைத் தத்துவத்தை எடுத்துக் கூறி பற்றற்ற வாழ்வையும், துறவு வாழ்வையும், தவவாழ்வையும் வலியுறுத்தி இப்பாடல் அமைகிறது. இப்பாடலைப் போன்றே,

> **"மயங்கிரும் கருவிய விசும்பு முகனாக**
>
> **இயங்கிய இருசுடர் கண்ணனப் பெயரிய**
>
> **..................................................................**
>
> **உண்டென உரைப்பரால் உணர்திசினோரே"**[47]

பூதங்களின் கலப்பமைந்ததும் மழை முகில் உடையதுமாகிய விசும்பை முகமாகவும், விளங்கும் கதிர்மதி ஆகிய இரண்டு சுடர்களையும், கண்ணாகவும் கொண்டும் விளங்கும் பலவகைச் சிறப்பும் அமைந்த நிலமகள், இடம்விட்டுப் பெயர்தலைக் கொண்ட காற்று இயக்கம் இல்லாத விசும்பைப் கடந்து வயிர வளையத்தில் மணி பொதித்த பொன் ஆழியைப் போரின் முற்படச் செலுத்திப் பகையாயினரை அழித்து, மேலே பகைவர் வாராமையாப் போரில் மேம்பட்ட வலிமையாளர் விண்ணகம் செல்லவும் தான் உடன் செல்லாது தம்மை விற்கும் பொருட்பெண்டிர் போலப் பலரும் என்னைப் பாராட்டிக் கூற யான் இன்னும் நிலையாக உள்ளேன். வாழ்க என்று நிலமகளே தன்னைப் பொருட் பெண்டிரோடு இணைத்துக் கூறி நிலையாமையை எடுத்துக் கூறுவதாக மார்க்கண்டேயனார் புதிய பார்வையில் நிலையாமைத் தத்துவத்தை விளக்குகிறார். இவ்வாறு பௌத்தச் சமயத் தத்துவம் தமிழகத்தில் நிலை பெற்ற பிறகு அதன் நிலையாமைத் தத்துவத்தை மட்டும் எடுத்துக் கூறும் நேரடியான பௌத்த சமயப் பாடல்களாக இப்பாடல்கள் அமைகின்றன.

### உலகியல் வாழ்வை வலியுறுத்தும் நிலையாமைப் பாடல்கள்

சங்கப் பாடல்களில் நிலையாமைக் கருத்துக்கள் பல்வகையில் பல்வேறு கோணத்தில் புலவர்களால் கையாளப்பட்டன. வைதீகம் சார்ந்த நிலையாமைக் கருத்துக்கள், பரிசில் வேண்டி கூறும் நிலையாமைக் கருத்துக்கள், என்று வந்தவை உலகியல் வாழ்க்கையை

வற்புறுத்தும் நிலையாமைக் கருத்துக்களும் சங்கப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன. வாழ்க்கை நிலையில்லாதது; அதனால், வாழ்க்கையை அனுபவித்து இன்பமாக வாழவேண்டும் என்ற கருத்தோடு இதுபோன்ற பாடல்கள் வருகின்றன.

**"இரவல் மாக்கள் ஈகை நுவல**

**ஒண்தொடி மகளிர் பொலம் கலத்து ஏந்திய**

**..........................................................................**

**பலர்செலச் செல்லாது நின்று விளிந் தோரே"[48]**

என்ற புறநானூற்றுப் பாடல் பரிசில் வேண்டுவோர் உன் புகழ் சொல்ல, ஒளியுடைய வளையல் அணிந்த மகளின் பொற்கலத்தில் வழங்கிய குளிர்ந்த நறிய மதுவைப் பருகி, மகிழ்ச்சிமிக்கு அவ்வாறு இன்பமாக வாழ்வாயாக பெருமானே. இவ்வொழுக்கத்தோடு வாழ்ந்தவரை வாழ்ந்தவர் என்பர். விரிந்த உலகில் பிறந்து பழம் புகழ் பெருக வாழ்தல் இல்லாமல் வாழ்ந்து முடிந்தோர் பலர். அவர்களெல்லாம் வாழ்ந்தவர் ஆகமாட்டார் என்று மாங்குடி கிழார் அவர்கள் வாழ்க்கையின் இன்பங்களை நுகர்ந்து வாழ்வது தான் வாழ்க்கை. இவ்வாறு இல்லாத வாழ்க்கை வாழ்வில்லையென்று உலகியல் இன்பத்தை வலியுறுத்திப் பாடுகின்றார்.

இதைப்போலவே,

**"...................... முள்ளெயிற்று மகளிர்**

**அல்குல் தாங்கா அசைஇ மெல என**

**....................... விரகினானே"[49]**

என்ற கயமனாரின் பாடல் நன்மகளிர், இடை தாங்காமல் அசை நடையால் மெதுவுறக் கலங்கல் மதுவைப் பொற்கலத்தில் ஏந்தித் தர, அதனை அமிழ்தம் என்று உண்பவன். எனினும் நிலையாமையை உணராதவன் அல்லன். ஆதலால் நிலைத்தல் இல்லாத உலகியல்பை நீ எடுத்துரைத்தல் வேண்டுவதில்லை. தலைமைசான்ற அவன் இளம் பருவத்திலேயே முழுதுணர்ந்த கேள்விச் செல்வன், பேரறிவினன் என்று நிலையாமையை உணர்ந்தவன் என்றாலும் அதைவிட உலகியல் வாழ்வு இன்பமானது என்பதையும் உணர்ந்தவன் என்று எடுத்துரைக்கும் பாங்கில் இப்பாடல் அமைகிறது. மேலும் நிலையாமைக் கருத்துக்கு எதிர்நிலை கருத்தாய் இப்பாடல் அமைகிறது. அதுபோலவே இறப்பு என்பது உறுதி என்று கூறி வாழ்வியல் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற கருத்தோடு இப்பாடல் வரிகள் வருகிறது.

**"உழவொழி பெரும்பகடு அழிதின் றாங்குச்**

**செங்கண் மகளிரொடு சிறுதுனி அளைஇ**

**.......................................................**

**மடங்கல் உண்மை மாயமோ அன்றே"**[50]

என்ற கோதமனாரின் பாடல் உழுது முதிர்ந்த எருது வைக்கோலைத் தின்றாற்போல், சிவந்த கண்ணையுடைய மகளிரொடு சிறிது ஊடல் கொண்டு, அழகிய கள்ளின் தெளிவை நல்ல கலத்தில் விட்டுத்தர, குறையாத வளம் உடையவனே. ஆட்டுக்கடாவை வெட்டி ஊனைச்சுட்டு, அதனை வேண்டுவார்க்கு இலையில் குறையாது கொடுத்தும்; சோறு வேண்டுவார்க்கு இடம் தந்து உண்ணச் செய்து, நீயும் உண்பாயாக. நீர் நிலைகள் மிக்க மணல் செறிந்த கரையில் நிற்கும் காடுகளில் அமைக்கப்பட்ட வெறியாடல் களங்களில் இனி இடமில்லை என நிறுத்தப்பட்ட ஆடுகளைப் போலச் சாவு உண்டு என்பது உறுதியே என்று இப்பாடல், இறப்பு என்பது உறுதி அதனால் வாழ்வியல் இன்பத்தை அனுபவித்து வாழ்தலே சிறந்தது என்ற பொருளோடு இப்பாடல் வரிகள் அமைகின்றன. இதைப் போன்றே,

**"நாகத் தன்ன பாகார் மண்டிலம்**

**தமவே ஆயினும், தம்மொடு செல்லா**

**.......................................................**

**உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநும் நாளே"**[51]

என்ற ஔவையாரின் பாடல் வரிகள் விண்ணுலகம் ஒத்தப் பகுதிகளையுடைய மண்ணுலகம் தம்முடையதே என ஆயினாலும் தாம் இறந்து செல்லும் போது அதுவும் கூட வாரா. பிறர் எனினும் வலிமையாளர்க்குரியதாய் அமையும். இரந்து வந்த பார்ப்பார்க்கு அவர் நனைந்த கைநிறையப் பொற்பூவும் பொன்னும் நீர்வார்த்துத் தந்து, வளமான அணிகலம் அணிந்த மகளிர் பொற்கலத்தில் ஏந்தித்தந்த வடிக்கப்பட்ட மதுவைப் பருகி, மகிழ்ந்து, இரவலர்க்கு அரிய அணிகலங்களைக் குறையாமல் வழங்கி, வாழ வேண்டும். இவ்வுலகில் வாழ்வதற்காக வகுக்கப்பட்ட எல்லை அளவும்; நன்கு வாழ்வதற்காக வாய்ந்த நல்வினை ஒன்றுமே யல்லாது, பிறவிக் கடலில் ஆழும் காலத்தில் அதனைக் கடப்பதற்கு (அந்நல்வினையே அன்றி) வேறு துணை இல்லை. வீடுபேறு என்னும் ஒன்றையே விரும்பி ஐம்பொறிகளை அடக்கிய அந்தணர் வளர்க்கும் மூன்று தீயையும் போலக் கண்டு மகிழ இருக்கும் வெண்குடையையும், கொடித்தேரையும் உடைய வேந்தர்களே, யான் அறிந்த அளவு இதுவேயாம். வானில் விளங்கும் விண்மீன்களினும், முழுங்கிப் பெய்யும் மழைத்துளிகளினும்

மிக மேம்பட்டவையாக உங்கள் வாழ்நாட்கள் விளங்குவனவாகுக என்று சேரமான்மாவண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஒருங்கு இருக்கும் போது அவர்களுக்கு உலகியல் வாழ்க்கையின் இன்பத்தையும், முக்கியத்துவத்தையும் எடுத்துக்கூறும் பாடல் வரிகளாக இப்பாடல் வரிகள் விளங்குகின்றன.

சங்கப் பாடல்களில் நிலையாமைக் கருத்துக்கள் பல்வேறு தளத்தில் முன் வைக்கப்பட்டதை மேற்கண்ட மேற் கோள்களின் மூலம் தெளியலாம். உலகியல் வாழ்க்கைச் சார்ந்த நிலையாமைக் கருத்துக்களும், அறவாழ்வை மையப்படுத்திய நிலையாமைக் கருத்துக்களும், வைதீக சமயத்தை மையப்படுத்திய நிலையாமைக் கருத்துக்களும் முட்டி மோதின என்பது தெளிவாகிறது.

# தொகுப்புரை

சமண சமயத்தின் தோற்ற வரலாறு, தீர்த்தங்கரர்களின் அவதாரங்கள், இருபத்து நான்காவது தீர்த்தரங்கரரான மகாவீரர் சமணத்தைச் சீர்திருத்தி அமைத்தது போன்றவை எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. மகாவீரர் காலத்தில் வாழ்ந்த மகான்கள் பௌத்தத்தை உண்டாக்கிய புத்தர், ஆசீவக மதத்தை உண்டாக்கிய மற்கலி, இவர்களுக்கு முன்னாலேயே சமணம் உருவானது என்று விளக்கப்பட்டுள்ளது. இவ்வுலகம் அறுவகை பொருட்களால் ஆனது என்றும்; அந்த அறுவகைப் பொருள்களையும் திரவியங்கள் என்று சமணம் அழைப்பதையும், திரவியங்களின் செயல்பாடுகளும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. அதன் மூலம் வீடுபேறு அடையும் வழியை சமணம் எவ்வாறு காட்டுகிறது என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

சங்க காலத் தமிழகத்திற்கு சமண சமயம்; பத்திரபாகு முனிவர் காலத்தில் அதாவது கி.மு.317 முதல் கி.மு.397 வரை உள்ள காலத்தில் வந்ததென்று வரலாற்றுச் சான்றுகள் மூலம் நிறுவப்பட்டுள்ளது. இவ்வரலாற்றுச் சான்றுகளோடு ஒத்துப்போகும் வகையில், தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டு முறையின் மூலம் சமணம் வந்த காலத்தை வாகைத்திணைக் காலம் என்று இவ்வியல் வரையறுக்கிறது. கி.மு.மூன்றாம் நூற்றாண்டு சேர, சோழ, பாண்டியர்களின் உச்சக்கட்டப் போர் நடைபெற்றக் காலம். இதனைச் சுட்டும் வகையில் தொல்காப்பியரின் வாகைத்திணை அதன் துறைகள் அமைகிறது. வாகைத்திணைக்கு முன்னால் உள்ள புறத்திணைகளில் சொல்லப்படாத புதிய அறத்துறைகள் இந்த வாகைத்திணையில் பேசப்படுகிறது. ‘அறம்’ என்பது சமணத்தின் மைய ஆணிவேர். இவை போன்ற ஆதாரங்களால் சமணம் வந்த காலம் தொல்காப்பியர் கூறும் வாகைத்திணையின் காலமென்று இவ்வியல் விளக்குகிறது. மேலும் போரினாலும், வறுமையினாலும் அல்லலுற்ற தமிழக மக்களுக்கு சமணத்தின் கொள்கைகள் ஆறுதல் மருந்தாய் அமைந்த காரணத்தினால், அச்சமயம் எவ்வித நெருக்கடியும் இன்றி தமிழகத்தில் இலகுவாக நுழைந்ததும், சங்கப்பாடல்களில் சமண சமயத்தின் தாக்கம் எவ்வாறு இருந்தது என்பதையும், அதனைத் தமிழகம் எவ்வாறு புரிந்து கொண்டது என்பதையும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. மேலும் சமணத்திற்கே உரிய ‘சல்லேகனை’ என்னும் வடக்கிருத்தல் பண்பை சமணர்கள் எவ்வாறு பின்பற்றினார்கள் என்பதையும் தமிழகத்தில் அது எவ்வாறு புரிந்து கொள்ளப்பட்டது என்பதையும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. வடக்கிருத்தல் பண்பு தமிழக மன்னர்களிடையேயும், புலவர்களிடையேயும் எத்தகைய தாக்கத்தை உண்டு பண்ணியது என்பதும், தமிழகத்தில் ஊழ்வினை என்கிற கன்மவினை சமணத்தின்

அடிநாதமாய் இருப்பதையும், ஊழ்வினையின் மூலம் மனித வாழ்வை சமணம் எப்படி வரையறுக்கிறது என்பதும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியம் மற்றும் சங்கப்பாடல்கள் ஊழ்வினைப்பற்றிய கருத்தோட்டங்கள் எவ்வாறு செய்யப்பட்டுள்ளன என்பது விளக்கப்பட்டுள்ளது. சமணம் தமிழகத்திற்கு வந்த பிறகு ஊழ்வினை, அறம், தனிமனித ஒழுக்கம், உயிர்க் கொலை புரியாமை, வீடுபேறு போன்ற புதிய அறம் சார்ந்த சிந்தனைகள் மேலோங்கத் தொடங்கின என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

அடுத்தது, பௌத்த சமயம்; கௌதம புத்தரால் கி.மு.ஆறாம் நூற்றாண்டில் தொடங்கப்பட்டது என்றும், அவருக்குப் பின்னால் வந்த அவரது சீடர்கள் புத்தரின் போதனைகளைக் கொண்டு, அதை ஒரு தத்துவமாக வளர்த்தெடுத்தனர் என்றும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. புத்தரின் போதனைகளை ஏற்ற அசோகர் அதனை உலகம் முழுவதும் பரப்புரை செய்ய ஏற்பாடு செய்தார் என்பதையும், பௌத்தத் தத்துவம், காரண, காரியத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதும் கூறப்பட்டுள்ளது. கணபங்கவாதம் என்று அழைக்கப்படும் மாற்றம் மட்டுமே நிலையானது என்னும் பௌத்தத்தின் மையக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு ஐந்து கந்தங்களும், நான்கு வாய்மைகளும், துக்கம், துக்க உற்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் போன்றவைகள் விளக்கப்பட்டுள்ளன.

பௌத்தம் தமிழகத்திற்கு, சமணம் வந்த இருபது முப்பது ஆண்டுகளுக்குப் பின்னர் வந்தது என்பது சான்றுகள் மூலமும் நிறுவப்பட்டுள்ளது. இந்த வரலாற்று ஆதாரங்களுக்கு வலுசேர்க்கும் வகையில் தொல்காப்பியரின் திணைக் கோட்பாட்டு தமிழ்ச் சமூக உருவாக்க சிந்தனையும் ஒத்துப் போவது விளக்கப்பட்டுள்ளது. சமணம் வந்த காலத்தை வாகைத்திணை குறிக்கிறது என்றால், பௌத்தம் வந்த காலத்தை வாகைத்திணைக்கு அடுத்து வரும் காஞ்சித் திணைக் குறிக்கிறது. காஞ்சி என்றாலே நிலையாமை என்று பொருள் தருவதாலும், பௌத்தம் நிலையாமையை அடிப்படைத் தத்துவமாகக் கொண்டு விளங்குவதாலும் தொல்காப்பியர் குறிப்பிடும் காஞ்சித் திணையின் காலம் பௌத்தம் தமிழகத்திற்கு வந்த காலமாகும். இது ஏறத்தாழ கி.மு.மூன்றாம் நூற்றாண்டு என்று இவ்வியல் வரையறுக்கிறது.

சங்கப் பாடல்களில் பௌத்த நிலையாமைத் தத்துவம் வெவ்வேறு கோணங்களில் கையாளப்பட்டுள்ளது. பரிசில் பெறுவதை நோக்கமாகக் கொண்டு எழுந்த நிலையாமைக் குறித்தக் கருத்துக்கள். வாழ்வியல் சூழலை வைத்துக் கூறும் நிலையாமைக் கருத்துக்கள், உலகியல் இன்பத்தை அனுபவிப்பதை வலியுறுத்துவதற்காக வந்த நிலையாமைக்

கருத்துக்கள் என்று வெவ்வேறு பார்வையில் சங்கப் பாடல்களில் நிலையாமைக் கருத்துக்கள் பதிவு செய்யப்பட்டிருப்பதை எடுத்துக் காட்டி விளக்கப்பட்டுள்ளது.

ஊழ்வினையும், நிலையாமையும் வைதீக சமண, பௌத்தக் கொள்கைகளாக விளங்கினாலும் சங்க காலத் தமிழகத்தில் சமணம் தன்கோட்பாட்டில் ஊழ்வினைக்கு மிகப் பெரிய அழுத்தம் கொடுக்கிறது. அதேபோல் பௌத்த சமயம் நிலையாமைக்கு மிகப்பெரிய அழுத்தம் கொடுக்கிறது. ஆகவே இவ்வியலில் கூறப்படும் ஊழ்வினைக் கருத்துப்பாடல்களைச் சமணத்திற்கும், நிலையாமைக் கருத்துப்பாடல்களைப் பௌத்தத்திற்கும் ஒதுக்கி விளக்கிக் கூறப்பட்டுள்ளது. மொத்தத்தில், கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் சங்ககாலத் தமிழகத்தில் சமணமும், பௌத்தமும் குறிப்பிட்ட அளவு தாக்கத்தை ஏற்படுத்தின என்பதை இவ்வியல் எடுத்துக் காட்டுகிறது. அது மட்டுமின்றி ஊழ்வினை, அறம், தனிமனித ஒழுக்கம், உயிர்க்கொலை புரியாமை, புலால் உண்ணாமை, வீடுபேறு போன்றவற்றை அது வரையிலும் பேசாத வைதீகத்தைப் பேச வைத்ததும் இந்த சமணமும், பௌத்தமும்தான் என்பது இந்த மூன்றாவது இயலின் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.48.
2. மேலது, பக்.74-75.
3. இ.எஸ்.டி, செ.ஞானன், தத்துவ தரிசனங்கள், ப.10.
4. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.167.
5. ஆ.வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, பக்.27-28.
6. தொல்.பொருள்.புறம்., 102.
7. தொல்.பொருள்.புறம்., 75: 14-24.
8. புறம்., 166: 1-9.
9. அகம்., 123: 1-3.
10. புறம்., 31: 1-3.
11. மேலது, 35: 14-21.
12. மேலது, 174: 19-23.
13. மேலது, 193: 1-4.
14. மேலது, 55: 1-10.
15. மேலது, 213: 20-25.
16. மேலது, 357: 1-9.
17. மேலது, 358: 1-7.
18. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.203.
19. புறம்., 65: 6-12.
20. மேலது, 66: 3-8.
21. தொல்.சொல்.சேனாவரையர் உரை, ப.96.
22. தொல்.பொருள்.களவு., 90.
23. புறம்., 192.
24. பொருநர்., 57-59.
25. குறிஞ்சி., 24-25.
26. நற்., 88: 1-2.

27. குறுந்., 229.
28. புறம்., 75: 1-3.
29. மலைபடு., 557.
30. பரி., 9: 14-15.
31. ஐங்குறுநாறு, 110: 2-5.
32. புறம்., 236: 10-12.
33. இ.எஸ்.டி., செ.ஞானன்., தத்துவ தரிசனங்கள், ப.132.
34. மணி., பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை 30; பக்.45-48.
35. மேலது, பக்.189-190.
36. மயிலை சீனி.வேங்கடசாமி கட்டுரை தொகுதிகள் 3, ப.22.
37. நா.வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், பக்.96-97.
38. தொல்.பொருள்.புறம்., 76.
39. மேலது, 77.
40. புறம்., 27: 1-10.
41. மேலது, 29: 22-26.
42. மேலது, 189: 1-8.
43. மேலது, 359: 9-18.
44. மேலது, 360: 1-21.
45. மேலது, 194: 1-7.
46. மேலது, 363.
47. மேலது, 365.
48. மேலது, 24: 30-36.
49. மேலது, 361: 16-23.
50. மேலது, 366: 13-23.
51. மேலது, 367.

இயல் - 4

# சமயங்கள் நிறுவனமயமாதலும் பெருந்தெய்வங்களின் தோற்றமும்

**வைதீகர்களும், பெருந்தெய்வங்கள் உருவாக்கமும்**

காலத்தால் முந்திய அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற தொகை நூல்களில் தொடக்க கால சிவன், விஷ்ணு பற்றியக் குறிப்புகளும், வழிபாடுகளும் சடங்குகளும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டிருந்தாலும் அதற்குப் பின்னால் வந்த பத்துப்பாட்டு நூல்களில்தான் நிலை நிறுத்தப்பட்ட பெருந்தெய்வ வழிபாடாக மாறுகின்றன. பெருந்தெய்வ வழிபாட்டு முறை பரவலாக்கப்பட்டப் பிறகு அதனோடு சேர்த்து இதிகாச, புராணக் கதைகள் புனையப்பட்டிருப்பதைப் பத்துப்பாட்டு நூல்களில் காணமுடிகிறது. எட்டுத்தொகை நூல்களில் காலத்தால் பிந்திய கலித்தொகை, பரிபாடல் மற்றும் பத்துப் பாட்டு நூல்களான திருமுருகாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, சிறுபாணாற்றுப்படை, பட்டினப்பாலை போன்ற நூல்களில் சிவ, விஷ்ணு, முருக வழிபாடு போன்றவை நிலைநிறுத்தப்பட்ட பெருந்தெய்வ வழிபாடாக வளர்ச்சிப் பெற்றதைக் காணமுடிகிறது. தமிழகத்தில் சிவ, விஷ்ணு (மால்) வழிபாட்டை வைதீகர்கள் தொடங்கி வைத்ததும் அவற்றோடு அடித்தட்டு மக்களின் முருகக் கடவுள் இணைப்பும் தமிழ்ச் சமூக வரலாற்றில் முக்கிய நிகழ்வாகும். தொடக்க நிலையில் சிறப்புப் பெறாத சிவ, விஷ்ணு வழிபாடு பின்னாளில் வைதீகர்களின் செல்வாக்கு, மன்னர்களின் ஆதரவு, பெருநிலக்கிழார்கள் ஆதரவு இவற்றோடு ஓரளவு வளர்ச்சிப் பெற்றாலும் சமண, பௌத்த சமயங்களின் தமிழகத்தில் ஏற்படுத்திய தாக்கம்தான் முக்கியமானது என்று சென்ற இயல்களில் சுட்டிக் காட்டப்பட்டது. இந்நிகழ்வு சைவமும், வைணவமும் தனக்கெனப் பெருந்தெய்வங்களை உருவாக்கிக் கொண்டு சமூகத்தில் நிறுவனமயமாக முயற்சித்தன. அதுமட்டுமின்றி சிவ, விஷ்ணு வழிபாடு தமிழகத்தில் சிறப்புற மற்றொரு காரணமும் உண்டு. வட இந்தியாவில் வேதக் காலத்தின் முடிவில் சிவன், விஷ்ணு, பிரம்மா போன்ற தெய்வங்கள் சிறப்படைகின்றன. மேலும் பக்தி மார்க்கத்தின் தொடக்கத்தையும், சமயத்தின் தோற்றத்தையும் காட்டுவதுபோல பகவத்கீதையில் கண்ணன் தனித் தெய்வமாக்கப்படுகின்றான். வேதக் காலத்தில் சிவன், உருத்திரனோடு இணைக்கப்படுவதையும், சிவன், சிந்துவெளி நாகரிகத்திலிருந்து வைதீகத்தால் உள்வாங்கப்பட்டவன் என்பதையும் சென்ற இயல் விரிவாக விளக்கியது. அதேபோல வேதகால முடிவில் முன்னணி வகிக்கும் விஷ்ணு, தமிழகத்தின் முல்லைநிலத் தெய்வம் ‘மால்’ தெய்வத்தோடு இரண்டறக் கலக்கப்பட்டு உருவான காலப் பகுதியில் தோன்றிய சிவ, விஷ்ணு தெய்வங்களைத்தான் சங்கத் தமிழ் இலக்கியத்தில் நாம் காண்கிறோம். பத்துப்பாட்டில்தான் சிவனைப்பற்றிய வெளிப்படையான குறிப்புகள் காணப்படுகின்றன.

சிவன், முப்புரம் எரித்தது, கண்டத்திலே நீல நிறம் பெற்றிருத்தல், திங்களை தலையிலே தரித்திருத்தல், நெற்றிக் கண் உள்ளமை, இடப்பக் கொடியை உடையவராயிருத்தல், உமையொரு பாகனாயிருத்தல், ஐம்பூதங்களைப் படைத்தவனாயிருத்தல் ஆகியவை சங்க இலக்கியங்களிலே சிவனைப் பற்றிக் கூறப்படும் குறிப்புகளாக விளங்குகின்றன, எட்டுத்தொகையிலும் இதுபோன்ற சிவனைப்பற்றிய செய்திகள் ஆங்காங்கே காணப்படுகின்றன. முக்கண்ணனாக விளங்குகின்ற சிவனுக்குக் கோயில் இருந்ததாக புறநானூறு கூறுகிறது.

**"................ நின் குடையே முனிவர்**

**முக்கண் செல்வர் நகர் வலம் செயற்கே"**[1]

என்பன அவ்வரிகள்.

உன் வெண்கொற்றக் குடை முனிவர்களால் வணங்கப்படும் சிவபெருமான் திருக்கோயிலை வலம் வருவதற்குத் துணையாவதாகுக என்று வருகிறது. அதுபோல சங்கப்பாடல்களில் விஷ்ணு என்ற பெயர் வழங்கப்படவில்லை 'மால்' 'மாயோன்' என்ற பெயர்களே காணப்படுகின்றன. 'மால்' என்பதற்கு பெரியோன் என்றும், மாயோன் என்பதற்கு கரியவன் என்ற பொருளோடும் வழங்கப்பட்டன. வைதீகர் திராவிடரிடமிருந்தே கண்ணன் வழிபாட்டைப் பெற்றிருக்கிறார்கள். நாடோடிகளாக வாழ்ந்த மேய்ச்சல் சமூக வைதீகர்களுக்கு ஓரிடத்தில் நிலையாக இருந்து, வாழ்ந்த தமிழகத்தின் இடையர்குல மக்களின் தெய்வமான 'மால்' தெய்வத்தைக் கண்ணனோடு இணைத்துக் கொண்டதில் பெருமைப்பட்டனர். மேலும் கண்ணனின் கருமை நிறம் என்பது திராவிடர்களின் கருமை நிறத்தைக் குறிப்பது கவனிக்க வேண்டியதாகும். இவ்வாறு வளர்ச்சிப் பெற்ற திருமால் காலப்போக்கில் கழுவப்பட்ட அழகிய நீலமணி போன்ற திருமேனியையும், வானுற ஓங்கிய கருடக் கொடியையும், ஆலிலையையும், ஏந்தியிருப்பவன் என்றும், தன்னுடைய கைகளிலே சங்கையும், சக்கரத்தையும் தாங்கியிருக்கிறான் என்றும், தனது மார்பிடத்தே திருமகளை வைத்திருக்கின்றான் என்றும் விஷ்ணு என்னும் பெருந்தெய்வமாகவும், சமயக் கடவுளாகவும் மாற்றம் பெறுவதைக் காலத்தால் பிந்திய சங்க இலக்கியப் பாடல்கள் விளக்குகின்றன.

**"சமூகத்திலே தனிவுடமையையும், ஆட்சி நிலைமையும் தோன்றியபோது தனிப்பட்ட கட்ட தெய்வங்களும், வகுப்புகளுக்கான தனிப்பட்ட தெய்வங்களும் உருப்பெற்றன. அந்த நிலையிலேயே சிவன், விஷ்ணு முதலிய தெய்வங்கள்**

**சிறப்புறத் தொடங்கின. கோயில் வழிபாடும், புறச் சமயங்களின் தாக்குதல் காரணமாக ஏற்பட்ட பக்தி மார்க்கமும், சமுதாயத்திலே ஏற்பட்ட வர்க்க முரண்பாடுகளும் தனித்தெய்வங்கள் தோன்றுவதற்கு அனுசரணையாக இருந்தன."[2]**

வர்க்க முரண்பாடு அடிப்படையில் மேல்தட்டு தனித்தெய்வங்களாகச் சிவனும், விஷ்ணுவும் தோற்றம் பெறுவதில் பின்னணியை கலாநிதி கைலாசபதி தன் மேற்கோள்களின் மூலம், விளங்க வைக்கிறார். சிவன், விஷ்ணு ஆகிய இரு தெய்வங்களும் சிறப்புற்ற நேரத்தில் அந்த இரண்டு தெய்வங்களும் தமக்கு முன்னிருந்த பல சமய நம்பிக்கைகளையும் தெய்வங்களையும், வழிபாட்டு முறைகளையும் தம்முடன் பல்வேறு வகைகளிலே தொடர்புபடுத்தி, இணைத்து ஈடு இணையற்றத் தனிப்பெருந் தெய்வங்களாகப் பரிணமித்தன. இதற்குக் காரணகர்த்தாவாக வைதீகர்கள் அமைந்தனர். இத்தகைய முயற்சிகள் இந்தியாவிற்கு ஒரு பண்பாட்டு ஒருமைப்பாட்டை அளித்தன. சிவனும், விஷ்ணுவும் தமிழகத்தில் தனிப்பெருந்தெய்வங்களாகத் தோற்றமளித்ததைப் பின்வரும் அகநானூற்றுப் பாடல் பறைச்சாற்றி நிற்கிறது. அது,

**"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து**
**உருவுடன் இயைந்த தோற்றம் போல**
**அந்தி வானமொடு கடலணி கொளா அ**
**வந்த மாலை பெயரின்....."[3]**

என்பதாகும்.

அஞ்சத்தகும் மிக்க வலியுடைய இரு பெருந்தெய்வங்களான சிவனும், திருமாலும் இவர்களது செந்நிறமும், கருநிறமும் ஒருங்கு பொருந்திய தோற்றத்தைப் போல அந்தி வானத்தின் அழகுடன் கடலின் அழகையும் கொண்டு விளங்கும் மாலைப் பொழுதென்று வருணிப்பதன் மூலம் சிவனும், திருமாலும் தனிப்பெருந் தெய்வங்களாகத் தோற்றமளிப்பதைச் சுட்டுகிறது.

வைதீக பெருந்தெய்வங்களின் தோற்றங்களினாலும், சமண, பௌத்த சமயங்களின் வளர்ச்சியாலும் தமிழகத்தில் கோயில்கள், விகாரைகள், பள்ளிகள் பெருமளவுக்குக் கட்டப்பட்டன. இது சமய மோதலுக்கு ஏதுவாக அமைந்தது. பத்துப்பாட்டில் ஒன்றான

மதுரைக்காஞ்சியில் அந்தணப் பள்ளி சிறப்புற்று விளங்கியது காட்டப்படுகிறது. இந்நிகழ்வுகள் சங்க இலக்கியக் காலத்திலேயே சமயங்கள் நிறுவனமயமாகிவிட்டன என்பதைப் பறைசாற்றுகின்றன.

எப்போதும் போர், கொள்ளை, மரணம், அதிக மது, மாமிச உணவு முதலியவற்றின் இருப்பிடமாக விளங்கிய பண்டையத் தமிழகத்தில் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு சமணம், பௌத்தம் ஆகியன போதித்த சாந்தம், சமாதானம், ஒழுக்கம், பெண்ணாசை வெறுப்பு, அரசு நெறி, கட்டுப்பாடு, புலால் வெறுப்பு, மது வெறுப்பு, பொருளாசை வெறுப்பு முதலிய பண்புகளைத் தொடக்கத்தில் மெதுவாகவும், பின்னர் வேகமாகவும், விருப்பத்தோடும் ஏற்றுக்கொண்டு காலத்தின் தேவையைச் சமயங்கள் நிறைவேற்றினாலும் ஒழுங்கு, ஒழுக்கம் என்னும் அடிப்படையில் மன்னர்களுக்கும் நில உடமையாளர்களுக்கும் ஆதரவு அளிக்கும் வகையில் பள்ளிகள், விகாரைகள் மூலம் செல்வங்களும், சொத்துக்களும் சேர்க்கப்பட்டு சமயங்கள் நிறுவனமயமாக்கப்பட்டன. சமயங்கள் நிலவுடமை நிறுவனங்களாக்கப்பட்டக் காரணத்தினால் அவைகள் தாம் வந்த நோக்கம் பிறழ்ந்து சமூக நலனை மறந்து தமது முற்போக்கையிழந்து பிற்போக்குத் தன்மை கொண்டதாய் மாறின. இது தமிழக அடித்தட்டு மக்களுக்குப் பெரும் சுமையாக மாறியது.

**சங்கப் பாடல்களில் பெருந்தெய்வ சிவன்**

சைவ சமயத்தின் தெய்வமான சிவன் காலத்தால் முந்திய சங்கப்பாடல்களில் மெல்ல மெல்ல வளர்ச்சிப் பெற்று, பிந்திய சங்கப்பாடல்களில் தனிப்பெரும் தெய்வமாக உருவெடுக்கிறான். தொடக்கக் கட்ட வளர்ச்சி சென்ற இயலில் எடுத்துரைக்கப்பட்டது. பிந்தியதைப் பின்வரும் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன. இதை உறுதிப்படுத்தும் வகையில்,

> **"சிந்துவெளி நாகரிகத்தில் உதித்த சிவன் மிருகங்கள் புடைசூழ பசுபதியாகி, கூட்டு வாழ்க்கையில் கணங்கள் சூழப் பூதக்கணங்களுக்குத் தலைவனாகி, பழைய பெண் தெய்வத்தை மணந்து, மலைமகள் மணாளனாகி, மாதொருபாகனாகி, கார்த்திகேயன் தந்தையாகி, பழமையையும், புதுமையையும் தன்னுள்ளடக்குவதை நாம் காணலாம்"**[4]

என்று கலாநிதி கைலாசபதி காலத்தால் பிந்திய சங்கப்பாடல்களில் சிவன் தனிப்பெருந் தெய்வமாக உருவெடுப்பதை விளக்கிக் காட்டுகிறார்.

**"எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்**

**உருவ மாலை போல"[5]**

ஒளிமிகுந்த மழு ஆயுதத்தை உடைய சிவபெருமான் தலையில் சூடிய பிறைச்சந்திரன் மேல் செந்நிற மாலை கிடப்பதுபோல் குடல்கள் கிடக்கின்றன என்று சிவன் சூடியிருக்கும் பிறையைச் சுட்டி உவமையாக கலித்தொகை கூறுகிறது.

மேலும்,

**"கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிது நன்று**

**நாடுவேன் கண்டெனென் சிற்றிலுள், கண்டாங்கே**

**ஆடையால் மூஉய் அகப்படுப்பேன்; சூடிய**

**காணான் திருதருங்கொல்லோ? மணிமிடற்று**

**மாண்மலர்க் கொன்றை யவன்"[6]**

தலைவர் வருவாரா என்பதை வேறோர் வழியால் அறிய எண்ணி, நாங்கள் ஆடிய சிற்றில் விளையாட்டில் மணலில் கூடலிழைத்தேன். யான் வரைந்த பிறைச் சந்திரனின் இரு முலைகளும் கூடவில்லை. ஆகவே அவர் வரமாட்டார் என்று அறிந்தேன். மேலும் அப்பிறைச் சந்திரன் வளர்ந்து முழு நிலவாகி என்னை வருத்தும் என்று, அது தப்பிப் போகாதவாறு எனது ஆடையால் மூடிச் சிறைப்படுத்தினேன். ஆனால் உடனே, சிறந்த கொன்றை மாலையைச் சூடிய நீல கண்டப்பெருமான் தன் சடையில் சூடுதற்குப் பிறைமதியைத் தேடுவானே என்று உணர்ந்து, அப்பெருமானுக்கே அப்பிறைமதியைக் கொடுத்து, வள்ளல் என்ற புகழை அடைவாயாக என்று கூறி பிறவியை விடுவித்ததாக இப்பாடல் கூறுகிறது. பிறை என்பது சிவபெருமானுக்கு முடிமாலைபோல் அமைந்துள்ளதாக இப்பாடல் வருணிக்கிறது, அதனால் தான்,

**"புதுத்திங்கள் கண்ணியான்"[7]**

என்று சிவபெருமான் போற்றப்படுகின்றான். சிவனின் முக்கண்ணையும், கறைமிடற்றையும் சங்கப் புலவர்கள் ஒப்புமையாகவும், பிறவாகவும், எடுத்தாண்டுள்ளனர். இவை சிவனின் சினத்திற்கும், பேரருளுக்கும் சின்னமாக விளங்குகின்றன.

சிவனின் முக்கண்களை,

**"இமையாத முக்கண்கள்"[8]**

**"முக்கண்ணான்"**[9]

**"முக்கண்ணான்"**[10]

**"முக்கட் செல்வன்"**[11]

என்று சங்கப்பாடல்களில் குறிப்பிடப்படுவதன் மூலம் இக்கண்களின் சிறப்பை உணர முடிகிறது. சிவன் நஞ்சை உண்டதை அடிப்படையாக வைத்து

**"காரி உண்டிக் கடவுள்"**[12]

என்றும், நஞ்சை உண்டதால் கழுத்து கருங்கழுத்தாய் மாறியதை,

**"கறைமிடறு"**[13]

**"மணிமிடறு"**[14]

என்றும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறான். மேலும்,

**"வலவயின் உயரிய பலர் புகழ் திணிதோள்"**[15]

என்று பலரும் புகழும் வகையில் சிக்கென்ற திண்மையுடைய தோள்களை உடையவன் என்றும்,

**"எண்கையாய்"**[16]

என்று கலித்தொகை கூறுவதன் மூலம் சிவன் எட்டுக் கைகளை உடையவன் என்றும்,

**"மாண்மலர்க் கொன்றையவன்"**[17]

என்றும்,

**"அயம் திகழ் நறுங்கொன்றை**

**அலங்கல் அம் தெரியலான்"**[18]

என்றும் தோளிலே கொன்றை மாலையைத் தரித்து இருப்பவன் என்று காட்டப்படுகின்றான். சிவன் தனது வெற்றிக் கொடியாக கொண்டிருப்பது எருது. இதனால் இவன்,

**"ஆன் ஏற்றுக் கொடியோன்"**[19]

என்றும் அழைக்கப்படுகிறான்.

இவன் ஏறிச் செல்லும் ஊர்தியும் எருதுதான் என்பதை,

**"உருவ ஏற்றூர்தியான்"**[20]

என்றும், அந்த எருது வெண்மை நிறமுடையது என்பதை

**"................. வெள்ளேறு"**[21]

வெண்மையான எருதுவை ஊர்தியாகவும், அந்த வெண்மை எருதுவை தன் வெற்றிக் கொடியாகவும் கொண்டு விளங்குகிறான் என்றும் கூறுகின்றன. சிவன் 'கணிச்சி' என்னும் மழுப்படையைத் தாங்கியவன் என்பதை,

**"சீறு அருங்கணிச்சியோன் சினவலின்"**[22]

என்பதால் அறிய முடிகிறது.

அது எருது சுற்றி விளங்கும் காட்சியாக இருக்குமென்பதை,

**"எரிதிகழ் கணிச்சியோன்"**[23]

என்கிறது கலித்தொகை. இந்த மழு யாராலும் விலக்குதற்கு அரிய வன்மை படைத்தது என்பதை,

**"மாற்றரும் கணிச்சி மணிமிடற்றோனும் "**[24]

என்று, புறநானூறும் அந்த மழு பெரும் புகழ் படைத்தது என்பதை,

**"பெரும் பெயர்க் கணிச்சியோன்"**[25]

என்று கலித்தொகையும் சிறப்பித்துக் கூறுகின்றன.

சிவன் அருந்தவ முதல்வனாய் ஆலின் கீழ் அமர்ந்து அறம் உரைக்கும் யோகியாகக் காட்சி தருகிறான் என்பதை,

**"ஐயம் தீர்ந்துயார் கண்ணும் அருந்தவ முதல்வன்போல்**

**பொய்கூறாய் எனநின்னை புகழ்வது கெடாதோதான்"**[26]

என்றும், ஆலமரத்தின் அடியில் அமர்ந்து விளங்கும் தவக் காட்சியைக் குறித்தே அவன்,

**"ஆல் அமர் செல்வன்"**[27]

என்றும்,

**"ஆல்கெழு கடவுள்"**[28]

என்றும் போற்றப்படுகின்றான் என்றும் அறிய முடிகின்றது. வேதம் இவன் வாக்கிலிருந்து பிறந்தது; இவன் வாக்கில் எப்போதும் உறைந்திருப்பது வேதமே என்பதை,

**"நன்றாய்ந்த நீள்நிமிர் சடை**

**முதுமுதல்வன் வாய்போகாது**

**ஒன்று புரிந்த ஈர்இரண்டின்**

**ஆறுணர்ந்த ஒரு முதுநூல்"**[29]

என்று புறநானூறு பகர்கிறது. தேவர் பொருட்டு இயற்றப்படும் வேள்விகளிலே அவிப்பாகத்தை உண்பவனாகவும் வேள்வி முதல்வனாகவும் சிவன் உள்ளதை,

**"மாதிரம் அழல, எய்து அமரர் வேள்விப்**

**பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்"**[30]

என்று பரிபாடல் விளம்புகிறது.

**புராணக்கதைகள் மூலம் சிவன்**

காலத்தால் பிந்திய சங்க இலக்கியப் பாடல்களில் சிவனின் பராக்கிரம செயல்களை விளக்கும் வகையில் புராணக் கதைகள் மூலம் சிறப்பித்துக் கூறப்படுகிறான்.

**"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**

**உமை அமர்ந்து உயர்மலை இருந்தன னாக**

**ஐஇரு தலையின் அரக்கர் கோமான்**

**தொடிப் பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை**

**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல"**[31]

என்ற கலித்தொகைப் பாடல் இமயமலையை வில்லாக வளைத்த கங்கையைத் தலையில் அணிந்த சிவபெருமான் உமையம்மையோடு கயிலை மலையில் வீற்றிருக்க, அரக்கர் வேந்தனாகிய பத்துத் தலை உடைய இராவணன், தனது பெரிய கைகளை, அம்மலையில் அடியில் புகுத்தித் தாக்க முயன்று, கைகளையும் எடுக்க முடியாமல் அலறியதுபோல் என்ற உவமையின் மூலம் சிவன் குறித்த புராணக்கதைகள் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது எடுத்துக் காட்டப்படுகிறது. சிவன் முப்புரம் எரித்தச் செய்தியை விரிவாகப் பத்துப்பாட்டு

நூல்கள் தருகின்றன. அதாவது அமரரைக் காப்பாற்றி அவர்க்கு வாழ்வு அளிக்கும் பொருட்டாக சிவன் முப்புரத்தை அழித்தான். அடியார்களின் துன்பத்தைக் களைந்து ஆனந்தம் தரும் இயல்புடையவன் என்பதை விளக்குவதாக இப்புராணக்கதை விளக்குகிறது. இதில் முப்புரம் என்பது இடம்விட்டு இடம் பெயரக்கூடிய பெரிய அரணாக இருந்தது என்பதை,

**"இயங்கு எயில்"**[32]

என்று கலித்தொகைக் குறிப்பிடுகிறது.

**"தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக**

**அடங்காதார் மிடல்சாய அமரர்வந்து இரத்தலின்**

**.....................................................................**

**ஆறுகெட விலங்கிய அழல் அவிர் ஆரிடை"**[33]

என்ற பாடல், கடுமையான வெயிலால் மலை பிளந்து, குறுக்கே அடைத்துக் கொண்டிருக்கும், பிரமன் முதலிய தேவர்கள் வேண்டிக் கொண்டமையால், சிவபெருமான் சிங்கம் போல சினந்து, அசுரரின் மாயக்கோட்டைகளான முப்புரத்தை எரித்தான். அப்பொழுது அவன் முகம் சினத்தால் சிவந்ததுபோல, சூரியன் சிவந்து நின்று காய, அக்கோட்டை மதில் இடிந்து விழுந்ததைப்போல என்று முப்புரம்எரித்தச் செய்தி கலித்தொகையில் உவமையாகக் கூறப்படுகிறது. இதைப்போலவே,

**"ஓங்கு மலைப்பெருவில் பாம்புஞாண் கொளீஇ**

**ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றி**

**பெருவிழல் அமரர்க்கு வென்றி தந்த**

**கறைமிடற்று அண்ணல்"**[34]

உயர்ந்த மலையாகிய பெரிய வில்லைப் பாம்பாக பெரிய கயிற்றைப் பூட்டி ஒப்பில்லாத அம்பைக் கொண்டு மூன்று மதிலையும் எய்து வலிய தேவர்களுக்கு வெற்றியைத் தந்த நீலகண்டன் என்று முப்புரம் அழித்த வரலாறு புறநானூற்றிலும் வருகின்றது. அழிக்கும் கடவுளாக சிவன் விளங்குவதால்,

**"காய் கடவுள்"**[35]

என்று சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறான்.

**"படரணி அந்திப் பசுங்கண் கடவுள்**

**இடரிய ஏற்றெருமை நெஞ்சுஇடந் திட்டுக்**

**குடர்கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்"**[36]

ஊழி முடிவில் உமையொரு பாகனாகிய சிவன், அந்நாள் வரை உயிர்களை இடம் பெயர்த்த எருமை ஊர்தி உடைய எமனை நெஞ்சு பிளந்து கொன்று குடலைப் பேய்களுக்கு இட்டக் காட்சியைப் போல உள்ளது என்ற உவமையின் மூலம் எல்லா உயிர்களையும் உண்ட அந்தக் கூற்றுவனது உயிரையும் மாய்க்கின்றான் என்று கலித்தொகை கூறுகிறது. இதைப்போலவே,

**"ஏற்று எருமை நெஞ்சம் வடிம்பின் இடந்திட்டுச்**

**சீற்றமோடு ஆருயிர் கொண்டஞான்று இன்னன் கொல்**

**கூற்று என உட்கிற்று என் நெஞ்சு"**[37]

எருமையை வாகனமாகக் கொண்டு, உயிர் கொல்வதற்கு வந்த எமனின் நெஞ்சத்தைத் தனது கால் நகத்தினாலேயே பிளந்து, அவனைக் கொன்ற சிவபெருமான் என்று எமனை அழித்தப் புராணக்கதையும் கலித்தொகையில் வருகிறது. அவன் கயிலை மலையில் காட்சித் தருதல் ஏற்கனவே இவ்வியலில் காட்டப்பட்டது. அதைப்போலவே சிவன், நன்னன் சேய் நன்னனுடைய நவிரமலையில் காட்சித் தருவதை மலைபடுகடாம் பின்வருமாறு குறிக்கிறது.

**"நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல்**

**பேரிசை நவிர மோய் உறையும்**

**காரி உண்டிக் கடவுளது இயற்கையும்"**[38]

உலகம் நடுங்குமாறு அச்சத்தைத் தோற்றுவித்த நஞ்சை உண்டருளியவனும் பெரிய புகழை உடையவனும் நவிரம் என்னும் மலையில் பொருந்தி இருப்பவனுமாகிய முழுமுதற் கடவுள் என்று குறிப்பிடுகிறது.

**"உயர்நிலை மாக்கல் புகர்முகம் புதைய**

**மாரியின் இருதரு வில்லுமிழ் கடுங்கணைத்**

**................................................................**

**மாரி தலையும் அவன் மல்லல் வெற்போ"**[39]

பொருது பொலிவுப் பெற்ற பானைப் படைகளையுடையதும், தனது உச்சியில் செய்யப் பெற்றதும் இலஞ்சியையுடைய ஆற்றின் வழியிடத்தே உள்ளதும் பழமையானதும் ஆகிய மதிலையுடைய திருக்கோயில் வீற்றிருந்தருளும் தொழுதற்குரிய கடவுளை நீயிர் காண்பீராயின் அக்கடவுளைத் தொழுது செல்லக் கடவீர். அதனுடன் நும்முடைய இன்னிசைக் கருவிகளை இசைக்க வேண்டா; ஏனெனில் அந்த நன்ன வேருக்குரிய வளமிக்க நவிரமலையில் இடைவிடாமல் மழை பெய்து கொண்டேயிருக்கும் என்று நவிர மலையில் ‘காரி உண்டிக் கடவுள்’ என்னும் பெயருடன் விளங்குதலையும், இங்கு செல்லும் பாணர், கூத்தர் முதலியோர் இசைபாடி வழிபடுதலையும் மலைபடுகடாமில் காணலாகிறது.

**சங்கப்பாடல்களில் சிவன் கோயில்**

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலமுற்றம் என்னும் தலத்தையும் அங்குள்ள பொய்கை, பொழில்களையும் அகநானூறு குறிப்பிடுகிறது.

**“வைப்பின் யாணர் வளம்கெழு வேந்தர்**

**ஞாலம் நாறும் நலம் கெழு நல்இசை**

**...........................................................**

**புகாஅர் நல் நாட்டதுவே”**[40]

இந்த ஆலமுற்றம் சோழர்க்குரிய புகார் நாட்டில் அமைந்த இடம் என்றும் இது சோழவேந்தர்களின் மேற்பார்வையில் இருந்தது என்றும் குறிப்பிடப்படுகிறது.

**சிவன் - உமை இணைப்பு**

சிவன் உமையை ஒரு பாகத்தே கொண்டு உயர்ந்த மலையாகிய கயிலை மலையிலே அமர்ந்து போகியாகக் காட்சித் தருகின்றான் என்பதை

**“உமையமர்ந்து விளங்கும் இமையாமுக்கண்”**[41]

என்றும்,

**“இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**

**உமை அமர்ந்து உயர்மலை இருந்தன னாக”**[42]

என்றும் திருமுருகாற்றுப்படையும், கலித்தொகையும் காட்சிப்படுத்துக்கின்றன. சிவனுடைய செம்மேனிக்கு மாறான கருமையும், பசுமையுடைய நிறமுடையவனாய் உமை காட்சியளிக்கிறாள் என்பதை,

**“மாயவள் மேனிபோல் தளிர் ஈன”**[43]

என உமையின் மேனி இளந்தளிருக்கு ஒப்புமைப்படுத்துகிறது கலித்தொகை. சிவனின் ஒரு பாகமாக உமை விளங்குதலை,

**“மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**

**முக்கண்ணான்”**[44]

**“உமை அமைர்ந்து உயர்மலை இருந்தனன்”**[45]

**“உமை அமைர்ந்து விளங்கும் இமையாமுக்கண்**

**மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வன்”**[46]

என்று கலித்தொகையும், திருமுருகாற்றுப்படையும் கூறுகிறது. உமையை மலைமகள் என்றும், முருகனை மலைமகள் மகனே என்றும் திருமுருகாற்றுப்படை கூறுவதின் மூலம் சிவன், உமை, முருகன் இணைக்கப்படுவதைக் காணலாகிறது.

## சிவன் குலமுறையோடு முருகன் இணைதல்

**“பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்**

**உமையொடு புணர்ந்த காம வதுவையுள்**

**.....................................................................**

**அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்”**[47]

காம வதுவையில் உமையோடு புணர்ந்து அமையாப் புணர்ச்சியில் அமைந்ததனாலே முருகன் தோற்றமானான். ஐந்தலை பெம்மானாகிய சிவன் ஆறுமுகப்பெருமானை ஈன்றளித்தான். இம் முருகப் பெருமானால் விண்ணோர், மண்ணோர் துயரங்கள் நீங்கி நல்வாழ்வு பெற உதவினான் என்று சிவனின் மகனாக முருகன் குலமுறையாக இணைக்கப்படுவதைப் பரிபாடல் விளக்குகிறது.

## கடவுள் வாழ்த்தில் சிவன்

நமது பண்டைய இலக்கிய நூல்களிலே கடவுள் வணக்கம் அல்லது கடவுள் வாழ்த்து இன்றியமையாத ஓர் உறுப்பாக இருந்து வந்திருக்கிறது. தண்டியலங்காரம், பெருங்காப்பியத்தின் இலக்கணத்தைச் சொல்லும்போது,

**“வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன்**

**றேற்புடைத் தாகி முன்வர வியன்று”[48]**

என்றுரைக்கிறது.

அதாவது வாழ்த்துதல், தெய்வம், உரைக்கும் பொருளுணர்த்தல் எனும் மூன்றில் ஏற்புடையது முதலில் வரவேண்டும் என்று கூறுகிறது. யாப்பருங்கலக் காரிகைப் பாயிர உரையில்

**“வழிபடு தெய்வ வணக்கம் செய்து**

**மங்கல மொழிமுதல் வழுவற வகுத்தே**

**எடுத்துக் கொண்ட இலக்கிய விலக்கணம்**

**இடுக்கண் இன்றி இனிது முடியும்”[49]**

என்று கூறப்படுகிறது. சங்கப்பாடல்களுக்கு இலக்கணமாக அமைந்த தொல்காப்பியத்திலே கடவுள் வாழ்த்து நூலின் முதல் உறுப்பாக குறிக்கப்படவில்லை. ஆனாலும்,

**“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**

**வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றுங்**

**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே”[50]**

கொடிநிலை, கந்தழி, வள்ளி என்னும் குற்றந்தீர்ந்த மூன்றும் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வரும் காலத்துக் கடவுள் வாழ்த்துடன் பொருந்தி வரும் என்றும் தொல்காப்பியம் கடவுள் வாழ்த்து இலக்கியத்தின் பகுதியாக அமைந்திருத்தல் புலனாகிறது. சங்கப் பாடல்களை ஆராயும் பொழுது அவற்றைப் பாடிய புலவர்கள் பாடுவதற்கு முன் தெய்வத்தை வழிபட்டனர் என்பதற்குச் சான்றுகள் பல உண்டு. சங்கப் புலவர்கள் கடவுளைச் செயல்முறையில் வழிபட்டதால் தனித் தனிப்பாடலாக கடவுள் வாழ்த்தைப் பாடவேண்டிய அவசியம் ஏற்படவில்லை, அதனால் எட்டுத்தொகை, பத்துப்பாட்டிற்கு பிற்காலத்திலேயே கடவுள் வாழ்த்து சேர்க்கப்பட்டிருக்கிறது. சேர்க்கப்பட்டக் காலம் சைவம், வைணவம் நிறுவனமயமானக் காலமாகும். பத்துப்பாட்டைத் தொகுத்தவர்கள் அதற்கு கடவுள் வாழ்த்தாகத் திருமுருகாற்றுப்படையை அமைத்தனர் என்பது ஏற்றுக் கொள்ளக் கூடிய கருத்தாக உள்ளது. எட்டுத் தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு போன்றவைகளுக்கு பிற்காலத்தைச் சார்ந்த பாரதம் பாடிய

பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடல்களைச் சேர்த்திருக்கிறார் என்பது புலனாகிறது. தொல்காப்பியத்திற்குக் கடவுள் வாழ்த்து இல்லையென்பதால்,

**"பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலப் பகுதியிலிருந்தே நூன் முகத்துக் கடவுள் வணக்கம் கூறும் முறைமை இலக்கிய மரபாயிற்று எனக் கொள்ளலாம்"**[51]

என களப்பிரர்களின் காலம் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலமென்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவர். சமண, பெணத்த எழுச்சியின் முழுவீச்சு களப்பிரர் காலத்தில் தான் நிகழ்ந்தது. அதற்கு எதிர்வினையாய் பத்துப்பாட்டிற்கும், எட்டுத்தொகைக்கும் வைதீகம் சமயம் சார்ந்த கடவுள் வாழ்த்துப் பாடப்பெற்றிருக்கிறது என்பதை ஊகித்துக் கொள்ளமுடியும். மேலும் பத்துப்பாட்டையும், எட்டுத்தொகையையும் தொகுப்பித்தோர் பெருநிலக்கிழார் அல்லது குறுநில மன்னர்கள் என்பதை சங்க நூல்கள் வழி நாம் அறிகிறோம். இவர்கள் களப்பிரர் காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பதையும் ஊகித்துக் கொள்ளமுடியும். இந்நிகழ்விற்குக் காரணம் வளர்ந்துவிட்ட சமணம், பௌத்தம் சார்ந்த வணிக நிறுவனத்திற்கு எதிராக வேளாண்மைச் சார்ந்த நிறுவனத்தை முன்னிலைப் படுத்துவதேயாகும். ஆகவே பத்துப்பாட்டிற்கும், எட்டுத்தொகைக்கும் கடவுள் வாழ்த்துப்பாடலாய் வரும் பாடல்கள் சைவம், வணைவம் நிறுவனமயமாகிவிட்டச் சூழலை உறுதிப்படுத்துகின்றன. சங்கப்பாடல்களில் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் சிவபெருமானின் திருக்காட்சியை முழுமையாய்க் கண்டு பாடிய பாடல்களாய் அகநானூற்றிலும், புறநானூற்றிலும் காண முடிகிறது. இரண்டு நூல்களிலும் காணும் வாழ்த்துப் பாடல்களை நோக்கும்போது சிவன் அணிந்துள்ள கொன்றை மாலையைத் தொடக்கமாகக் கொண்டு அவற்றை முடிக்கும்போது அருந்தவத்தோன் என்றும் அந்தணன் என்றும் அவனுடைய தவப்பெருங்கோலத்தை முதன்மையாக வைத்துப் போற்றியுள்ளார்.

**"கண்ணி கார்நறுங் கொன்றை, காமர்**

**வண்ண மார்பில் தாரும் கொன்றை;**

**.......................................................................**

**தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே"**[52]

சிவபெருமான், உலகத்து உயிர்களுக்கெல்லாம் பாதுகாப்பு ஆகியவன்; நீர்வற்றுதல் இல்லாத கமண்டலத்தையுடையவன்; நீண்ட சடையுடன் விளங்குபவன். செய்தற்கு அரிய தவத்தினன். அப்பெருமான், தலையில் சூடுவது கார் காலத்து மலர்ந்த கொன்றை, மார்பில்

அணியும் அழகிய மாலையும் அங்கொன்றைப்பூ, அப்பெருமான்; ஏறிச் செல்வது மிக வெண்ணிறக் காளை அவனது மிகச் சிறந்த கொடியும் அக்காளைக் கொடியே அப்பெருமான் கழுத்து நீல நிறமானது. அந்நீலநிறம் வேதம் ஓதும் அருளாளர்களால் பாராட்டவும்படும். அப்பெருமான் இடப்பக்கம் பெண்ணுருவுடையது. அவ்வுருவைத் தன்னோடு சேர்த்துக் கொள்வதும் உண்டு. அப்பெருமான்; நெற்றிமேல் அணிந்த பிறைநிலா, அந்நெற்றி போலவே விளங்குகிறது. அது, பதினென் கூட்டத்தவராலும் வணங்கவும்படும் என்று புறநானூற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல் அமைகிறது. சிறுசிறு குறிப்புகளாக புறநானூற்றுப் பாடலில் சொல்லப்பட்ட சிவபெருமானின் திருஉருவத்தை மொத்தமாய்க் காட்சிப்படுத்தும் நோக்கோடு புனையப்பட்ட பாடல்போல் இது தோன்றுகிறது. கடவுளை அருவநிலையிலும், தத்துவ நிலையிலும் விளக்கிய வைதீகத்திற்கு சாமானிய மக்களுக்கும் வைதீகத்தைக் கொண்டு செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்ட சூழ்நிலையில் தான் சிவனுக்கு உருவம் கொடுக்கும் கால நிர்பந்தம் வைதீகர்களுக்கு எற்பட்டது. மக்கள் ஆதரவோடு சமண, பௌத்த வணிக ஆதிக்கத்தை எதிர்ப்பதற்கு உருவ வழிபாடு அன்றைய காலத்தில் வைதீகத்திற்கு முக்கிய ஆயுதமாக விளங்கியது என்பதை உணர முடிகிறது.

**"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்**

**தாரன், மாலையின், மலைந்த கண்ணியன்,**

**..................................................................**

**தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே”**[53]

அந்தணன் ஆகிய இறைவன் செவ்வானம் போன்ற செக்கச் சிவந்த திருமேனியையும் அந்திப் பிறை போன்று வளைந்த கூரிய வெண்ணிறப் பற்களையும் கிளைத்து எரியும் தீயைப் போல் முறுக்கிய சடையையும் இளம்பிறை சூடிய தலையையும் உடையவன், தேவருடைய முனிவரும் அறிய முடியாத பழமையன். வரிப்புலியின் தோலை ஆடையாக உடுத்தவன். யாழிசை போல் வேதம் இசைக்கும் நீல மணி போன்ற நிறமுடைய எழுத்தை உடையவன், கார்காலத்தில் பூக்கும் பொன் நிறக் கொன்றை மலர்களாலான பூமாலைகளையும், பூணூலையும் தம் மார்பிலும், நெற்றியில் இமையாத கண்ணும் கையில் மழுப்படையும் கொண்டவன் தோல்வியே காணாத அவனுக்கு மூன்று தலைகளைக் கொண்ட சூலப்படையும் ஏறி ஊர்ந்து வரக்காளை வாகனமும் உண்டு. அவனது உடலின் ஒரு பாதி இடங்கொண்டவள் உமையவள் ஆவாள். இத்தகு தன்மைகளைக் கொண்ட இறைவனது குற்றமற்ற திருவடி நிழலில் உலகம் எவ்வித இடையூறும் இன்றித் தங்கி

இருக்கின்றது என்று அகநானூற்று கடவுள் வாழ்த்துப் பாடலில் பாடுகிறார். இதைப்போலவே குறுகிய அடிகளை உடைய ஐங்குறு நூற்றில்,

**"நீலமேனி வாலிழை பாகத்து**

**ஒருவன் இருந்தாள் நிழற்கீழ்**

**மூவகை உலகும் முகிழ்த்தன முறையே"[54]**

என்று உமையொரு பாகன் சிவனின் காட்சியைப் போற்றி புகழ்கிறது. அதுபோலவே நெய்தற் கலியைப் பாடியவரும் கலித்தொகையைத் தொகுத்தவருமாகிய நல்லந்துவனார் கலித்தொகை வாழ்த்துப்பாடலைப் பாடியிருக்கிறார்.

**"ஆறு அறி அந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து,**

**தேறுநீர் சடைக்கரந்து, திரிபுரம் தீமெடுத்துக்**

………………………………………………………………

**பொரு(ளாகிய) எமர்க்கு அமர்ந்தனை (பொருந்தினாய்)."[55]**

நீலகண்டமும், எட்டுக் கையும் உடையாய், ஆறு அங்கமும் உணர்ந்த முனிவர்களுக்கு, அரிய ஞானத்தை அருளினாய், தெளிநீர் கங்கைப் பேராற்றை நீ கூறாமலே நீ கருதிய இலக்கை அழிக்கச் செல்லும் விரைந்த செயல் உடைய பூத கணங்களை வைத்து வெற்றிப் போரிடுவாய். இப்பொழுது, நான் சொல்வகைப்பறையே பல தாளம் ஒலிக்க, 'கொடுகட்டு' என்றும் ஆடலை ஆடும்பொழுது, உமையம்மை தாளம் இசைப்பாளோ? நீ வலிமையினால் பல போர்களில் வென்று இறந்தோரின் உடற்சாம்பலை அணிந்து 'பாண்டரங்கம்' என்னும் கூத்தை ஆடும்பொழுது உமையம்மை தாளம் இசைப்பாளோ? நீ புலித்தோலை இடையில் கட்டி, கழுத்தில் கொன்றை மாலை அசைய, பிரம்மனது தலையோட்டைக் கையில் ஏந்தி, 'காபாலம்' என்னும் ஆடலை ஆடும்பொழுது, முல்லையரும்பு போன்ற பல்வரிசை உடைய உமையம்மை தாளம் இசைப்பாளோ? என்று சொல்லும்படி உமையம்மை தாளத்தை அளந்து ஒலிக்க, நீ ஊழித்தாண்டவம் ஆடி, நேயமில்லாத எமக்குப் பொருந்தி அருள் செய்தாய் என்று கலித்தொகையின் கடவுள் வாழ்த்தாக வருகின்றது. இப்பாடல் மூலம் சிவனோடு இசையும், கூத்தும் சேர்க்கப்பட்டு, சைவ சமயத்தின் தத்துவ வளர்ச்சிப் போக்கைக் காட்டுவதாக அமைகின்றது. இப்பாடலைப்போலவே பதிற்றுப்பத்திலும் சிவனைப்பற்றிய கடவுள் வாழ்த்து வருகிறது.

**"எரியெள்ளு வன்ன நிறத்தன்; வரியுணர்க்**

**கொன்றையும் பைந்தார் அகலத்தன்; பொன்றார்**

**.......................................................**

**காலக் கடவுட்கு உயர்கமா வலனே"[56]**

என்னும் பாடல் தொல்காப்பியப் புறத்திணையின் உரையில் நச்சினார்கினியரால் எடுத்துக் காட்டப்படுகிறது. பதிற்றுப்பத்தின் முதற்பத்தும், அதற்கு முற்பட்ட பகுதியும் மறைந்து போனதால் அதன் கடவுள் வாழ்த்தைக் காண இயலவில்லை. அதனால் இப்பாடலை பதிற்றுப் பத்தின் கடவுள் வாழ்த்தாகச் சான்றோர்கள் கொள்வார்கள். இதனைப் பாடியப் புலவரும் அறியப்படவில்லை.

எரி தீயையும் எள்ளி நகையாடுவதுபோல அமைந்த ஒளிரும் செந்நிறத்தை உடையவன். விரிந்த பூங்கொத்துக்களையுடைய கொன்றை மலராலே தொகுக்கப் பெற்ற பசுமையான மாலை விளங்கும் மார்பகத்தைக் கொண்டவன்; எதனாலும் கெடாத வரம் பெற்றவராகிய அவுணரது திரிபுரக் கோட்டைகளுக்கு எரியினை ஊட்டியழித்து வில்லினை ஏந்தியவன் செறிந்த இருளையுடைய யுகாந்தகாலப் பேரிருளிலே சுடுகாட்டை விரும்பியவனாக, அங்கு நின்றும் ஆடிய ஊழிக்கூத்தையுடையவன்; நெடிய முதுகுப் புறத்திலேயும் தாழ்ந்து வீழ்ந்தபடி அதனையே மறைத்துக் கொண்டிருக்கும் தாழ்ந்து செஞ்சடையினை உடையவன், வெண்மையான மணிகள் தொடைப் பக்கத்தே மோதி ஒலிக்கின்ற ஆடல் விழவினைக் கொண்டவன். நுண்ணிய நூலாற் கட்டப்பெற்ற உடுக்கையென்னும் துடியினை மாறி மாறி ஒலித்தபடியிருக்கும் விரலினைக் கொண்டவன், ஆணும், பெண்ணுமாகிய சிவசக்தி என்னும் இரண்டு உருவமும் ஒன்றாகி ஓருருக் கொண்டோனாகத் திகழ்ந்து, அதற்கேற்ப இருவகை அணிகளாலும் அழகுபெற்று, விளங்கும் அழகிய உருவினன், வளர்கின்ற இளம்பிறை சேர்ந்திருக்கும் நுதலையுடையவன், களங்கனியும் மாறாக நிறத்தாலே ஒவ்வாதபடி கருமையை ஏற்று விளங்கும் கருமைக் கறை பொருந்திய கழுத்தைக் கொண்டவன். தெளிந்த ஒளியையுடைய சூலப்படையைத் தன் திருக்கரத்திலே தாங்கியும், மற்றும் ஒளிச்சிதறும் படைகளைத் தாங்கியும் விளங்குபவன். அவனே காலக் கடவுளாகிய சிவபெருமான். அவனுக்கு வெற்றியானது நாளும், நாளும் மிகுதியாக உயர்வதாக என்ற பொருள்பட வருகிறது.

சிவனுடைய ஒட்டுமொத்த உருவத்தையும் காட்சிப்படுத்திப் புராணக் கதைகள் மூலம் அவனுடைய வீர தீர செயல்களை விளக்கி சிவனின் முழுத்தோற்றத்தையும், முழுப்பண்பு

நலன்களையும், அவனது தெய்வீக ஆற்றல்களையும், பெரும் கருணைத் திறத்தையும் போற்றி எட்டுத்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் அமைகின்றன. இது சிவன் என்கிற பெருந்தெய்வத் தோற்றத்தையும், நிலவுடமைச் சமூக அமைப்பில் சைவம் சமயம் நிறுவனமயமாகி நிற்பதையும் இக்கடவுள் வாழ்த்துப் பாடல்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன.

## திருமால் பெருந்தெய்வமாதல்

வேட்டைச் சமூக அமைப்பு முடிவடைந்து கால்நடை வளர்ப்பு, விவசாயத் தொடக்கம், குடும்ப அமைப்புத் தோற்றம், குறு அரசு அமைப்புத் தோற்றம், காடுகளை அழித்து விளை நிலமாக்குதல் போன்ற நிகழ்வுகள் நடந்த சமூக காலக்கட்டத்தில் முல்லைநில தெய்வமாக தோற்றமளித்த மால் தெய்வம்; பின்னாளில் வைதீகரின் தமிழக வருகைக்குப் பிறகு விஷ்ணு வழிபாட்டோடு இணைந்து கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு சிறிது சிறிதாக வளர்ச்சிப்பெற்று பெருந்தெய்வமாக உருமாறி நிறுவனமயமாதலை சங்க இலக்கிய வரலாற்றுத் தொடர்ச்சியில் படிப்படியாகக் காணமுடிகிறது. காலத்தால் முந்திய எட்டுத்தொகை நூல்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்ட திருமாலின் குறிப்புகள் காலத்தால் பிந்திய கலித்தொகை, பரிபாடல் மற்றும் பத்துப்பாட்டு நூல்களில் பெருந்தெய்வ வழிபாடாகக் கொண்டாடப்படுகிறான். சென்ற இயலில் கூறப்பட்டதுபோல கருத்து உருவில் இருந்த கடவுள் சிந்தனை சாதாரண எளிய மக்களுக்குச் சென்றடையவேண்டிக் காட்சிப்படுத்த வேண்டிய கட்டாயம் அக்கால வைதீகர்களுக்கு ஏற்பட்டது. பெருந்தெய்வங்களுக்கு உருவம் கொடுத்து அவைகளோடு தொடர்புடைய தெய்வங்களையும் இணைத்து, ஈடு இணையற்றப் பெருந்தெய்வங்களாக உருவாக்குவதிலும், நிறுவனமயமாக்குவதிலும் வைதீகர்களுக்குப் பெரும்பங்கு இருந்தது.

> **"திருமாலைப் பற்றிய குறிப்பு முல்லைக் கலியில் மிகுந்தும், பிறசங்க நூல்களில் ஏகதேசமாயும் வரும் பரிபாடல் திருமாலைத் துதிக்கும் ஆறு தனிப்பாடல்களைக் கொண்டுள்ளது (1-4, 13, 15) பரிபாடல் திரட்டில் வரும் ஒரு பாடலையும் இதனோடு சேர்ப்பின், இப்பரிபாடல் தொகுதி திருமாலுக்குரிய பாடல்கள் ஏழினைக் கொண்டுள்ளதாகும். இவற்றில் திருமாலின் திருவுருவக் காட்சிகளும், அவன் கொண்டுள்ள ஊர்தி, கொடி, படை ஆகியவற்றின் விவரமும்,**

**அவனோடு தொடர்புடைய திருமகள், ஆதிசேடன், பிரம்மன், காமன் ஆகியோரைப் பற்றிய செய்திகளும், வேத உபநிடதங்கள் கூறும் அவனது மெய்ப்புகழும், அவன் உயிர்கள் மாட்டும் பேரருள் கொண்டு மன்பதைகளுடன் கலந்து உறவாடுவதற்காக தன் இச்சையால் எடுத்துக்கொண்ட அவதார நிகழ்ச்சிகளும், மாய அவிணரை மாய்த்து உலகினை உறுத்திய துயரப்படலத்தை ஒதுக்கித் தள்ளிய அருட்பாடுகளும் ஆகியவற்றை நல்ல முறையில் கவிஞர்கள் வளமாகத் தந்துள்ளமையைக் காணலாம்"**[57]

என்று போராசிரியர் சண்முகப்பிள்ளை அவர்கள் திருமால் படிப்படியாகப் பெருந்தெய்வமாக சங்க இலக்கியங்களில் தோற்றம் பெறுவதை விளக்குகிறார்.

திருமால் நீண்ட பெருவடிவுடையவன் என்பதை அடைமொழியாகக் கொண்டு பல பாடல்களில் நெடியோன் என்றும் அழைக்கப்படுகிறான். மேலும் திருமால் நீல நிற வண்ணன், நன்றாகக் கழுவப்பட்ட நீலமணி போன்றவன், கார்மேகத்தைப் போன்றவன், கடலைப்போன்றவன், கார்இருளைப் போன்றவன் என்று கலித்தொகை, பரிபாடல், மதுரைக்காஞ்சி போன்ற நூல்களில் போற்றப்படுகின்றான். இவைபோன்ற மேனி அழகை இவன் கொண்டுள்ளதாலே மாயோன் என்று அழைக்கப்படுகிறான். மாயோன் என்றால் கரியவன் என்று பொருள்படும்.

**"திருமணி, திரைபாடு அவிந்த முந்நீர்**

**வருமழை இருஞ்சூல் மூன்றும் புரையும் மாமெய்"**[58]

நீலமணி, அலை ஓய்ந்த கடல், சூல்கொண்ட மேகம் என இவை மூன்றையும் ஒத்த கரிய மேனியை உடையவன் என்று பரிபாடல் பகர்கிறது.

**"வெளவல் கார், இருள் மயங்குமணி மேனியன்"**[59]

நீரை முகக்கும் மேகம், இருள், நீலமணி ஆகியவற்றை ஒத்த திருமேனி கொண்டவனென்றும்,

**"பூவை விரிமலர் புரையும் மேனியை"**[60]

காயாம்பூவை ஒத்த திருமேனி உடையவன் என்றும்,

**"கார் மலர்ப்பூவை, கடலை, இருள், மணி**

**அவை ஐந்தும் உறழும் அணிகிளர் மேனியை"[61]**

மேகம், காயாம்பூ, கடல், இருள், நீலமணி ஆகிய ஐந்தை ஒத்த அழகுடைய நிறத்தை உடையவன் என்று பரிபாடல் திருமாலின் உருவ நிறத்திற்கு வடிவம் கொடுக்கிறது,

**"மணிவரை மலர்ந்த மங்குல் ஞாயிற்று**

**அணிவனப்பு அமைந்த பூந்துகில், புனைமுடி"[62]**

நீலமலையில் பரவிய இருளைப் போக்கும் சூரியனது கதிர் அழகைப் போல் அழகமைந்த பொன்னாடையும், அதைப்போலவே அமைந்த அவனது புனைமுடியும் என்று முடியையும், ஆடையையும் பரிபாடல் காட்சிப் படுத்துகிறது.

இவனது உடுக்கை இவனுடைய மேனி நிறத்திற்கு மாறுபட்ட வண்ணத்தை உடையவன் என்பதை,

**"மா அமெய்யொடு முரணிய உடுக்கையை"[63]**

என்றும்,

இந்த உடுக்கை,

**"எரி திரிந்தன்ன பொன்புனை உடுக்கை"[64]**

என்றும் பாராட்டவும் படுகிறது.

திருமாலின் மார்பு மலைக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது.

**"மலையொடு மார்பு அமைந்த செல்வன்"[65]**

என்றும் இம்மார்பிலே காணப்படும் மாலை மலையிலிருந்து விழும் அருவியைப்போல காட்சியளிக்கிறது என்பதை,

**"இறுவரை இழிதரும் பொன்மணி அருவியின்**

**நிறனொடு மாறும் தார்ப் புள்ளுப் பொறி புனைகொடி"[66]**

என்றும்,

மார்பில் கிடக்கும் மலர்களால் கட்டப்பட்ட மாலையின் இடை இடையே துளசியையும் சேர்த்துக் கட்டியிருப்பதை,

**"எரிநகை இடையிடுபு இழைத்த நறுந்தார்ப்**

**புரிமலர்த் துழா அய் மேவல் மார்பினோய்"**[67]

என்றும், துளசியால் அமைந்த கண்ணியை அவன் திருமுடியில் பூண்டுள்ளான் என்பதை,

**"துளவம் சூடிய அறிதுயி லோனும்"**[68]

என்றும், திருமாலின் மார்பிலே தொங்கும் மாலையைப் போலவே பொன் ஆபரணங்களும், மணி ஆபரணங்களும் மாலையாக வானவில்லைப்போன்று ஒளிவீசிக் காட்சியளிக்கின்றன என்பதை,

**"ஓங்குயர் வானின் வாங்குவில் புரையும்**

**பூண்அணி கனவாகிய வார் அணி நித்திலம்"**[69]

என்பனவும் விளக்குகின்றன.

அந்த ஆபரண மாலையில் முத்துப்பதக்கம் இருக்கும் என்று பரிபாடலில் கூறுகிறது. திருமாலின் அழகிய மார்புக்கு மேலும் அழகு தருவதாக இருப்பது அம்மார்பில் இருக்கும் திருமகள் என்றும், திருமகள் இருக்கை நிறத்தால் பொன்போல் காட்சியளித்து அனைவராலும் புகழப்படும் 'மரு' போல அங்கு காணப்படுவான் என்றும் இக்காட்சியை தரும் திருமார்பினை,

**"திருமரு மார்பு"**[70]

**"மாவுடைய மலர் மார்பு"**[71]

**"செய்யோள் சேர்ந்த மார்பு"**[72]

என்று பரிபாடல் பாராட்டுகிறது. அழகிய மார்பகத்திற்குக் கீழே உள்ள உதிரத்திலே அமைந்த உந்தியில் தாமரைப்பூ உள்ளது. இதை,

**"மாநிலம் இயலா முதல்முறை அமையத்து,**

**நாமவெள்ளத்து நடுவண் தோன்றிய**

**வாய்மொழி மகனொடு மலர்ந்த**

**தாமரைப் பொருட்டுநின் நேமி நிழலே"**[73]

என்னும் வரிகள் காட்டுகின்றன.

இப்பேருலகு முன்னைய ஊழிக் காலத்தில் நீர் நடுவே தோன்றாதபோது அச்சந்தரும் பெரும் வெள்ளம் சூழ்ந்திருந்தது. அவ்வெள்ளத்தின் நடுவே தாமரைப் பொருட்டில் உன்மகனும் வேதங்களுக்குரியவனான பிரம்மன் தோன்ற; ஒரு தாமரைப் பூ மலர்ந்தது. அந்த தாமரை மலரை நீ உந்தியாகக் கொண்டாய் என்று பிரம்மன் திருமாலின் உதிரத்திலே உள்ள உந்தியில் பிறந்தான் என்று பிரம்மனின் பிறப்பை பரிபாடல் விளக்குகிறது. திருமாலின் கண்கள் தாமரை மலர் போன்றது என்பதை,

**"கண்ணே, புகழ்சால் தாமரை அயர் இணைப்பிணையல்"**[74]

என்றும், அன்பர்கள் வணங்கும் திருமாலின் திருவடிகள் செந்தாமரை மலர்கள் போன்றவை என்றும் தோன்றியதும், தோன்றுகின்றதும், தோன்றுவதும் ஆகிய முக்காலத்தையும் கடந்து அக்காலங்களைத் தமதாக்கி திருவடிகள் அமைந்துள்ளன என்பதை,

**"முடிந்தது, முடிவது, முகிழ்ப்பதும் அவை மூன்றும்**

**கடந்தவை அமைந்த கழலின் நிழலவை"**[75]

என்றும், இந்த திருவடிகள் தம்மைச் சேர்ந்தவர்களுக்குப் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரை ஏற்றுபவை என்று

**"மறுபிறப்பு அறுக்கும் மாசுஇல் சேவடி"**[76]

என்றும் சிறப்பிக்கப்படுகின்றது. இவ்வாறு வீடுபேறு அளிப்பதால் திருமாலின் திருவடிகள் திருமாலைவிடச் சிறந்தவை,

**"நின்னிற் சிறந்த நின்தாள் இணையவை"**[77]

என்று போற்றப்படுகின்றது. திருமால் தனது வலது கரத்தில் சக்கரத்தையும், இடக்கையில் சங்கையும் தாங்கியிருக்கிறான். இவையிரண்டும்,

**"பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த**

**இருவேறு மண்டிலத்து இலக்கம் போல**

**நேமியும் வளையும் ஏந்திய கையால்"**[78]

கார்மேகம் தவழும் பருவகால வானத்தில் அணிசெய்து விளங்கும் சூரிய சந்திரர்களின் இயக்கம்போல காணப்படுகின்றன என்று பரிடாடல் பகர்கிறது. மேலும் திருமாலின் கையில் இருக்கும் சங்கு,

**"நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு**

**வலம்புரி பொறித்த மாதங்கு தடக்கை"[79]**

வலம்புரிச் சங்கு என்று முல்லைப்பாட்டுக் கூறுகிறது. அதேபோல் சக்கரப்படை,

**"பொன் அணி நேமி வலம் கொண்டு**

**ஏந்திய மன்னிய முதல்வன்"[80]**

பொன்னால் செய்யப்பட்டது என்று பரிபாடல் குறிக்கிறது. திருமாலின் சக்கரமும், சங்கும் போரில் வெற்றியளிக்கும் படைகள் என்றும், இவற்றால் அவன் தன்னை இகழ்ந்தாரையும், பகைவர்களையும் அழித்து வெற்றிக் கொண்டான் என்பதை அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, முல்லைப்பாட்டு, கலித்தொகை, பரிபாடல் போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன.

**"ஓடியா உள்ளமொடு உருத்து ஒருங்கு உடன் இயைந்து,**

**இடியெதிர் கழலும் கால் உறழ்பு எழுந்தவர்**

**......................................................................**

**பொன்ஏர்பு அவிர் அழல் நுடக்கு அதன் நிறனே"[81]**

அவுணர்கள் மன எழுச்சியுடன் சினந்து ஒன்று கூடிச் சூறைக்காற்றைப்போல முழங்கி, விரைந்து உன்னுடன் போர் செய்ய வந்தனர், அப்பொழுது உன்கையிலுள்ள சங்கு பகைவரின் கொடிகள் அற்று வீழ, செவிகள் செவிடாக, முடிகள் அதிர, கால்கள் நிலைதளர, இடிபோல் முழுங்கியது. நீ ஏந்திய சக்கரப்படை அவுணர்களின் தலைகளைச் சாய்த்து, அணிந்திருந்த மாலைகளுடன் கீழே புரளுமாறு செய்தது. பனை மரத்தின் உச்சியிலுள்ள குலைகளிலிருந்து எண்ணற்ற காய்கள் கீழே வீழ்ந்து, சிதறி ஓடுவதுபோலத் தலைகள் சிதறி ஓடின. அவை குருதி சொரிய, நிலத்திற் சேர்ந்து கிடந்தன.

அச்சக்கரம் பகைவரின் இனிய உயிரை அழித்தொழித்தது. சக்கரத்தின் தோற்றம் எமனை ஒத்திருந்தது, அதன் நிறம் பொன்னுடன் எழுந்த தீக்கொழுந்து போன்றிருந்தது என்று இரண்டாம் பரிபாடலின் ஒரு பகுதி விளக்குகிறது. பாட்டில் காணப்படும் சந்த அமைப்பாலும், எடுத்துச் சொல்லும் நடை அழகாலும் இந்தப் பாடல் வரிகள் ஒரு யுத்தகள வருணனைபோல உள்ளதைக் காணமுடியும். இத்தகைய சிறப்புடைய சங்கு, சக்கரப்படைக்களைக் குறிப்பாகக் கொண்டு திருமாலை வாழ்த்துவது பின்னாளைய சங்கப் புலவர்களின் மரபாக இருந்து வந்திருக்கிறது.

திருமாலின் கொடியாகவும், ஊர்தியாகவும் அமைத்துள்ளது கருடப்புள்,

**"செவ்வாய் உவணத்து உயர் கொடியோயே"**[82]

என்று திருமால் அடையாளப்படுத்தப்படுகிறார்.

இதுவரையிலும் மேற்கோளாகக் காணப்பட்ட பிந்திய சங்கப் பாடல்களின் மூலம் திருமாலின் முழு உருவ அமைப்பை வைதீகச் சார்போடு அன்றைய வாழ் தமிழ் மக்களுக்குக் காட்சிப்படுத்தப்பட்டது புலனாகிறது. அவ்வாறு காட்சிப்படுத்தப்பட்ட திருமாலைத் துதிக்கும் பாடல்களாகப் பின்வரும் மேற்கோள் பாடல்கள் வருகின்றன.

**"அடை இறந்து அவிழ்ந்த வள் இதழ்த் தாமரை**

**அடியும் கையும் காணும் வாயும்;**

**..............................................................**

**இன்னும் இன்னும் எம் காமம் இதுவே"**[83]

என்ற பாடல் இலைக்கு மேல் உயர்ந்து மலர்ந்த பெரிய இதழ்களைக் கொண்ட தாமரை மலர்கள் உன் திருவடிகள், கைகள், கண்கள், வாய் இவற்றிற்கு ஒப்பாகும். கை வளையும், கொப்புழும், தோளில் அணியும் வளையமும், கழுத்தும் பெரியவாக உடையாய் மார்பும் அல்குலும் தனமும் பருத்துள்ளன. கேள்வியும், அறிவும், அறமும் நுண்ணியவாக உடையாய்!

வேள்வியில் விருப்பமும், மறச்செயலில் சினமும் உடையாய், நீங்காத வலிமையினையும் சினவாமலே சிவந்த கண்களையும் போரில் மேம்பட்ட சக்கரப்படையாற் செய்யும் போரால் வெற்றியடைபவனே, முறுக்குண்ட பூக்களைக் கொண்ட துளசிக்கு இடையே நிறத்தால் எரியை ஒத்த வெட்சி மலரை வைத்துக் கட்டிய நல்ல மாலையை விரும்பியணிந்த மார்பை உடையவனே. முற்பிறவிகள் பலவற்றிலும் யாம் செய்த தவத்தின் பயனால் அத்தன்மையுடையாய் என நினைத்து உன் திருவடிகளைக் கைகூப்பித் தொழுது, பலகாலும் அடுத்து அடுத்து வணங்கி வாழ்த்தினோம். இங்ஙனம் வணங்கி வாழ்த்துவதே எம் விருப்பமாகும் என்று திருமாலைத் துதிக்கும் பாடல்களாக பரிபாடல் கூறுகிறது. இவ்வாறு துதித்துப்பாடும் ஞானிகளின் இயல்புகளை,

**"ஐந்திருள் அறநீக்கி நான்கினுள் துடைத்துத்தம்**

**ஒன்றாற்றுப் படுத்தநின் ஆர்வலர் தொழுதேத்தி**

**நின்புகழ் விரித்தனர் கிளக்குங்கால் அவை நினக்கு**

**இறும்பூது அன்மைநற்கு அறிந்தேம்"**[84]

ஐம்பொறிகளால் வரும் மயக்கத்தை முழுவதும் நீக்கி, மைத்திரி முதலிய நான்கால் மனத்தைத் துய்மைப்படுத்தி, ஒரு நெறிப்படுத்திக் கொண்ட அன்பர்கள் கைக்கூப்பிக்கொழுந்து, போற்றி உன் புகழினை விரிவாகப்பாடுவார் என்று திருமாலைத் துதிப்பவர்கள் கொள்ளும் நெறிகளைப் பரிபாடல் எடுத்துரைக்கிறது. அன்பர்களின் மயக்கங்களைப் போக்குகிறான். அவர்களின் இருவினைகளும் அறுந்து போகின்றன. சுவர்க்கத்தை உரிமையாய் பெறுகின்றனர் என்று பரிபாடல் கூறுகின்றது.

முல்லை நில மக்கள் குரவைக் கூத்து ஆடி திருமாலை வழிபடுவதை முல்லைக் கலிப்பாடல்கள் குறிக்கின்றன. இது பண்டையத் தமிழரின் தனித்த வழிபாடான மால் வழிபாட்டோடு தொடர்புடையது என்பது வெள்ளிடை மலையாகும். ஆயர் வாழும் சிறுகுடிலின் மன்றத்தில், ஆட்டத்திற்கு ஏற்ற இனிய பண் அமைந்த தாள விசையுடன் கூடிய ஆடல் நிகழ்த்துவர். ஒருவரைவொருவர் தழுவி நின்று கைகோர்த்து ஆடப்படுவது இக்கூத்து.

**"தண்ணுமைப் பாணி தளராது எழுஉக;**

**பண்அமை இன்சீர்க் குரவையுள் - தெண்கண்ணித்**

**...................................................................**

**மன்றம் பரந்தது உரை"**[85]

ஏறு தழுவிய வீரத்தையும், அச்செயலால் மகிழ்ந்து நுண்ணிய புன்னகை ததும்பிய தலைவியின் மெல்லிய தோளையும் பாராட்டிப் பாடி ஆடுவர் என்று முல்லைக் கலி குறிக்கிறது. மேலும்,

**"குரவை தழீஇ, யாம், மரபுளிபாடி**

**தேயா விழுப் புகழ்த் தெய்வம் பரஅதும்"**[86]

இவ்வாறு நாம் நமது மரபின்படி பாடி, குரவையாடி கடல் சூழ்ந்த இப்பழைய நில உலகத்தை ஆளும் உரிமையுடைய பாண்டியன் பல்லாண்டு வாழ்க என வாழ்த்தி குறையாத சிறந்த புகழை உடைய தெய்வத்தைப் பரவுவோம் என்றும்,

**"தொல்கதிரித் திகிரியாற் பரஅதும்"**[87]

ஒளி திகழும் சக்கர மேந்திய பழம் பெருந்தெய்வமாகிய திருமாலைப் பரவுவோம் என்று கூறுவதின் மூலம் பண்டையத் தமிழரின் 'மால்' மரபு வழிபாட்டு முறைக்கு முக்கியத்துவம்

கொடுத்துப் பாடப்படுவதை இக்குரவைக் கூத்தின் மூலம் அறிய முடியும். மேலும் கலித்தொகை பண்டைய தமிழ்மரபை விடாமல் பெருந்தெய்வ உருவாக்கத்தில் செயல்பட்டதும் அறிய வருகிறது.

**சங்கப் பாடல்களில் திருமால் கோயில்**

சங்க இலக்கியப் பாடல்களில் சிவனைப் போலவே திருமாலுக்கும் கோயில் கட்டி வழிபட்டது அறிய வருகிறது.

**"இருந்தையூர் அமர்ந்த செல்வ"**[88]

**"குளவாய் அமர்ந்தான் நகர்"**[89]

மதுரை மக்கள் சென்று வழிபடும் வகையில் வைகைக் கரையிலே அமைந்திருந்தது இருந்தையூர் கோயில் என்று குறிப்பு பரிபாடல் திரட்டில் வருகிறது. அதுபோல் 'குளவாய்' என்பது மதுரையைச் சார்ந்த தலமாகவே உ.வே.சா குறிப்பிடுகிறார். இங்கு ஆதிசேடனுக்குரிய கோயிலே சிறப்பாகச் கூறப்பட்டிருக்கிறது. அக்கோயிலில் மகளிரும், மைந்தரும் வந்து வணங்கிப் பேறு பெறுகின்றனர் என்று பரிபாடல் திரட்டுக் கூறுகிறது.

சோழ நாட்டிற்குரிய உறையூரை அடுத்து விளங்கும் திருவரங்கத்தில் பங்குனி நிறைமதி நாள் உத்திரத்தில் நிகழ்ந்த திருவிழாவைப் பற்றிய ஒரு குறிப்பு உள்ளது. அந்தக் குறிப்பைக் கொண்டு திருமால் கோயில் கொண்டிருக்கும் தலமாகச் சான்றோர்கள் ஊகிக்கிறார்கள்,

**"உருவ வெண்மணல் முருகு நாறு தண்பொழில்**

**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்,**

**வீ இலை அமன்ற மரம்பயில் இறும்பில்**

**தீ இல் அடுப்பின் அரங்கம் போல"**[90]

என்று திருவரங்கத்தை அகநானூறு குறிக்கிறது. இதைப்போலவே,

**"காந்தள் அம் சிலம்பில் களிறு படிந்தாங்கு**

**பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்"**[91]

என நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தள் அடர்ந்த அழகிய மலையிடத்தே யானை கிடந்தாற்போன்று பாம்பணையில் துயில் கொண்டோனை பெரும்பாணாற்றுப்படைப் பாடல் குறிக்கிறது.

திருமாலிருஞ்சோலை மலையைச் சிறப்பித்துக் கூறும் பரிபாடற்பகுதிகள் பல உள்ளன. இம்மலையை ‘இருங்குன்று’, ‘இருங்குன்றம்’, ‘மால் இருங்குன்றம்’ என்று பரிபாடல் பலவிடங்களில் குறிக்கிறது.

**“அலங்கும் அருவி ஆர்த்து இமிழ்பு இழிய,**

**சிலம்பாறு அணிந்த, சீர்கெழு திருவின்**

**சோலையொடு தொடர்மொழி மாலிருங்குன்றம்”**[92]

என்று இம்மலையை சிலம்பு ஆறு அழகு செய்கிறது என்றும், இங்கு பலராமனையும், திருமாலையும் ஒன்றாக வைத்து வழிப்படப்பட்டனர் என்றும் இவ்விரு தெய்வமும் காவல் தெய்வமாக விளங்கின என்றும் பரிபாடல் கூறுகிறது. மேலும் திருமாலிருஞ்சோலையை,

**“குலவரை சிலவே; குலவரை சிலவினும்,**

**சிறந்தது, ‘கல்’ அறை கடலும் கானலும் போலவும்**

**..................................................................**

**எளிதில் பெறல் உரிமை எத்துகம்; சிலம்ப!”**[93]

என வரும் பரிபாடலில் மேருமலை முதலான வரும் கோயில்களிலே திருமால் வீற்றிருக்கும் குன்றம்தான் சிறந்தது என்று எடுத்துக் காட்டப்படுகிறது. மேலும் துறக்கத்தை அருளும் துழாயோன் தன் முன்னோனுடன் நிற்கும் பேறுபெற்ற மலை என்று சிறப்பித்துக் கூறுகிறது. எனவே சங்கப் பாடல்களில் திருமாலிருஞ்சோலைக்கு ஒரு சிறப்பிடம் உள்ளது என்பதை அறிய முடிகிறது.

### திருமாலின் மாண்புகள்

வேதம் போற்றிப் புகழுகின்ற பெரும்பொருளாய் திருமால் விளங்குகிறான். அந்தணர் அருமறைகளில் அவன் பல வகையில் துதித்துப் போற்றப்படுகின்றான். அவனுடைய மாண்புகளை பரிபாடல் பல பாடல்களில் நமக்கு விளக்குகிறது.

எல்லாப் பொருளாகவும் திருமால் இருக்கிறான் என்பதை,

**“சுவைமை, இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு**

**அவையும் நீயே; அடுபோர் அண்ணாய்!**

**...........................................................**

**காலமும் விசும்பும் காற்றொடு கனலும்”**[94]

சுவை, ஓசை, ஒளி, நாற்றம், ஊறு என்னும் ஐம்புலன்களும் நீயே, அவற்றை நுகரும் பொறிகளும் நீயே; முன்னர் கூறிய ஐம்புலன்களுள் ஓசையால் உணரப்படும் வானமும் நீயே; ஓசையும், ஊறுமாகிய இருபுலன்களாலும் உணரப்படும் தீயும் நீயே; ஓசை, ஊறு, ஒளி, சுவை ஆகிய நான்கு புலன்களாலும் உணரப்படும் நீரும் நீயே; ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய ஐம்புலன்களாலும் உணரப்படும் நிலமும் நீயே; அதனால் மூலப்பகுதியும் அறமும் முதன்மையாகிய ஆதியைக் கடந்த அநாதியான காலமும், வானமும், காற்றும், தீயும் கூடிய மூவேழுலகங்களின் உயிர்கள் எல்லாம் உன்னிடத்திருந்தே தோன்றியனவாம் என்று எல்லாவற்றிலும் தங்கி, எல்லாவற்றையும் தாங்கி, எல்லவாற்றிலும் பரவி நிற்கும் கடவுளாய் திருமால் விளங்குகிறான் என்று பரிபாடல் கூறுகிறது. திருமாலிடமிருந்தே எல்லாப் பொருள்களும் விரிந்தன என்பதை,

**"தீ, வளி, விசும்பு, நிலன், நீர், ஐந்தும்**

**ஞாயிறும் திங்களும் அறனும் ஐவரும்**

**..............................................................**

**மாயா வாய்மொழி உரைதா வலந்து"**[95]

நெருப்பு, காற்று, ஆகாயம், நிலம், நீர் ஆகிய பூதங்கள் ஐந்தையும் சூரியன், சந்திரன், வேள்வி, முதல்வன் ஆகிய மூன்றுடன் சேர்த்து அட்டமூர்த்தங்கள் என்பர், இவையெல்லாம் திருமாலின் வடிவங்களே செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஐந்து கோள்களும் காசிபனுக்குத் திதி என்பவர் வயிற்றில் தோன்றிய அசுரர்களும் தோன்றுதற்குக் காரணமானவர் திருமாலே. காசிபனுக்கு அதிதியிடம் பிறந்த ஆதித்தர் பன்னிருவர் அட்டவசுக்கள், பதினோர் உருத்திரர், தேவ மருத்துவர் இருவர் ஆகிய முப்பத்து மூன்று அமரர்க்கும் பிறப்பு அளித்தவர் திருமால் தான். எமனும் அவனது ஏவலனாகிய கூற்றமும் மூவேழ் உலகங்களும் அவ்வுலகங்களில் தோன்றி பல்வகை உயிர்க்கூட்டங்களும் திருமாலிடத்தே தோன்றியவையே என்று வேதம் கூறும். நாங்கள் அவற்றைக் கூறும்போது முறைப்படிக் கூறாது முறைமாறிக் கூறியுள்ளோம் என்று பரிபாடல் வேதச் சிந்தனையை முன் வைத்துப் பேசுகிறது. உலகத்துப் பொருள்களின் தோற்றத்திற்குக் காரணமாக இருப்பவன் என்று மேற்குறித்தப் பாடல் கூறுகிறது. அந்தப் பொருள்களின் உள்ளே இருக்கும் பண்புகளிலும் பரந்து ஒளிர்கிறான் என்பதை,

**"தீயினுள் தெறல் நீ! பூவினுள் நாற்றம் நீ!**

**கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!**

**..........................................................................**

**அனைத்தும் நீ! அனைத்தினுள் பொருளும் நீ!"**[96]

என்று எல்லாவற்றிலும் உட்பொருளாய் திருமாலின் பண்புகள் நிறைந்து கிடக்கின்றன என்பதை இப்பரிபாடல் வரிகள் விளக்குகின்றன.

இதே கருத்தினை,

**"நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள;**

**நின், தண்மையும் சாயலும் திங்களுள;**

**...........................................**

**மேவல் சான்றன எல்லாம்"**[97]

என்று எல்லாவற்றிலும் திருமால் பரவிக் கிடப்பதைப் பரிபாடலின் நான்காவது பாடல் எடுத்துரைக்கிறது. தத்துவங்களின் வடிவமாக திருமால் விளங்குகிறார் என்பதை,

**"பாழெனக், காலெனப், பாகென ஒன்றென**

**இரண்டென, மூன்றென, நான்கென, ஐந்தென**

**ஆறென, ஏழென, எட்டெனத், தொண்டென**

**நால்வகை ஊழிஎண் நவிற்றும் சிறப்பினை!"**[98]

என்று பரமான்மாவாகிய புருடனும் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பூதங்களும் சொல்லல், இயங்கல், கொடுத்தல், விடுத்தல் இன்புறல் என்னும் ஐந்து தொழிற் கருவிகளும் (கன் மேந்திரியங்களும்) ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்களும்; மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் என்னும் ஆறு அறிகருவிகளும் (ஞானேந்திரியங்களும்) அகங்கார தத்துவமும், புத்தித் தத்துவமும், மூலப்பகுதியும் ஆகிய இருபத்தைந்து தத்துவங்களைக் கொண்டும் நால்வகை யுகங்களிலும் ஆராய்ந்து கூறும் சிறப்பினை உடையவன் என்று சித்து, அசித்து, ஈசுவரன் இவை மூன்றும் இணைபிரிதல் இல்லாத உண்மைப் பொருளாகத் தத்துவப் பொருளாகத் திருமால் விளங்குகிறார் என்று பரிபாடல் எடுத்தியம்புகிறது. பல தெய்வங்களாக வகுத்துச் சொல்லப்படும் நாமங்கள் அனைத்தும் திருமாலின் நாமமே என்று விளக்கும் வகையில்,

**"அழல்புரை குழைகொழு நிழல் தரும் பலசினை**

**ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்**

**.................................................................**

**அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே"**[99]

ஆல மரத்தும், கடம்ப மரத்தும், ஆற்றிலும் குன்றத்திலுமாக எங்கெங்கும் எழுந்தருளியிருந்து அருள்புரியும் தெய்வங்களாகக் காட்சித் தருபவர் திருமாலே, அன்பர்கள் தொழும் கைகளில் அகப்பட்டவனும் அவனே, அவரவர் நினைத்தவற்றை முடித்துத் தருதலால், அவரவர்கட்கும் ஏவலாளனும் அவனே, அவரவர் செய்கின்ற அறம், பொருள், இன்பங்களாகிய பொருள்களுக்கும் காவலாக உள்ளவனும் அவனே என்று பரிபாடல் விளக்குகிறது.

இவ்வாறு எல்லாமுமாய், யாவுமாய், எங்குமாய் பரந்து ஒளிரும் ஒப்புயர்வற்று விளங்குகிறான் என்பதை,

**"இன்னோர் அனையை; இணையையாயென**

**அன்னோர் யாம் இவண் காணா மையின்**

**பொன்னணி நேமி வலங்கொண்டு ஏந்திய**

**மன்னுயிர் முதல்வனை! ஆதலின்**

**நின்னோர் அனையை; நின் புகழொடும் பொலிந்தே"**[100]

அவனுக்கு அவனேதான் ஒப்பு, பல பொருளாயிருத்தலினால் இன்னாரை ஒத்தவன் என்று ஒப்புமை கூற இயலாது, பொன்னால் அழகுப் பெற்ற சக்கரப்படையை வலத்தே ஏந்திய நீ எல்லா உயிர்கட்கும் முதல்வனாக இருப்பதால், நின் புகழோடு விளங்கி நீ நின்னையே ஒக்கின்றாய் என்று போற்றுகிறார் பரிபாடல் புலவர்.

இவ்வாறு திருமால் தெய்வ வழிபாடு சங்க கால இறுதியில் பெருந்தெய்வ வழிபாடாகவும், தத்துவ வடிவமாகவும் உருவெடுத்தச் சூழலைப் பத்துப்பாட்டு நூல்களும், எட்டுத்தொகை நூல்களில் பரிபாடலும், கலித்தொகையும் சுட்டிக்காட்டுகின்றன.

## திருமாலோடு தொடர்புடைய தெய்வங்கள்

திருமாலோடு தொடர்புடைய தெய்வங்களையும் பின்னாளைய சங்கப் பாடல்கள் பகர்கின்றன. திருமால் மார்பில் வீற்றிருப்பவள் திருமகள், நிலமகளையும் அவன் அணைத்துக் கொள்கிறான். திருமாலுக்குக் குடையாகவும், படுக்கையாகவும், பிறவாராகவும்

தொண்டு புரிபவன் ஆதிசேடன், திருமாலின் ஊர்தி கருடன், அவனுடைய உந்தித் தாமரையில் வந்தவன் நான்முகன், காமனும் அவனுடைய புதல்வன் என்ற தொடர்ச்சி நிலையில் தெய்வங்கள் குறிக்கப்படுகின்றன.

## திருமகள்

திருமகள் தாமரை மலரை இருக்கையாகக் கொண்டவள் என்பதை,

**"அல்லி அம்திருபுறு மார்ப"**[101]

என்று பரிபாடல் கூறுகிறது. இவளின் கணவனாக திருமால் இருப்பதால் 'திருவின் கணவ' என்றும், சிவந்த நிறத்தை உடையவள் என்பதால் 'செய்யாள்', 'செய்யோள்', என்றும் குறிக்கப்படுகிறாள்.

**"வரிநுதல் எழில் வேழம் நீர்மேல் சொரிதர**

**புரிநெகிழ் தாமரை மலர்அம் கண் வீறுஎய்தி**

**திரு நயந்து இருந்தன்ன தேம் கமழ் விறல்வெற்ப"**[102]

யானைகள் பூவுடன் நீரைச் சொரிய தாமரை மலரின் மொட்டிலே வீற்றிருக்கும் திருமகளை உவமையாகத் தருகிறது கலித்தொகைப்பாடல். திருமகள் செல்வத்திற்கு உரியவளாகப் போற்றப்படுகிறாள்.

**"திரு வீற்றிருந்த தீது தீர் நியமம்"**[103]

திருமகள் சிறப்புடன் வீற்றிருந்த குற்றமற்ற கடை வீதிகளையும் என்று கூறுவதால் செல்வத்திற்கு உரியவளாக கருதப்பட்டாள். மன்னர்களை திருமால் வழிவந்தவர்கள் என்று பெரும்பாணாற்றுப்படை பகறும். அதனால் நாட்டைக் காக்கும் மன்னர்களையே திருமால் எனக்கூறி இந்த மன்னர்களின் மார்பில் திருமகள் உறைவாள் என்ற மரபு உண்டு. இது செல்வத்திற்கு அதி தேவதையாக இருப்பவள் திருமகள் என்ற கருத்தால் விளைந்த விளைவாகும்.

## நிலமகள்

பூமியைப் பெண்ணாக உருவகப்படுத்துவது தொன்றுதொட்டு வரும் மரபு.

**"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை**

**அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம்போல"**[104]

மூங்கில்களைத் தோளாகவும், மலையை முலையாகவும், மலையில் தங்கிய மணிகள் அவள் முலையிடை அழகு செய்யும் ஆபரணங்களாகவும் அம்மலையில் நின்று வீழும் அருவியை அந்நிலமகளின் மார்பில் அசையும் முத்தாரமாகவும் நிலமகளை சிறுபாணாற்றுப்படையில் வர்ணிக்கிறார் நத்தத்தனார். இந்த நிலமகள் வராக கற்பத்தில் புனலிடை மூழ்கிக் கிடந்த நிலமகளைத் திருமால் ஆதிவராகமாக வந்து, தன் கொம்பிடையில் கோத்தெடுத்து வெளிக் கொணர்ந்து, அந்நில மகளையும் மணம் புரிந்தான் என்பதை,

**"வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்**

**வைவால் மருப்பின் களிறு மணன் அயர்பு**

**புள்ளி நிலனும் புரைபடல் அரிது என**

**உள்ளுநர் உரைப்போர் உரையொடு சிறந்தன்று"**[105]

என்று நிலமகளாக இருக்கின்ற திருமகளின் மண நிகழ்ச்சியைப் பரிபாடல் கூறுகிறது.

## ஆதிசேடன்

முழங்குகின்ற கடலிடத்தே திருமாலுக்குப் பள்ளியாக அமைத்துக் கிடப்பவன் ஆதிசேடன் என்று கலித்தொகை குறிக்கிறது.

**"நீடு நிலைக் காந்தள் அம்சிலம்பில் களிறு படிந்தாங்கு**

**பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்"**[106]

நீண்ட பூங்கொத்துக்களையுடைய காந்தளைக் கொண்டுள்ள அழகிய பக்கமலையிடத்திலே ஒரு யானைப் படுத்துக் கிடந்தாற்போல் பாம்பணைக் கிடந்த திருமாலின் காட்சியென பெரும்பாணாற்றுப்படை சிறப்பிக்கிறது.

அன்பர்கள் போற்றும் புகழ் மொழிகளில் ஆதிசேடனது பெருஞ்சிறப்புக்கள் பலவும் வெளிப்படுகின்றன. அவுணரும், அமரரும் கடல் கடைந்த காலத்தில் இரு திறத்தினரும் அமுது கடைவதற்கு மத்தின் நாணாக இருந்தான். வன்மை எல்லாம் பூண்ட இவன் இந்த உலகத்தை ஆபரணம் போலத் தலையில் தாங்கி நிற்கின்றான். சிவபெருமான் திரிபுரத்தை அழித்தக் காலத்தில் அப்பெருமான் கையில் பிடித்த மேரு மலையாகிய வில்லுக்கு நாணாக அமைந்து புகழ் தந்தவனும் இவனே என்று புலவர்கள் போற்றிப் புகழ்கின்றனர்.

**கருடப்புள்**

திருமாலின் கொடியாகவும், ஊர்தியாகவும் விளங்கும் கருடன்; பல வரிகளுடன் கூடி வளைந்த சிறகுகளைக் கொண்டவன். இச்சிறகுகள் பரந்து பல நிறங்களுடன் கூடியிருக்கும் நஞ்சு ஒடுங்கிய துளையையுடைய வெள்ளிய பற்களை உடையதும் நெருப்பென மூச்சுக் காற்றை எழுப்புவதும், அஞ்சத்தக்க வலிமையுடையதுமாகிய பாம்பு இறக்கும் வரைப் புடைக்கும் ஆற்றல் படைத்தவன். ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேடனையும் தன் வாயில் கௌவிக் கொண்டு இருக்கும். அதுமட்டுமின்றி பாம்பையே தன் அணிகலனாகப் பூண்டிருக்கும். அக்கருடன் பாம்பினது உடலையும், உயிரையும் உண்ணுவான். அவன் வயிற்றில் கட்டப்பட்டிருப்பதும் பாம்பு, அவனுடைய தொடி, கண்ணிகள், கழத்துப் பூண், சூட்டு, சிறகுகளின் மேல் இருப்பன எல்லாம் பாம்பு என்பதை,

**"விடமுடை அரவின் உடல் உயிர் உருங்கு உவணம்,**

**அவன் மடிமேல் வலந்தது பாம்பு**

**.....................................................**

**கொடிமேல் இருந்தவன் தாக்கு இரையது பாம்பு"**[107]

இவ்வாறு பாம்பின் மதம் சாய்த்து வெற்றிக்கொள்ளும் கருடனைக் குறிக்கிறது இப்பாடல். அப்படிப்பட்ட கருடனின் தருக்கை அடங்கச் செய்தார் திருமால். வலி அழிந்து ஆற்றாத அக்கருடன்,

**"செங்கண் மாஅல்"**[108]

என்று கூவிக் கதறியது என்று பரிபாடல் குறிக்கிறது. மேலும் கருடனை ஈன்ற அன்னை விநதையின் அடிமைத்தளையைப் போக்கி அவள் விரும்பியபடி அவளுக்கு அமுது கொணர்ந்து தந்து அன்னையின் துன்பத்தைக் களைந்ததாக பரிபாடல் குறிப்புகள் கூறுகின்றன.

**நான்முகன் பிறப்பு**

நான்முகன் என்கிற பிரம்மன் திருமாலின் உந்தியில் வந்தவன், திருமாலினுடைய கொப்பூழிலிருந்து தோன்றிய தாமரையே இவனது பிறப்பிடம். பூவில் பிறந்தமையால், இவனை பூவன் என்று பரிபாடல் அழைக்கிறது. அவ்வரிகள்,

**"நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**

**நான்முக ஒருவற் பயந்த பல்இதழ்த்**

**தாமரைப் பொருட்டின் காண்வரத் தோன்றி"**[109]

என்பனவாகும்.

இவ்வாறு பெரும்பாணாற்றுப்படையும்,

**"வாய்மொழி ஓடை மலர்ந்த**

**தாமரைப் பூவினுள் பிறந்தோனும், தாதையும்**

**நீ என மொழியுமால் அந்தணர் அருமறை"**[110]

என்ற பாடல் வரிகள் மூலம் பிரம்மன் தோன்றிய வகையை விவரிக்கிறது. பிரம்மன் நான்கு முகங்களை உடையவர். அவனே படைப்புக் கடவுள். இவன்தான் எல்லாம் மூடிக்கிடந்த கால வெள்ளத்தை நீக்கிப் பெரிய நிலத்தில் பழையபடியே உடல் உயிர்கள் தோன்றும் வண்ணம் தொழில் புரிகிறான் என்பதை,

**"உருகெழு மாநிலம் இயற்றுவான்**

**விரிதிரை நீக்குவான் வியன்குறிப்பு - ஒத்தனர்"**[111]

என்று கலித்தொகை படைப்புக் கடவுளின் தொழிலைக் குறிக்கின்றது. வேதம் பிறந்தது பிரம்மன் நாவிலிருந்து என்பதால்,

**"வாய்மொழி மகன்"**[112]

என்று பிரம்மன் குறிக்கப்படுகிறான்.

**காமன்**

பிரம்மனைப் போலவே காமனும் திருமாலின் மகனாகக் குறிக்கப்படுகிறான். அதனால் இவனை,

**"நெடியோன் மகன்"**[113]

என்று கலித்தொகை குறிக்கிறது. இவனுடைய கருவூலமும், படையுமாக அமைந்துள்ளவர்கள் மகளிர்களே என்பதை,

**"கண்டார்க்குத் தாக்கு அணங்கு இக்காரிகை காண்பின்**

**பண்டாரம், காமன்படை, உவள்; காண்மின்"**[114]

இக்காரிகை தன்னை நோக்கியவரைத் தீண்டி வருத்தும் தெய்வம் போன்றவள். இவள் கண்கள் மன்மதனின் பண்டாரமும், படைக்கலமும் ஆகும் என்று பரிபாடல் காமனைப் பற்றிக் குறிக்கிறது. இளவேனிற் காலத்தில் காமவேளுக்கு அன்றைய மக்கள் விழா எடுத்திருக்கிறார்கள். காமவேள் விழா ஆண்களும், பெண்களும் ஆனந்தமாகப் பொழுதும் போக்கும் ஓர் இன்ப விழாவாக சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

**அவதாரக் கதைகள்**

திருமால் பல அவதாரங்கள் எடுத்துள்ளான் என்பதை சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன.

**"புவ்வத் தாமரை புரையும் கண்ணன்,**

**வெளவல் கார்இருள் மயங்குமணி மேனியன்,**

**எவ்வயின் உலகத்தும் தோன்றி அவ்வயின்**

**மன்மது மறுக்கத் துன்பம் களைவோன்"**[115]

என்ற பாடல் எல்லா உலகிலும் வெளிப்பட்டு அவ்விடத்து உயிர்த் தொகுதிகளின் மயக்கத்தைச் செய்யும் பிறவித் துன்பத்தைப் போக்குபவன் என்று திருமால் அவதாரம் எடுப்பதை பரிபாடல் குறிப்பால் கூறுகிறது. உலகம் முழுவதும் நீருக்குள் அமிழ்ந்து கிடந்த பேரூழிக் காலத்தின்போது உலகத்து உயிர்களைக் காப்பாற்றும் பொருட்டு வராகத் திருக்கோலம் கொண்டு நிலத்தை நீரிலிருந்து எடுத்து உயர்த்தினான் என்று சங்கப்பாடல்கள் குறிக்கின்றன.

**அன்னம் ஆனமை**

ஒரு காலத்தில் ஏழு மேகங்களும் நீரைப் பொழிந்து உலகை நாசம் செய்ய முற்பட்டக் காலத்தில் திருமால் அன்னச் சேவலாக வந்து தன் சிறகுகளினாலே அம்மழை நீரையெல்லாம் மாயுமாறு வற்றச் செய்ததை பரிபாடல்,

**"மாவிசும்பு ஒழுகுபுனல் வறள அன்னச்**

**சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய்"**[116]

என்று குறிக்கிறது.

**நிலம் அளக்க நீண்டமால்**

திருமால் உலகத்தை மூன்றடியால் அளந்தான் என்பதை,

**"இருநிலம் கடந்த கிருமறு மார்பன்**

**முந்நீர் வண்ணன்"**[117]

**"ஞாலம் மூன்று அடித்தாய முதல்வன்"**[118]

என்று மூன்றடிகளால் உலகத்தை அளந்த குறிப்புகள் வருகின்றன.

**நரசிங்கவதாரம்**

**"செயிர்தீர் செங்கட் செல்வ! நிற்புகழப்**

**புகைந்த நெஞ்சின் புலர்ந்த சாந்தின்**

..........................................................

**தடிதடி பலபட வகிர் வாய்த்த உகிரினை"**[119]

தன்னை நேசித்துப் புகழும் பிரகலாதன் மனத்திலேப் பொருத்தி, அவனைச் சினத்தால் துன்புறுத்திய அவன் தந்தை இரணியனை அழிக்க வேண்டி, தூணில் நரசிங்கமாய்த் தோன்றி, அந்த இரணியனுடைய மார்பைத் தான் கூரிய நகங்களால் கிழித்துப் போட்டான் என்று நரசிங்க அவதாரத்தைக் குறிக்கிறது.

**பரசுராமன் அவதாரம்**

கோபம் கொண்ட பரசுராமன் தனது மழுப்படையால் மன்னர்களை மாய்த்தான் என்று அவனது வேள்வியைப் பற்றிக் குறிப்பிடும்போது உவமையாக்கி அகநானூறு கூறுகிறது.

**இராம அவதாரம்**

திருமாலின் இராம அவதார நிகழ்ச்சிகளையும் காலத்தால் பிந்திய சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. இராமனுடன் வனத்தில் வசித்திருந்து சீதையை இராவணன் கவர்ந்து சென்ற நிகழ்ச்சியில், இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும்போது தன்னைத் தேடிவரும் இராமனுக்குத் தடயமாகத் தன் ஆபரணங்களைக் கழற்றிப் போட, அதைப் பூமியில் பெற்ற சுக்கிரீவனுடைய சுற்றத்தவரான வானரங்கள் அந்த ஆபரணங்களைத் தத்தம் உறுப்புகளால் முறைமாற்றி அணிந்து கொண்டதை சோழ அரசனிடம் பரிசில் பெற்ற புலவர் அவன்

கொடுத்த அணிகலன்களை அணியத் தெரியாமல் மாற்றி மாற்றி அணிந்து கொண்டதற்கு உவமையாக புறநானூறு குறிக்கிறது.

**"கடும்தெறல் இராமன் உடன்புணர் - சீதையை**

**வலித்தகை யரக்கன்வெளவிய ஞான்றை**

**நிலம்சேர் மதரணி கண்ட குரங்கின்**

**செம்முகப் பெருங்கினை இழைப்பொலிந் தாஅங்கு**

**அறாவு அருநகை இனிது பெற்றிடுமே"**[120]

இதுபோன்ற பல அவதாரக் கதைகள் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் வருகின்றன.

இதுவரையில் திருமால் அல்லது விஷ்ணு வழிபாடு காலத்தால் முந்திய சங்கப்பாடல்களில் உருவம் கொடுக்கும் முயற்சியாக அமைந்தது. சிவ வழிபாடு வளர்ச்சியில் சிவனுக்கு உருவம் கொடுக்கும் முயற்சியில் வைதீகர் செயல்பட்டதைப் போலவே திருமாலுக்கும் உருவம் கொடுக்கும் முயற்சியில் வைதீகர்கள் செயல்பட்டனர். பின்னர் காலத்தால் பிந்திய கலித்தொகை, பரிபாடல், பத்துப்பாட்டு போன்ற இலக்கியங்களில் திருமாலுக்கு முழு உருவம் கொடுத்து, தத்துவ விளக்கம் கொடுத்து, அவதார நிகழ்ச்சிகள் வரை எடுத்துரைக்கின்றன. அதனால் சங்க காலத்தின் பிந்தைய பகுதியில் விஷ்ணு பெருந்தெய்வ வழிபாடு நிலை நிறுத்தப்படுகிறது.

## கடவுள் வாழ்த்தில் திருமால்

திருமாலை முதன்மைக் கடவுளாகக் கொண்டு கடவுள் வாழ்த்து பாடப்பட்ட, எட்டுத்தொகை நூல்கள் இரண்டு. ஒன்று பரிபாடல், இதை பாடியவர் பெயர் தெரியவில்லை. இப்பாடலின் மேற்கோள்களை திருமால் வழிபாட்டில் இவ்வாய்வில் எடுத்தாளப்பட்டிருக்கிறது. மற்றொரு நூல் நற்றிணை. இதற்கு திருமாலை கடவுள் வாழ்த்தாக அமைத்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார். அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு போன்ற எட்டுத்தொகை நூல்களுக்கு சிவனை கடவுள் வாழ்த்தாக வைத்துப் பாடிய இவர் நற்றிணையில் திருமாலை முதற்கடவுளாய்க் கொண்டு பாடுகிறார்.

**"மாநிலஞ் சேவடி ஆகத், தூநீர்**

**வளைநரல் பௌவம் உடுக்கை ஆக**

**........................................................**

**'தீதற விளங்கிய திகரியோனே' "**[121]

பெரிய நிலம் தன் சிவந்த அடிகளாகவும், தூய நீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல் ஆடையாகவும், ஆகாயம் மெய்யாகவும் திசைகள் கைகளாகவும், தண்ணிய கதிர்களையுடைய திங்களும், ஞாயிறுமாகிய இரண்டும் இரண்டு கண்களாகக் கொண்டு அமைந்துள்ள எல்லா உயிர்களிடத்தும் தான் பொருந்தியிருப்பது மட்டுமன்றி நிலம் முதலான எல்லாப் பொருள்களையும் தன்னுடைய உறுப்புகளால் அடக்கி வேதம் கூறும் முதற்கடவுள் குற்றந்தீர விளங்கிய சக்கரத்தை ஏந்திய மாயோனே என்று வணங்கி வாழ்த்துகின்றார். இப்பாடல் திருமாலின் மொத்தத் தத்துவத்தையும் உள்ளடக்கி இதுவரைச் சொல்லப்பட்ட பாடல்களுக்கெல்லாம் முத்தாய்ப்பான பாடல் வரிகளாக அமைகின்றன. எனவே திருமாலின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் அவர் தமிழகத்தில் பெருந்தெய்வமாக நிலைநிறுத்தப்பட்டதையும், நிறுவனமயமாகி விட்டதையும் வலுப்படுத்துகின்றன.

**முருகன் - ஸ்கந்தன் இணைப்பு**

தமிழகத்திற்கே உரிய முருக வணக்கம் வேட்டைச் சமூகத்தில் தொடங்குகிறது என்றும், அது தமிழ்ச் சமூகத்தில் வளர்ந்து வந்த போக்கையும் முதல் இயல் குறிக்கிறது. வைதீக சமயத்தினர் தமிழகம் வந்த பிறகு தமிழகத்தில் அவர்களின் ஆதிக்கம் ஏற்பட்டப் பிறகு தமிழ் மக்கள் வணங்கிய முருக தெய்வத்தோடு வைதீக தெய்வமான ஸ்கந்தன் அல்லது கார்த்திகேயன் அல்லது சுப்பிரமணியன் வழிபாடு இணைவதையும் இணைந்தபின் முருகனுக்குப் புதிய பரிமாணமும், வரலாறும் தோற்றம் பெறுவதையும் பெருந்தெய்வ உருவாக்கம் நடைபெற்ற பிற்கால சங்க நூல்களான பத்துப்பாட்டும், பரிபாடல் போன்ற நூல்களில் காண முடிகிறது.

> **"ஸ்கந்த பண்பாடு இங்கு முருகவணக்கத்தோடு இணைந்து ஒன்றுபடுவதை கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்கும், கி.பி.ஏழாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் அறிகிறோம்"**[122]

இக்கருத்தை வலுவூட்டும் வகையில்,

**"பழந்திராவிடரின் மற்றொரு தெய்வம் முருகன், பிற்காலத்தில் கந்தன், சுப்பிரமணியன், ஆறுமுகன் என்றெல்லாம் பெயர் பெறுகின்றான். ஆரியரது தந்தை வழி நாகரிகம் தமிழகத்திலே கலந்து கலாச்சார பிணைப்பு ஏற்பட்ட காலத்திலேயே இந்த உருமாற்றம் ஏற்பட்டது"**[123]

வைதீக சமயத்தினரின் வருகைக்குப்பின் முருக வழிபாடு, வரலாறு மாற்றம் பெறலாயின. அடித்தட்டு மக்கள் தங்களது வாழ்வியல் சூழலுக்கேற்ப வழிபட்டு வந்த முருக வழிபாட்டை இணைத்துப் பெருந்தெய்வமாக்கும் நோக்கத்தோடு வைதீகர் ஈடுபட்டனர். இதன் நோக்கம் வளர்ந்து வந்த சமண, பௌத்த சமயங்களின் தாக்கத்திற்கு எதிராக அடித்தட்டு மக்களையும் ஒன்றிணைத்து மன்னர்களின் ஆதரவோடு வென்றெடுக்கவே முருகன்-ஸ்கந்த இணைப்பு ஏற்படுத்தப்பட்டது. இத்தகைய சூழலை உருவாக்குவதில் பெரும் பங்கு வகித்தது. சங்க இலக்கியத்தின் பிற்பகுதியில் வந்த பாரிபாடலும், திருமுருகாற்றுப்படையும் ஆகும். அதில் பரிபாடல் முழுக்க முழுக்க வைதீகச் சார்போடும், திருமுருகாற்றுப்படை தமிழ்மரபையும், வைதீக மரபையும் இணைத்து நடுநிலைத்தன்மையோடும் இயங்கின. இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் இருபத்திரண்டு பரிபாடல்களில் திருமாலுக்கு ஆறும், முருகக் கடவுளுக்கு எட்டுமாகப் பதினான்கு பாடல்கள் காணப்படுகின்றன. பரிபாடலைத்தவிரப் பத்துப்பாட்டில் முதலாவதாக வைத்துப் போற்றப்படுவது திருமுருகாற்றுப்படையாகும். பத்துப்பாட்டிற்குக் கடவுள் வாழ்த்தாகவும் இத்திருமுருகாற்றுப்படை திகழ்கிறது என்பது நோக்கத்தக்கதாகும்.

முருகன் மலை உறைக் கடவுளென்றும், குறிஞ்சிக் கடவுளென்றும் சங்க காலத்தின் முற்பகுதியில் போற்றப்பட்டவன், மற்ற நிலப் பகுதியினரும் வணங்கக்கூடிய பொதுக்கடவுளாக மாற்றம் பெற்றதை திருமுருகாற்றுப்படை விளக்குகிறது.

**"ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்**

**ஆர்வலர் எத்தமே வருநிலையினும்**

**........................................................**

**மன்றமும்பொதியிலும் கந்துடை நிலையினும்"**[124]

என்ற பாடல் வரிகள் பல கூடைகள் நிறையச் சிறிய தினையரிசியைப் பூக்களோடு கலந்து வைத்து, ஆட்டுக்கிடாயை அறுத்துக் கோழிக் கொடியுடனே விழாவிற்குரிய இடம் நிறுவப்படுகிறது. இவ்வாறு ஒவ்வோர் ஊரிலும் திருவிழா நடத்தப்பட்டது. மக்கள் விரும்பிய இடத்தில் வழிபடுவதற்கு ஏற்ற வகையில் பூசாரி அலங்கரித்து அமைத்து வைத்த வெறியாடு இடத்திலும், காட்டிலும், சோலையிலும், அழகுப் பெற்ற ஆற்றிடைக் குறையிலும், ஆற்றங்கரையிலும், குளக்கரையிலும், முற்கூறிய ஊர்களில் அன்றி வேறுபல ஊர்களிலும், நாற்சந்திக் கொண்ட கடம்ப மரத்தடியிலும், ஊர்க்கு நடுவே பலர் கூடி இருக்கும் மரத்தடியிலும், பலர்க்கும் பொதுவான இடத்திலும் முருகக் கடவுள் எழுந்தருள் செய்கிறார் என்று கூறுவதின் மூலம் சிறுதெய்வ வழிபாடாகவும், இனக்குழு வழிபாடாகவும் இருந்த முருக வழிபாடு அனைத்து மக்களும் வணங்கும் பெருந்தெய்வ வழிபாடாக வளர்ச்சிப் பெற்று வந்த போக்கை அறிய முடிகிறது.

### வேதத்தில் ஸ்கந்தன்

வேதத்தில் ஸ்கந்தனைப் போன்றதோர் தெய்வத்தின் பேச்சு குறைவாகவே உள்ளது என்பதை,

> **"வேத காலத்துக்குப் பின்னும் உபநிடத காலத்திற்கு முன்னும் இடைக்காலத்தில் ஆரண்யக் காலத்தில் சண்முகன் என்ற தெய்வம் குறிக்கப்படுகிறது"**[125]

ஆரண்யக் காலத்தில் ருத்ரன், நந்தி, கருடன், பிரம்மன், விஷ்ணு, நரசிம்மன், அக்கினி, துர்க்கை, ஆதித்தன் என்ற தெய்வங்களின் பெயர்களில் ஸ்கந்தன், சண்முகன் என்று குறிக்கப்படுவதாக நா.வானமாமலை குறிப்பிடுகிறார். ஆரண்யக் காலம் கடவுள் கருத்து மாற்றக் காலமாக ஏற்பட்டதை,

> **"சண்முக காயத்திரியில் இவன் தேவர்கள் சேனையின் தலைவன் (தேவசேனாபதி) என்று வர்ணிக்கப்படுகிறான். சந்தோக்ய உபநிடத்தில் சனத்குமாரன், நாரதரிடம் சண்முகன் கதையைச் சொல்லும்பொழுது, ஸ்கந்தனும், சண்முகனும் ஒன்று என்று கூறுகிறார்"**[126]

என்ற நா. வானமாமலை அவர்களின் கருத்துப்படி தமிழகத்திற்கு வந்த ஸ்கந்த தெய்வம் வடக்கே வைதீகச் சமயத்தவரிடையே ஆரண்யக் காலத்தில் தோற்றம் பெற்றவன் என்பதை அறிய முடியும்.

தமிழ்க்கடவுளான முருகக் கடவுளோடு ஸ்கந்தன் இணைக்கப்பட்ட பிறகு முருகனின் அவதார நிகழ்ச்சிகள் முற்றிலும் வைதீக மரபைச் சார்ந்தவைகளாக அமைகின்றன. இதை

**"மூவகை, ஆரெயில் ஓரழல் அம்பின் முளிய,**

**மாதிரம் அழல, எய்து அமரர் வேள்விப்**

**..............................................................**

**ஒருவனை வாழி ஓங்குவிறல் சேஎய்"**[127]

என்ற பரிபாடல் முருகனின் பிறப்பு வைதீக மரபிற்கு மாற்றமடைவதைக் கூறுகிறது. பிரம்மன் குதிரைகளை நெறியறிந்து செலுத்தினான். சிவபெருமான் வேதமாகிய குதிரைப் பூட்டப்பெற்ற உலகமாகிய தேரில் ஏறி, வாசுகி என்னும் பாம்பு நாணாகவும், மேருமலை வில்லாகவும் கொண்டு, வெள்ளி, பொன், இரும்பு என்னும் மூவகை உலோகங்களான மூன்று மதில்களை அம்பு எய்து அழித்தான். தேவர்கள் வேள்வியில் கொடுத்த அவிப்பாகத்தை உண்ட பார்ப்பான் (சிவன்) உமையம்மையோடு கூடிக் காமம் நுகரும் திருமண நன்னாளில், அடங்காப் புணர்ச்சி மேவினான், நெற்றிக்கண் கொண்ட சிவபெருமானிடத்துத் தேவர் தலைவனான இந்திரன் புணர்ச்சியில் தோன்றியக் கருவைச் சிதைக்க, வரம் வேண்டிப் பெற்றனன். மழுப்படையுடைய சிவன் வாய்மையுதலின் ஆதலால் முன் இந்திரனுக்குக் கொடுத்த வாக்கை மீறவில்லை. தன் அரிய செயல் கண்டு ஏழுலகங்களும் வியக்குமாறு, கருவை பல துண்டங்களாகச் சிதைத்து, இந்திரனிடம் கொடுக்,த்தான். உமையின் வயிற்றினின்று தோன்றியதும் குழந்தை உருவம் அமைவதற்கு உரியதும் சிதைக்கப்பட்டதும் ஆகிய அக்கருவை ஏழு முனிவர்களும் வாங்கிக் கொண்டனர். அவர்கள் பெருந்தவம் உடையவர் என்பதால் மனத்தை ஒருமைப்படுத்திய நுண் உணர்வால், அக்கரு தேவரின் படைத்தலைவர் ஆவதற்கு உரியது என்பதனை நன்கு உணர்ந்தார்கள். சிதைந்த கருத்துண்டங்களை அப்படியே உண்டு கருத்தரித்தால், தம் மனைவியின் கற்புக்குக் குறை உண்டாகும் என எண்ணி, அவற்றை வேள்வித் தீயில் அவியுடன் இட்டனர். அவியோடு மூவகைத் தீயால் உண்ணப்பெற்ற எச்சிலாகிய கருவினை, வானத்தின் வடப்பக்கத்தில் விளங்கும் ஏழு மகளிருள், கடவுட் கற்பினையுடைய ஒரு மீனாகிய அருந்ததி தவிர, ஏனைக் கார்த்திகை மகளிர் அறுவரும் உண்டனர். கணவன்மார் வேண்ட, உண்ட அம்மகளிர் கற்பு நிலையில் வழுவாதவராய் உன்னைத் தங்கள் வயிற்றில் கருவாகக் கொண்டனர். மிக உயர்ந்த இமயமலையில் நீலப்பூக்கள் மலர்ந்துள்ள சுனையில் தாமரை மலராகிய படுக்கையில் உன்னைப் பெற்றனர் என்று புராணிகர் கூறுவர். பெரும்புகழ் வாய்ந்த

முருக! உன்னைப் பெற்ற அன்றே, தேவர் தலைவனாகிய இந்திரன் முனிவர்க்குக் கொடுத்த வரத்தையும் மீறி வச்சிரப்படையால் தாக்கினான். இதனால் வேறு வேறாகிய ஆறு துண்டங்களும் அறுவராகிப் பின் ஒருவன் ஆயினாய், என்ற இக்கதையின் மூலம் இப்பாடலை இயற்றிய கடுவன் இளவெயினார் அவர்களே முருகனை சிவனின் மகனாக உருவாக்கினார். ஆனாலும் முருகன் உமையின் வயிற்றில் பிறக்கவில்லை. தீயில் சுட்டெரிக்கப்பட்ட விந்திலிருந்து கார்த்திகைப் பெண்களுக்குப் பிறந்தவன் என்று வைதீக மரபைச் சார்ந்தவனாக முருகன் உருவாக்கப்படுவதை இப்பாடல் விளக்குகிறது. மேற்கண்ட மேற்கோளில் முருகனின் பிறப்பை வைதீக மரபோடு கூறும்போது பெருமையோடும், புகழோடும் கூறும் கடுவன் இளவெயினார் வேலன் வெறியாட்டு என்னும் தமிழ் மரபின் வழிபாட்டு முறையை வெறுப்போடு நோக்குவதையும் காண முடிகிறது.

**"காஅய் கடவுள் சேஎய்! செவ்வேள்!**

**சால்வ! தலைவ! எனப் போ விழவினுள்,**

**..................................................................**

**ஏனோர்நின் வலத்தினதே"**[128]

என்ற வரிகள் சிவனின் மகனே, சிவனின் மகனே என்று அழுத்தமாக விளித்துக் கூறி இவ்வுலகின் தலைவன் நீயே என்று கூறி உன்னைப் பற்றி பாடும். வேலன் வெறியாடல் பாடல்கள் உண்மையும் அல்ல. இருப்பினும் அப்பாடல்கள் கேட்டு நீ வெளிப்பட்டுத் தோன்றினால் அப்பாடல்கள் பொய்யும் அல்ல. ஆனால் நீ நிறம், குணம், பிறப்பு ஆகிய சிறுமை நீங்கி உலகிற்கு தலைவனாகும் சிறப்பை உடையவன் நீ என்று கூறுவதாலும், உன்னைத் தவிர்ந்த ஏனைய உயிரெல்லாம் நல்வினைச் சிறப்பால் உயர்பிறப்பாவதும், தீவினைக் குறையால் இழிப்பிறப்பாவதும் உன் ஆணையால் நடக்கும் என்பதாலும் முருகன் திராவிடத் தெய்வமாக இருந்தாலும், நிறத்தால் வேறுபட்டவன் என்றாலும் வைதீகத்தோடு முருகன் இணைந்ததால் சிறப்படைவதாகவும் கூறுகிறார். வேலன் வெறியாடல் பேய்விழா என்று கூறுமளவிற்கு வெறுப்புணர்வு கடுவன் இளவெயினார் புலவரிடம் காண முடிகிறது.

முருகனின் பிறப்பு வரலாறு பரிபாடலின் தொடர்ச்சியாக திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கலித்தொகை போன்ற பிற்கால சங்க நூல்களால் குறிக்கப்படுகிறது. வைதீக மரபில் உருவாக்கப்பட்ட முருகன்-ஸ்கந்தன் இணைப்பில் பிற்கால சங்க நூல்கள் செயல்பட்டன என்பதை பின்வரும் மேற்கோள் பாடல்கள் விளக்குகின்றன. முருகன் பிறந்த அன்றே இந்திரன் பகைமையால் வச்சிராயுதம் கொண்டு, அவன் மேல்

எறிகிறான். அப்பொழுது ஆறு கூறாகி நின்ற பெருமான் ஒருவனாகி, ஆறுமுகம் பன்னிரு தோளுடையவனாய் நின்று, ஆயுதம் எதுவுமின்றி இந்திரனுடன் போர் செய்ய, இந்திராதி தேவர்கள் தோல்வியுறுகின்றனர். அவர்கள் தங்கள் கையிலிருந்த ஆயுதங்களைக் கொடுத்தனர் என்று பரிபாடல் கூறுகிறது. முருகப் பெருமானின் புதியக் காட்சிப் படிமத்தை நீலக்கடலில் எழும் உதயசூரியனை ஒத்துச் செந்நிற ஒளிவீச, ஆறு திருமுகங்களும் அரும்காட்சி நல்க பன்னிரு கையும் பலதொழில் புரிய மயில் மேல் வீற்றிருக்கும் முருகனின் அழகினை மிக விரிவாக பலபடியாக திருமுருகாற்றுப்படை பாராட்டிப் பேசுகிறது. பரிபாடலும் முருகனின் ஆறுமுகத்தையும், பன்னிருதோளையும் பல இடங்களில் குறிக்கிறது.

**"உடையும் ஒலியலும் செய்யை; மற்று ஆங்கே**
**படையும் பவளக் கொடிநிறம் கொள்ளும்;**
**உருவும் உருவத் தீஒத்தி; முகனும்**
**விரிகதிரிமுற்றா விரிச்சுடர் ஒத்தி"**[129]

உன் உடையும் கடம்ப மலையும் செந்நிறம் உடையவை. வேற்படையும் பவழக்கொடிபோல் செந்நிறம் கொள்ளும். உடன் நிறமும் எரிகின்ற தீ ஒக்கும். முகமும் முற்றாத கதிரையுடைய ஆதித்த மண்டலத்தை நிகராக இருக்கும் என்று முருகனின் திருவுருவமும், ஆடையும், வேற்படையும் காட்சிப் படுத்தப்படுகிறது.

முருகப்பெருமானுக்கு யானையும், மயிலும் ஊர்த்தியாக அமைந்துள்ளன. இவன் ஏறி நடத்தும் யானை 'பிணிமுகம்' எனப்படும். இதை

**"சேயுயர் பிணிமுகம் ஊர்ந்து அமர் உழக்கித்"**[130]

என்றும்,

**"வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்**
**வாடா மாலை ஓடையொடு துயல்வரப்"**[131]

என்றும்,

**"போரடு தானைச் சேரலாத"**[132]

என்றும் முருகனின் ஊர்தி யானை என்பதனைக் குறிக்கின்றன. முருகன் ஏறிச் செல்லும் மயில் ஊர்தி மிக விரைந்து செல்லும் இயல்புடையது என்பதை,

**"வெண்டர் வேல்வேள்! விரைமயில்மேல் ஞாயிறு"**[133]

என்று பரிபாடல் குறிக்கிறது.

ஊர்தியாக விளங்குகின்ற யானையும், மயிலும் முருகனுக்குக் கொடியாகவும் விளங்குகின்றன என்பதை,

**"கன்னிமை கனிந்த காலத்தார், நின்**

**கொடி ஏற்று வாரணம் கொள்கவழமிச்சில்"**[134]

என்றும்,

**"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ"**[135]

என்றும் இது தவிர கோழிக்கொடியும் முருகனுக்கு உண்டு என்பதை

**"கோழிஓங்கிய வென்றடு விறற்கொடி**

**வாழிய பெரிதென்று ஏத்திப் பலருடன்"**[136]

எனப் பிற்காலச் சங்கப் பாடல்கள் குறிக்கின்றன.

முருகனின் திருவுருவையும், அவன் அணிந்துள்ள ஆடை அணிகளையும், அவனுடைய கொடி, ஊர்தி ஆகியவற்றையும், அவன் இயக்கம் முதலியவற்றையும் சுட்டி திருமுருகாற்றுப் படையில் ஓர் உருவ வருணனை வருகிறது,

**"செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்**

**செயலைத் தண்தளிர் துயில்வருங் காதினன்**

**..................................................................**

**மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்"**[137]

முருகன் இளஞ்சூரியனைப் போலச் செந்நிறமுடையவன், சிவந்த ஆடையை உடையவன், சிவந்த அடிப்பாகமுடைய அசோகினது குளிர்ச்சிப் பொருந்திய தளிகள் அசைகின்றக் காதுகளை உடையவன். அரைக் கச்சையை அணிந்தவன் வீரக்கழலைத் தரித்தவன். வெட்சி மாலையைச் சூடியவன். புல்லாங்குழலை வாசிப்பவன். பெரிய கொம்பை ஊதுபவன் வேறுபல சிறிய வாத்தியங்களை ஒலிப்பவன். ஆட்டுக் கிடாவை வாகனமாக உடையவன். மயிலை ஊர்தியாகக் கொண்டவன். குற்றமற்ற சேவலை அழகிய தனது கொடியில் எழுதிப் பிடித்தவன். நீண்ட திருவுருவம் படைத்தவன். இடுப்பில் இறுகக் கட்டிய அரைக் கச்சையின் மேல் உடுப்பதாகக் கொண்டதும், நன்மணம், குளிர்ச்சி மென்மையுடையதும் நிலத்தில் இருநுனிகள் தொங்கிப் புரளுவதுமான தூய ஆடையைத் தரித்தவனுமாகிய முருகன், யாழின் நரம்பு ஒலித்தது போன்ற இனிய குரலோடு தன்னைச்

சேவித்துப் பாடும் மகளிர கூட்டத்துடன் குன்றக் குரவை குறவர்களிடம் எழுந்தருளி வருகின்றான் என்கிறது. இப்பாடல் வரிகள் வைதீகம் கலக்காத தமிழரின் தொல்மரபு முருக வழிபாட்டோடு தொடர்புப்படுத்தி, அதன் வளர்ச்சி நிலையைக் கூறுவதாக முருகனின் திருவுருவக் காட்சி விளக்கப்படுகிறது. திருமுருகாற்றுப்படை, தமிழரின் தமிழ்ப் பண்பாட்டு மரபுகளையும், வழிபாட்டு முறைகளையும் சேர்த்துக் கொண்டு வைதீக சமய மரபில் வந்த ஸ்கந்த தெய்வத்தோடு இணைக்க முற்படுவதைப் பாடல் முழுவதும் காண முடிகிறது. முருகன் என்னும் பெருந்தெய்வ உருவாக்கத்திற்கும், தமிழர், வைதீகர் சமய ஒற்றுமைக்கும் திருமுருகாற்றுப்படை பெரும்பங்கு வகித்தது என்றால் அது மிகையாகாது.

தேவர்களின் தலைவனாக விளங்கிய முருகன் அவர்களின் பகையாய் துன்பம் கொடுத்த அவுணர்களையெல்லாம் அழித்து அந்த தேவர்களுக்கு வாழ்வுக் கொடுப்பதாக சங்கப்பாடல்கள் குறிக்கின்றன.

**"பாய் இரும் பனிக்கடல் பார்துகள் படப் புக்கு**

**சேய் உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர் உழக்கி**

**..........................................................................**

**மாய அவுணர் மருங்கு அறைத் தழத்த வேல்"**[138]

முருகன் பிணிமுகம் எனும் பெயர் கொண்ட யானை ஊர்தியில் ஏறி மாமர உருவில், கடலில் மறைந்த சூரபன்மனை அழிக்கக் கடலில் புகுந்து பாறைகள் தூளாகுமாறு வேலைச் சுற்றிப் போர்புரிந்தான். சூரனாகிய மாமரத்தை அடியோடு வெட்டினான், நல்வினை மக்களோடு பொருந்தாதவரும், கொன்று உண்ணுவதற்கு அஞ்சாதவருமாகிய அவுணர்களைச் சுற்றத்தோடு தன் வேலாலே அழித்தொழித்தான் என்று குறிக்கிறது. இப்புராண புனைவுக் கதைகளை திருமுருகாற்றுப்படை, பதிற்றுப்பத்து, பெரும்பாணாற்றுப் படை, புறநானூறு, குறுந்தொகை, கலித்தொகை போன்ற நூல்களும், குறிக்கின்றன.

அதுபோல,

**"நாவல் அம் தண்பொழில் வடபொழில் ஆயிடை**

**குருகொடு பெயர்பெற்ற மால்வரை உடைத்து**

**மலை ஆற்றுப்படுத்த மூ-இரு கயந்தலை"**[139]

முருகனின் வேலால் நாவந்தீவின் வட பகுதியில் உள்ள கிரௌஞ்சகிரி என்னும் பெருமலையைக் குடைந்து போக்குவரவுக்கு வழி செய்த ஆறு மென்மையான தலைகளை

உடையவன் என்ற புராணக் கதையை திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்ற நூல்களில் பல இடங்களில் சுட்டிக் காட்டப்படுகின்றன. இங்ஙனமாக கிரௌஞ்சத்தையும், சூரபன்மன் போன்ற அவுணரையும் அழித்து தங்களுக்கு வாழ்வளித்த முருகனுக்கு இந்திரன் தன் மகள் தேவயானையைத் திருமணம் செய்து கொடுக்கிறான் என்பதை,

**"மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"**[140]

என்றும்,

**"தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்"**[141]

என்றும்,

**"மைஇரு நூற்று இமை உண்கண் மான்மறிதோள் மணந்த ஞான்று**
**ஐஇரு நூற்று மெய்ஞ்ஞயனத்து அவன்மகள் மலர் உண்கண்**
**மணிமழை தலைஇயென"**[142]

வள்ளியை முருகன் களவில் கூடியபோது தன் மேனியில் ஆயிரம் கண்களை உடைய இந்திரனின் மகள் தேவசேனையுடைய கண்கள் மழை பெய்தன என்று வள்ளியோடு சேர்த்து தேவசேனையையும் இணைக்கும் போக்கை இப்பாடல் வரிகள் விளக்குகின்றன. வள்ளியை களவு முறைப்படி முருகன் மணம் புரிந்ததை 'முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல' என்று காலத்தால் முந்திய நற்றிணை தன் உவமையின் மூலம் குறிக்கிறது. வைதீகச் சார்பு முருகனுக்குச் சேர்க்கப்பட்ட பிறகு கற்பு மணத்தை வலியுறுத்தும் வகையில் தேவயானை வைதீகச் சாயத்தோடு இணைக்கப்படுவதைக் காலத்தால் பிந்திய சங்க நூல்களான திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்ற நூல்கள் விளக்குகின்றன.

முருகனுக்கு கோயில் அமைத்து வழிபட்டதும் சங்க இலக்கியங்களில் வருகின்றன. திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாய், திரு ஆவினன்குடி, திருஏரகம், குன்றுதொறு ஆடல், பழமுதிர்ச்சோலை என்ற ஆறுதலங்களைத் திருமுருகாற்றுப்படைக் குறிக்கிறது. முருகன் குறிஞ்சிக் கடவுள் என்பதாலும் அது மலையும், மலையைச் சார்ந்தக் காட்டிலும் கோயில் அமைந்தது என்பது குறிப்பிடத்தக்கது. இவைகளில் தொல் தமிழ்மரபுக் கூறுகளை முருகன் மகளிருடன் குரவையயர்தல், குறமகளின் வெறியாட்டு, மலையில் வழியும் அருவி, மலைக்கண் நிகழும் நிகழ்ச்சி, மலைக்காட்சி போன்றவைகள் அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். அதனால்தான் சேய்குன்றம் 'முருகு அமர் மாமலை', 'பிறங்குமலை மீமிசைக் கடவுள்' என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அதில்

திருப்பரங்குன்றத்தையும், திருச்சீர் அலைவாயையும் திருமுருகாற்றுப் படையைத் தவிர பிற சங்க நூல்களும் குறிப்பிடுகின்றன. திருப்பரங்குன்றத்தில் இருவகை வழிபாட்டு முறைகள் கூறப்படுகின்றன. கோயிலில் சிலை உருவில் முருகனை வழிபட்ட செய்தியோடு, கோயிலுக்கு வெளியே கடம்ப மரத்தடியில் வேலன் வெறியாட, பொதுமக்கள் வேலையும், கடம்ப மரத்தையும் வழிபட்டதும் கூறப்படுகிறது. மரவழிபாடும், வேல் வழிபாடும் உருவ வழிபாட்டிற்கு பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்று மானிடவியல் துறைகள் கூறுகின்றன. தமிழரின் மரபு வழி பழைய வழிபாட்டு முறையும், வைதீக புதிய வழிபாட்டு முறையும் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நிற்பதை திருப்பரங்குன்ற முருக வழிபாட்டு முறை விளக்குகிறது. இவ்வாறு முருகன், ஸ்கந்தனாகவும், கார்த்திகேயனாகவும், தேவசேனாதிபதியாகவும் மாற்றம் அடைந்ததை சங்கநூல்கள் நமக்குக் காட்டுகின்றன, மேலும் முருகன், சுப்பிரமணியனோடு இணைவதை,

> **"இந்த முருக-சுப்பிரமணிய இணைப்பு யௌத்தெய கணத்தாரான ஆரியப்படையின் தொடர்பினாலே ஏற்பட்டிருக்க வேண்டும். இந்தத் தொடர்பு கடைச்சங்க காலத்தின் இறுதியிலே அதாவது கி.பி.முதல் நூற்றாண்டு அல்லது இரண்டாம் நூற்றாண்டிலே ஏற்பட்டிருக்கக் கூடும். திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய சங்க நூல்களிலே முருக-சுப்பிரமணியக் கலப்பு காணப்படுகிறபடியினாலே கடைச்சங்க காலத்து இறுதியில் இந்த உறவு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று துணிந்து கூறலாம்"**[143]

என்று மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிடுகிறார். சங்கப் பாடல்களிலே ஆரியப்படை என்னும் பெயர் கூறப்படுகிறது வட இந்தியாவிலிருந்து தமிழகத்திற்கு வந்து போர் செய்த செய்திகளைக் குறிக்கின்றன. சங்கக் காலக் கட்டத்திலே வடக்கே போர்த் தொழிலை மட்டுமே செய்து வந்த சேனைக் கூட்டம் ஒன்று இருந்ததாகவும் அவர்கள் எந்த அரசனுக்கும் கீழ் இல்லாமல் சுயேச்சையான, சுதந்திரமான போர்ப் படையாக இருந்தனர் என்று குறிக்கப்படுகின்றார். அவர்களை யௌத்தெய கணத்தார் என்றும் அழைக்கப்பட்டனர். இவர்கள்தான் சோழ நாட்டில் இருந்த வல்லம் என்னும் ஊர்க்கோட்டையின் மேல் படையெடுத்து வந்து முற்றுகையிட்டபோது சோழ அரசன் அந்த ஆரியப்படையுடன் போரிட்டுத் துரத்தினான் என்றும் கூறுகிறது.

**"...........வென்வேல்**

**மாரியம்பின் மழைத்தோல் சோழர்**

**வில்லீண்டு இறும்பின் வல்லத்துப் புறுமினை**

**ஆரியர் படையின் உடைக"**[144]

இதைப்போன்றே,

**"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்**

**பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது**

**ஒருவேற்கு ஓடி யாங்கு"**[145]

என்று முள்ளுள் நாட்டின் தலைநகரமான முள்ளூர்க் கோட்டை மேல் இன்னொரு ஆரியப்படை வந்து முற்றுகையிட்டபோது அந்த நாட்டு மன்னனாகிய மலையமான் அப்படையை வென்று விரட்டினான் என்று நற்றிணை கூறுகிறது, இதைப்போலவே செங்குட்டுவனுடைய தந்தையாகிய நெடுஞ்சேரலாதன்,

**"ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்**

**தொன்று முதிர் வடவரை வணங்கு விற்பொறித்து"**[146]

என்றும் வடநாட்டு ஆரியப் படையைப் பற்றியக் குறிப்புகள் கூறப்படுகின்றன. இவ்வாறு போர் செய்வதையே தங்கள் குலத்தொழிலாகக் கொண்டிருந்ததை ஆரியப்படையினர், தங்களுக்கென்ற போர் தெய்வம் ஒன்றை அவர்கள் வணங்கியிருக்கின்றார்கள். அவர்கள் அத்தெய்வத்திற்கு சுப்ரமண்யன் (சுப்பிரமணியன்) என்று பெயர் வழங்கினார்கள். சுப்பிரமணியன் பெயர்களாலேயே செம்பு நாணயங்களையும், வெள்ளி நாணயங்களையும் வெளியிட்டார்கள் என்று வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். தமிழரின் போர்க்கடவுளான, வெற்றிக் கடவுளான முருகனும், ஆரியர் போர்க்கடவுளான சுப்பிரமணியனும் குணத்தால், இயல்பால் ஒன்றுபட்டிருப்பதாலும், ஆரியப்படை தமிழகத்திற்கு வந்த காரணத்தினாலும் முருகன்-சுப்பிரமணியன் இணைப்பு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று மயிலை சீனி வேங்கடசாமி போன்றோர் கருதுகின்றனர். எனவே இவர்களின் மூலமே முருகன் - சுப்பிரமணியன் இணைப்பு நடந்திருக்க வேண்டும். இவ்வாறு முருக - ஸ்கந்த - சண்முக - சுப்பிரமணிய கடவுளை இணைக்கும் காட்சியை பிற்கால கந்தபுராணம் தெளிவாக நமக்குக் காட்டுகிறது. தமிழகத்தில் வைதீகத்தின் ஆதிக்கம் ஏற்பட்ட பிறகு

அடித்தட்டு மக்களின் கடவுளான முருகனையும் பெருந்தெய்வமாக்கும் முயற்சி நடைபெற்றது.

**அந்தணர் பள்ளி**

வைதீக சமயத்தினர் பள்ளிகள் வைத்து தமது சமயங்களைப் பரப்பினர் என்பதை,

**"சிறந்த வேதம் விளங்கப் பாடி**

**விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து**

**..................................................................**

**குன்று குயின்று அன்ன அந்தணர் பள்ளியும்"**[147]

சிறந்த வேதங்களைப் பொருள் விளங்கி ஓதி ஓதியதற்குதக்க ஒழுகி, நில உலகத்தில் இருந்தவராயினும் இறைபொருளோடு தாம் வேறாகாத அத்துவித நிலையினை உணர்ந்தவராய் எல்லா உயிரிடத்தும் செந்தண்டையாகிய அன்பு பூண்டு ஒழுகுபவராய் விளங்கும் அந்தணப் பெரியோர் இனிதே உறையும் மலையைக் குடைந்தால் எவ்வாறிருக்குமோ அதுபோல குடில்களைக் கொண்டு அமைந்திருக்கின்றன. அந்தணர் பள்ளி என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இது வைதீகம் தமிழகத்தில் நிறுவனமயமாக முயற்சித்ததைச் சுட்டிக்காட்டும் ஆவணம் ஆகும்.

**சமணம், பௌத்தம் நிறுவனமயமாதல்**

கி.மு.மூன்றாம் நூற்றாண்டு வாக்கில் சமண சமயத்தினர் தமிழகம் வந்தபோது தமிழகம் விவசாய உற்பத்தியில் தன்னிகரற்ற வளர்ச்சியும், நிலவுடமை சமூக அமைப்பும் நிலை நிறுத்தப்பட்டிருந்தன. தமிழகம் மன்னர்களின் ஆளுமைக்கு கட்டுப்பட்ட பெருநிலக்கிழார் கையிலும், கி.மு.ஆறாம் நூற்றாண்டு வாக்கில் வந்த வைதீகரின் செல்வாக்கும், ஆதிக்கமும் மேலோங்கி இருந்தன. மன்னர், வைதீகர், பெருநிலக்கிழார் என்ற இந்த மூன்று சக்திகளின் கட்டுப்பாட்டில் தமிழகம் இருந்தது. மேலும் சிறுகுடிகளாக இருந்த இனக்குழு தமிழ்ச்சமூகம் சேரர், சோழர், பாண்டியர் என்ற அரசுகளாக வளர்ச்சியடைந்திருந்தன. இவை மூன்றுக்குமிடையே மோதல்கள் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருந்தன. நிலவுடமையாளர்களின் சுரண்டல் நெருக்கடியிலும் போர் போன்றவற்றாலும் மக்கள் வறுமைக்கும், துன்பத்திற்கும் ஆளாகி இன்னலுற்றனர். இந்த நெருக்கடியான சூழ்நிலையில்தான் சமணம் தமிழகத்திற்கு வந்தது. இச்சமயம் அறநெறி பொருந்திய இல்லறம் புரிந்து ஐம்புலன்களை அடக்கி, சினம்

நீக்கி, பொறையுடமையோடு கூடி, வாழ்வின் உண்மையுணர்ந்து, அன்பு பூண்டு, பற்று நீங்கியிருத்தலை வலியுறுத்தியது. பெரும்போர்க்கருவிகள், படைகள் கொண்டு மோதிக்கொண்ட வீரயுகக் காலத்தில் அறிவு நிலைகளைப் பயன்படுத்தி வாழ்வதற்கான கருத்துக்களைச் சமண, பௌத்த சமயங்கள் முன் வைத்தன. இவைகளின் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட கொல்லாமை, புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை, பிறன்மனை நயவாமை, அன்பு, அறம், ஒழுக்கம் போன்ற மனித வாழ்விற்கு தேவையான அடிப்படை மூலங்களையும், இளமை நிலையானை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, ஊழ்வினை, பிறவியறுத்தல், வீடுபேறு போன்ற சிந்தனைகளை முன்வைத்தன. பெரும் நெருக்கடியிலும், போர்த் துயரத்தினாலும், சுரண்டல் துயரத்தாலும், சாதிய ஒடுக்குமுறையாலும் ஆட்பட்டிருந்த தமிழக மக்களுக்கு சமண, பௌத்த சமயங்கள் ஆறுதல் அளிப்பதாகவும், வாழ்க்கையில் அமைதி ஏற்படுத்தக்கூடிய கருத்துக்களாகவும் இருந்ததால் மக்கள் மத்தியில் விறுவிறுவென்று வளரத் தொடங்கின. இதைப்போன்ற அன்பு, அறம், ஒழுக்கம், கொல்லாமை போன்றக் கருத்துகள் வணிகர்களின் வணிகத் தொழிலுக்கு ஏற்ற வகையில் இருந்ததாலும், எந்தப் பகுதிக்கும் சென்று வணிகம் செய்வதற்கு ஏற்றவகையில் இருந்ததால் பெரும்பான்மையான வணிகர்கள் சமண, பௌத்தச் சமயக் கொள்கைகளுக்கு ஆதரவு அளித்தனர். வட இந்தியாவில் வணிகம் ஒரு வர்க்கமாக உருப்பெற்றக் காலத்தில்தான் சமணமும், பௌத்தமும் உருவாகின என்பது வரலாற்று ஆசிரியர்கள் கண்ட முடிவாகும். ஆகவே சமணமும், பௌத்தமும் வெறும் சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்கு மட்டுமன்றி தமிழகத்தில் வணிகர்களின் மேலாதிக்கத்தை நிலை நிறுத்துவதும் அவைகளின் நோக்கமாய் இருந்தன என்பதை சங்க நூல்களின் வழி நாம் அறிய முடிகிறது. மேலும் வணிகத்திற்கு ஏற்ற வகையில் பொருளாதார வலிமையும், கடல் வணிகத்திற்கு ஏற்ற வகையில் பௌதீக நிலையும் தமிழகத்தில் இருந்தது. இதற்கு இன்னொரு முக்கிய காரணம் என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். சாந்தம், சமாதானம், ஒழுக்கம், பெண் வெறுப்பு, அரசு நெறி, கட்டுப்பாடு, புலால் மறுப்பு, பொருளாசை வெறுப்பு முதலிய பண்புகளை சமண, பௌத்த சமயங்கள் மேலோட்டமாகக் கொண்டிருந்தாலும் அடிக்கட்டுமானமாக வணிக நோக்கைக் கொண்டு விளங்கியதால் பள்ளிகள், விகாரைகள் போன்றவற்றிற்கு பெரும் அளவில் பொருளும், நிலமும் சேர்ந்தன. அதனால் அவை தான் மேலோட்டமான முற்போக்குகளை இழந்து பெரும் நிலவுடமை நிறுவனங்களாக மாறின. இது தமிழக மக்களுக்கு பெரும் சுமையாக மாறியது. இதை,

> **"சமணத்தையும், பௌத்தத்தையும் சிறப்பாக ஆதரித்தவர் அக்காலத் தமிழக வணிக வர்க்கத்தினர். ஏனெனில் பலம் வாய்ந்த அரசாட்சியில் பொருளீட்டி வாணிபஞ் செய்யும் வாய்ப்பு அவர்களுக்கு இருந்தது. அதே சமயத்தில் கொல்லாமையையும் கடைபிடிக்க முடிந்தது. நிதிக்குப்பை நிறைந்த செல்வர் சமணத்தை ஆதரிப்பதைச் சிலப்பதிகாரம் காட்டும், சமண, பௌத்த பள்ளிகள் பெரும் நிலவுடமை நிறுவனங்களாகிச் செல்வாக்குப் பெற்றிருந்ததைப் பல்லவ அரசன் மகேந்திர வர்மன் எழுதிய அங்கத நாடக நூலாகிய 'மத்த விலாசம் பிரகசனம்' என்னும் நூல் மூலம் அறியலாம். தமது செல்வாக்கினால் அவர்கள் (சமண, பௌத்தர்) நீதி பரிபாலனத்திற்கூடத் தலையிட்டனர் எனத் தெரிகிறது"**[148]

என்ற கலாநிதி கைலாசபதி அவர்களின் கருத்து தமிழகத்தில் சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கினை விரித்துரைப்பதாக உள்ளது.

**சமணம் நிறுவனமயமாதல்**

ஊழ்வினைப்பற்றியும், அறவினைப்பற்றியும், நிலையாமைப் பற்றியும் சமண சமயம் சங்கப்பாடல்களின் வழி வெளிப்படுத்தினாலும், அது பெரும் நிறுவனமயமாக மாறிய போக்கை சங்க இலக்கியத்தின் பிந்தைய நூல்களான மதுரைக்காஞ்சியும், பட்டினப்பாலையும் விரித்துரைக்கின்றன. பத்துப்பாட்டின் பெரிய நூலான மதுரைக்காஞ்சி பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை விளக்கிக் கூறும் விதமாக,

> **"பருந்துபறக் கல்லாப் பார்வற் பாசறைப்**
>
> **படுகண் முரசம் காலை இயம்ப**
>
> **...............................................................**
>
> **மலர்தலை உலகம் ஆண்டு கழிந்தோரே"**[149]

அரசனே உன்னைப் போலவே தம்பகைவரை வென்று பெரும் பொருள் ஈட்டித் தம் புகழ்பாடும் பாணர்க்கும், சூதர்க்கும் தேரோடு மாசிதறி வாழ்ந்திருந்த திரல் மன்னர் திரையிடும் மணலினும் பலராவர். அவரெல்லாம் மெய்ப்பொருள் அறியாது வாழ்ந்து வறிதே மாய்ந்தனர் என்று நிலையாமையை மன்னனுக்கு எடுத்துக் கூறுகிறார். மேலும் உனக்கு

ஐம்பொறிகளாலும் நுகரப்படுவனவாகிய இப்பொருள்களோடு உள்ள தொடர்பு அறுங்காலம் வரும். அவற்றோடு உனக்குள்ள இத்தொடர்பு நிலைத்து நிற்பது என்று நீ எண்ணிக் கொண்டிருக்கும் உனது மாயை கெடுக. இவ்வுலக வாழ்வினும் நிலைபேறுடைய பொருள் ஒன்று உண்டு. அதனைக் காட்டுதற்கு எனக்குத் தகுதியில்லை. நீ நல் ஆசிரியரிடம் சென்று அவர்கள்பால் கேட்டுத் தெளிவாயாக என்று மதுரைக் காஞ்சியின் மையக் கருத்தாகக் கொண்டு இந்நூலைப் படைத்திருக்கிறார். இந்த மதுரைக் காஞ்சியில்,

**"வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்**

**பூவும் புகையும் சாவகர் பழிச்சச்**

**……………………………………………**

**இறும்பூது சான்றபூஞ் சேக்கையும்"**[150]

என்ற பாடல்வரிகள் சமணர்களின் தவப்பள்ளியாக சமணப்பள்ளி விளங்கியதை எடுத்துரைக்கிறது. அதன் காட்சி வண்டுகள் படியுமாறு பருவம் முதிர்ந்த தேன் இருக்கும் அழகிய பூக்களோடு, புகையையும் பலியாக ஏந்திச் சமணரில் விரதம் காக்கும் இல்லறத்தாராகிய சாவக நோன்பிகள் அருகனை வாழ்த்துகின்றனர். கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும், நிகழ்காலத்தையும் உணர்ந்தவர்கள் அவர்கள். வான் முதலிய உலகங்களின் இயல்பை உணர்ந்தவர்கள். தமக்கு அமைந்த விரதங்களையும், அவ்விரதங்களில் கிடைக்கும் மெய்யையும் உடையவர்கள். அப்படிப்பட்ட சான்றோர் நெருங்கி நோன்பு ஆற்றுவதற்கு வேண்டிய வகையில், கல்லைப் பிளந்தாற்போன்ற ஒடுங்கிய வாயையுடைய குண்டிகைகளைப் பல வடங்களையுடைய நூல் உறியில் இட்டு வழங்கும் இடமாக விளங்கும். அக்குளத்தைக் கண்டால், ஒத்தக் குளிர்ச்சியையுடைய அருகக் கடவுளின் கோயில் இருக்கும். அக்கோயில்களில் செம்பை ஒத்த சுவர்களில் ஓவியம் தீட்டப்பட்டிருக்கும். அவ்விடம் கண் பார்வைக்கும் எட்டாத அளவிற்கு உயர்ந்து ஓங்கி வியப்பூட்டுகின்ற நறிய பூஞ்சோலைகளையுடைய சமணர் பள்ளி மலைகள் பலசேர நின்றாற்போன்று தோன்றுகிறது என்று மதுரைக்காஞ்சி சமணத் தவப்பள்ளியைக் காட்சிப்படுத்துகிறது. மேலும் சமண முனிவர்கள் உறிகளிற் குண்டிகைகளைக் கொண்டு திரிவர் எனத் தமிழ் நூல்கள் பல இடங்களில் கூறுகின்றன. இதைப்போல்,

**"தண்கேணித் தகை முற்றத்துப்**

**பகட்டெருத்தின் பலசாலைத்**

**தவப்பள்ளித்"**[151]

என்று பட்டினப்பாலை சமணப்பள்ளியைக் குறிக்கிறது. மதுரை, காஞ்சி போன்ற நகரங்களிலே சமண, பௌத்த துறவிகள் தங்கிக் தத்தம் சமண உண்மைகளைப் புகட்டுவதற்கு பள்ளிகள் இருந்தன. காஞ்சி நகரில் எல்லா சமயத்தவரும் தொழுது விழா செய்திருக்கிறார்கள் என்று சங்க நூல்கள் குறிக்கின்றன. பட்டினப்பாலை, மாடுகள் கட்டப்படும் கொட்டில்களுக்கு அருகில் சமயப்பள்ளி இருந்ததைக் குறிக்கிறது. பள்ளி என்ற சொல் எச்சமயத்தவர் இருப்பிடத்தையும் குறிக்கும். ஆனால், பழைய இலக்கியங்களில் பெரும்பான்மையாக சமணர் வாழ்ந்த இல்லத்தையும், சிறுபான்மையாக பௌத்தர்கள் வாழ்ந்த இல்லத்தையும் குறிப்பதாகவே உள்ளன. மேலும் சமண முனிவர்களை 'சான்ற கொள்கையர்' என்னும் தொடராலேயே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இச்சான்றுகள் மூலம் சங்க கால இறுதிப்பகுதியில் சமணம் நிறுவனமயமாவதை உறுதிப்படுத்துகிறது.

## பௌத்தம் நிறுவனமயமாதல்

சமணத்தைப் போலவே பௌத்த சமயத்திற்கும் பள்ளிகள் இருந்தன என்பதை பிற்கால சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. பின்னாளில் அவை விகாரைகள் என்று அழைக்கப்பட்டன. நிலையாமையை வற்புறுத்தி எழுதப்பட்ட மதுரைக்காஞ்சியில்

**"திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை**

**ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்**

**.....................................................................**

**சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும்"**[152]

சிறந்த ஒளியையுடைய பேரணிகலன்கள் அணிந்த சிறுபிள்ளைகளைக் கூட்டத்தில், தம்மைப் பிரிந்து போகாதவாறு இம் கைகளால் அணைத்துக் கொண்டு, பாதுகாப்பாய் பெண்கள் செல்கிறார்கள். மேலும் குழந்தைகள் மீதான கொண்ட அன்பால் அவர்களுடைய சிறிய கைகளைத் தம் கையால் தாமரை மொட்டைப் பற்றிய தாமரை மலர் போன்று தோன்ற பற்றிக்கொண்டு தத்தம் கணவருடன் சேர்ந்து பௌத்தப் பள்ளிக்கு வருகின்றனர். அங்கே தாம் வழிபட்டு பூசை செய்வதற்கு பூசைக்கு வேண்டிய பூவினையும், தூபங்களையும் ஏந்தியவர்களாய்ச் சென்று துதித்து வணங்குகின்றனர். அவர்களின் வணக்கமுறை பஞ்ச சீலம் என்னும் கொல்லாமை, திருடாமை, பிறர்மனை நயவாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை என்னும் ஐந்தால் சீலம் என்கிற புத்த சமயத்தில் இல்லறத்தார்க்கு ஓதிய

ஒழுக்கத்தை வழிபட்டார்கள் என்று மதுரைக்காஞ்சி குறிக்கிறது. அதைப்போலவே பட்டினப்பாலையும்,

**"நீர்நாப் பண்ணும் நிலத்தின் மேலும்**

**ஏமாப்ப இனிது துஞ்சிக்**

**கிளை கலித்துப் பகைபேணாது**

**வலைஞர் முன்றில் மின்பிறவும்**

**விலைஞர் தாம்பை மாஈண்டவும்**

**கொலைகடிந்தும் களவு நீக்கியும்"**[153]

புகார் நகரத்து வணிகரின் பண்புகளைப் பட்டினப்பாலை மேற்கண்டவாறு பாடுகிறது.

இவ்வணிகர்கள் எவ்விடத்தில் வாழ்வார்களோ அவ்விடத்திலுள்ள கடலிலே மீன்கள் துன்பமுறாது வாழ்கின்றன. வயல்களில் மாட்டு மந்தைகள் இன்பமாகக் காலம் கழிக்கின்றன. இவ்வணிகர்கள் சுற்றத்தோடு சிறந்து இன்பமாக வாழ்கின்றனர். இவர்களுக்குப் பகைவர் இல்லை. மீன்கள் யாவும் பரதவர் குடியிருப்பின் அருகில் துள்ளி விளையாடுகின்றன. மாடுகள் யாவும் வணிகர்கள் குடில்களில் பெருகுகின்றன. இவ்வாறு உயிர்க்கொலை மறுத்து வாழ்கின்றனர். இவ்வணிகர்கள் பௌத்தச் சமயத்தைச் சார்ந்தவர்கள் என்பதையும், அவர்கள் சமயக் கொள்கைகளைப் பின்பற்றி வந்தனர் என்பதையும் பட்டினப்பாலை எடுத்துரைக்கிறது. இவை போன்ற சான்றுகளின் மூலம் சங்க இலக்கிய காலத்திலேயே பௌத்த சமயம் நிறுவனமயமாகிவிட்டப் போக்கைக் காண முடிகிறது.

# தொகுப்புரை

காலத்தால் முந்தைய அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற தொகை நூல்களில் தொடக்ககால சிவன், விஷ்ணு பற்றியக் குறிப்புகளும், வழிபாடுகளும், சடங்குகளும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டிருந்தாலும், அதற்குப் பின்னால் வந்த பத்துப்பாட்டு நூல்களில்தான் நிலைநிறுத்தப்பட்ட பெருந்தெய்வ வழிபாடாக மாறுகின்றன. பெருந்தெய்வ வழிபாட்டு முறை பரவலாக்கப்பட்டப் பிறகு அதனோடு சேர்த்து இதிகாச, புராணக் கதைகள் புனையப்பட்டிருப்பதைப் பத்துப்பாட்டு நூல்களில் காணப்படுவதுதை எடுத்தாளப்பட்டுள்ளது. காலத்தால் பிந்தைய கலித்தொகை, பரிபாடல், திருமுருகாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மலைபடுகடாம், பட்டினப்பாலை போன்ற நூல்களில் சிவ, விஷ்ணு, முருக வழிபாடு போன்றவை நிலைநிறுத்தப்பட்ட பெருந்தெய்வ வழிபாடாக வளர்ச்சிப் பெற்றது எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. தமிழகத்தில் சிவ, விஷ்ணு வழிபாட்டை வைதீகர்கள் தொடங்கி வைத்ததும் அவற்றோடு அடித்தட்டு மக்களின் கடவுளான முருகக் கடவுள் இணைப்பும் தமிழ்ச் சமூக வரலாற்றில் முக்கிய நிகழ்வு என நிறுவப்பட்டுள்ளது. தொடக்க நிலையில் சிறப்புப் பெறாத சிவ, விஷ்ணு வழிபாடு பின்னாளில் வைதீகர்களின் செல்வாக்கு, மன்னர்களின் ஆதரவு, பெருநிலக்கிழார்களின் ஆதரவு இவற்றோடு ஓரளவு வளர்ச்சிப் பெற்றாலும், சமண, பௌத்த சமயங்கள் தமிழகத்தில் ஏற்படுத்திய தாக்கம் முக்கிய காரணம் என்று விளக்கப்பட்டிருக்கிறது. மேலும் சமூகத்திலே தனிவுடமையும், அதற்கேற்ற ஆட்சி அமைப்பும் ஏற்பட்டப்பிறகு அவ்வமைப்பிற்கு ஏற்றார்போல் சிவ, விஷ்ணு, முருகன் பெருந்தெய்வ உருவாக்கம் ஏற்பட்டது என்று விளக்கப்பட்டுள்ளது. அவ்வாறு சிவன், விஷ்ணு, முருகன் பெருந்தெய்வங்கள் சிறப்புற்ற நேரத்தில் அந்த மூன்று தெய்வங்களும் தமக்கு முன்னிருந்த பல சமய நம்பிக்கைகளையும், தெய்வங்களையும், வழிபாட்டு முறைகளையும் தம்முடன் பல்வேறு வகையில் தொடர்புப்படுத்தி, இணைத்துக் கொண்டன. பத்துப்பாட்டில்தான் சிவனைப்பற்றிய வெளிப்படையான குறிப்புகள் காணப்படுகின்றன என்பதையும் காலத்தால் பிந்தைய கலித்தொகை, பரிபாடல், மலைபடுகடாம் போன்ற பத்துப்பாட்டு நூல்களில் சிவனின் பராக்கிரம செயல்களை விளக்கும் புராணக் கதைகள் எடுத்தாளப்பட்டுள்ளன. சிவன், உமையோடு இணைதல், சிவன் குலமுறையோடு முருகன் இணைக்கப்படுதல் விளக்கப்பட்டுள்ளது. நமது பண்டைய இலக்கிய நூல்களில் கடவுள் வாழ்த்து இன்றியமையாத ஓர் உறுப்பாக இருந்ததையும், கடவுள் வாழ்த்து மரபு எப்போது தோன்றியது என்பதையும், சிவனின் கடவுள் வாழ்த்து அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு,

கலித்தொகை போன்றவற்றிற்கு அமைந்ததும் இதில் பாரதம் பாடிய பெருந்தேவனார் பெரும் பங்களித்ததும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இவைபோன்ற சான்றுகள் மூலம் சங்க இலக்கியத்தின் இறுதிப்பகுதியில் சிவன், விஷ்ணு, முருகன் தனிப்பெருந்தெய்வங்களாகத் தோற்றமளித்தன என்று விளக்கப்பட்டுள்ளது.

வேதகால முடிவில் முன்னணி வகிக்கும் விஷ்ணுவை, தமிழகத்தின் முல்லைநிலத் தெய்வம் மால் தெய்வத்தோடு இரண்டறக் கலக்கப்பட்டு உருவான காலப்பகுதியில் தோன்றிய விஷ்ணு தெய்வத்தைத்தான் பிந்திய சங்கத்தமிழ் இலக்கியத்தில் காண்கிறோம் என்பதும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. காலத்தால் முந்தைய எட்டுத்தொகை நூல்களில் அங்கொன்றும், இங்கொன்றுமாகக் காணப்பட்ட திருமாலின் குறிப்புகள் காலத்தால் பிந்தைய பரிபாடல், கலித்தொகை மற்றும் பத்துப்பாட்டு நூல்களில் பெருந்தெய்வ வழிபாடாகக் கொண்டாடப்படுவது எடுத்தாளப்பட்டுள்ளது. பிந்தைய சங்க நூல்களில் திருமாலின் திருவுருவக் காட்சிகளும், அவன் கொண்டுள்ள ஊர்தி, கொடி, படை ஆகியவற்றின் விவரங்களும் எடுத்தாளப்பட்டுள்ளன. மேலும் அவனோடு தொடர்புடைய திருமகள், ஆதிசேடன், பிரம்மன், காமன், நிலமகள், கருடப்புள் போன்றவை எடுத்தாளப்பட்டுள்ளன. திருமாலின் மாண்புகள், வேத, உபநிடதங்கள் கூறும் அவனது மெய்ப்புகழ்கள், அவன் உயிர்கள் மீது காட்டும் அன்பு போன்றவைகள் பாடல்களின் வழி எடுத்தாளப்பட்டுள்ளன. அவன் எடுத்த அவதாரங்களாக அன்னம், ஆமை, நிலம் அளக்க நீண்ட மால், நரசிங்கவதாரம், பரசுராமன் அவதாரம், இராம அவதாரம் போன்றவை எடுத்தாளப்பட்டுள்ளன. எட்டுத்தொகை நூல்களான பரிபாடலுக்கும், நற்றிணைக்கும் கடவுள் வாழ்த்துப் பாடலாக திருமால் வருவதையும் அது வைணவத் தத்துவத்தின் முழுப் பரிமாணத்தையும் காட்டுவதாக உள்ளதாகவும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியக் காலத்தில் திருமாலுக்கென்று அமைந்த கோயில்களும் சங்க இலக்கிய இறுதிப்பகுதியில் திருமால் தனிப்பெரும் தெய்வமாகத் தோற்றமளிப்பதை விளக்கப்பட்டுள்ளது.

மேலும் முருகன் - ஸ்கந்தன் இணைப்பு ஏற்பட்ட காலமும், அவ்வாறு இணைக்கப்படுவதற்கான காரணமும் விளக்கப்பட்டுள்ளன. அடித்தட்டு மக்களால் வணங்கப்பட்டு வந்த முருகன் தெய்வத்தை சிவன் குலமுறையோடும், வட இந்திய தெய்வமான ஸ்கந்தன் அல்லது சண்முகனோடு இணைப்பதற்கு வளர்ந்து வந்த சமண, பௌத்த சமயங்கள் அதன் கொள்கைகள் அடித்தட்டு மக்களிடம் வேகமாகப் பரவியதே காரணமென்றும், சமண, பௌத்த தாக்கத்திலிருந்து மீட்டெடுக்கவே முருகன் - ஸ்கந்த இணைப்பு ஏற்பட்டது என்றும் விளக்கப்பட்டுள்ளது. வேதத்தில் ஸ்கந்தனைப் பற்றிய

குறிப்பும், வட இந்தியாவில் ஸ்கந்த தெய்வத்தின் தோற்றத்தையும் அதன் பண்புகளும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. தமிழ்க் கடவுளான முருகக் கடவுளோடு ஸ்கந்தன் இணைக்கப்பட்டப் பிறகு முருகனின் அவதார நிகழ்ச்சிகள் முற்றிலும் வைதீக மரபைச் சார்ந்தவைகளாக மாறியது எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தமிழ்க் கடவுளான முருகனை, வைதீக முருகனாக மாற்றியவர் கடுவன் இளவெயினார் என்றும்; அவர் முருகனின் தமிழ் வழிபாட்டு மரபை வெறுத்ததும், வைதீக வழிபாட்டு முறைக்கு முன்னுரிமை கொடுத்ததும் எடுத்தாளப்பட்டுள்ளன. முருகனின் ஊர்தி, கொடி போன்றவையும், முருகனின் பராக்கிரம புராணக்கதைகள் மூலம் அவனது வெற்றியையும், புகழையும் பாடல்களின் வழி அறிய முடிகிறது. மேலும் திருமுருகாற்றுப்படை, தமிழரின் தமிழ்ப் பண்பாட்டு மரபுகளையும், வழிபாட்டு முறைகளையும் சேர்த்துக்கொண்டு வைதீக சமய மரபில் வந்த ஸ்கந்த தெய்வத்தோடு இணைத்து, பண்பாட்டு ஒருமைப்பாட்டை ஏற்படுத்தியது விளக்கிக் கூறப்பட்டுள்ளது. ஆனால், பரிபாடல் முற்றிலும் வேத வைதீகத்தை முன்னிலைப்படுத்துவதும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. முருகன் தேவர்களின் தலைவனாக விளங்கியதும், அவுணர்களை அழித்தொழித்ததையும், இந்திரனின் மகள் தேவசேனையை திருமணம் செய்ததும் சங்கப்பாடல்களின் வழி எடுத்துக் கூறப்பட்டுள்ளது. குன்றுதோறும் முருகனுக்குக் கோயில் வைத்து வழிபட்டதும் முருகன் - சுப்பிரமணிய இணைப்பு எவ்வாறு ஏற்பட்டது என்றும், வட இந்தியாவில் மன்னர்கள் தமிழகத்தைத் தாக்கியதையும்; அவர்களைத் திருப்பித் தாக்கிய தமிழக மன்னர்கள் வெற்றியடைந்ததையும் பாடல்களின் வழி எடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆரியப்படை தமிழகம் வந்த காரணத்தினால் அவர்கள் வணங்கிய வெற்றித் தெய்வமாகிய சுப்பிரமணியன் தமிழரின் வெற்றித் தெய்வமான முருகனோடு இணைந்ததும், முருகன் அடித்தட்டு வர்க்கம் சார்ந்த கடவுளாக இருந்ததால் அவன் பெருந்தெய்வ வழிபாட்டோடு இணையவில்லை என்றும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. வைதீக சமயத்தினர் பள்ளிகள் வைத்து தம் சமயங்களைப் பரப்பினர் என்பதை மதுரைக் காஞ்சியின் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

ஊழ்வினைப் பற்றியும், அறவினைப்பற்றியும், நிலையாமைப்பற்றியும் சமண சமயம் காலத்தால் முந்தைய சங்கப் பாடல்களில் வெளிப்படுத்தினாலும் அது பெரும் நிறுவனமாக சங்க இலக்கியத்தின் பிந்தைய நூல்களான மதுரைக் காஞ்சியும், பட்டினப்பாலையும் விரித்துரைக்கின்றன என்பது எடுத்தாளப்பட்டு உள்ளது. சமணர்களின் தவப்பள்ளியாக விளங்கிய சமணப் பள்ளியையும், அதில் சாவக நோன்புகளின் வரங்களும், அப்பள்ளியில் தீட்டப்பட்டிருக்கும் ஓவியங்களும் எடுத்தாளப்பட்டுள்ளன. மேலும் சமண முனிவர்கள் உறி

குண்டிகைகளைக் கொண்டு திரிவதையும், பள்ளி என்பது சமணப் பள்ளியைக் குறிக்கும் சொல் என்றும் விளக்கப்பட்டுள்ளது. மதுரை, காஞ்சி போன்ற நகரங்களில் சமணப்பள்ளி இருந்ததையும், சமண முனிவர்களை 'சான்ற கொள்கையர்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டுள்ளது. சமண சமயத்தைப் போலவே பௌத்த சமயத்திற்கும் பள்ளிகள் இருந்தனவென்பதும் பின்னாளில் அவை விகாரைகள் என்று அழைக்கப்பட்டது என்றும் விளக்கப்பட்டுள்ளது. பௌத்தத்தின் அடி நாதமாய் விளங்கும் நிலையாமைக் கொள்கையை அடிப்படையாக வைத்து மதுரைக்காஞ்சி என்னும் நூலே இயற்றப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்க நிகழ்வென்று சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. பட்டினப்பாலையில் புகார் நகரத்து வணிகர்கள் பெரும்பாலும் பௌத்தக் கொள்கைகளைப் பின்பற்றினார்கள் என்பது அவர்களுடைய வாழ்வியல் மூலம் விளங்குகிறது. இதன் மூலம் பௌத்தம் சமூகத்தை மாற்றக்கூடிய மாபெரும் சக்தியாக விளங்கியது. மேலும் சங்க நூல்களில் பௌத்தப் பெயர்களைக் குறிக்கும் புலவர்களின் பெயர்கள் வெளிப்படையாக வருவதன் மூலம் தமிழகத்தில் அதன் தாக்கம் விளக்கப்பட்டுள்ளது. கி.மு.மூன்றாம் நூற்றாண்டு அளவில் சமண, பௌத்தம் தமிழகம் வந்தபோது விவசாய உற்பத்தியில் தன்னிகரற்ற வளர்ச்சியும், நிலவுடமைச் சமூக அமைப்பு நிலைப் பெற்றிருந்ததையும், வைதீகர், பெருநிலக்கிழார், மன்னர்களின் ஆதிக்கத்தில் தமிழகம் இருந்ததை விளக்கியும், பொருளாசையின் விளைவால் மூவேந்தர்களுக்குள் ஏற்பட்ட போரையும் விளக்கிக்கூறி; தொடர்ந்து நடந்த போராலும், அதனால் ஏற்பட்ட வறுமையாலும், துன்பத்தாலும் உருவான நெருக்கடியான சூழலில்தான் சமணம், பௌத்தம் தமிழகம் வந்தது என்று விளக்கி கூறப்பட்டுள்ளது. மேலும் இச்சமயங்கள் போதித்த சாந்தம், சமாதானம், ஒழுக்கம், பெண்ணாசை வெறுப்பு, அரசுநெறி கட்டுப்பாடு, புலால் வெறுப்பு, மது வெறுப்பு, பொருளாசை வெறுப்பு முதலிய பண்புகள் தொடக்கத்தில் மெதுவாகவும், பின்னர் வேகமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டன என்பதும் விளக்கப்பட்டுள்ளது. மேலும் சமண, பௌத்தக் கொள்கைகள் வணிகம் செய்பவர்களுக்கு ஏற்ற வகையில் அமைந்ததால் வணிகர்களின் ஆதரவு பெற்ற சமயங்களாக இவை விளங்கின என்பதும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. இவைபோன்ற சான்றுகள் மூலம் சமணமும் பௌத்தமும் சங்க இலக்கியத்தின் இறுதிப் பகுதியில் பெரும் நிறுவனங்களாக மாறின என்பதை இவ்வியல் நிறுவுகிறது.

# அடிக்குறிப்புகள்

1. புறம்., 6: 17-18.
2. கைலாசபதி, பண்டைத்தமிழரின் வாழ்வும் வழிபாடும், ப.14.
3. அகம்., 360: 6-9.
4. கைலாசபதி, பண்டைத்தமிழரின் வாழ்வும் வழிபாடும், ப.15.
5. கலி., 103: 25-26.
6. மேலது, 142: 24-28.
7. மேலது, 150: 17.
8. முருகு., 153.
9. கலி., 2: 4.
10. மேலது, 104: 10.
11. அகம்., 181: 6.
12. மலைபடு., 83.
13. புறம்., 56: 2.
14. கலி., 105: 13.
15. முருகு., 152.
16. கலி., 1: 4.
17. மேலது, 142: 28.
18. மேலது, 150: 1.
19. மேலது, 26: 5.
20. மேலது, 150: 13.
21. முருகு.: 151.
22. கலி., 2: 6.
23. மேலது, 103: 25.
24. புறம்., 56: 2.
25. கலி., 105: 13.
26. மேலது, 100: 7-8.
27. கலி., 81: 9.

28. முருகு., 256.
29. புறம்., 66: 1-4.
30. பரி., 5: 26-27.
31. கலி., 38: 1-5.
32. மேலது, 150: 1.
33. மேலது, 2: 1-8.
34. புறம்., 55: 1-4.
35. பரி., 5: 13.
36. கலி., 101: 24-26.
37. கலி., 103: 43-45.
38. மலைபடு., 81-83.
39. மேலது, 225-233.
40. அகம்., 181: 14-22.
41. முருகு., 153.
42. கலி., 38: 1-2.
43. மேலது, 35: 3.
44. மேலது, 104: 11-12.
45. மேலது, 38: 2.
46. முருகு., 153-154.
47. பரி., 5: 23-52.
48. தண்டியலங்காரம், 2-3.
49. யாப்பருங்கலக்காரிகை உரை, ப.4.
50. தொல்.பொருள்., 85.
51. கலாநிதி கைலாசபதி, அடியும் முடியும், ப.58.
52. புறம். கடவுள் வாழ்த்து.
53. அகம். கடவுள் வாழ்த்து.
54. ஐங். கடவுள் வாழ்த்து.
55. கலி. கடவுள் வாழ்த்து.
56. பதிற். கடவுள் வாழ்த்து.

57. பேரா.மு.சண்முகம் பிள்ளை, சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப.30.
58. பரி., 4: 6-7.
59. மேலது, 15: 5.
60. மேலது, 1: 6.
61. மேலது, 13: 42-43.
62. மேலது, 3: 1-2.
63. மேலது, 4: 8.
64. மேலது, 1: 10.
65. கலி., 108: 55.
66. பரி., 13: 3-4.
67. மேலது, 13: 59-60.
68. மேலது, 13: 29.
69. மேலது, 2: 28-29.
70. மேலது, 1: 38.
71. மேலது, 1: 3.
72. மேலது, 2: 31.
73. மேலது, 3: 91-94.
74. மேலது, 2: 53.
75. மேலது, 13: 46-47.
76. மேலது, 3: 2.
77. மேலது, 4: 63.
78. மேலது, 13: 7-9.
79. முல்லை., 1-2.
80. பரி., 1: 55-56.
81. மேலது, 2: 36-51.
82. மேலது, 2: 60.
83. மேலது, 13: 50-60.
84. மேலது, 4: 1-4.
85. கலி., 102: 34-39.

86. மேலது, 103: 74-75.

87. மேலது, 104: 78.

88. பரி., 1: 5.

89. மேலது, 1: 63.

90. அகம்., 137: 8-11.

91. பெரும்பாண்., 372-373.

92. பரி., 15: 21-23.

93. மேலது, 5: 10-18.

94. மேலது, 13; 14-25.

95. மேலது, 3: 4-11.

96. மேலது, 3: 63-68.

97. மேலது, 4: 25-35.

98. மேலது, 3: 77-80.

99. மேலது, 4: 66-73.

100. மேலது, 1: 50-54.

101. மேலது, 1: 38.

102. கலி., 44: 5-7.

103. முருகு.: 70.

104. சிறுபாண்.: 1-2.

105. பரி., 2: 32-35.

106. பெரும்பாண்., 371-373.

107. பரி., 4: 42-48.

108. மேலது, 3: 60.

109. பெரும்பாண்., 402-404.

110. பரி., 3: 12-14.

111. கலி., 106: 18-19.

112. பரி., 3: 93.

113. கலி., 140: 7.

114. பரி., 11: 122-123.

115. மேலது, 15: 49-52.

116. மேலது, 3: 25-26.

117. பெரும்பாண்., 29-30.

118. கலி., 124: 1.

119. பரி., 4: 10-21.

120. புறம்., 378: 18-22.

121. நற். கடவுள் வாழ்த்து.

122. நா.வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.23.

123. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.121.

124. முருகு., 220-226.

125. நா.வானமாமலை, தமிழர் பண்பாடும் தத்துவமும், ப.14.

126. மேலது.

127. பரி., 5: 25-54.

128. மேலது, 13-21.

129. மேலது, 19: 97-100.

130. மேலது, 5: 2.

131. முருகு., 78-79.

132. பதிற்., 11-16.

133. பரி., 5: 18.

134. மேலது, 6: 90-91.

135. முருகு., 122.

136. மேலது, 38-39.

137. மேலது, 206-214.

138. பரி., 5: 1-7.

139. மேலது, 5: 8-10.

140. முருகு., 6.

141. மேலது, 175.

142. பரி., 9: 8-10.

143. மயிலை சீனி.வேங்கடசாமி ஆய்வுக்கட்டுரைகள் தொகுதி 1, ப.145.

144. அகம்., 366: 19-22.

145. நற்., 170: 6-8.

146. அகம்., 396: 16-17.

147. மதுரை., 468-474.

148. க.கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.17.

149. மதுரை., 231-237.

150. மேலது, 475-487.

151. பட்டின., 51-53.

152. மதுரை., 461-467.

153. பட்டின., 194-199.

சென்ற இயல்களில் தமிழர்களின் தனித்த மரபு, கடவுள் வழிபாடு போன்றவை கூறப்பட்டு அது மனித சமூக உருவாக்க வரலாற்றோடு எவ்வாறு தொடர்புடையது என்பதைப்பற்றியும் விளக்கி, கி.மு.ஐந்தாம் நூற்றாண்டில் வைதீகர் வருகையை விளக்கியும் அவர்கள் வந்த காலத்தில் தமிழகம் விவசாய உற்பத்தியிலும் மேல்நாட்டு வணிகத்திலும் ஈடுபட்டு, பொருளாதார வளமிக்க நாடாக உருவாகிக் கொண்டிருந்ததையும் விளக்கப்பட்டது.

சங்க காலத்தின் பிந்தைய காலமான சங்கம் மருவிய காலத்தில் வேளாண்மை உற்பத்தியும், வணிகமும் ஒன்றுக்கொன்று போட்டிப்போட்டுக் கொண்டு வளர்ந்ததை அக்கால புலவர்கள் பல வகைகளில் பதிவு செய்திருக்கின்றனர். சங்க காலத்தின் தொடக்கத்தில் அதாவது கி.மு.நான்காம் நூற்றாண்டளவில், தமிழக அரசுகள் வேணாண்மை உற்பத்தியை மையமாகக் கொண்ட பொருளாதார வலிமையை மட்டுமே கொண்டதாக விளங்கின. மேலும் மேற்கத்திய செழித்த நாடுகளின் வணிக பரிவர்த்தனையும் அப்பொருளாதார வலிமைக்கு ஓரளவு பலம் சேர்க்கக் கூடியதாக அமைந்திருந்தன. கி.மு.மூன்றாம் நூற்றாண்டளவில் சமண, பௌத்த சமயங்கள் வணிகத்தை முதன்மையாகக் கொண்டு தமிழகத்திற்கு வந்த பிறகு சமயம் சார்ந்த கட்டமைப்போடு வணிக வளர்ச்சி மேலோங்கியது. இதனால் தமிழகத்தின் பொருளாதாரத்தை நிர்ணயிக்கும் மாபெரும் சக்திகளாக வேளாண்மையும், வணிகமும் வளர்ச்சிப் பெற்றன.

இவ்வளர்ச்சியை மதுரைக்காஞ்சி மிகத் தெளிவாகக் குறிப்பிடுகிறது.

**"இருவகையான் இசைசான்ற**

**சிறுகுடிப் பெருந்தொழுவர்**

**குடிகெழீஇய நால்நிலவரொடு**

**தொன்று மொழிந்து தொழில்கேட்பக்**

**கால் அன்னக் கடிட்துரா அய்"**[1]

சான்றோரால் புகழப்படுகின்ற விரிவுடைய சிறந்த செல்வமாகிய உழவு, வணிகம் என்னும் இரண்டு கூற்றாலும் புகழ் நிறைந்த உழவரும், வாணிகரும் ஏனைய நால்வகை நிலங்களிலும் வாழ்கின்ற மக்களோடு தம் பழைமை கூறி நின்று ஏவல் கேட்குமாறு உழவரும், வாணிகரும் வளர்ச்சிப் பெற்றிருந்ததை இப்பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

இதை,

> **"சங்க காலத்தில் இனக்குழு மற்றும் திணைநிலைத் தன்மைக்கு மேல்நிலைப்பட்டு அரசு தோன்றியது. உள்நாட்டு உழவின் விரிவாக்கத்தினால் விளைந்த உபரியும், மத்தியத் தரைக்கடல் செமித்திய மக்களுடனான வணிகத்தினால் அடைந்த இலாபமும் இவைகளைச் சார்ந்த அரசின் அதிகாரமும் உறுதிப்படத் தொடங்கின"[2]**

இக்காலம்தான் வைதீகர்களின் தமிழக வருகையும், அவர்களுடைய செல்வாக்கும் உயர்ந்த காலக்கட்டமாகும். சோதிட அறிவியலின் மூலம் தங்களை நிலைநிறுத்திக் கொண்ட வைதீகர் மெல்ல மெல்ல மன்னர்களின் அதிகாரத்தோடு பங்கு கொள்ளும் அளவிற்கு முன்னேறினர். அதற்கு அவர்களுக்கு சோதிட அறிவியல், வைதீக தத்துவம், வழிபாடுகள் பெரிதும் பயன்பட்டன. அதோடு தொன்று தொட்டு வந்த தமிழ் மரபின் சிறப்பு அம்சங்களை உள்வாங்கிக் கொள்ளும் போக்கை ஆரிய வைதீகர் தொடர்ந்து செய்ததால், அவர்கள் தமிழகத்தில் தங்களை நிலைப்படுத்திக் கொண்டதைச் சங்கப் பாடல்களின் வழி அறியலாம். ஆரிய வைதீகர்கள் தமிழகத்தில் அடைந்த பெருவெற்றி என்னவென்றால், பாண்டிய மன்னனை பல யாகங்கள் நடத்தும்படி செய்து அவனுக்கு அடைப்பெயர் வழங்கியது.

> **"பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி"[3]**

என்று யாகத்தை அடிப்படையாகக் கொண்ட சிறப்புப் பெயர் அமைந்ததேயாகும். அதேபோல் ஒரு சோழ மன்னன் இராஜசூலயாகம் செய்த பிறகு, அவன்,

> **"இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி"[4]**

என்ற பெயர் பெற்றான். அதுபோல பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்ற சேரன், பாலை கௌதமனார் என்ற புலவர் தன்னைப் போற்றி பாடியதற்காக பரிசில் என்ன வேண்டும் என்று கேட்க, அதற்கு புலவர் தானும், தன் மனைவியும் சுவர்க்கம் புக வேண்டும், அதற்கு ஒன்பது பெரு வேள்வி வேட்பிக்கப்படும் பொருள் வேண்டும் என்று கேட்க, புலவர் கூறியபடியே சேரன் ஒன்பது பெருவேள்விகளை இயற்றுவித்தான். பத்தாம் வேள்வியில் பாலை கௌதமனாரும், அவர்தம் மனைவியும் அங்கிருந்து மறைந்து அவர்கள் விரும்பியபடி சுவர்க்கம் புகுந்தனர். பின்னர் நெடும்பாரதாயனார் என்னும் முனிவர் முன்னின்று வழிக்காட்ட சேரன் இல்லறத்தை துறந்து, துறவு பூண்டு காட்டிற்குச் சென்று தவம் இயற்றினான் என்று பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்து பல்யானைச்

செல்கெழுகுட்டுவன் வரலாற்றைக் குறிக்கிறது. இவ்வுதாரணங்களையெல்லாம் கொண்டு பார்க்கும்போது, ஆரிய வைதீகர்களும், அவர்களது வழிபாட்டு முறைகளும் தமிழகத்தில் உயர் நிலையிலிருந்த அரசர், பெரு நிலக்கிழார் போன்றவர்களை வசீகரித்து, ஆதிக்கம் பெற்றன என்பது புலனாகும். சமண, பௌத்தர்களுக்கு முன்னரே தமிழகத்திற்கு வந்த வைதீகர்கள் ஆட்சி அதிகாரத்தில் பங்கு பெற்று பெரும்நிலங்களையும், நாடுகளையும் தானமாகப் பெற்று, தமிழகத்தில் ஏற்கனவேயிருந்த பெருநிலக்கிழார்களுக்கு நிகரான பெருநிலக்கிழார்களாக உருவாகினர். இவர்களின் ஆதிக்கத்திற்கு அவர்கள் உருவாக்கி முன்னெடுத்த சிவன், விஷ்ணு, முருகன் பெருந்தெய்வ வைதீக வழிபாட்டு முறை பேருதவியாய் அமைந்தது.

## வேளாண்மை உற்பத்தியின் வளர்ச்சி

தமிழகத்தில் வணிகம் பெருமளவு வளர்ச்சிப் பெறாத சூழலில் வேளாண்மை உற்பத்தியே அன்றைய மன்னர்களின் பொருளாதார வலிமையையும், படை வலிமையையும் தீர்மானித்தன என்பதை; வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் நிலத்திற்குச் செலுத்த வேண்டிய வரி பாக்கியில் இருந்து விலக்குப்பெற்றப் பாடலாக அமைந்த புறநானூற்றுப்பாடல்,

> **"வருபடை தாங்கி, பெயர் புறத்து ஆர்த்து,**
>
> **பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**
>
> **.........................................................**
>
> **அடி புறந்தருகுவர், அடங்காதோரே."**[5]

சோழனே! வருகின்ற படையைத் தாக்கி அது புறமுதுகுக்காட்டி ஓடுதல் கண்டு ஆரவாரித்து, உன் போர்ப்படை தரும் வெற்றியும் உழவர் கலப்பையால் உழுத சாலில் விளைந்த நெல்லின் பயனே ஆகும். மழை பெய்யும் காலத்தில் பெய்யத்தவறினாலும், விளைவு குறைந்தாலும், இயல்புக்கு மாறானவை செயலால் தோன்றினாலும் ஆள்வோரையே இப்பேருலகம் பழிக்கும். அதனை நீ நன்றாக அறிந்தனை. ஆனால், மாறாயினார் சொல்லும் நன்மையில்லாத சொற்களைச் செவியில் கொள்ளாது, ஏர்த் தொழில் செய்து உலகங்காப்பவர் குடியைப் பாதுகாத்து, அதனால் பிற குடிகளையும் பாதுகாப்பாய் ஆயின் உன் பகைவரும் உன் அடியைப் போற்றுவர் என்னும் பொருளை இப்பாடல் வரிகள் தருகின்றன. இப்பாடல் உழவுத் தொழிலுக்கு ஏற்பட்ட நெருக்கடியான சூழ்நிலையில் பாடப்பட்ட பாடலாகும். இதில் வருகின்ற 'நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது' என்பது

வணிக வர்க்கத்தின் சுரண்டல் வளர்ச்சியால் நெருக்கடிக்குட்பட்ட உழவுத் தொழிலைக் காப்பாற்றும் நோக்கோடும், வணிக வர்க்கத்தினைச் சாடுவதாகவும் இப்பாடல் வரிகள் அமைகின்றன. செல்வ வலிமையும், படை வலிமையும் உழவுத்தொழிலால் வந்தது என்பதை வலியுறுத்துவதால் சங்க கால தமிழகத்தில் வர்க்கம் உழவு வர்க்கமாகவும், வணிக வர்க்கமாகவும் இரண்டாகப் பிரிந்து கிடந்தது நன்கு விளங்கும். அதேபோல,

**"நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;**

**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"**[6]

உற்பத்திச் செய்யப்படும் நெல்லைவிட, நீரைவிட உயர்ந்தவன் மன்னன் என்ற கருத்துடைய மோசிகீரனார் பாடல் உழவுத்தொழிலின் முக்கியத்துவத்தைக் குறிப்பதை அறிய முடிகிறது. நாட்டின் வளர்ச்சிக்கு வேளாண்மை உற்பத்தி அவசியம் என்பதையும் விவசாயத்திற்கு நீர் அவசியம் என்பதையும் அதைப் பெறும் வழிமுறைகளாக,

**"நீர் இன்று அமையா யாக்கைக் கெல்லாம்;**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;**

**.......................................................**

**தள்ள தோரிவண் தள்ள தோரே"**[7]

என்ற பாடல் நீர் இல்லாமல் வாழமுடியாத உடலுக்கு உணவு கொடுத்தோர் எவரோ அவரே உயிர் கொடுத்தவர். உடல் உணவையே ஆதரமாய்க் கொண்டது. உணவு என்று சொல்லப்படுவது நிலமும், நீரும் ஆகும். நீரையும் நிலத்தையும் இணைத்தவர் உடலையும் உயிரையும் தந்தவர் ஆவர். விளைச்சலுக்காக வானத்தைப் பார்க்கும் புன்செய்நிலம் எவ்வளவு விரிந்த பரப்புடையது ஆயினும் அதனைப் பொருந்தி ஆட்சி புரியும் வேந்தன் முயற்சிக்கு பயன்படாது. ஆதலால், போர் வல்ல செழியனே என் சொல்லைத் தள்ளிவிடாது உடனே நிலம் வளைந்து செல்லும் பகுதியில் நீர்நிலை பெருகுமாறு அணைக்கட்டித் தடுத்தவர் தாம் இங்கே விரும்பியவற்றை எல்லாம் தடுத்து நிறுத்திக் கொண்டவர் ஆவார். என்னும் கருத்து ஆற்றை வழிமறித்து விவசாயம் செய்யும் விஞ்ஞானத்திற்கு எவ்வளவு முக்கியத்துவம் சங்க காலத்தில் கொடுக்கப்பட்டது என்பது தெரியும். உடலுக்கு உயிர் எவ்வளவு முக்கியமோ அந்த அளவிற்கு உழவுக்கு நீர் முக்கியம் என்பதை உணர்த்தி பயனற்ற தரிசு நிலங்களை வைத்து ஆட்சி செய்வதில் எவ்வித பயனும் இல்லையென்று கூறி ஆற்றுநீரை வழிமறித்து, விவசாயம் செய்து, நாட்டின் வளத்தைப் பெருக்க வேண்டும் என்பதை குட புயவினார் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடும்போது நாட்டின்

பொருளியல் வளர்ச்சிக்கு புலவர் வித்திடுகிறார். ஆகவே, சங்க காலத்தின் முற்பகுதியில் தமிழகத்தின் பொருளாதாரம் உழவுத்தொழிலைச் சார்ந்தே அமைந்திருந்தன என்பதை மேற்கண்ட பாடல்கள் விளக்குகின்றன. கரிகாற் பெருவளத்தானை போற்றி முடத்தாமக் கண்ணியார் இயற்றிய பொருநராற்றுப்படையில் சோழநாட்டு வளத்தை விளக்குகிறார். இப்பாடலில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் திணைகளில் வரும் நால்வகை நிலங்களையும் ஒன்றிணைத்து கரிகாலன் ஆண்டதால் ஏற்பட்ட திணை மயக்கத்தையும் குறிக்கிறது. தொல்காப்பியர் திணைக்கோட்பாடான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற படிநிலையில் தமிழ்ச்சமூக உருவாக்கத்தை விளக்குகிறார். கரிகாலன் காலத்தில் வளர்சிப் பெற்ற சமூகத்தின் மக்களின் பண்புகளும், தொழில்களும் ஒன்றோடொன்று கலந்து சமநிலையடைந்த நில உடமை சமூக அமைப்பாக மாறியதை திணை மயக்கமாகவும் இந்த நானிலங்களின் மையமாக வேளாண்மை உற்பத்தியைப் பிரதானமாகக் கொண்ட மருதநிலம் விளங்குவதை முடத்தாமக் கண்ணியார் பொருநராற்றுப்படையில் தெளிவாகக் குறிப்பிடுகிறார். இதனை,

**"திரை பிறழிய விரும் பௌவத்துக்**

**கரை சூழ்ந்த அகன் கிடக்கை**

**.............................................**

**நில வெக்கர்ப் பல பெயரத்"[8]**

என்ற பாடல் சோழநாடு நெற்கூடுகள் பொருந்தியது. தென்னந்தோப்புக்கள், மரச்சோலைகள், நிறைந்த குடியிருப்புக்களை உடையது. மருத நிலத்து கருங்காக்கை நெய்தல் நிலத்து ஆமையின் பார்ப்பைத் தின்னும், உழவர் மகளிர் நெய்தல் நிலத்து மணற்குன்றுகளில் வண்டல் இழைத்து விளையாடுவர். காஞ்சி, மருது முதலிய மரங்களிலிருந்து நீங்கிப் பெடை மயில்கள் ஆரவாரித்து அழைக்கும். யாழ் ஓசைபோலும் வண்டினது பாட்டைக் கேட்டு அதற்குப் பொருந்தத் தோகையை விரித்த அறியாமையையுடைய மயில் நிலவு போலும் கடுமணலில் பல பகுதி பட ஆடும். பெடை தங்குகின்ற மருத நிலத்தைவிட்டுப் பாட்டைக் கேட்டு நெய்தல் நிலத்தே போந்தமை பற்றி மடமஞ்ஞையென்றார். நாட்டில் வாழ்வார் அறுத்தலைச் செய்யும் அரிகின்ற நெல்லின் கண்ணும் எழுப்பிய திரண்ட களமருடைய ஓசை மிடுகின்றது. நீரற்ற இடத்தில் எழுகின்ற அரும்பி பகன்றை, புன்டு, ஞாழல் முதலிய மரங்களும் திரண்ட அந்நாட்டை வெறுத்து,

அவ்விடத்தை விட்டு நீங்கி முல்லைக்கொடி படர்ந்த காட்டு நிலத்திற்குச் சென்று அதைக் கொண்டாடுவர்.

முல்லை நிலத்து வாழ்வோர் தளவு, தோன்றி, முல்லை, தேற்றா, கொன்றை, காயாவும் உடைய நல்நாட்டில் உறைகின்ற ஒழுக்கத்தை வெறுத்து, மருத நிலத்துச் சென்று அவ்வொழுக்கத்தைப் புகழ்வர். புன்னை மரத்தில் தங்கும் இளம் நாரைகள் கடற்கரையை வெறுத்து, மருத நிலத்து பனை மடலில் தங்கும். பாக்கத்தில் வாழும் பரதவர்கள் அவ்விடத்தை வெறுப்பின் குறிஞ்சி நிலத்தே சென்று அவ்விடத்தைப் புகழ்வர். இவ்வாறு குற்றமின்றித் தருமத்தோடு கூடிய வழியை உலகம் அறிதற்குக் காரணமாகிய செவ்விய கோலாலும் செய்தற்கு எடுத்த ஒரு குடையாலும் தனது ஆணையையே உலகம் கூறும்படியாகவும் முதியோர் முரண் செல்லும்படியாகவும் பெரிய நட்புடனே நெடுங்காலம் உலகையாண்ட வெல்கின்ற, வெற்றியுடைய தலைவன் அவன். இவன் முழுவதும் ஆண்டான் என்று கூறுவதின் மூலம் கரிகால் பெருவளத்தான் காலத்தில் நால்வகை நிலங்களின் கலப்பையும், இவை மருத நிலத்தின் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்ட வேளாண் உற்பத்தியை முன்னிலைப் படுத்துவதாகும். அவ்வளர்ச்சிக்கு சோழநாட்டின் வளம் முன்னிலை வகிப்பதையும் குறிக்கிறது.

இக்கருத்திற்கு அணி சேர்க்கும் விதமாக தொல்காப்பியர் இயற்சொல்லின் அடிப்படையில் பிறச் சொற்களை ஒருங்கிணைந்ததை,

> **"இயற்சொல்லின் அடிப்படையில் பிறச்சொற்களை தமிழில் ஒருங்கிணைத்தத் தொல்காப்பியர் மருதநில வட்டாரச் சொற்களையே இயற்சொல்லாக அமைத்துக் கொண்டார். அதுவே செந்தமிழாகப் போற்றப்பட்டது. மருத நிலத்து வேளாண்மை உற்பத்தி முறைக்கு உட்பட்டதாகவே பிற திணைகளின் வாழ்வும் விளக்கப்பட்டது."**[9]

என்ற தேவ.பேரின்பனின் கருத்து திணைமயக்கம் ஏற்பட்டு மருத நிலத்தை மையமாகக் கொண்ட சமுதாய அமைப்பு உருவானதை உறுதிப்படுத்துகிறது.

## காவிரியின் வளம்

இவ்வளத்திற்கு காரணமாக அமைவது காவிரி. காவிரி ஆறு தமிழகத்தின் நாகரிகத்தொட்டில், தென்னாட்டின் வளத்திற்கு முக்கிய காரணி இந்த காவிரி. மனித

இனம் காட்டுமிராண்டிகளாக வாழ்ந்த காலக்கட்டத்தில் வேளாண்மை உற்பத்தியில் மேலோங்கியும் மிகச் சிறந்த பண்பாட்டு வளர்ச்சியைக் கொடுத்தது, இந்த காவிரி. வடபுலத்தார் மிகக் குறைந்த நிலப்பகுதியை உடைய தென்புலத்தாரை வெல்ல முடியா அளவிற்கு மிக வலுவான பொருளாதாரக் கட்டமைப்பை உருவாக்கியது இந்த காவிரி. காவிரியின் வெள்ளச் சிறப்பையும், காவிரி நாட்டு வயல் வளத்தையும் முடத்தாமக் கண்ணியார்,

**"மன்னர் நடுங்கத் தோன்றிப் பன்மாண்**

**எல்லை தருநன் பல்கதிர் பரப்பிக்**

**.....................................................**

**துறைதுறை தோறும் பொறையுயிர்த் தொழுகி"**[10]

என்ற பாடல் வரிகள் பகையரசர் நடுங்க எல்லா உயிர்களையும் காக்கும் கதிரோன், கிரணங்களின் செயல்பாட்டால் கடுமையான வெப்பத்தை உமிழ்ந்து கஞ்சங்கொல்லை தீய்ந்துபோன காலத்தும், மரக்கிளைகளை நெருப்புத் தின்னவும், மலைகள் தன்னிடத்து இல்லாததாகவும், மேகம் கடலில் முகந்து மழை பெய்யா காலத்தும் பெரும் பூகம்பத்தால் ஏற்பட்ட கடற்கோள் உண்டாகிய காலத்தும் காவிரி ஆறு நறைக்கொடியும், நரந்தப் புல்லும் அதிலும் சந்தனமுமாகிய சுமையைத் துறைதோறும் இளைப்பாறத் தள்ளிப்போய் நுரையைத் தலையில் உடைய ஆரவாரமிக்க காவிரிநீர் குளத்திலும் கோட்டகத்திலும் புகுந்து மகளிர் நீராட ஏதுவாக எப்பேற்பட்ட பஞ்சக் காலத்திலும் காவிரி வற்றாத பெருநதியாய் விளங்கி வலம் சேர்ந்தது என்று விளம்புகிறார்.

**காவிரி பாயும் வயல்களின் வளம்**

பொருநராற்றுப்படை காவிரி பாயும் வயல்களின் வளத்தை சிறப்பித்துப் பாடுகிறது.

**"கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து**

**சூடுகோ டாகப் பிறக்கி நாடொறும்**

**..........................................................**

**காவிரி புரக்கு நாடுகிழ வோனே"**[11]

வளைந்து நின்று அரிவாளின் வாயால் நெல்லை அறுத்து, சூட்டை மலையாக அடுக்கி நாள்தோறும் கடாவிட்டு, மேரு என்னும்படி திரட்டின. குதிரின்கண் வெற்றிடம்

இல்லையாம்படி கிடத்தற்குக் காரணமான வரப்பு கட்டின. வேலிநிலம் ஆயிரங்கலமாகிய செந்நெல்லின் விளையாட்டாக காவிரி பாதுகாக்கும் நாட்டு மன்னனே என்று சோழநாட்டிற்கு காவிரி தந்த பயனையும் உழுவுத்தொழில் சிறப்புற்று விளங்கியதையும் இப்பாடல் விளக்குகிறது. இதைப்போலவே பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றாகிய பெரும்பாணாற்றுப்படையில் தொண்டைமான் இளந்திரையனைச் சிறப்பித்துக் கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் ஐந்நூறு அடிகள் கொண்ட பாட்டில் உழவர்களின் சிறப்பைப்பற்றி சுமார் அறுபது அடிகள் வருகின்றன.

**விளைநிலத்தின் சிறப்பு**

**"குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்**

**நடைநவில் பெரும்பகடு புதவிற் பூட்டிப்**

**..............................................................**

**கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்"**[12]

என்ற பெரும்பாணாற்றுப்படை பாடல் தம் குடியிருப்பு முழுவதும் நிறைந்த உணவையுடைய செவ்விய சாலாக உழுகின்ற உழவர்கள், உழவுத் தொழிலில் நன்கு நடைபயின்ற எருதுகளை வீட்டு வாயிலில் நுகத்திற் பூட்டிக் கொண்டு சென்று பிடி யானையின் வாயையொத்த வளைந்த வாயையுடைய கலைப்பையை, உடும்பி முகம்போன்ற முழுக்கொழு மறையும்படி அமுக்கி, முற்பட வளைய உழுது விதைக்கின்றனர். பின்னர் உழுத களைகளைக் களைக்கொட்டால் களையப்பட்ட தோட்டத்தை அறுக்கும் பருவம் வருங்காலத்து அவர்களின் ஆரவாரத்திற்கு அஞ்சி தன் இளங்குஞ்சுகளைக் கூட்டிக்கொண்டு குறுகிய காலையும், கரிய கழுத்தையும் உடைய குறும்பூழ் காட்டிடத்தில் தங்கும் என்று விளைநிலத்தின் சிறப்பை எடுத்துரைக்கிறது.

**உழவர்களின் செயலும் மாண்பும்**

**"மிதியுலைக் கொல்லன் முறிகொடிற் றன்ன**

**கவைத்தா ளலவ னளற்றளை சிதையப்**

**..............................................................**

**கள்கமழ் புதுப்பூ முனையின் முட்சினை"**[13]

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல் கொல்லனுடைய கொடிற்றை ஒத்த கவர்த்த காலையுடைய நண்டின் வளைகள் சிதையும்படி பசிய கோரையைக் குத்திக்கோட்டு மண்கொண்ட காரேறுகள் தம்முள் போரிட்ட மையால் சேறாகிய வயலின்கண் அந்தச் சேற்றைச் சமம்பட மிதித்த உழவர்கள் முடிநாற்றை நட்ட வயலின்கண்களைப் பறிப்போர் பறித்துப்போட்ட திரண்ட தாளையுடைய தேன் நாறும் நெய்தற் புதுப்பூவைச் சூடி மகிழ்வர் உழவருடைய அழகிய பிள்ளைகள் என்றும்,

**"பழஞ்சோற்று அமலை முனைஇ வரம்பில்**

**புதுவை வேய்ந்த கவி குடில் முன்றில்**

**..................................................................**

**தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்"**[14]

சிறார்கள் பழையச் சோற்றை வெறுப்பின் வலமிக்கதும் வயல் வரம்பிடத்தே புதிய வைக்கோலால் வேயப்பட்டத்தும் ஆகிய கவிந்த குடிலினுடைய முற்றத்தில் அவல் எறிகின்ற உலக்கையின் ஓசை செறிதலால் அதற்கு அயலிடத்தனவாகிய வளைந்த வாயையுடைய கிளிகள் தமக்கு உண்டான பகையென்று கருதி அஞ்சா நின்ற இடையறாத புது வருவாயையுடைய வலிந்த கதிரையுடைய கழனியிடத்துக் கல்லெறிந்தவர்களுக்கு தனது கொடுக்கால் துன்பத்தைக் கொடுக்கும் குளவித்திரளை ஒத்த பசுமை மாறி முற்றிய பெரிய செந்நெல்லினுடைய உட்கூடு உடைய திரண்ட தாளை உழவர்கள் அறுக்கிறார்கள் என்று வயல் வளத்தின் சிறப்பையும், உழவர்களின் மாண்புகளையும் பெரும்பாணாற்றுப்படை எடுத்துரைப்பதைக் காணலாம், மேலும் மருதநிலத்தின் சிறப்பை,

**"பாம்புறை மருதின் ஓங்கு சினை நீழல்**

**பலிபெறு வியன்களமலிய வேற்றிக்**

**.............................................................**

**தண்பணை தழீஇய தளரா இருக்கைப்"**[15]

பாம்புகள் கிடக்கின்ற மருத மரத்தின் நிழலிடத்துப் பிச்சை பெறுதற்கு இடமாகிய அகன்ற களங்கள் நிறையும்படி போராகக் குவித்துத் திரளாகி பூதங்கள் வெள்ளிய துகிலுடுத்து நின்றாற் போன்ற சிலந்தியின் நூல் பின்னப்பட்டு நின்ற அப்போர்களை வாங்கிவிட்டுக் கடா அடித்துப் பின்னர், நெல்லின்கண் குற்றம் அறும்படி வைக்கோல் கூளம் முதலியவற்றைப் போக்கி, அவை உலர்ந்த பின்னர்க் கோடைக்காற்றில், தூற்றிக் குவித்த

நெற்பொலிகள் வடக்கண் உள்ள செம்பொள் மலையினும் சிறப்புத் தோன்றுகின்ற மருத நிலம் சூழ்ந்த அசையாத குடியிருப்புகளாக இருந்தன என்று மருத நிலத்தின் சிறப்பு எடுத்துக் கூறப்படுகிறது.

**உழவர்களின் இல்லச்சிறப்பு**

உழவர்களுடைய இல்லங்கள் எவ்வாறிருந்தன என்பதை,

**"பகட்டுஆ ஈன்ற கொடுநடைக் குழவிக்**

**கவைத்தாம்பு தொடுத்த காழூன் றல்குல்**

**..................................................................**

**குமரி மூத்த கூடோங்கு நல்லிற்"**[16]

உழவர்களின் இல்லங்கள் எருதோடு கூடிய ஆவினங்கள் ஈன்ற வளைந்த காலையுடைய கன்றுகள் கட்டப்பட்ட தாமணியாகிய நெடுந்தாம்புகள் கட்டின முளைகள் நடப்பட்ட பக்கத்தினையும் ஏணிக்கு எட்டாத நெடிய வடிவையும், தலையைத் திறந்து சொரியப்பட்ட பழைய நெல்லாகிய உணவையும் உடையவாய்க் கண்ணிமையோடு முதிர்ந்த நெற்கூடுகள் உயர்ந்து நின்ற நல்ல இல்லங்களைக் கொண்டு உழவர்கள் விளங்கினர்.

உழவர்களின் குழந்தைகள்,

**"தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த**

**ஊரா நல்தோர் உருட்டிய புதல்வர்**

**.........................................................**

**அமளித் துஞ்சும் அழகுடை நல்இல்"**[17]

என்று தச்சர்களின் பிள்ளைகளே விரும்பும் அளவுக்கு செய்த சிறந்த சிறுதேர்களை உருட்டித் திரிந்து விளையாடுகிறார்கள். அவ்வாறு விளையாடி சோர்வடைந்த சிறார்கள் பால் சுரந்த முலையையுடைய செவிலித்தாயாரைத் தழுவிப் பாலை நிறைய உண்டு தமது படுக்கையில் நன்கு துயில் கொள்ளும் அழகுடைய இல்லங்களாக விளங்குகின்றன.

**உழவர்களின் விருந்தோம்பல்**

**"தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை**

**மல்லல் பேரூர் மடியின் மடியா**

**வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி**

**மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவீர்"**[18]

மற்ற நாட்டிற்கு இயல்பாகவே இருக்கும் வறுமையை அறிந்திராத, அசையாத குடியிருப்பினையுடைய வளம்மிக்க பெரிய ஊரிடத்தே தங்கினீர்கள் என்றால் தாம் செய்கின்ற உழவுத்தொழில் சிறிதும் சோம்பல் அடையாத அவ்வுழவர்கள் தம் தாளாற்றித் தந்த வெள்ளிய சோற்றை அவர்தம் மனையிடத்தே வாழும் கோழிப்பெடையினாற் சமைத்த பொரியலோடு நீங்கள் பெறுவீர்கள் என்று உழவர்களின் விருந்தோம்பல் சிறப்பு எடுத்துரைக்கப்படுகிறது. இவ்வாறு உழவுத்தொழில் செய்து உற்பத்தி செய்த நெல் வளத்தை எடுத்துக்கூறி அவர்களின் இல்லங்களில் வாழும் மக்கள் சிறிதும் கவலையின்றியும் வறுமை என்பதை அறியாதவர்களாகவும் அதனால் வருகின்ற விருந்தினர்களுக்கு ஊண் கலந்த உணவு கொடுத்து சிறப்பு செய்தனர் என்பதையும் மேலும் உழவுத்தொழிலைச் செய்து ஊரில் வாழும் உழவர்கள் கொல்லாமைக் கொள்கையைக் கடைபிடிக்கவில்லை என்பதையும் இப்பாடல் வரிகள் மூலம் கடியலூர் உருத்திரங்கண்ணனார் விளங்க வைக்கிறார். இதைப்போன்றே சிறுபாணற்றுப்படையில்,

**"மருதம் சான்ற மருதத் தண் பணை,**

**அந்தணர் அருகா அருங்கடி வியன் நகர்,**

**..........................................................................**

**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவீர்"**[19]

என்ற பாடல் மருத நிலம் குளிர்ந்த வயல்களை உடையதும், அந்தணர்களை உடையதும், அரிய காவலை உடையதும், அகன்ற வீடுகளையுடையதும், அகழியை உடையதுமாக ஆமூர் விளங்குகிறது. அந்த ஆமூரை அடைந்தால் ஆண்டு வலம்பட நடக்கும் உரன் உடைய எருதுகளையுடைய உழவருடைய தங்கையாகிய பிடியினது கையை ஒத்த பின்னர் கிடக்கும் சிறிய முதுகினையும், தொடிக்கையினையும் உடைய மகள், தன் மக்களால் நும்மை முறையாக அழைத்த மாண்பமைந்த வெள்ளிய அரிசியால் ஆக்கிய சோற்றினை நண்டினது கலவையோடு தருவர் என்று உழவர்களின் விருந்தோம்பல் சிறப்பை பெருமையாக எடுத்துரைக்கிறது.

**மருத நில வளம்**

மதுரைக் காஞ்சியில் புலவர் முதுவெள்ளிமலை என்னும் ஊரின் சிறப்பைக் கூறுமிடத்து,

**"கல் காயும் கடு வேனிலொடு**

**இரு வானம் பெயல் ஒளிப்பினும்,**

**..........................................................**

**புள் இமிழ்ந்து ஒலிக்கும் இசையே, என்றும்"**[20]

மலைகளே வறண்டுபோகும் முதுவேனிற் காலத்திலும், மழை இன்றி வறண்ட காலத்திலும் வெள்ளி விண்மீன் தென்திசைக்கண் எழுந்தாலும் அவற்றால் நீர் வற்றுதல் இன்றி ஆறுகளில் நீர்ப்பெருக்கு எழுந்து வந்து பாய்ந்தலான் நன்கு செழித்து ஓங்கிய நெற்கதிர்கள் காற்றசைந்தலால் ஒன்றோடொன்று உராய்ந்து எழுப்பிய ஓசையும், அவற்றை அறுப்பார்தம் ஆரவாரமும் ஓங்கி ஒலித்ததாக சங்க மக்களின் வேளாண்மை உற்பத்தியைச் சுட்டுகிறார். அதே பாடலில் மருதநில வளத்தைக் குறிக்கும் புலவர், மேகங்கள் கீழ்த்திசைக் கடலில் நீரை முகந்து சென்று மேலைக் கடலின் அருகிலுள்ள மலைகளை வளைத்துக் கொண்டு இரவு பகல் என்று அறியாத வண்ணம் அருள் செய்து மேடு பள்ளம் எங்கும் நீர் திரண்டு பெருக, அருவிகள் ஒலிக்க, யானை நடுங்க பெரும் மழை பொழிகிறது. அந்நீர்,

**"வரைமுதல் இரங்கும் ஏறொடு வான்ஞெமிர்ந்து**

**சிதரற் பெரும்பெயல் சிறத்தலின் தாங்காது**

**..................................................**

**ஒளிறு இலஞ்சி; அடைநிவந்த"**[21]

ஆற்று வெள்ளமாய் கீழ்த்திசைக் கடலை நோக்கிப் போதலையுடைய நிறம் அமைந்த நீராகிய விரைந்து பெருகி ஒழுகும் வெள்ளம்; குளங்கள் கொள்ளும்படி நிறைப்ப, யானைகளையும் மறைக்கும்படி ஓங்கிய கதிர்களையுடைய கழினிகளிடத்தும் விளங்கும் மடுக்கலில் பெருகும். பின் இவைமேல் உயர்ந்து நிற்கும் தாமரைப்பூ, நெய்தற்பூ, நீலப்பூ போன்றவைகள் உள்ள பொய்கையில் பாயுமென்று மருதநில வளத்தையும், மருத நிலத்தில் உழவர்கள் விவசாயம் செய்வதால் ஏற்படும் ஒலிகளை,

**"அள்ளல் தங்கிய பகடு உறு விழுமம்**

**கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே,**

**ஒலித்த பகன்றை விளைந்த கழனி**

**வன் கை வினைஞர் அரிபறை, இன் குரல்"**[22]

மூப்படைந்ததால் வலியிழந்து சேற்றில் விழுந்துவிட்ட எருதைத் தூக்கிக் கரைசேர்க்கும் கள்ளுண்ட களமர் ஆரவாரமும்; பகன்றை தழைத்த நெல்முற்றிய கழனிகளில் அந்நெல்லை அறுப்பார் முழங்கும், பறை ஓசை எல்லா இடங்களிலும் கேட்கும் என்று மாங்குடி மருதனார் மருதநாட்டு வளத்தினை வர்ணிக்கிறார். இதைப்போலவே மதுரைக்காஞ்சி இயற்கை வளத்தை கூறும்போது,

**"மழைதொழில் உதவ மாதிரம் கொலுக்கத்**

**தொகுப்பின் ஆயிரம் வித்தியது விளைய"[23]**

மேகங்கள் மழை வேண்டும் காலத்துப் பிழையாது தம்முடைய பெய்தல் தொழிலால் உதவி புரிந்தன. எல்லாத்திசைகளிலும் விளைச்சல் பெருகி, வளம் கொழித்தது. ஒரு விதைப்பில் விதைத்த விதை ஆயிரமாய்ப் பெருகி விளைந்தது என்று நிலத்தின் வளத்தினை மதுரைக் காஞ்சி எடுத்துரைக்கிறது.

**காவிதி மாக்கள்**

சங்க கால பிற்பகுதியில் பெருமைக்கு உரியவராகவும், அரசனிடம் அஞ்சாது இடித்துரைத்து நன்னெறி நிறுத்துபவராகவும், அடக்கமுடையவராகவும், பழிக்கு அஞ்சுபவராகவும், புகழால் உயர்ந்தவராகவும் அரசனால் சிறப்புப் பெற்றவர்களுக்கு காவிதி பட்டம் வழங்கப்பட்டது. முடியுடை வேந்தர்க்கு மகட்கொடை நேரும் வேளாளரை நச்சினார்க்கினியர்,

**"பாண்டி நாட்டில், காவிதிப்பட்டம் எய்தினோரும்"[24]**

என்று குறிப்பதால் இவர்கள் உழுவித்து உண்ணும் பெருநிலக்கிழார்களான வேளாளரைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

**"நறுஞ்சாந்து நீவிய கேழ்கிளர் அகலத்து**

**ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து**

**..............................................................**

**செம்மை சான்ற காவிதி மாக்களும்"[25]**

என்ற பாடல் நறிய சந்தனத்தைப் பூசி நிறம் விளங்கும் மார்பை உடையராய் வேள்விகள் பல செய்து விளங்குகின்ற மயிர்க்கட்டுகட்டி பெரிய சுவர்க்கத்தில் ஏறப்போகும் சான்றோர்போல நன்மை, தீமைகளை அறிவால் ஆராய்ந்து தெளிந்து, தம் நெஞ்சத்தைத் தீதின்பாற் செல்லாமல் அடக்கி, இல்லத்திற்குரிய அன்பும், அறமும் நீங்காமல் இயற்றிப் பழிப்பன விலக்கி, ஈகையாற் பரவிய புகழால் நிறைந்த வரும் என்று காவிதி பட்டம் பெற்ற மக்கள் வாழும் தெரு என்று பெருநிலக்கிழாஅர் வேளாளர்கள் வாழும் தெருக்களை மதுரைக் காஞ்சி சுட்டுகிறது. இவ்வாறு உழவுத்தொழிலின் சிறப்பையும், அதன் வளர்ச்சிப்போக்கையும், உழவர்களின் பொருளாதாரம் சார்ந்த பண்பாட்டுச் சிறப்புகளையும் பத்துப்பாட்டு நூல்களான மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை போன்ற நூல்கள் பதிவு செய்கின்றன.

## தமிழகத்தில் வணிக வளர்ச்சி

சங்க காலத்தில் ஆரிய வைதீகர், சமண, பௌத்த சமயத்தினர் வருவதற்கு முன்பே தமிழகம் அயல்நாடுகளோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்தன. அதற்கு காரணம் தமிழகத்தின் பௌதீக சூழல் முக்கிய காரணியாக விளங்கின. மரக்கலம் கொண்டு, கடல் கடந்து செல்லும் அறிவியல் வளர்ச்சி அடைந்த காலத்தில் தமிழகம், உலகம் முழுவதும் பயணம் செய்து வணிகம் செய்வதற்கு ஏற்ற வகையில் இயற்கையான துறைமுகங்கள் சேர, சோழ, பாண்டிய நாட்டில் இருந்தன. பல துறை முகங்கள் சிறந்து விளங்கினாலும் காவேரிபூம்பட்டினம், கொற்கை, முசிறி மூவரசர்களுக்கும், மூன்று துறைமுகங்களாக தரை வழியாகவும், கடல் வழியாகவும் வணிகம் நடைபெற்றன. வடக்கே கங்கை வரையிலும், தெற்கே இலங்கை, கிழக்கே சாவக நாடு, மலேயா, பர்மா போன்ற நாடுகளிலும், மேற்கே அரபு நாடு, எகிப்து, உரோம் (யவனதேசம்) ஆகிய நாடுகளிலும் வணிகத்தொடர்பு இருந்ததை சங்க நூல்கள் குறிக்கின்றன.

வணிகர்கள் கூட்டாகச் சேர்ந்து ‘சாத்து’ என்று அமைத்து வணிகத்தை நடத்தினார்கள். இதில் தரைவழியே வணிகம் செய்பவர்களின் தலைவருக்கும் ‘மாசாத்துவன்’ என்று அழைத்தனர். கடல்வழியாக வணிகம் செய்தவர்களின் தலைவருக்கும் ‘மாநாய்க்கன்’ என்றும் அழைத்தார்கள். அக்காலத் தமிழகத்திலே பல மாசாத்துவர்களும், மாநாய்க்கர்களும் இருந்ததை சங்க நூல்கள் குறிக்கின்றன. சங்ககால தமிழ் மன்னர்கள் தங்கள் நாடுகளில் வணிகர்களுக்கு ஊக்கமளித்து வணிகத்தை வளர்த்தார்கள். தங்கள் நாட்டில் வணிகக் கப்பல்கள் வந்துபோகவும் ஏற்றுமதி, இறக்குமதி செய்யவும் துறைமுகப் பட்டினங்களை அமைத்துக் கொடுத்தார்கள். இராக்காலத்தில் கடலில் வருகிற கப்பல்கள் திசைதப்பிப் போகாமல் துறைமுகத்தைக் காட்ட கலங்கரை விளக்குகள் அமைத்தார்கள். துறைமுகங்களில் உள்ள வணிகப்பொருள்கள் களவு போகாதபடி காவலர்களை வைத்துக் காத்தனர். வணிகம் செய்து பெரும் பொருள் ஈட்டிய வணிகர்களுக்கு ‘எட்டி’ என்னும் சிறப்புப் பெயரும், ‘எட்டிப்பூ’ என்னும் பொற்பதக்கத்தையும் அளித்து சிறப்பித்தார்கள் என்று சங்கப்பாடல்கள் வழி அறிஞர் பெருமக்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். சங்க காலத்தில் பண்டமாற்றுமுறை நடந்திருப்பதை பாடல்கள் குறிக்கின்றன. செம்பு, வெள்ளி, பொன் காசுகளும் பண்டமாற்றாகப் பயன்படுத்தியிருக்கின்றனர். பண்டமாற்று முறையை விளக்கும் வகையில்,

**“தேனெய்யொடு கிழங்கு மாறியோர்**

**மீனெய்யொடு நறவு மறுகவும்**

**தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்**

**மான்குறையோடு மது மறுகவும்”**[26]

வேடர் தேனையும், கிழங்கையும் கொண்டு வந்து மதுபானக் கடையில் மாற்றி அதற்கு மாறாக வறுத்த மீன் இறைச்சியையும், மதுவையும் வாங்கி உண்டதையும்; உழவர் கரும்பையும் அவலையும் கொண்டு வந்து கொடுத்து அதற்குமாறாக வறுத்த மீன் இறைச்சியையும், மதுவையும் பெற்று உண்டு மகிழ்ந்ததை முடத்தாமக் கண்ணியார் பொருநராற்றுப்படையில் குறிப்பிடுகிறார். அதைப்போலவே,

**"குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு**
**வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி"**[27]

**"உமணர் தந்த உப்பு நொடைநெல்"**[28]

உப்பு வணிகர் உப்புக்குப் பதிலாக தமக்குக் கிடைத்த நெல்லை சிறுபடகுகளில் ஏற்றிக்கொண்டு சென்றதை சங்கப்பாடல்கள் குறிக்கின்றன. இதுபோன்று பல இடங்களில் பண்டமாற்று முறை நடந்ததை சங்கப் பாடல்கள் குறிக்கின்றன. அதே காலத்தில் காசு கொடுத்து வாங்கும் முறையும் இருந்தன. அந்தக் காசுகள் விலை உயர்ந்த பொருட்களை வாங்குவதற்கு பயன்பட்டன. அந்தக் காசுகள் நெல்லிக்காயின் வடிவம்போல உருண்டு சிறிது தட்டையாக இருந்திருக்கின்றன. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் பாலை நிலத்து வழியிலே இருந்த நெல்லி மரங்களிலிருந்து நெல்லிக்காய்கள் பொற்காசுகள் உதிர்ந்து கிடப்பன போலக் காணப்பட்டன என்று கூறுகிறார்.

**"புல்லியை நெல்லிப் புகரில் பசுங்காய்**

**கல்லதர் மருங்கில் கடுவெளி உதிர்ப்பப்**

**பொலஞ்செய் பொறப்பத்தா அம் சுத்தட்"**[29]

என்று காசு முறை புழங்கி வந்ததை அகநானூறு குறிக்கிறது. இவ்வாறு காணம் என்னும் காசுமுறை புழக்கத்தில் இருந்தது தெரிய வருகிறது. இவற்றின் மூலம் அடித்தட்டு மக்களும், சிறுதொழில் புரிவோரும் பண்டமாற்று முறையைப் பின்பற்றியும், பெரும் செல்வந்தர் பெருவணிகர் காசு முறையைப் பின்பற்றியும் வந்தனர் என்பது ஒருவாறு தெரிய வருகிறது. ஏற்றுமதிப் பொருள்களாக வெல்லம், சர்க்கரை, அறுவை துணி, மிளகு, உப்பு, வளை, முத்து, யானைத் தந்தம், நீலக்கல் போன்றவைகள் இருந்திருக்கின்றன. இறக்குமதி பொருள்களாக குதிரைகள், வாசனை திரவியங்கள், மது, துகில் போன்ற பல பொருட்கள் வந்து இறங்கியிருக்கின்றன என்பதைச் சங்கப்பாடல்கள் குறிக்கின்றன. சங்க காலத்தில் வணிகத்தின் வளர்ச்சியை நன்குணர்ந்து அதனைத் தம் தொழிலாகக் கொண்டு புலவர்கள்

வாழ்ந்துள்ளனர் என்பதை அவர்களின் பெயர்களைக் கொண்டு அறிய முடிகிறது. இவ்வாறு கி.மு.ஆறாம், ஏழாம் நூற்றாண்டிலிருந்தே தமிழகத்தில் மெல்ல, மெல்ல வணிக வளர்ச்சி ஏற்பட்டு, சங்கம் மருவிய காலத்தில் உச்ச வளர்ச்சிப் பெற்றிருப்பதைச் சங்கப்பாடல்கள் குறிக்கின்றன. மேலும் தமிழர்கள் கலம் செலுத்துவதில் வல்லவராக இருந்தனர் என்பதை, கடலில் நெடுந்தூரம் கப்பலில் போகப் பழகியிருந்தனர் என்பதை கரிகாலச் சோழனுடைய முன்னோரான ஒரு சோழன் கடற்காற்றின் உதவியினால் கடலில் கப்பல் ஓட்டினான் என்பதை,

**"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**

**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக"**[30]

என்று புறநானூற்றுப்பாடல் கூறுகிறது. இவ்வாறு தரை வழியாகவும், கடல் வழியாகவும் வணிகம் நடந்தன என்பதும், அவ்வணிக வளர்ச்சிக்கு பௌதீக காரணிகளாக மூன்று பக்கம் கடலும் இருந்தன என்பது முக்கியமான அம்சங்களாகும். இவ்வணிக வளர்ச்சியின் வரலாற்றுப்போக்கை,

> **"சங்க காலத்தின் பிற்பகுதியிலும், சங்கம் மருவிய காலப்பகுதியிலும் பலம் வாய்ந்த அரசுகள் தோன்றியதன் விளைவாகத் தனியுடமையின் போரில் அரசுகள் நிலைநிறுத்தப்பட்டன. சமுதாயத்திலே வேலைப் பிரிவினை ஏற்படலாயிற்று. பிறநாட்டு வாணிகமும். இக்காலப் பகுதியிலேயே தமிழ்நாட்டுச் செல்வ நிலைக்கு உதவிற்று கைத்தொழிலும், விவசாயமும் பிரிந்தன. நகரம் நாட்டுப்புறத்திலிருந்து வேறுபட்டது. பெருகி வந்த உற்பத்தியின் விளைவாக உற்பத்தியிலே பங்கெடுத்துக் கொள்ளாத ஒரு வர்க்கம் தோன்றியது. உற்பத்தியில் பங்கு எடுக்காமல் உற்பத்தி செய்த பொருட்களைப் பரிவர்த்தனை செய்வதில் மட்டும் ஈடுபடும் வர்க்கத்தைச் சிருட்டித்தது இக்காலப்பகுதி. அந்த வர்க்கம்தான் வியாபாரிகளின் வர்க்கம் வணிக வர்க்கம் சமுதாயத்திலே முக்கியமான இடத்தை வகித்தக் காலப்பகுதியிலே திருக்குறள், சிலப்பதிகாரம் முதலிய சிறப்புமிக்க நூல்கள் தோன்றின. இவற்றின் முதற்தோற்றத்தை பட்டினப்பாலை, மதுரைக் காஞ்சி முதலிய பிற்காலச் சங்க நூல்களிலே காணலாம்"**[31]

என்ற கலாநிதி கைலாசபதி அவர்களின் கருத்து சங்க காலத்தில் வணிக வர்க்க வளர்ச்சியின் வரலாற்றுப் போக்கை உணர்த்துவதாக உள்ளது.

வணிகர்கள் காடு மலை பாராமல் மிகவும் கடினமான வழியிலும் சென்று வணிகம் செய்தனர் என்பதை,

**"செய்பொருள் திறவர் ஆகிப், புல்இலைப்**
**பராரை நெல்லி அம்புளித் திரள்காய்**
**.........................................................**
**நீடலர்"**[32]

தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டாக தோழி கூறியதாக வரும் இவ் அகநானூற்றுப் பாடல். நம் தலைவர் ஈத்துவக்கும் இன்பம் பெறுதற்காகப் பொருள் வேண்டி பிரிந்துள்ளார். அவர் சென்ற வழியோ நெல்லிமரத்தின் புளித்த காய்களை மான் கூட்டங்கள் உணவாகத் தின்னும் வெம்மையானது. மேலும் வடநாட்டவரான மோரியர் தென் திசைவந்து பகைவரை வெல்லத் தம் தேரை எளிதாகச் செலுத்த வேண்டி வழிகளை உருவாக்கிய குன்றுகளைப் பிளந்த கரடு முரடான வழி என்று பொருளீட்டச் செல்லும் வழியின் கொடுமையைச் சொல்கிறது. இதைப்போலவே,

**"மாகெழு தானை வம்ப மோரியர்**
**புனைதேர் நேமி உருளிய குறைத்த**
**.......................................................**
**அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே"**[33]

தலைவனின் பிரிவை தலைவிக்கு ஆற்றுவிக்கும் தோழியின் பாடலாக வரும் இப்பாடலில் வணிகத்தின் மூலம் பொருள் ஈட்டச் செல்லும் தலைவன் செல்லும் வழியின் கடுமையை விளக்கும் பாடலாக இப்பாடல் விளங்குகிறது.

**"யவனர் தந்த வினைமாண் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம் கெழு முசிறி"**[34]

யவனர்கள் கலங்களில் பொன்னோடு வந்து மிளகு வாங்கிச் சென்றனர் என்று அகநானூறு குறிக்கிறது. இதைப்போலவே நீரிலும் நிலத்திலும் நிகழ்ந்த பெருவணிகத்தினை பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி போன்ற நூல்கள் குறிப்பிடுகின்றன.

மதுரைக்காஞ்சி,

**"முழங்கு கடல் தந்த விளங்குகதிர் முத்தம்**

**அரம் போழ்ந் தறுத்த கண்ணேர் இலங்குவளை**

**..............................................................**

**ஐம்பால் திணையும் கவினி அமைவர"[35]**

முழங்குகின்ற கடலால் தரப்பட்ட ஒலியுடைய முத்துக்களும், வாளரம் போழ்ந்த இடம் நேரிய வளையலும் செட்டி மக்கள் கொண்டு வந்த பல்வேறு பண்டங்களும் சுழியிடத்துப் பாத்திகளில் தீம்புளியும், ஆண்டுப்படும் வெள்ளிய உப்பும் மணற்குன்று பரந்தோங்கிய கானலிடத்தில் வலிய கையையுடைய திமிலர் கொழுத்த மீன்களை அறுத்த துடிக்கண் போன்ற உணங்கல் துணிகளும், இலைகளை ஏற்றி மரக்கலங்களும், யவனம் முதலிய நாட்டினின்றும் மரக்கல மீகாமர் பலரும்கூடி இவ்விடத்து உண்டாகிய பேரணிகலன்களைப் பண்டமாற்றாகத் தத்தம் நாட்டிற்குக் கொண்டு போகும்பொருட்டுச் சேரக் கொண்டு வந்த குதிரைகளோடு இன்னோரன்ன அனைத்தும் நாளுக்கு நாள் மிக்குப் பெருகிவருதலால், நெய்தல் நிலத்துச் செல்வம் பலவும் செறிந்து இரங்கல் என்னும் உரிப்பொருள் அமைந்த கடல்சார்ந்து ஒரு சார் என ஈண்டுக்கூறிய ஐவகை நிலங்களும் அம்மண்டபத்தில் அழகு பெற்று பொருந்தி நின்றன என்று வணிக வளர்ச்சி கடல் கடந்து சென்றதை மதுரைக் காஞ்சி விளக்கிச் செல்கிறது.

காவிரிப்பூம்பட்டினத்தில் நீர், நில வழி வந்து குவிந்த அரும்பண்டங்களைப் பட்டினப்பாலை,

**"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**

**காலின் வந்த கருங்கறி மூடையும்**

**.......................................................**

**தொல்கொண்டித் துவன்றிருக்கைப்"[36]**

அழியாத சிறந்த புகழையுடைய தேவர்களின் பாதுகாவலான கீழ்க்கடல் வழியாகக் கப்பலில் வந்த நிமிர்ந்து விரைந்து ஓடும் குதிரைகளும், தரைவழியாக வண்டிகளில் ஏற்றிக் கொண்டு வந்த கருமை நிறமுள்ள மிளகு மூட்டைகளும், இமயம் போன்ற வடக்கில் உள்ள மலைகளில் விளைந்த இரத்தினங்களும், பொன்கட்டிகளும், குடகு மலையில் உண்டான சந்தனக் கட்டைகளும், அகிற்கட்டைகளும், கங்கை நதிப்புரத்துச் செல்வங்களும், காவிரியாற்றால்

உண்டான செல்வங்களும், ஈழத்துத் தீவில் விளைந்த உணவுப் பொருள்களும், பர்மாவில் தோன்றிய செல்வப் பொருள்களும் இன்னும் பல சிறந்தவைகளும், உயர்ந்தவைகளுமான பண்டங்கள் பூமி நெறியும்படி நிறைந்து, செல்வங்கள் கலந்து கிடக்கின்ற மிகப்பெரிய வீதிகளைக் கொண்டதாக காவிரிப்பூம்பட்டினம் விளங்குகிறது. மேலும் வணிகர்கள் தம்முடைய பொருளையும், பிறருடைய பொருளையும் ஒன்றாகவே எண்ணி வாங்கிக் கொள்வதையும், அதிகமாகக் கொள்ளாமல், கொடுப்பதையும் குறைத்துக் கொடுக்காமல் பல பண்டஙக்ளையும் நியாயமான முறையில் கொள்முதல் செய்தனர் என்று காவிரிப்பூம்பட்டினத்தின் வணிகச் சிறப்பை பட்டினப்பாலை எடுத்துரைக்கிறது. யவனர்கள் கொண்டு வந்து விற்ற மதுவை அரசர், செல்வர் போன்ற உயர்குடியினர் விரும்பி உண்டார்கள் என்பதை,

**"யவனர், நன்கலம் தந்த தண் கமழ் தேறல்,**

**பொன் செய் புனைகலத்து ஏந்தி, நாளும்**

**ஒண்தொடி மகளிர் மடுப்ப, மகிழ் சிறந்து**

**ஆங்கு இனிது ஒழுகுமதி! ஓங்கு வாள் மாற!"**[37]

என்று புறநானூறு குறிக்கிறது.

வடமலையில் பிறந்த மணியும், கங்கைச் சமவெளி பொருட்களும் காவிரிப்பூம்பட்டினத்திற்கு கொண்டு வந்து ஏற்றுமதி, இறக்குமதி நிகழ்ந்ததை

**"தொல் இசைத் தொழில் மாக்கள்,**

**காய் சினத்த கதிர்ச் செல்வன்**

..................................................

**கூர் உகிர் ஞமலிக் கொடுந் தாள் ஏற்றை"**[38]

சுடுகின்ற கோபத்தையுடைய சூரியனுடைய தேரில் பூட்டப்பட்ட வரிவாங்கும் தொழிலைச் செய்து கொண்டிருப்பார்கள் என்றும் குறைவில்லாமல் மேகம் கடலில் முகந்த நீரைக் கொண்டுபோய் மலையில் பெய்யும். மலையில் பெய்த அந்நீர் கடலில் மீண்டும் வந்து விழவும் மழை பெய்கின்ற காலத்தைப்போல பல நாடுகளிலிருந்து கடல் வழியாக வந்த பண்டங்கள் கடலிலிருந்து நிலத்தில் ஏறவும் தமிழ்நாட்டின் பல பாகங்களிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காக வந்த பண்டங்கள் நிலத்திலிருந்து நீரில் இறங்கவும் செய்கின்றன. அளந்து கணக்கிட முடியாத பல பண்டங்கள் எல்லை காண

முடியாதபடி வந்து நிறைந்து, சிறந்த பாதுகாப்பும் பெரிய காவற்காரர்களையும் உடைய சுங்கச் சாவடியில் வலிமையுடைய பகைவர்களை வலிமையால் வருத்தும் தன்மையுடையவனாகிய கரிகாற்சோழனது புலிமுத்திரையைப்போட்டு வெளியில் அனுப்பிய மதிப்பு நிறைந்த பல பண்டங்கள் பொதிந்த மூடைப் போரின் மேல் ஏறி மேகம் படிந்த உச்சியையுடைய பெரிய மழையின் பக்கத்து மலையில் விளையாடுகின்ற வருடைமான் காணப்படுவதுபோலக் கூர்மையாக நகங்களையுடைய நாய் இனத்தைச் சேர்ந்த வளைந்த பாதத்தையுடைய ஆண்நாய், ஆட்டுக் கடாக்களோடு குதித்து விளையாடும் முற்றமாக காவிரிபூம்பட்டினம் திகழ்கிறது என்று கடியலூர் உருத்திரங் கண்ணனார் வருணிக்கிறார். மேலும் கங்கை முதலிய பேராறுகளின் வழிச் சென்று மக்கள் வணிகம் செய்ததை,

**"கங்கை வங்கம் போகுவர் கொல்லோ**

**அலங்கல் உலவை அம்காடு இறந்தோரே"**[39]

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் மூலம் உணரலாம்.

பாண்டி நாட்டு கொற்கை முத்து மிகவும் புகழ் வாய்ந்தது என்பதை,

**"வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை**

**மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**

**கொற்கை அம் பெருந்துறை முத்தின் அன்ன"**[40]

என்றும்,

**"புலவுப் பொருது அழித்த பூநறு பரப்பின்**

**இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம்**

**கவர்நடைப் புரவி கால் வடுத் தழக்கும்**

**நல்தேர் வழுதிக் கொற்றை முன்துறை"**[41]

என்றும் அகநானூறு குறிக்கிறது.

இரவு நேர வணிகக் கடைகளை,

**"வாலிதை எடுத்த வளிதரு வங்கம்**

**பல்வேறு பண்டம் இழிதரும் பட்டினத்து**

**..............................................................**

**அல்லங்காடி அழிதரு கம்பலை"**[42]

என்ற பாடல் நல்ல பாய்களை விரித்த காற்றுக் கொண்டுவருகின்ற மரக்கலங்களிற் கொணர்ந்த பல்வேறு பண்டங்கள் இறங்குகின்ற பட்டினத்தின்கண் ஒல்லென முழங்கும் ஓசையை ஒப்ப அகன்ற இடத்தியுடைய அயல்நாட்டு வாணிகர் ஈண்டுச் செய்த அணிகலன்களை விலைக்குக் கொண்டு போதல் காரணமாக உலாவுவதால் எழுந்த ஆரவாரமும் இயைந்து, பெரிய கடலிடத்தே பெருகும் ஓதம் கழிகளிடத்து நள்ளிரவில் பெருகிப் பாய்ந்து மீளுங்கால் ஆண்டு வாழும் பல்வேறு பறவைகளும் குழீஇ எடுத்த ஓசையை ஒப்ப எழுந்த அல்லங்காடியின் ஆரவாரம் இருந்ததாகக் குறிக்கிறது. இராக்காலத்திலும் வாணிகம் நடைபெற்றது என்பதை இப்பாடல் மூலம் மதுரைக்காஞ்சிக் குறிக்கிறது.

### வணிகர்களின் வாழ்க்கை முறை

நகரங்களில் வாழ்ந்த வணிகர்களின் தெருக்கள் தூய்மையாகவும், வணிகர்கள்; கொலை, களவு போன்றவற்றில் ஈடுபடாமலும், நேர்மையாகவும், புலால் உண்ணாமலும் வாழ்ந்தனர். அதனால் அவர்கள் வாழ்ந்த தெருக்களில் விலங்குகள் அச்சமின்றி சென்றன என்பதைப் பட்டினப்பாலை,

> **"கிளை கலித்துப் பகை பேணாது**
>
> **வலைஞர் முன்றில் மீன்மிறவும்**
>
> ......................................................
>
> **தொல் கொண்டி துவன் றிருக்கை"**[43]

என்னும் பாடல் மீன்பிடிப்போரின் வீட்டு முன்னிலையில் கடல்மீன்கள் துள்ளிக்குதித்துப் புரளவும், ஊன் விற்போரின் குடிசைகளில் ஆடு முதலிய மிருகங்கள் நிறைந்திருக்கவும், கொலைத்தொழிலை வெறுத்தும், களவுத் தொழிலை ஒழித்தும், தேவர்களைப் போற்றியும், யாகங்களின் மூலம் தேவர்களுக்குப் பலியிட்டும் நல்ல பசுக்களோடு எருதுகளைக் காப்பாற்றியும், நான்கு வேதங்களையும் அறிந்த அந்தணர்களின் புகழைப் பரவும்படி செய்து வைத்தும் நல்ல உணவைக் கொடுத்தும் அறநெறியிலிருந்து தவறாது குளிர்ந்த நிழலில் வாழ்பவர்கள் வளைந்த கலப்பையினால் உழுதொழிலை விரும்புகின்ற உழவர்களாகிய நீண்ட நுகத்தடியிலுள்ள ஒரு ஆணியைப்போல நடுவு நிலைமையில் நின்ற நல்ல நெஞ்சத்தை உடையவர்கள் பழிக்குப் பயந்து உண்மையைச் சொல்லி தம்முடைய பொருளையும் பிறருடைய பொருளையும் ஒன்றாகவே எண்ணி, வாங்கிக் கொள்வதையும் அதிகமாகக் கொள்ளாமல் கொடுப்பதையும் குறைத்துக் கொடுக்காமல் பல பண்டங்களையும் நியாயமாக விலைகூறிக்

கொடுக்கின்ற பழமையாகவே நியாயமான முறையில் கொள்முதல் செய்கின்றவர்கள் என்று வணிகர்களின் வாழ்க்கை முறையை பட்டினப்பாலை விவரிக்கிறது. இவர்களின் வாழ்க்கை முறையே இவர்கள் சமண, பௌத்த சமயத்தைச் சார்ந்தவர்கள் என்பதை மிகத் தெளிவாய் எடுத்துக் காட்டுகிறது. கொல்லாமை, புலால் உண்ணாமை, அறம், களவு ஒழிப்புப் போன்ற கொள்கைகளை மையமாக கொண்டதாக சமண, பௌத்த சமயங்கள் விளங்குகின்றன. அது மட்டுமின்றி சங்கம் மருவிய காலத்தில் கிராமம் நகரம் என்ற பிரிவினை ஏற்பட்ட பிறகு கிராமத்தில் உழுது உண்ணும் உழவர்கள் புலால் உனவு உண்டனர் என்பதை உழவுத்தொழிலின் சிறப்பைப் புலவர்கள் உனர்த்தும்போது குறிப்பிட்டனர். நகரந்துப் பெருநிலக்கிழார்கள் வாழும் உழவு சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் புலால் உணவு உண்ணாமல் வாழ்ந்தனர் என்பதும் தெரிகிறது.

இதைப்போலவே மதுரைக் காஞ்சியில்,

**"அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகி**

**குறும்பல் குழுவின் குன்று கண்டன்ன**

**...............................................................**

**சிறந்த தேஎத்துப் பண்ணியம் பகர்நரும்"**[44]

என்ற பாடல் நூலோர் தமக்கு ஓதிய நன்னெறியில் பிறழாமல் இல்லறத்தின் நின்று, மலைகளின் திரட்சியைக் கண்டதைப் போன்ற பருந்துகள் இளைப்பாறியிருந்து, பின்னர் பறத்தர்க்குக் காரணமான தொழில் மாண்புடைய இல்லத்திலிருந்து பல்வேறு வகைப்பட்ட பண்டங்களோடு உனவுப் பொருள்களும் மிக்கு அழகுப்பெற்று, மலையிடத்தும், நிலத்திடத்தும், நீரிடத்தும் பிற இடங்களிலும் தோன்றுதலையுடையனவும், பலவாய் வேறுபட்ட அழகுடையனவுமாகிய மணி, முத்து, பொன் முதலியவற்றைப் பண்டமாற்றாகப் பெற்று, அயல் நாட்டினின்று கொணர்ந்த பண்டங்களை விற்கும் வணிகர் உறையும் தெருக்கள் என்று வணிகர்கள் வாழ்ந்த தெருக்களை மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனார் விளக்குகிறார், இதில் அறநெறியில் பிறழாமல் தம் சமயக் கொள்கைக்கேற்ப வாழ்ந்தார்கள் என்று குறிக்கப்படுவது முக்கியமானதாகும்.

காவிரிப்பூம்பட்டினத்தின் செல்வந்தர் குடியிருப்புகளை பட்டினப்பாலை கூறும்போது அவ்வழியில் செல்வோருக்கு ஏற்படும் தடைகளாக,

**"சுடர்நுதல் மடநோக்கின்**

**நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்**

**……………………………………………………**

**முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்"**[45]

என்ற பாடல் பெரிய வீடுகளின் பெரிய முன் வாசலில் ஒளிபொருந்திய நெற்றியையும் கபடம் அற்ற பார்வையையும் உடைய அழகான ஆபரணங்களை அணிந்த இளம் பெண்கள் காய்கின்ற உணவுப் பொருள்களைத் தின்னும் கோழிகளை விரட்டுவதற்காக வீசியெறிந்த வளைந்த கால்களையுடைய கனமான காதணிகள் அழகிய கால்களையுடைய சிறுவர்கள்; குதிரையில்லாமல் கையினால் உருட்டிச் செல்கின்ற மூன்று சக்கரங்களையுடைய சிறிய தேர்கள் ஓடும் முன் வழியைத் தடுத்து நிறுத்தும். இதுபோன்றத் தடைகளைத் தவிர வேறு தடையில்லையென்று குறிக்கிறது. நகரத்தில் செல்வந்தர் மிகுந்த செல்வச் செழிப்படன் வாழ்ந்தனர் என்பதை எடுத்துக்காட்டும் பாடலாக இது அமைகிறது.

நகரங்கள் வணிகத்தை மையமாகக் கொண்டு விளங்கின என்பதை,

**"கோடுபோழ் கடைநரும், திருமணி குயினரும்**

**சூடுறு நன்பொன் சுடர்இழை புனைநரும்,**

**……………………………………………………**

**நால்வேறு தெருவினும் கானுற நிற்றர"**[46]

என்ற பாடல் சங்குகளை அறுத்து வளையல் முதலியனவாகக் கடைவாரும், மணிகளைத் துளையிடுவாரும், பொன்னை உறையிட்டு அறுதியிரும் பொன் வாணிகரும் புடவை விற்பாரும், செம்பினை நிறுத்து வாங்குவோரும் கச்சுக்களை முடிவாரும், பூக்களையும், சாந்தையும் ஆராய்ந்து விற்பாரும், ஓவியம் எழுதுவாரும் இன்னோரன்ன பிறரும் கடலில் விளங்கும் அறலைப்போன்று மடிப் புடவைகள் விரித்துச் சிறியோரும், பெரியோருமாகிய நெய்தல் தொழில் செய்வாரும் திரண்டு நான்கு வேறுபட்ட தெருக்கள்தோறும் ஒருவர் காலொடு ஒருவர்கால் பொருந்துமாறு நிற்றலால் எழுந்த ஓசையென்று கூட்ட நெரிசலிலும் சிறுதொழில் செய்வோர், தொழிலாளர்கள் போன்றவர்கள் நகரம் நோக்கி வந்து தங்களது சிறுதொழிலைச் செய்து வந்தார்கள் என்று மதுரைக்காஞ்சி குறிக்கிறது.

இவ்வாறு கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிறகு உழவுத் தொழிலும், வணிகத் தொழிலும் ஒன்றுக்கொன்று போட்டிப்போட்டுக்கொண்டு வளர முற்பட்டன. இப்பொருளாதார

வளர்ச்சியின் காரணமாக அதில் கிடைக்கும் உபரி செல்வத்தை அடையும் பொருட்டு தமிழக மன்னர்களிடையே போர் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டேயிருந்தன. கி.மு.ஐந்தாம், ஆறாம் நூற்றாண்டளவில், வந்த வைதீகர் தமிழ் மன்னர்களின் செல்வாக்கைப் பெற்று பிரம்மதேயமாக நிலங்களையும், செல்வங்களையும் பெற்று மண்ணின் மைந்தர்களாயினர்.

> **"அரசர்கள் பிரம்மதேயம் என்ற பெயரில் அவ்வூரின் வருவாயையும், நிர்வாகத்தையும் அதன்மேல் ஆட்சி செலுத்தும் அதிகாரத்தையும் பிராமணர்க்கு விட்டுக் கொடுத்திருந்தனர்"**[47]

கி.மு.மூன்றாம் நூற்றாண்டளவில் வந்த சமண, பௌத்தர்களின் வளர்ச்சி வெகுவேகமாகப் பரவியதின் விளைவாக அவற்றைக் கட்டுப்படுத்தும் நோக்கோடும், தங்கள் அதிகாரத்தை நிலை நிறுத்திக் கொள்ளும் நோக்கோடும் தமிழகப் பெருநிலக் கிழார்களாகிய வேளாளர்களும், வைதீகரும் ஒன்றிணைய வேண்டிய நிர்பந்தத்தை சமண, பௌத்தத் தாக்கம் உருவாக்கியது. அதன் காரணமாக முல்லைநிலத் தெய்வம் 'மால்' விஷ்ணுவோடு இணைந்தது. தமிழ்க்கடவுளை முருகன்; ஸ்கந்தனோடும், கார்த்திகேயனோடும், சுப்பிரமணியனோடும் இணைக்கப்பட்டான். சிந்துவெளிக் கடவுளான சிவன்; ருத்ரனோடு இணைத்து உருவாக்கப்பட்டார். இவ்வாறு சிவன்(ருத்ரன்) விஷ்ணு, முருகன் போன்ற தெய்வங்கள் தமிழ்மரபு சார்ந்த வைதீக சமயமாக்கப்பட்டு வேளாண்மை உற்பத்தி செய்யும் நிலவுடமை சமூக அமைப்பின் சார்பாக நிலை நிறுத்தப்பட்டது. தமிழ்மரபு வழிபாட்டோடு வைதீக சமயம் எவ்வாறு இணைக்கப்பட்டது என்பதை சென்ற இயல்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**சமயங்களின் வர்க்கப் பின்னணி**

ஒவ்வொரு சமய தத்துவத்திற்கும், ஒரு வர்க்க பின்னணி உண்டு. ஏனெனில் சமயம், தத்துவம், கலை, இலக்கியம், அரசியல் இவை அனைத்தும் பொருளாதாரம் என்னும் அடிக்கட்டுமானத்திலிருந்து எழுந்த மேல்கட்டுமானமாகும். இதை மார்க்ஸ்,

> **"அரசியல், சட்ட நீதி, தத்துவஞானம், மதம், கலை, இலக்கியம் முதலியவற்றின் வளர்ச்சி பொருளாதார வளர்ச்சியின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. ஆனால் இவையெல்லாம் ஒன்றுக்கொன்று ஒன்றன்மீது ஒன்று செயல்படுகின்றன; செல்வாக்கைச் செலுத்துகின்றன, அத்துடன் பொருளாதார அடிப்படையின் மீது செல்வாக்கைச்**

**செலுத்துகின்றன. பொருளாதார நிலைமைதான் எப்போதும் காரண விளைவாக இருக்கின்றன, அது மட்டுமே செயலூக்கமாக இருக்கின்றது. மற்றவையெல்லாம் மந்தமாக செயலூக்கமில்லாத விளைவுகளை உண்டாக்குகின்றன என்பதில்லை. பொருளாதார அவசியத்தின் அடிப்படையில் எப்போது பரஸ்பர செயல்பாடு ஏற்படுகின்றன, அதே சமயத்தில் பொருளாதார அடிப்படையே எப்போதும் இறுதியாக உறுதி நிலையில் அழுத்தம் கொடுக்கிறது."[48]**

என்று எந்தவொரு செயலுக்கும் அடிநாதமாக இருப்பது பொருளாதாரப் பின்னணியே என்று வரையறை செய்கிறார்.

சமண பௌத்த சமயங்கள் தங்களின் கொள்கையின் ஊடாக வணிகத்தை முன்னிறுத்தி வந்ததால் போரற்ற தமிழகம் வேண்டும் என்ற மக்களின் வேண்டுதலை சமணம், பௌத்தம் தங்கள் கொள்கையின் மூலம் பூர்த்தியடையச் செய்தன. சமண, பௌத்த சமயக் கொள்கைகள் வணிகம் செய்வதற்கு ஏற்ற வகையில் இருந்ததால் வணிகம் சமண, பௌத்த சமயங்களின் ஆதரவோடு வெகுவேகமாகப் பரவின. சமண, பௌத்த சமயங்கள் நேரிடையாக வணிகத்தை ஆதரித்தன என்பதை, கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சாவகத்தீவிற்கும், சோழநாட்டிற்கும் உள்ள வணிக தொடர்பை குறிக்கும் மணிமேகலை நூல்,

**"கிள்ளி வளவனோடு செழுநகை வேண்டிக்**
**கள்ளவிழ் தாரோய்! கலத்தொடும் போகிக்**
**காவிரிப் படப்பை நன்னகர் புக்கேன்**
**மாதவன் அறவணன் இவள்பிறப் புணர்ந்தாங்கு**
**ஓதினன் என்றியா னன்றே யுரைத்தேன்"[49]**

சாவக நாட்டு அரசன் சோழ நாட்டு அரசனை சந்திக்க தூதர்களை அனுப்பினான். இரு நாட்டுக்கும் வணிகத் தொடர்பு என்பதால் அது தொடர்பான சந்திப்பாகவே அது இருக்கக்கூடும். அத்தூதுவர்கள் சோழனைக் கண்ட பிறகு பூம்புகார் நகரத்தில் இருந்த பௌத்த விகாரையின் தலைவராக இருந்த அறவண அடிகளையும் சந்தித்துச் செல்வதாக மணிமேகலை குறிக்கிறது. எனவே வணிகத்திற்கும் பௌத்த சமயத்திற்குமான தொடர்பை இச்சந்திப்பு உறுதிப்படுத்துகிறது. மேலும்,

**"கடல் தெய்வமாகிய மணிமேகலா தெய்வம் கடலில் பிரயாணம் செய்கிற நல்லவர்க்கு கடலில் துன்பம் நேரிட்டால் அது அவர்களுக்கு உதவி செய்து காப்பாற்றுகிறது என்னும் நம்பிக்கை பௌத்த மதத்தில் இருந்தது. பௌத்தம் தமிழகத்தில் பரவியபோது பௌத்தர் மணிமேகலா தெய்வத்தையும் கடல் தெய்வமாக ஏற்றுக் கொண்டு வழிபட்டார்கள்"**[50]

என்று மயிலை சீனி.வேங்கடசாமி கூறும் கருத்து மேற்சொன்ன கருத்திற்கு வலுவூட்டுவதாக அமைகிறது.

**"உடமை சிந்தனைகளுக்கு எதிரான கோட்பாடுகளைக் கொண்டு சமணரும், பௌத்தமும் தோன்றிய போதிலும் அவை ஒருபோதும் உடமை வர்க்கங்களை மறுக்கவோ, எதிர்க்கவோ இல்லை. எனவேதான் உடமை வர்க்கம், வணிக வர்க்கம் இம்மதங்களைப் பெருமளவில் ஆதரித்தன."**[51]

என்கிறார் ரொமிலாதாபர். மேலும்,

**"தமிழ்நாட்டிலே சமண சமயம் பரவுதற்கு இன்னொரு காரணமும் உண்டு. மீன் பிடித்தல், வேட்டையாடுதல் போன்ற உயிர்க்கொலை செய்யும் தொழில்களைத் தவிர ஏனைய தொழில்களை எல்லாம் சமண சமயம் சிறப்பித்துப் போற்றி வந்தது. வாணிபம் செய்யும் வணிகரும், ஏனைய தொழிலாளரும் இந்த மதத்தை மேற்கொண்டிருந்தனர், எந்தநாட்டிலும் எக்காலத்திலும் பொருளாதாரத் துறையில் செழிப்புற்றுச் சிறப்பும் செல்வாக்கும் பெற்றிருப்பவர் வணிகரும், விவசாயிகளும் ஆவர். இவர்கள் சமண சமயத்தைச் சேர்ந்திருந்தபடியால் ஏனைய மக்களும் இச்சமயத்தை தழுவுவராயினர். அரசர்களில் பலர் சமண சமயத்தைச் சேர்ந்திருந்தனர். இவர்களால் சமண சமயத்திற்கு ஆதரவும் செல்வாக்கும் ஏற்பட்டாலும் சமண சமயத்தின் செல்வாக்கைக் கண்டு சமண சமயத்தவரல்லாத அரசருங்கூட சமணப் பள்ளிகளுக்கும், மடங்களுக்கும் நிலபுலன்களையும், பொன்னையும், பொருளையும் பள்ளிச்சந்தமாகக் கொடுத்து உதவினார்கள்."**[52]

இவ்வாறு வணிக வர்க்கம் சார்ந்து சமணமும், பௌத்தமும் வளர்ச்சிப் பெற்றன.

> **"சங்க கால மன்னர்களில் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், கரிகாலன் ஆகிய மன்னர்கள் பௌத்த மத ஆதரவாளர்களாக இருந்தனர் என சிலப்பதிகாரம் கூறுகிறது. பசுக்கன்றைக் கொன்றதற்காக தன் மகனுக்கு கொலைத் தண்டனை வழங்கி உயிர்களில் உயர்வு, தாழ்வு இல்லையென்றத் தத்துவத்தை பின்பற்றிய மனுநீதி சோழன் கதை பௌத்தத்தின் கதையாக இருத்தல் வெண்டும் புறாவுக்காக தன் சதையை அரிந்து கொடுத்த சிபியும் வடநாட்டு ஜனபதங்களைச் சேர்ந்த அரசர்களுடன் ஒருவன். கரிகாலனின் புகார் நகரமோ வடநாட்டு அமராவதி நகர்போன்று அமைக்கப்பட்டிருந்ததாம். இவ்வாறு வடநாட்டுக் கலாசாரத்தின் தாக்கத்தைத் தமிழ்நாடிலும் ஏற்பட்டுத்தி, செல்வாக்குப் பெற்றிருந்தது பௌத்தம்"[53]**

என்று முனைவர். ஆ.பத்மாவதி பௌத்த ஆதிக்கத்தை எடுத்துரைக்கிறார். எனவே வணிக வர்க்கத்தினர், மன்னர் ஆகிய இரு பகுதியினரும் சமண, பௌத்த சமயங்களை ஆதரித்ததைப் போலவே அவையும் மன்னரையும், வணிகரையும் ஒழுக்கம், அறம், அமைதி என்னும் போர்வையில் ஆதரித்தன. பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்னும் குறளின் வாக்கிற்கேற்ப சொத்துரிமையை ஆதரித்தன. அரசருக்கும், வணிகர்களுக்கும் மட்டுமே படைக்கல வகை என வரையறுத்தது தொல்காப்பியம். சமணத் துறவியாகக் கருதப்படும் தொல்காப்பியர் தாம் இயற்றிய பொருளதிகாரத்திலே அக வாழ்விற்கும், புற வாழ்விற்கும் இலக்கணம் வகுத்து வர்க்கச் சாதிப் பாகுப்பாட்டினை ஏற்றுக் கொண்டு தமது வரைவிலக்கணங்களைக் கூறுகிறார். இவையெல்லாம் அடிப்படையான சமண, பௌத்தக் கொள்கை, கொள்கையிலிருந்து சற்று விலகி, அந்த சமயத்தினர் வணிகத்தை ஆதரித்ததின் விளைவு எனக் கூறலாம். இவ்வாறு சமண, பௌத்த ஆதரவுப் பெற்ற வணிக வர்க்கத்தினரின் பொருளாதரத்தில் ஏற்பட்ட வளர்ச்சியின் காரணமாக சமுதாயத்திலும் அவர்களின் ஆதிக்கம் வலுத்தது. இதனைச் சங்கம் மருவிய காலக்கட்டத்தில் வந்த சிலப்பதிகாரம் நேரடியாகவும், மறைமுகமாகவும் பிரதிபலிக்கிறது.

**"பெருநில முழுதாளும் பெருமகன் தலைவைத்த**

**ஒருதனிக் குடிகளோ குயர்ந்ததோங்கு செல்வத்தான்"**[54]

புகார் நகரத்திலே இப்பெருநிலம் முழுவதையும் ஒருங்கே ஆள்கின்ற பெருமகனான சோழமன்னன் சில குடிகளைத் தலைமைக் குடிகளாக உயர்த்தி வைத்தனன். அத்தகைய குடிப்பெருமைகளோடு நாளும் உயர்ந்து ஓங்குகின்ற செல்வத்தை உடையவன் மாசாத்துவான் என்று இளங்கோவடிகள் வர்ணிக்கிறார். மேலும்

**"முரசு இயம்பின; முருகு அதிர்ந்தன**

**முறை எழுந்தன பணியம்; வெண்குடை**

**அரசு எழுந்தொர்படி எழுந்தன"**[55]

என்று கோவலன் திருமணத்தைக் கூறும்போது முரசுகள் முழங்கினவென்றும், மத்தளங்கள் அதிர்ந்தனவென்றும், சங்கங்கள் முறையே ஒலி முழங்கினவென்றும், அரசன் ஊர்வலமாக எழுந்ததுபோல் வெண்குடைகளும் ஊர்வலமாக எழுந்தனவென்று மன்னருக்குச் சமமாக வணிகனான கோவலனின் திருமணத்தை இளங்கோவடிகள் சிலம்பில் உயர்த்திப் பேசுகிறார்.

மேலும்,

**"உரைசால் சிறப்பின், அரசுவிழை திருவின்**

**பரதர் மலிந்த, பயங்கெழு மாநகர்**

**.......................................................**

**குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்"**[56]

என்று எங்கும் புகழ்ந்து பேசப்படும் சிறப்புடையவர் வணிகர். அரசரும் விரும்பும் செல்வத்தை உடையவர்கள். எவ்வளவு வழங்கினாலும் குறையாத செல்வ வளத்தை உடையவர்கள் வணிகர்கள்.

குல மரபினிற் சற்றும் குன்றாத பண்புடையவர்களாகச் செல்வச் செழுமையுடைய குடியினராக வணிகச் செல்வந்தர்கள் திகழ்ந்தனர் என்று மன்னர்களுக்கு ஒருபடி மேலே வணிகர்களை வைத்துப் பாராட்டுகிறார். இளங்கோவடிகள் மேலும் அரசு அதிகாரத்தையே மாற்றியமைக்கக் கூடிய சக்தியைப் பெற்றவர்களாக வணிகர்கள் ஆதிக்கம் பெற்றதை,

**"அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்று ஆவதூஉம்"**[57]

என்று அரசியல் மாற்றத்தை ஏற்படுத்தக்கூடிய ஆற்றல் பெற்றவர்கள் வணிகர்கள் என்பதை மறைமுகமாக உணர்த்தும் பாடல் வரியாக அமைவதை காணலாம்.

கி.மு.மூன்றாம் நூற்றாண்டிலிருந்து சமண, பௌத்த ஆதரவோடு வளர்ந்த வணிக வர்க்கம் சங்கம் மருவிய காலத்தில் மாபெரும் பொருளியல் சக்தியாகவும், மன்னர்களையே கட்டுப்படுத்தும் அதிகாரம் பெற்றவர்களாகவும் வளர்ச்சியடைந்தனர். இவ்வணிக வளர்ச்சியால் ஏற்பட்ட சுரண்டலின் காரணமாகத் தொடக்க நிலையில் முன்னணியிலிருந்த விவசாய உற்பத்தி சிறிது சிறிதாக பலம் குன்ற ஆரம்பித்தது. இதை,

> **"இச்சூழலில் கிராமப்புறங்களில் மக்கள் விவசாய வளர்ச்சியில் பின் தங்கியிருந்ததால் அவர்களது பொருளாதாரமும் பிந்தங்கியிருந்தது. சிறு தொழிலாளர்களாகிய கைவினைஞர்களும் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தனர். சமூகப் பொருளாதார வளர்ச்சியில் பலம் குன்றியிருந்த நிலவுடமை வர்க்கம் விழித்தெழ ஆரம்பித்தது. தங்கள் வர்க்கங்களின் நலனையும், விவசாயத்தையும் பிரதானமாகக் கொண்ட அரசையே நிலவுடமையாளர்கள் விரும்பினர். வேதங்களும், ஆகமங்களும் கூறுகிற சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் கோயில்கள் எடுக்குமளவுக்கு வளர்ச்சியடைந்திருந்தது நிலவுடமை வர்க்கம்."**[58]

இத்தகைய சூழல்தான் வைதீக நிலவுடமையாளர்களையும், வேளாள நிலவுடமையாளர்களையும் இணைக்கும் சக்தியாக வைதீக - தமிழ்மரபு சார்ந்த சமய உருவாக்கமும், பெருந்தெய்வத் தோற்றமும் ஏற்பட்டது என்பதை வரலாற்று அடிப்படையில் புரிந்து கொள்ள முடியும்.

பெருநிலக்கிழார்களாக இருந்த வைதீக, வேளாளர்கள் உழைக்கும் வர்க்கத்தினரை தம்மோடு சேர்க்கும் பொருட்டாகத்தான் தங்களுடைய சமயக் கடவுளுக்கு உருவம் கொடுக்கும் போக்கு முன்னெடுக்கப்பட்டது. ஏனெனில் உழைக்கும் மக்கள் அறியாமையில் இருப்பவர்கள். நம்பிக்கைகளை மட்டுமே பிரதானமாகக் கொண்டவர்கள் என்பதால், அவர்களுக்கு சமயங்களின் தத்துவ விளக்கம் கொடுத்து ஈர்ப்பது என்பது அவ்வளவு எளிதானது அல்ல என்பதால்தான் அவர்களின் நம்பிக்கைக்கு ஏற்றவாறு கடவுளுக்கு உருவம் கொடுத்து அவர்களுடைய பழைய வழிபாட்டுக் கடவுளர்களையெல்லாம் உள்வாங்கிக் கொண்டு பெருந்தெய்வ உருவ வழிபாட்டு முறையை உருவாக்கி அப்பெருந்தெய்வங்களுக்கு ஏற்ற வகையில் புராண, இதிகாச கதைகள் புனையப்பட்டன. இப்புனைவிற்கு வைதீகம் பேருதவி செய்தது. இத்தகைய ஒருங்கிணைப்பை உருவாக்கியவர்கள் பெருநிலக்கிழார்களாக இருந்த வேளாளரும், வைதீகருமே ஆவர்.

இவ்வுருவ வழிபாட்டிற்கான தொடக்க நிலையைக் காலத்தால் பிந்தைய கலித்தொகை, பரிபாடல் நீங்கலாக மற்ற எட்டுத்தொகை நூல்கள் குறிப்பிடுகின்றன.

கலித்தொகை, பரிபாடல், பத்துப்பாட்டில் பத்து நூல்களும் உருவ வழிபாட்டிற்கு முழுமைத் தன்மை கொடுத்தன. மேலும் புராண, இதிகாச கதைகள் செம்மையாய் அதோடு இணைக்கப்பட்டு தத்துவ விளக்கங்களும் கொடுக்கப்பட்டு, வைதீகம் வளர்ந்த நிலையைச் சுட்டிக்காட்டி நிற்கின்றன. ஆகவே, சங்க காலத்தில் சமயத்தினூடே நிலவுடமையாளார்களுக்கும், வணிகர்களுக்கும் நடந்த போராட்டம் வர்க்கப்போராட்டமே என்பதைத் தெளிவாக உணரமுடியும். உழைக்கும் வர்க்கத்தினரை இணைத்துக் கொண்ட நிலவுடமையாளர்கள் தமிழ்மரபு கலந்த வைதீக சமயத்தை தமது கேடயமாகக் கொண்டு எழுச்சிப் பெற்று எழுந்தனர். மன்னர்களும் வணிக ஆதிக்கத்தால் வலிமை குறைந்து சிறிது சிறிதாகக் கரையத் தொடங்கியபோது, அதில் மூழ்கிவிடாமல் விழித்தெழ வேண்டிய கட்டாயம் அவர்களுக்கு ஏற்பட்டது. இத்தகைய சூழல்தான் எட்டுத்தொகை, பத்துபாட்டு நூல்கள் தொகுக்க காரணமாக இருந்திருக்கக்கூடும். ஏனெனில் இதனை தொகுப்பித்தவர்கள் பெருநிலக்கிழார்களாக இருப்பது ஒரு முக்கியச் சான்றாகும். மேலும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களுக்கு கடவுள் வாழ்த்தாக அமைவது வைதீக மரபு சார்ந்த சிவன், திருமால், முருகன் தெய்வங்கள் என்பதும் இங்கு கருததக்கதாகும். வளர்ந்து வந்த சமண, பௌத்த சமயங்களுக்கான எதிர்வினையாகத்தான் எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் தொகுக்கப்பட்டது என்று கருத முடியும். இக்காலக்கட்டத்தில் சோழநாட்டில் ஆட்சி புரிந்த மன்னன் கோசெங்கணான் என்னும் சோழன் பௌத்த மதச் சார்புடையவனாக வாழ்ந்தவன் சிவ வழிபாட்டில் தன் கவனத்தைத் திருப்பினான். இதற்கு காரணம்,

> **"வணிகம் சார்ந்த பொருளாதாரத் தளங்களையும், அதன் பின்னணியில் கலை, இலக்கியம், கல்வி ஆகிய சமூகத் தளங்களையும், வணிகர்கள் வாழும் நகரங்களையும், அதன் நிறுவன அமைப்புகளான பௌத்த விகாரைகளைம், அரசியல்தளமாக கொண்டு ஆட்சி புரிந்து வந்த சோழ அரச பரம்பரைக்கு இதனின்றும் மாறுபடக் கூடிய ஒரு வரலாற்றுச் சூழலைக் காலம் கனியச் செய்திருந்தது"**[59]

என்று முனைவர் ஆ.பத்மாவதி கோச்செங்கணான் வைதீக சார்புடையவனாக மாறுவதற்கான காரணத்தை விளக்குகிறார். மேலும் அவர்,

**"நிலவுடமை வர்க்கத்தின் ஆதரவில்தான் கோச்செங்கணான் சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் 78 கோயில்கள் கட்டியிருத்தல் வேண்டும். பௌத்த சமயத்தையே செங்கணான் முதலில் சார்ந்திருக்க வேண்டும் என்பதற்கும் பின்னர் சைவனாக மாறினான் என்பதற்கும் பல சான்றுகளைக் கூறலாம்"**[60]

என்று கோச்செங்கணானின் வரலாற்றை குறிக்கிறார்.

செங்கண்ணான் சிவபெருமானிடத்து ஆழ்ந்த பக்தி உடையவன் என்பதால் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார் தமது திருத்தொண்டத்தொகைப் பதிகத்தில், இச்சோழ அரசனை

**"உலகாண்ட செங்கண்ணான்"**[61]

என்று மிகுந்த மதிப்புடன் குறிப்பிடுகிறார். இத்திருப்பதிகத்தை முக்கிய ஆதாரமாக வைத்து பன்னிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் அறுபத்துமூன்று சைவ நாயன்மார்களின் வரலாற்றைக் கொண்டு செய்யுள் வடிவில் பெரியபுராணத்தை இயற்றினார். அந்த நாயன்மார்களில் ஒருவராக கோச்செங்கண்ணான் சோழனையும் சேர்த்துள்ளார் என்பதால் அடியார்கள் கோச்செங்கண்ணான் சோழனுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்ததற்கான காரணத்தைப் புரிந்து கொள்ளலாம். கோச்செங்கணான் காலத்தில்தான் சுரண்டும் வர்க்கமாகிய சமணம், பௌத்தம் சார்ந்த வணிகம் தங்கள் வர்க்க நலனுக்கு ஆபத்து வரும் சூழ்நிலையில் தங்கள் நலனைப் பாதுகாக்கும் ஓர் அரசையே விரும்பியதால் அவ்விருப்பத்தின் விளைவுதான் பௌத்தமத ஆதரவாளர்களாகிய களப்பிரர் மன்னர்களின் வருகையாகும். இதனால் சோழநாட்டில் சோழமன்னன் கோச்செங்கண்ணான் ஆட்சிப் பீடத்திலிருந்து அகற்றப்பட்டு களப்பிரர் அச்சுதவிக் கந்தன் களப்பிரர் ஆட்சியை நிறுவினான். அச்சுதக் களப்பாறனை முதல் மன்னனாகக் கொண்டு தொடங்கிய களப்பிரர் ஆட்சி சுமார் இருநூறு ஆண்டு காலம் நீடித்ததென்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். களப்பிரர் வருகைக்கு முன்னர் வரை சமண, பௌத்தம் தன் சமயக் கருத்துக்களினாலும், நடைமுறைகளினாலும் மக்களையும், மன்னர்களையும் கவர்ந்திருந்தன. ஆதிக்கம் செலுத்தும் நிறுவனமாக விளங்கவில்லை. அதற்கு காரணம் தமிழக மன்னர்கள் பெருநிலக் கிழார்களாகிய நில உடமையாளர்களையும், வளர்ந்து வந்த வணிக வர்க்கத்தினரையும் சமநிலையில் வைத்து தம் கட்டுக்குள் வைத்திருந்தார்கள். அதனால்

சமயப்பொறை என்பது அக்காலத்தில் நிலவியது. அவ்வாறு நிலவியதை மதுரைக்காஞ்சியும், பட்டினப்பாலையும் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

மதுரைக் காஞ்சி எந்த அளவிற்கு வணிக வர்க்கத்தைப் போற்றியதோ அந்த அளவிற்கு உழவுத்தொழிலையும் போற்றியது. மதுரைக் காஞ்சி சமணப்பள்ளி, பௌத்தப்பள்ளி, அந்தணர் பள்ளி போன்றவற்றை விருப்பு வெறுப்பின்றி பொதுத்தன்மையோடு குறிப்பிட்டது. பட்டினப்பாலையும் இதைப்போல் வணிக வர்க்கத்தையும், உழவு வர்க்கத்தையும் சம அளவில் போற்றியது. வேளாண்மையையும், வணிகத்தையும் இருமாடுகள் பூட்டிய வண்டிபோல் நாட்டை சமநிலையில் கொண்டுபோக வேண்டிய கட்டாயச் சூழல் கரிகாலச்சோழன் போன்ற மன்னர்களுக்கு ஏற்பட்டது. ஆனால், வணிக வர்க்கத்தின் கட்டற்ற பொருளியல் வளர்ச்சி மன்னர்களையே கட்டுப்படுத்தும் ஆதிக்கம் கொண்டதாக மாறியதை அதே பட்டினப்பாலை எடுத்துரைப்பதை மேற்கண்ட மேற்கோள்களின் மூலம் நாம் அறிய முடியும். இவ்வாதிக்கத்தால் ஏற்பட்ட பகைமைதான் மண்ணின் மைந்தர்களான தமிழ் மரபோடு கலந்த வைதீகம் சார்ந்த நாயன்மார்களும், ஆழ்வார்களும் பின்னாளில் சமண, பௌத்தத்தை தயவு தாட்சண்யமின்றி அடித்து நொறுக்கக் காரணமாக விளங்கின என்பதை உணர முடியும். களப்பிரர் தமிழகத்தில் ஆட்சியைக் கைப்பற்றியதும் சமணம், பௌத்த சமயங்கள் அரசியல்ரீதியாக செயல்பட ஆரம்பித்தன. இதை,

> **"அச்சுதவிக்கந்தன் காலத்தில் பூதமங்கலத்தில் வேனுதாசர் என்பவராலும், பூம்புகாரில் கணதாசர் என்பவராலும் விகாரைகள் கட்டப்பட்டன"**[62]

என்றும்,

> **"மலைகளில் உள்ள குகைகளில் பௌத்தப் பள்ளிகள் இருந்த செய்திகளையும், கடற்கரைப் பட்டினங்களில் கடல் கடந்து வாணிகம் செய்யும் வணிகர்களும், அறிவுஜீவிகளும் வாழ்ந்திருந்த செய்தியையும் அறிந்திருக்கிறோம். ஆனால், ஊர் நடுவே விகாரைகள் அமைத்துக் கொண்டு பௌத்த பிட்சுக்கள் இக்காலம் முதற்கொண்டே வாழ்ந்திருந்தல் வேண்டும் எனத்தோன்றுகிறது. புகாரில் விகாரை கட்டி கணதாசரும், அதில் தங்கி பல நூல்கள் படைத்த புத்தத்தத்தரும் அச்சுதவிக்கந்தனின் அமைச்சர்கள் எனக்கூறப்படுகின்றனர்."**[63]

என்ற ஆ.பத்மாவதியின் கூற்றின்படி களப்பிரர் காலத்தில் சமணமும், பௌத்தமும் ஆதிக்கத்தின் உச்சத்தில் இருந்தன என்பதை அறிய முடியும். மேலும் இக்கால கட்டிடங்களில் சமணம், பௌத்தம் தவிர வேறு எந்த சமயமும் நிறுவனப்படுத்தப்பட்ட அமைப்பாகச் செயல்படவில்லை. புத்த விகாரைகள், சங்கங்கள், பள்ளிகள் ஆகிய அமைப்பும் பெரும் நிறுவனமாகச் செயல்பட்டன. இதனால் சமண, பௌத்தத் தத்துவம்; நிறுவனம், கல்வி, அறிவு, படை, நிர்வாகம் போன்ற அமைப்புகளுடன் இணைந்ததாக தன்னிகரன்றி தமிழகத்தில் செயல்பட்டு வந்ததைக் களப்பிரர் காலம் உணர்த்துகிறது.

பெரும்பாலான வணிக வர்க்கம் சமண, பௌத்தத்தைச் சார்ந்திருந்தாலும் அன்பு, அறம், ஒழுக்கம், கொல்லாமை, கல்வி, மருத்துவம் போன்ற கொள்கைகளால் அடித்தட்டு மக்களிடத்தில் சமணமும், பௌத்தமும் வெகு இயல்பாகப் பரவின. களப்பிரர்களின் ஆதரவையும் பெற்றன. இதுவே சங்கம் மருவிய காலத்தில் களப்பிரர் தமிழகத்தில் ஆட்சியைப் பிடிக்க வரலாற்றுக் காரணங்களாக அமைந்தன. வைதீக சமயம்; சமண, பௌத்தத்தைப் போன்று பெரும் தத்துவங்களாக உருவெடுக்கவில்லை. தமிழ் மரபு, ஆரிய வைதீக மரபு இணைப்பின் வாயிலாக பெருந்தெய்வ உருவாக்கம் மட்டுமே நிகழ்ந்தன. மேலும் வைதீகம் பெருநிலக்கிழார்களாக விளங்கிய மேல்தட்டு மக்களாகிய வேளாளர்களையும், ஆரிய வைதீகர்களையும் முன்னிலைப்படுத்தியதாலும், பிறப்பால் ஏற்றத் தாழ்வு கொண்ட நிலவுடைமைச் சமூக அமைப்பாக இருந்த காரணத்தினாலும், வேளாண்மை உற்பத்தியைச் சார்ந்து இருந்ததாலும் மக்கள் மத்தியில் அவ்வளவாக ஆதரவு பெறவில்லை. இதன் காரணமாகவே சிலப்பதிகாரமும், மணிமேகலையும் களப்பிரர் காலத்தில் சமண, பௌத்தக் காப்பியங்களாக உருவெடுத்தன. பதினெண் கீழ்கணக்கு நூல்கள் அறத்தை முன்னிலைப்படுத்தி வெளிவந்தன. சமண, பௌத்த கருத்துக்களை பெரும்பான்மையாகக் கொண்ட திருக்குறள் அடித்தட்டு மக்கள் தொடங்கி மன்னன் வரைக்கும்; வேளாண்மை உற்பத்தித் தொடங்கி வணிகம் வரைக்கும் பொதுவான அறத்தையும், ஒழுக்கத்தையும் போதித்து சமநிலை சமுதாயத்தை உருவாக்க முயற்சித்தது. சமயத் தத்துவங்கள் வர்க்கங்களாக பிரிந்து கிடந்தமையால் திருக்குறள் சமகாலத்தில் செல்வாக்குப் பெறமுடியவில்லை.

சமண, பௌத்தச் சமயங்களை வணிகவர்க்கம் கையகப்படுத்தியிருந்தாலும் அதன் கொள்கைகள் மக்கள் சார்ந்ததாக இருப்பதை உணர்ந்து கொண்ட வைதீகம் கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு சமண, பௌத்தத்தின் மக்கள் சார்ந்த அனைத்து கொள்கைகளையும் உள்வாங்கிக்கொண்டு மக்கள் மத்தியில் செல்லத் தொடங்கியது. இதன்

தொடக்கப் புள்ளியாக இருப்பது தமிழ் மண்ணில் சைவப் புரட்சிக்கு வித்திட்ட காரைக்கால் அம்மையார் ஆவார். காரைக்கால் அம்மையார் சமணர்கள் பயன்படுத்திய விருத்தம் போன்ற எளிய இலக்கிய வடிவங்களை கைக்கொண்டு சைவ சமயத்தை மக்கள் மத்தியில் மக்களுக்குப் புரியும் மொழியில் கொண்டு சேர்த்தார். காரைக்கால் அம்மையார் செய்த புரட்சி வைதீகத்தில்; சைவ சமய வளர்ச்சிக்குப் பெரும் திருப்பு முனையாக அமைந்தது. இதன் காரணமாகவே பிற்காலச் சோழர்களின் கோயிற் சிற்பங்களில் சைவ சமய வளர்ச்சிக்கு பெரிதும் வித்திட்ட அப்பர், சுந்தரர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் போன்றோரின் சிற்பம், ஓவியங்களோடு காரைக்கால் அம்மையாருக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டதைக் காணலாம். காரைக்கால் அம்மையாருக்குப் பிறகு சைவ சமயம் மக்கள் மத்தியில் பெரும் இயக்கமாக பரவத் தொடங்கியது. வேளாண்மையையும், சைவத்தையும் முன்னிலைப்படுத்தி சைவ இயக்கம் தம் கொள்கைகளைப் பரப்பியது.

சைவ சமயத்தை மக்கள் மத்தியில் பரப்பியவர்கள் நாயன்மார்கள் என்று அழைக்கப்பட்டனர். கி.பி.மூன்றாம் நூற்றாண்டு வரை வைதீகத்திற்கும்; சமண பௌத்தத்திற்கும் உள்ள உள் முரண்பாடுகளும், காழ்ப்புணர்ச்சிகளும் சமயப் பூசலாக வெளிப்பட்டு நேரடியாகவும், தத்துவப் போராகவும் உருவெடுத்தன. தர்க்க வாதத்திற்கு ஏற்றாற்போல் சைவமும், வைணவமும் தத்துவமாக தமிழ்ச் சூழலில் உருவெடுத்து இருந்தன. கி.பி.ஆறாம், ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் போன்ற நாயன்மார்கள் நேரடியாக சமணத்தை எதிர்த்தார்கள். சம்பந்தருக்கும், சமணர்களுக்கும் நடந்த தர்க்க வாதத்தில் சமணர்கள் தோற்று எண்ணாயிரம் சமணர்கள் கொல்லப்பட்டதாக வரலாற்றுக் குறிப்புகள் குறிப்பிடுகின்றன.

> **"ஒவ்வொரு பதிகத்திலும் எட்டாம் பாடலில் இராவணன் கைலை மலையைத் தூக்கி எடுக்க முயன்று துன்பப்பட்டதைப் பற்றியும் சிவபக்தன் ஆனதைப் பற்றியும் பாடுவான். ஒன்பதாம் பாடலில் பிரம்மனும் திருமாலும் தேடிக் காண முடியாத பெருமை உடையவன் சிவபெருமான் என்பார். பத்தாம் பாடலில் சைன, பௌத்தத் துறவிகளின் போலி வாழ்க்கையை எண்ணியும் கடிந்தும் கூறுவார். பதினொன்றாம் பாடலில் பாடிய தம் பெயரைப் பெருமிதத்துடன் குறிப்பிடுவார்"**[64]

என்று மு.வ கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

சமணச் சமயத்தைச் சார்ந்திருந்த பல்லவ மன்னனை திருநாவுக்கரசர் நேரடியாக எதிர்த்தார் என்பதற்காக அவர் பல இன்னல்களை எதிர்கொண்டார் என்பதை அவரது பாடல்களின் வழி அறிய முடிகிறது. வேளாண்மையின் குறியீடாக உழவாரப் பணியை திருநாவுக்கரசர் கையிலெடுத்து மக்கள் மத்தியில் சைவ சமயத்தின் கொள்கைப் பரப்புச் செயலாளர் போலவே செயல்பட்டார். சைவமும், வேளாண்மையும் ஒன்றையொன்றைச் சார்ந்தது என்பதை,

**"மெய்மையாம் உழவைச் செய்து**

**விருப்பெனும் வித்தை வித்திப்**

**பொய்மையாங் களையை வாங்கிப்**

**பொறையெனும் நீரைப் பாய்ச்சிப்**

**தம்மையும் நோக்கிக் கண்டு தகாவனும் வேலியிட்டுச்**

**செம்மையின் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றோ"**[65]

உண்மையெனும் உழவினைச் செய்து, விருப்பம் எனும் விதையை விதைத்து, பொய்மையெனும் களையைப் பறித்து, பொறுமையெனும் நீரைப்பாய்ச்சி, தம்மையும் உணர்ந்து கொண்டு, தகாதவை வாராதவாறு வேலியிட்டு, செம்மையாக நிற்பவருக்குச் சிவகதி விளையும் என்னும் திருநாவுக்கரசரின் பாடல் அடிகள் சைவத்தையும், வேளாண்மையையும் பிரிக்க இயலாது என்பதை மெய்ப்பிக்கிறது. அதே திருநாவுக்கரசர் மற்றொரு பாடலில்,

**"மனமெனும் தோணி பற்றி**

**மதியெனும் கோலை யூன்றிச்**

**சினமெனும் சரக்க ஏற்றிச்**

**செறிகடல் ஓடும் போது**

**மதனெனும் பாறை தாக்கி**

**மறியும்போ தறிய வொண்ணா**

**உனையுனும் உணர்வை நல்காய்**

**ஒற்றியூ ருடைய கோவே"**[66]

மனமெனும் தோணியைப் பற்றி, அறிவு எனும் துடுப்பை ஊன்றி, சினம் என்னும் சரக்கை அந்தத் தோணியில் ஏற்றிக்கொண்டு, பிறவியாகிய கடலில் ஓடும்போது, மன்மதன் என்னும்

பாறைத் தாக்கி அழியும்போது, அறிவிலே தெளிவாக அறிய இயலாமற் போகுமே அப்போது சிவபெருமானே உன்னை நினைந்து உருகும் உணர்வை அருளி ஆட்கொள்ள வேண்டும் என்று மறைமுகமாக வணிகத்தைத் தாக்குவதுபோல் இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

எனவே, ஒவ்வொரு சமயத் தத்துவத்திற்கும் பின்னால் ஒரு வர்க்கம் இருக்கிறது. சைவம், வைணவம் வேளாண்மை சார்ந்த வர்க்கமாகவும்; சமண, பௌத்தம் வணிகம் சார்ந்த வர்க்கமாகவும் இவ்வர்க்கங்களுக்கிடையே நடந்த வர்க்கப் போராட்டமே நமது தமிழிலக்கியத்தில் ஆயிரம் ஆண்டுகளுக்கான இலக்கியம் என்பதை இவ்வியல் நிறுவுகிறது.

# தொகுப்புரை

சங்க காலத்தின் பிந்தைய காலமான சங்கம் மருவிய காலத்தில் வேளாண்மை உற்பத்தியும், வணிகமும் ஒன்றுக்கொன்று போட்டியிட்டு வளர்ந்தன. கி.மு.நான்காம் நூற்றாண்டளவில் தமிழக அரசுகள் வேளாண்மையை மையமாகக் கொண்ட பொருளாதாரத்தை மட்டுமே கொண்டதாக விளங்கியதென்றும், கி.மு.மூன்றாம் நூற்றாண்டளவில் சமண, பௌத்த வருகையாலும் மேற்கத்திய நாடுகளின் வணிக பரிவர்த்தனையாலும் வணிக வளர்ச்சி மேலோங்கி தமிழகத்தின் பொருளாதாரத்தை நிர்ணயிக்கும் மாபெரும் சக்திகளாக வேளாண்மையும், வணிகமும் வளர்ச்சிப் பெற்றதை சங்கப்பாடல்கள் வழி விளக்கப்பட்டுள்ளது. சோதிட அறிவியல் மூலம் தமிழகத்தில் தங்களை நிலைநிறுத்திக் கொண்ட ஆரிய வைதீகர்கள் மெல்ல மெல்ல மன்னர்களின் அதிகாரத்தோடு பங்கு கொள்ளும் அளவிற்கு அவர்களின் வழிபாட்டு முறைகளும், வேள்வி முறைகளும் மன்னர்களிடம் திணிக்கப்பட்டது விளக்கப்பட்டுள்ளது. ஆட்சி அதிகாரத்தில் பங்கு பெற்ற ஆரிய வைதீகர்கள் பெரும் நிலங்களையும், குறுநாடுகளையும் தானமாகப் பெற்று தமிழகத்தில் முன்னமேயிருந்த பெருநிலக்கிழார்களோடு நிகரான பெருநிலக்கிழார்களாக உருவாகியதை, சங்க காலத்தில் வேளாண்மை உற்பத்தியின் வளர்ச்சியை சங்கப் பாடல்கள் வழி விளக்கப்பட்டுள்ளது. வேளாண்மைக்கு நீரின் முக்கியத்துவம் எத்தகையது என்பதை வெளிப்படுத்தும் பாடல்கள், வேளாண்மையை மையமாகக் கொண்ட மருதப்பண்பாடு நான்கு நிலங்களுக்கும் பொதுவான பண்பாடாக உருமாற்றம் பெற்றது விளக்கப்பட்டுள்ளது. காவிரி ஆற்றின் வளம், காவிரி பாயும் வயல்களின் வளம், விளைநிலத்தின் சிறப்பு, உழவர்களின் செயல் மாண்புகள், உழவர்களின் இல்லச் சிறப்பு, உழவர்களின் விருந்தோம்பல், மருத நில வளம் போன்றவை சங்கப் பாடல்கள் வழி விளக்கப்பட்டுள்ளது. உழவில் சிறந்த மாந்தருக்கு ‘காவிதி’ பட்டம் கொடுக்கப்பட்டு சிறப்பித்தது எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க காலத்தில் ஆரிய வைதீகர், சமண, பௌத்த சமயத்தினர் வருவதற்கு முன்பே தமிழகம் வணிகத்தில் சிறந்திருந்தாலும் இவைகளின் வருகைக்குப்பின் வணிகம் மென்மேலும் வளரத் தொடங்கியது. காவேரி பூம்பட்டினம், கொற்கை, முசிறி போன்ற துறைமுகங்கள் வழியாகவும், தரை வழியாகவும் வணிகம் நடைபெற்றது விளக்கப்பட்டுள்ளது. வடக்கே கங்கை வரையில், கிழக்கே இலங்கை, சாவக நாடு, மலேசியா, பர்மா போன்ற நாடுகளிலும், மேற்கே அரபு நாடு, எகிப்து, ரோம் ஆகிய நாடுகளிலும் வணிகத் தொடர்பு இருந்ததைச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. வணிகர்கள் கூட்டாக சேர்ந்து ‘சாத்து’ என்று அமைத்து வணிகத்தை

நடத்தியதாகவும், இதில் தரை வழியே வணிகம் செய்பவர்களின் தலைவருக்கும் ‘மாசாத்துவன்’ என்றும், கடல்வழியாக வணிகம் செய்தவர்களின் தலைவருக்கு ‘மாநாய்க்கன்’ என்றும் அழைக்கப்பட்டதாக சங்க நூல்கள் குறிப்பிடுவது எடுத்தாளப்பட்டுள்ளது. வணிகம் செய்து பெரும்பொருள் ஈட்டியவர்களுக்கு ‘எட்டி’ என்ற சிறப்புப் பெயரும், ‘எட்டிப்பூ’ என்னும் பொற்பதக்கத்தையும் மன்னர்கள் அளித்து மகிழ்ந்ததை எடுத்தாளப்பட்டுள்ளது. சங்க காலத்தில் அடித்தட்டு மக்களும், சிறுதொழில் புரிவோர் பண்டமாற்று முறையைப் பின்பற்றியும், பெருவணிகர் காசு முறையைப் பின்பற்றியும் வந்ததையும் விளக்கப்பட்டுள்ளது.

தமிழர்கள் கலம் செலுத்துவதில் வல்லவராக இருந்ததால் அவர்கள் பல்வேறு தேசங்களுக்கு வெகு இயல்பாக சென்று வணிகம் செய்ய முடிந்ததும், வணிகர்கள் நகரங்களில் புலால் உண்ணாமல், கொலை, களவு போன்றவற்றில் ஈடுபடாமல் வாழ்ந்ததும் விளக்கப்பட்டுள்ளது. வணிகர்களின் வாழ்வியல்முறை சமண, பௌத்தச் சமயக் கொள்கைகளைப் பின்பற்றியே இருந்தன என்பது விளக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு சமயத்திற்கும் ஒரு வர்க்கப் பின்னணி இருக்கிறது என்பது விளக்கப்பட்டுள்ளது. வணிக வர்க்கத்தின் ஆதரவோடு சமண, பௌத்த சமயங்கள் வெகுவேகமாக தமிழகத்தில் பரவின என்பது விளக்கப்பட்டுள்ளன. வணிகத்தின் வளர்ச்சி; அரசர்களுக்கும், வணிகர்களுக்கும் மட்டுமே படைக்கல வகையென தொல்காப்பியம் வரையறுக்கும் அளவிற்கு வளர்ச்சிப் பெற்றதும், சோழமன்னன் வணிகக்குடிகளை தலைமைக் குடிகளாக உயர்த்தி வைத்ததும், கோவலனின் திருமணம் மன்னனின் திருமணத்திற்கு இணையாக நடத்தப்பெற்றதும் வணிக வர்க்கத்தின் வளர்ச்சியைப் பறைசாற்றி நிற்கின்றன என்பது விளக்கப்பட்டுள்ளது. இதன் விளைவாக மன்னர்களின் அதிகாரத்தையே கட்டுப்படுத்தும் அளவிற்கு அதிகாரம் பெற்றிருந்தனர் என்பதைச் சிலம்பின் மூலம் விளக்கப்பட்டுள்ளது. வணிக வர்க்கத்தின் அபரித வளர்ச்சியின் காரணமாக, வேளாண்மை வர்க்கம் அதிகார வரம்பிலும், பொருளாதாரப் பின்புலத்திலும் பின் தங்கிப் போனதால் ஆரிய வைதீக, தமிழ்மரபு சமய உருவாக்கம், பெருந்தெய்வ தோற்றம் சமண, பௌத்தத்திற்கு எதிர்வினையாக உருப்பெற்றன என்பதும், மன்னர்களின் ஆதரவோடு வளர்ந்த வணிகர்கள் அதிக பொருளாதார வளர்ச்சியின் காரணமாக மன்னர்களின் அதிகார வரம்பையே மீறும் அளவிற்கு உயர்ந்ததால் அவ்வளர்ச்சி மன்னர்களின் ஆதிக்கத்திற்கு பின்னடைவு ஏற்பட்டதும் விளக்கப்பட்டுள்ளது. சமண, பௌத்தச் சமயங்களிற்கு ஆதரவு அளித்தும் இந்நிலை ஏற்பட்டதால் வேறு வழியின்றி வளர்ந்து வந்த வைதீகத்தை ஆதரிக்கும் நிலைக்கு மன்னர்கள் தள்ளப்பட்டது

விளக்கப்பட்டுள்ளது. இதற்கு பௌத்த ஆதரவாளனாகயிருந்த கோச்செங்கண்ணான் பின் வைதீக ஆதரவாளனாக மாறியது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. இவ்வரலாற்றுச் சூழலில் வணிகம் சார்ந்த சமண, பௌத்த ஆதரவாளர்கள் தங்களது வர்க்க நலனுக்கு ஆபத்து வரும் சூழ்நிலையில் தங்கள் நலனை பாதுகாக்கும் ஓர் அரசையே விரும்பியதால் அவ்விருப்பத்தின் விளைவாக பௌத்தமத ஆதரவாளர்களாகிய களப்பிரர் ஆட்சி; சேர, சோழ, பாண்டிய ஆட்சியை அகற்றி உருவாக்கப்பட்டது என்று விளக்கப்பட்டுள்ளது. இதன் விளைவாக சங்கம் மருவிய காலத்தில் அற நூல்களும், அறக் காப்பியங்களும் நேரடிச் சமயச் சார்போடு வந்ததை வரலாற்றின் வழி விளக்கப்பட்டுள்ளது.

கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் வைதீகம்; சமண, பௌத்த சமயங்களின் பெரும்பான்மையான மக்கள் சார்ந்த கொள்கைகளை உள்வாங்கிக் கொண்டு மறுபடியும் தமது வேளாண்மை சார்ந்த வர்க்க நலனோடு வீறுகொண்டு எழுந்ததை காரைக்கால் அம்மையார் வருகையின் மூலம் விளக்கப்பட்டுள்ளது. வணிக ஆதிக்கத்தால் வீழ்ந்துபோன மண்ணின் மைந்தர்களான சேர, சோழ, பாண்டியர்கள் வைதீகத்திற்கு ஆதரவளிக்க வேண்டிய சூழலுக்கு தள்ளப்பட்டதை விளக்கப்பட்டுள்ளது. சைவம், வைணவம் சார்ந்த நிலவுடமை வேளாண்மை வர்க்கம் பெரும் இயக்கமாக நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்ற அடைமொழியோடு மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்றதும், நேரடியாக சமண, பௌத்தத்தை எதிர்த்ததும், நேரடியாக வேளாண்மையை ஆதரித்ததும் திருநாவுக்கரசர், சம்பந்தர் படைப்புகள் மற்றும் வரலாற்று வழியாக விளக்கப்படுள்ளது. மறுபடியும் மண்ணின் மைந்தர்களான சோழர்கள் ஆட்சிபீடத்திற்கு வருவதற்கு சைவ பேரியக்கம் பெரும் துணையாக நின்றது விளக்கப்பட்டுள்ளது. எனவே வைதீக, சமண, பௌத்த முரண்பாடுகள் என்பது வர்க்க முரண்பாடுகளே என்று இவ்வியல் விளக்குகிறது. சைவம் உற்பத்திச் சார்ந்த வர்க்கத்தின் சார்பாக பக்கம் நின்றதால் வெற்றியும் பெற்றது என்று விளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. மதுரை., 120-125.
2. டாக்டர்.கி.முப்பால்மணி, தமிழகத் தத்துவச் சிந்தனை மரபுகள்(முன்னுரை), ப.12.
3. புறம்., 15.
4. மேலது, 16.
5. மேலது, 35: 24-34.
6. மேலது, 18: 1-2.
7. மேலது, 18: 18-30.
8. பொருநர்., 178-213.
9. தேவ.பேரின்பன், தமிழர் வளர்த்த தத்துவங்கள், ப.38.
10. பொருநர்., 232-239.
11. மேலது, 242-248.
12. மேலது, 192-205.
13. மேலது, 207-214.
14. மேலது, 224-231.
15. மேலது, 232-242.
16. மேலது, 243-247.
17. மேலது, 248-252.
18. மேலது, 253-256.
19. சிறுபாண்., 186-195.
20. மதுரை., 106-111.
21. மேலது, 243-248.
22. மேலது, 259-262.
23. மேலது, 10-11.
24. தொல்.பொருள்., 30.
25. மதுரைக்காஞ்சி, 493-499.
26. பொருநர்., 214-217.

27. பட்டின., 28-30.
28. நற்., 254: 6.
29. அகம்., 363: 6-8.
30. புறம்., 66: 1-2.
31. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.79.
32. அகம்., 69: 6-13.
33. மேலது, 251: 12-20.
34. மேலது, 149: 9-11.
35. மதுரை., 315-326.
36. பட்டின., 185-195, 209-212.
37. புறம்., 56: 18-2.
38. பட்டின., 121-140.
39. நற்., 189: 5-10.
40. அகம்., 27: 7-9.
41. மேலது, 130: 8-11.
42. மதுரை., 536-544.
43. பட்டின., 196-212.
44. மதுரை., 500-506.
45. பட்டின., 21-25.
46. மதுரை., 511-522.
47. ஆ.பத்மாவதி, சோழர்கால சமயம், ப.76.
48. தேவி பிரசாத் சட்டோபாத்யாயா, இந்தியத் தத்துவம் ஓர் அறிமுகம், ப.187.
49. மணி., 25: 14-19.
50. மயிலை சீனி.வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், ப.37.
51. Romila Thapar, Ancient Indian social history, P.28.
52. கைலாசபதி, பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும், ப.81.
53. ஆ.பத்மாவதி, சைவத்தின் தோற்றம், பக்.103-104.
54. சிலம்பு., புகார்க் காண்டம், 31-32.

55. மேலது, புகார்க் காண்டம், 46-47.

56. மேலது, மனையறம் படுத்த காதை, 2: 1-8.

57. மேலது, பதிகம் 1: 55.

58. ஆ.பத்மாவதி, சைவத்தின் தோற்றம், பக்.105-106.

59. மேலது, ப.105.

60. மேலது, ப.106.

61. சுந்தரர், தேவாரம், திருத்தொண்டத்தொகைப் பதிகம், 11.

62. ஆ.பத்மாவதி, சைவத்தின் தோற்றம், ப.106.

63. மேலது, பக்.106-107.

64. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.116.

65. திருநாவுக்கரசர் தேவாரம் (நான்காம் திருமுறை), 76: 2.

66. மேலது, (நான்காம் திருமுறை) திருவொற்றியூர் தலம், 46: 2.

# ஆய்வு முடிவுகள்

**'சங்க இலக்கியத்தில் சமய, தத்துவக் கூறுகள்'** என்ற இவ்வாய்வில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின் மூலமும், தொகுப்புரைகள் மூலமும் ஆய்வு முடிவுகள் தொகுத்தளிக்கப்படுகின்றன.

இலக்கியப் பார்வை, வரலாற்று இயங்கியல் பார்வை, தத்துவப்பார்வை, மானுடவியல் பார்வை, திணைக்கோட்பாட்டுப் பார்வை, பொருளாதாரப் பார்வை என்று பல்துறைச் சார்பின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்தால்தான் அதன் உண்மைத் தன்மையை கண்டுபிடிக்க இயலும் என்பது நிறுவப்பட்டுள்ளது. வரலாற்று மானிடவியல் அடிப்படையில் தமிழர்களின் தாய் தெய்வ கொற்றவை வழிபாடு தமிழ் மக்களின் தனித்த வழிபாடு என்பதும்; முருகன், தந்தை வழி சமூக தோற்றத்தின் தெய்வமாகவும், அவன் கொற்றவை மகனாகவும் அவனுக்கென்று அமைந்த 'வெறியாட்டு' வழிபாடும், துணங்கைகூத்து வழிபாடும், குரவைக் கூத்து வழிபாடும், குறமகள் வழிபாடும் தமிழர்களுக்கே உரித்தானது என்பதும் விளக்கப்பட்டுள்ளது. மேலும் 'வெறியாட்டு' வழிபாடு கொற்றவையிலிருந்து முருகனுக்கு சென்றது எடுத்தாளப்பட்டுள்ளது. 'மால்' தெய்வம் தமிழர்களுக்கே உரிய தெய்வமென்றும் குடும்ப அமைப்புத் தோற்றம், குறு அரசு, வேளாண்மை தோன்றிய காலத்தில் 'மால்' தெய்வமாக குறிக்கப்படுவதும் விளக்கப்பட்டுள்ளது. கொற்றவை, முருகன், மால் தெய்வத் தோற்றங்கள் தமிழர் வரலாற்று மானிடவியலுக்கு தொடர்ச்சியான படிநிலை வளர்ச்சியை சுட்டி நிற்கின்றன. இதுபோன்று தொடர்ச்சியான வரலாற்றுப் படிநிலை உலகில் வேறெங்கும் இல்லை என்பதும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

சிந்துவெளிப் பண்பாட்டிற்கும், பண்டைய தமிழ் பண்பாட்டிற்கும் நேரடி தொடர்பு இல்லாவிட்டாலும் பண்பாட்டு அடிப்படையிலும், வழிபாட்டு அடிப்படையிலும் தொடர்பு இருப்பது எடுத்தாளப்பட்டுள்ளது. பண்டையத் தமிழகத்திற்கு ஆரியர் வருகை, சமணர் வருகை, பௌத்தர் வருகை கால வரிசைப்படுத்தப்பட்டு சான்றுகள் மூலம் நிறுவப்பட்டுள்ளது. வேத வைதீக, சமண, பௌத்த சமயங்கள் ஊழ்வினை, நிலையாமை போன்ற கருத்தாக்கங்களை கொண்டிருந்தாலும், சங்ககால தமிழகத்தில் சமணம் ஊழ்வினையை முதன்மைப்படுத்தியும், பௌத்தம் நிலையாமையை முதன்மைப்படுத்தியும் விளங்குவது நிறுவப்பட்டுள்ளது. கர்மவினையை பரிகாரங்களின் மூலம் போக்கலாம் என்னும் வேத வைதீகத்தின் கருத்து அன்று சமணத்திற்கு எதிரான முற்போக்குக் கருத்தாக அமைந்தது எனவும் விளக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் வேத வைதீகர் எவ்வாறு

பெருநிலக்கிழார்களானார்கள் என்பதும் அவர்கள் தமிழக வேளாள பெருநிலக்கிழார்களோடு இணைய வேண்டிய கட்டாயத்தையும் காரண காரியத்தோடு விளக்கப்பட்டுள்ளது.

சங்கப்பாடல்களில் பௌத்த நிலையாமைத் தத்துவம் வெவ்வேறு கோணங்களில் கையாளப்பட்டதையும் காலத்தால் முந்தைய அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற தொகை நூல்களில் தொடக்கக்கால சிவன், விஷ்ணு பற்றியக் குறிப்புகளும், வழிபாடுகளும், சடங்குகளும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டிருந்தாலும், அதற்குப் பின்னால் வந்த பத்துப்பாட்டு நூல்களில்தான் நிலைநிறுத்தப்பட்ட பெருந்தெய்வ வழிபாடாக மாறுவது விளக்கப்பட்டுள்ளது. ஊழ்வினைப்பற்றியும், அறவினைப்பற்றியும், நிலையாமைப் பற்றியும், சமணம், பௌத்தம் காலத்தால் முந்தைய சங்கப்பாடல்களில் வெளிப்படுத்தினாலும், அவை பெரும் நிறுவனமாக சங்க இலக்கியத்தின் பிந்தைய நூல்களான மதுரைக்காஞ்சியிலும், பட்டினப்பாலையிலும் விரித்துரைப்பதைக் கொண்டு நிறுவப்பட்டுள்ளது. அந்நிறுவனத்தை சமணர்கள் தவப்பள்ளி என்றும், பௌத்தர்கள் விகாரைகள் என்றும் அழைக்கப்பட்டது எடுத்தாளப்பட்டுள்ளது. பெரும்பாலான வணிகர்கள் பௌத்த, சமண கொள்கையை பின்பற்றினார்கள் என்பதை பட்டினப்பாலை குறிப்பதைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து நடந்த போராலும், அதனால் ஏற்பட்ட வறுமையாலும், துன்பத்தாலும் உருவான நெருக்கடியான சூழலில்தான் சமணம், பௌத்தம் பண்டைய தமிழகத்தில் மிக இலகுவாக நுழைந்தன என்பது விளக்கப்பட்டுள்ளது. தொல்காப்பிய திணைக்கோட்பாட்டின் அடிப்படையில் அகத்திணையையும், புறத்திணையையும் இயைபுப்படுத்தி சங்க இலக்கியங்களை நோக்கினால் சான்றோர் பெருமக்கள் கூறும் கால வரையறையும் திணைக்கோட்பாட்டு கால வரையறையும் ஒன்றிணைவது நிறுவப்பட்டுள்ளது.

ஒவ்வொரு சமய, தத்துவத்திற்கும் ஒரு வர்க்கச்சார்பு உண்டு என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது. இலக்கியம், கலை, சமயம், தத்துவம், வரலாறு, அரசியல் அறிவு இவைகளால் உருவாகும் பண்பாடு இவை அனைத்திற்கும் அடிநாதமாயிருப்பது பொருளாதாரமே என்னும் கருத்தை ஏற்று தமிழகத்தில் வைதீகத்திற்கும்; சமண, பௌத்தத்திற்கும் நடந்த தத்துவப் போர் அல்லது ஆதிக்கப்போர் வேளாண்மை உற்பத்திக்கும், வணிக உபரி செல்வத்திற்கும் இடையே நடந்த வர்க்கப் போராட்டமே என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது.

பண்டைய தமிழரின் அகம், புறம் என்ற வாழ்வியல் முறை பக்திச் சார்ந்த வாழ்வியல் முறையாக மாற்றமடைவதற்கு சங்க காலத்திலேயே கருத்துப் போர் தொடங்கிவிட்டது

என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது. அக்கருத்துப்போரே அடுத்த ஆயிரம் வருட தமிழக வரலாற்றை தீர்மானித்தன என்பது நிறுவப்பட்டுள்ளது. நிலவுடமைச் சமூக அமைப்பு உருவாவதற்கு பெருந்தெய்வங்களின் தேவையையும், அதற்கு பல பகுதிகளில் நிலவும் குலமுறை வழிபாடுகளையும், சிந்தனைகளையும், நம்பிக்கைகளையும் உள்வாங்க வேண்டும் என்பதை மிகச் சரியாக புரிந்து கொண்ட வைதீகர்கள் அதை மிகக் கூர்மையாக செய்தனர் என்பது விளக்கப்பட்டுள்ளது. மேலும் சங்க காலத்தில் வணிக வர்க்க வளர்ச்சியின் காரணமாக வேளாண்மை வர்க்கம் அதிகார வரம்பிலும், பொருளாதாரப் பின்புலத்திலும் பின்தங்கிப் போனதால்தான் ஆரியவைதீக, தமிழ் மரபு சமய உருவாக்கம், பெருந்தெய்வ தோற்றம்; சமண, பௌத்ததிற்கு எதிர்வினையாக உருப்பெற்றன என்பது நிறுவப்பட்டுள்ளது. கடவுளை மறுக்கும் சமயங்களான சமணம், பௌத்தம் பெரும் வீச்சோடு தமிழகத்திற்கு வந்து தத்துவ ரீதியில் மாற்றத்தை ஏற்படுத்தியபோது அவைகளிலிருந்து தாக்குப்பிடிக்கவும், தங்கள் இருப்பை நிலை நிறுத்திக் கொள்ளவும், வைதீகர்களால் உருவ வழிபாட்டை முன்னிலைப்படுத்தும் சிவ, விஷ்ணு, முருகன் உருவாக்கங்கள் முன்னிலைப்படுத்தப்பட்டன என்பது நிறுவப்பட்டுள்ளது.

சிறு தெய்வம் பெருந்தெய்வமாக்கப்படுவதற்கும், நிறுவனமயமாக்கப்படுவதற்கும் சமூக வரலாற்று பொருளாதார சக்திகளின் பின்னணிகளே என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது. இந்திய தேசியப் பண்பாடு தமிழ்த் தேசிய பண்பாட்டை அடிநாதமாய் கொண்டது என்பதையும் இவ்வாய்வு நிறுவுகிறது. இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்கு சமயங்கள் பக்தியின் மூலம் பெரும் பங்காற்றின என்பதையும் தொடக்க நிலையில் சமயங்கள் ஒருமைப்பாட்டு உணர்வோடு வந்தாலும் நிறுவனமயமாக மாறிய நிலையில் சுரண்டும் வர்க்கத்தால் கைக்கொள்ளப்பட்டதும் விளக்கப்பட்டுள்ளது. மிகச் சிறந்த முற்போக்குச் சிந்தனைகளைக் கொண்டதாக விளங்கிய சமணம், பௌத்தம்; தனிமனிதவாதம், அந்நியமாதல் போன்ற கருத்தாக்கங்களை முன் வைத்ததால் தோற்று போயின என்றும், சனாதன கருத்துக்களையும், பிற்போக்கு சிந்தனைகளையும் வைதீகம் கைக்கொண்டிருந்தாலும் சமூக ஒருங்கிணைப்பை கடவுளின் வழி முதன்மைப் படுத்தியதால் வெற்றிக் கண்டன என்பதை இவ்வாய்வு விளக்குகிறது. எந்தவொரு கலை, இலக்கியமென்றாலும், தத்துவமாக இருந்தாலும் அவை உழைக்கும், உற்பத்தி செய்யும் மக்கள் சார்பாக இருந்தால் மட்டுமே வெற்றி பெறும் என்பது சங்க காலத்தின் இறுதியில் சமணம், பௌத்தம் அடைந்த வெற்றியும், பின்னாளில் சைவசமயம் அடைந்த வெற்றியும் பறைச்சாற்றுகின்றன என்பதை இவ்வாய்வு நிறுவுகிறது. பல்வேறு தேசிய இனங்களைக்

கொண்ட இந்தியா அவற்றின் சிறப்பான கூறுகளை உள்வாங்கிக் கொண்ட கூட்டுவளர்ச்சிதான் தேச வளர்ச்சிக்கும், தேச ஒற்றுமைக்கும் பயன் தரக்கூடியது என்பதை வைதீக சமயம் அடைந்த வெற்றி நமக்கு உணர்த்துகிறது என்பதை இவ்வாய்வு முன் வைக்கிறது.

**மேலாய்வுக்களங்கள் பின்வருமாறு:**

1. சமய வளர்ச்சி அடைப்படையில் சங்க இலக்கியச் சமூக வரலாறு.
2. இருத்தலியம், பின்நவீனத்துவம், பின்காலனீயம் போன்ற நவீன தத்துவங்களின் வர்க்கச் சார்பும், பொருளாதாரப் பின்னணியும்.
3. நவீன காலமும், வைதீகமும்.
4. திணைக்கோட்பாட்டு அடிப்படையில் சங்க இலக்கியக் காலம்.
5. இந்திய, மேற்கத்திய தத்துவங்களின் முரண்பாடுகளும், காரணங்களும்.

# துணைநூற்பட்டியல்

## ஆய்வுக்குரிய முதன்மை நூல்கள்

1. **சோமசுந்தரனார் பொ.வெ.** - **பத்துப்பாட்டு,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1980.

2. ” - **குறுந்தொகை,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1955.

3. ” - **ஐங்குறுநூறு,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1966.

4. ” - **பரிபாடல்,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1957.

5. ” - **கலித்தொகை,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1969.

6. ” - **அகநானூறு,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1970.

7. **துரைசாமிபிள்ளை. அவ்வை.சு** - **புறநானூறு,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1996.

8. ” - **பதிற்றுப்பத்து,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1950.

9. **நாராயணசாமி அய்யர் பின்னத்தூர்.அ** - **நற்றிணை,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1952.

**துணைமை நூல்கள்**

1. **இராமலிங்கத் தம்பிரான். (ப.ஆ)** - **தண்டியலங்கார மூலமும் உரையும்,**
கழக வெளியீடு,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. மு.ப.1997.

2. **சாமிநாத ஐயர்.உ.வே (ப.ஆ)** - **சிலப்பதிகார மூலமும் அரும்பத உரையும், அடியார்க்கு நல்லார் உரையும்,**
கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை
மு.ப.1920.

3. **சாமிநாத ஐயர்.உ.வே (ப.ஆ)** - **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,**
கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை
மு.ப.1918.

4. **சாமிநாத ஐயர்.உ.வே (ப.ஆ)** **மணிமேகலை மூலமும் உரையும்,**
கமர்ஷியல் அச்சுக்கூடம், சென்னை
மு.ப.1921.

5. **சிவஞான சித்தியார்** - **சிவஞான சித்தியார் சுபக்கமும் மாதவச்சிவஞான முனிவர் உரையும்,** சைவ சித்தாந்த பெருமன்றம், மைலாப்பூர், சென்னை-4. ஆண்டு.2017.

6. **சுந்தரமூர்த்தி.கு (ப.ஆ)** - **தொல்காப்பிய சொல்லதிகாரமும் சேனாவரையர் உரையும்,** அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, அண்ணாமலைநகர். மு.ப.1981.

7. **சுந்தரமூர்த்தி நாயனார்** - **தேவாரம் (ஏழாம் திருமுறை),** திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து வெளியீடு. மு.ப.1949.

8. **திருநாவுக்கரசர்** - **தேவாரம் (நான்காம் திருமுறை),** ஞான சம்பந்தம் பதிப்பகம், தருமை ஆதினம், மயிலாடுதுறை-609 001. மூ.ப.2011.

9. **நமச்சிவாய முதலியார்** - **தொல்காப்பிய பொருளதிகார மூலமும், நச்சினார்க்கினியர் உரையும்,** குமாரசாமி நாயுடு சன்ஸ் வெளியீடு, சென்னை. மு.ப.1924.

10. **நமச்சிவாய முதலியார்** - **தொல்காப்பிய பொருளதிகார மூலமும், இளம்பூரணர் உரையும்,** குமாரசாமி நாயுடு சன்ஸ் வெளியீடு, சென்னை. மு.ப.1927.

11. **வேங்கடசாமி நாட்டார். ந.மு (ப.ஆ)** - **யாப்பெருங்கலக்காரிகை மூலமும் உரையும்,** கழக வெளியீடு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. மு.ப.1996.

## ஆய்வு நூல்கள்


1. **அனுராதா. முனைவர்.ப** - **சங்கப் பேழை,**
ரமணி பரந்தாமன் வெளியீடு,
சென்னை-53.
மு.ப. திச.2002.

2. **இலட்சுமணன். கி.எம்.ஏ** - **இந்தியத் தத்துவ ஞானம்,**
பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடு,
சென்னை.
ஆண்டு.1987.

3. **இராசமாணிக்கனார்.ம** - **மொகஞ்சொதரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்,**
நாம் தமிழர் பதிப்பகம், சென்னை-5
மு.ப.2010.

4. **இ.எஸ்.டி, ஞானன்.செ (தொகுப்பு ஆசிரியர்)** - **தத்துவ தரிசனங்கள்,**
மணிவாசகர் பதிப்பகம், சென்னை-108.
மு.ப. டிச.2002.

5. **ஏங்கெல்ஸ்** - **குடும்பம் தனிச்சொத்து அரசு, ஆகியவற்றின் தோற்றம், (பக்தவத்சல பாரதி முன்னுரை),**
கருத்து = பட்டறை வெளியீடு,
2, முதல் தளம், மிதேஷ் வளாகம்,
திருநகர், மதுரை-6, மு.ப.2008.

6. **கல்யாணசுந்தரனார். திரு.வி** - **முருகன் அல்லது அழகு,**
பாரி நிலையம், சென்னை - 108
இருபதாம் பதிப்பு: 2000.

7. **தேவிபிரசாத் சட்டோபாத்யாயா கிருஷ்ணமூர்த்தி.வெ(மொ.பெ.ஆ)** - **இந்தியத் தத்துவம் - ஓர் அறிமுகம்,**
படைப்பாளிகள் பதிப்பகம்,சென்னை-26.
மு.ப.ஜீலை 2015

8. **கைலாசபதி கலாநிதி.க.** - **பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,**
குமரன் பப்ளிஷர்ஸ்,
3, மெய்கை வினாயர் தெரு,
வடபழனி, சென்னை-26.

9. ” **அடியும் முடியும்,**
குமரன் பப்ளிஷர்ஸ், 3, மெய்கை
வினாயர் தெரு, வடபழனி,
சென்னை-26 மு.ப.1996.

10. **சண்முகம் பிள்ளை** - **சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை-600 113.
மு.ப.2009.

11. **சாமி.பி.எல்.** - **தமிழ் இலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை.

12. ” - **சங்க நூல்களில் முருகன்,**
சேகர் பதிப்பகம், சென்னை.
மு.ப.1990.

13. **செல்வராசு.சிலம்பு.நா.** - **தொல் தமிழர் சமயம் (மானுடவியல், சமூகவியல் ஆய்வுகள்),**
காய்வா பதிப்பகம், பெங்களூர்.
மு.ப.:ஆக.2001.

14. ” - **முருக வழிபாட்டின் தோற்றம், மீட்டுருவாக்கம்,**
காரனேஷன், புதுச்சேரி. ஆண்டு.1994.

15. **சுப்பிரமணியன். நா., கௌசல்யா** - **இந்திய சிந்தனை மரபு,**
சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை.
மு.ப.1993.

16. **தமிழ் வளர்ச்சிக் கழகம்** - **தமிழ்க் கலைக் களஞ்சியம்,**
தொகுதி நான்கு, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை .
ஆண்டு.1956.

17. **தமையந்திரன்.வே** - **ஜோதிடம் அறிவியலா,**
பூங்கொடிப் பதிப்பகம்,
சென்னை.

18. **நாராயணன் முனைவர்.இரா** - **சங்க இலக்கிய அரசியல்**
காய்வா, சென்னை-24
இ.ப. 2011.

19. **பத்மாவதி. ஆ** - **சோழர்கால சமயம்,**
குமரன் பப்ளிஷர்ஸ்,
வடபழனி, சென்னை-600 026.

20. ” - **சைவத்தின் தோற்றம்,**
குமரன் பப்ளிஷர்ஸ்,
வடபழனி, சென்னை-600 026.
மு.ப. டிச.2002.

21. **பக்தவத்சல பாரதி** - **இலக்கிய மானிடவியல்**
அடையாளம், புத்தாநத்தம்-621 310.
மு.ப.2014.

22. ” - **தமிழர் மானிடவியல்,**
அடையாளம், புத்தாநத்தம்-621 310.
இ.ப.2008.

23. ” - **வராற்று மானிடவியல்,**
அடையாளம், புத்தாநத்தம்-621 310.
மு.ப.2013

24. பாலசுப்பிரமணியன். கு.வெ - **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்,**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம் - 608 001.
மு.ப.2007

25. **பிள்ளை.கே.கே.டாக்டர்** - **தென் இந்திய வரலாறு (தொகுதி -1),** பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடு, சென்னை. மு.ப.2011.

26. **பேரின்பன். தேவ** - **தமிழர் வளர்த்த தத்துவங்கள்,** பாரதி புத்தகாலயம், சென்னை-18. மு.ப. செப்டம்பர்.2014

27. **மகாலட்சுமி. டாக்டர். தி** - **சோதிட இயல்,** நர்மதா பதிப்பகம், சென்னை-17. மு.ப.1996

28. **மறைமலையடிகள்** - **தமிழர் மதம்,** திருமுருகன் அச்சுக்கூடம், பல்லாவரம், சென்னை. ஆண்டு.1941

29. ” - **வேளாளர் நாகரிகம்,** வ.உ.சி.பதிப்பகம், G-1, லாயிட்ஸ் காலணி, அவ்வை சண்முகம் சாலை, இராயப்பேட்டை, சென்னை-600014.

30. **முத்துப்பிள்ளை. சி** **அருள் சுரக்கும் சக்தி ஆலயங்கள்,** பயனிர் பப்ளிகேஷன்ஸ், சென்னை-44. மு.ப.செப்டம்பர் 2001.

31. **முப்பால் மணி டாக்டர்.கி** - **தமிழகத் தத்துவச் சிந்தனை மரபுகள்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை-98. மு.ப.டிச.2008.

32. **ராசுகுமார். மே.து சரவணன். ப. (ப.ஆ)** - **மயிலை. சீனி. வேங்கடசாமி ஆய்வுக்கட்டுரைகள், தொகுதி - 1,** மக்கள் வெளியீடு, சென்னை-5. மு.ப.டிச.2001.

33. **ராசுகுமார். மே.து சரவணன். ப. (ப.ஆ)** - **மயிலை. சீனி. வேங்கடசாமி ஆய்வுக்கட்டுரைகள், தொகுதி - 2**
மக்கள் வெளியீடு, சென்னை-5.
மு.ப.டிச.2001.

34. **ராதாகிருஷ்ணன் சர்வ பள்ளி (ப.ஆ)** - **கீழைமேலை நாடுகளின் மெய்பொருள் இயல் வரலாறு,**
அண்ணாமலைக் பல்கலைக் கழகம்,
மு.ப. 1970

35. **வரதராசன். மு** - **தமிழ் இலக்கிய வரலாறு,**
சாகித்திய அகாதெமி,
புது தில்லி-110 001.
பதிப்பு.2006.

36. **வானமாலை.நா** - **தமிழர் பண்பாடும் தத்துவமும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
சென்னை-2.
மு.ப.1973.

37. **வித்தியானந்தன்.சு.டாக்டர்** - **தமிழர் சால்பு (சங்க காலம்),**
பாரி புத்தகப் பண்ணை, சென்னை -5.
இ.ப.1971.

38. **வேலுப்பிள்ளை.ஆ** - **தமிழர் சமய வரலாறு,**
பாரி புத்தகப்பண்ணை, சென்னை-5.
இ.ப.1985.

39. **வேங்கடசாமி. மயிலை.சீனி** - **பழங்காலத் தமிழர் வாணிகம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட், லிமிடெட், சென்னை-98.
ஐந்தாம் பதிப்பு. மே.1995.

40. ” - **சமணமும் தமிழும்,**
வசந்தா பதிப்பகம்,
சென்னை-88.
மு.ப.2003.

41. **வையாபுரிப்பிள்ளை.எஸ்** - **தமிழ் இலக்கிய சரிதத்தில் காவிய காலம்,**
அலைகள் வெளியீட்டகம்,
4/9, 4வது முதன்மைச் சாமை,
யுனைடெட் இந்தியா காலனி,
கோடம்பாக்கம், சென்னை-600 024
மு.ப.2010.

42. **ஜார்ஜ் தாம்ஸன்** - **சமயம் பற்றி,**
விடியல் பதிப்பகம்,
கோயம்புத்தூர்-15.
இ.ப. டிச.2009.

43. **ஜா. டி.என்**
**(தமிழில்: அசோகன் முத்துசாமி)** - **பண்டையக்கால இந்தியா,**
பாரதி புத்தகாலயம்,
சென்னை-18.
மு.ப.டிச.2011.

44. **John Marshall. Sir** - **Moheenjadaro and the Indus civilization, vol 1,**
Indological Book House, Delhi.

45. **Krishna Sastri. H.Rao Bahadur** **Epigraphia Indica and Record of the archaeological survey of india, Vol.XVII,**
Government of India Central,
Publication Branch, Calcutta.
Year.1923-1924.

46. **Romila Thapar** - **Ancient Indian Social History,**
Some Interpretations, New Delhi.
Year.1979.

**பார்வை நூல்கள்**


1. **அப்பாத்துரை. கா** - **இந்திய நாகரீகத்தில் திராவிடப் பண்பு,** ஸ்ரீ செண்பகா பதிப்பகம், 328, கிருஷ்ணா நகர், பாண்டி பஜார், தி.நகர், சென்னை-17. மு.ப.2010

2. **அருணன்** - **தமிழரின் தத்துவ மரபு (பகுதி 1&2),** வசந்தம் வெளியீட்டகம், படித்துறை, மதுரை-625001. ஆண்டு.2010 & 2012.

3. **அழகரசன்** - **பக்தி: அனுபவம் - அரசியல்,** மாற்று, J96, நல்வரவு தெரு, அரும்பாக்கம், சென்னை-106. மு.ப.2010.

4. **அனுராதா.ப.முனைவர்** - **குறுந்தொகை மலர்கள்,** ரமணி பதிப்பகம், அம்பத்தூர், சென்னை-53. மு.ப.ஏப்ரல் 2015.

5. **இளங்கோவன்.கு.வை** - **சங்ககாலக் கடவுளர்,** சேகர் பதிப்பகம், சென்னை-600 078. மு.ப.1995.

6. **கார்த்திகேசு சிவத்தம்பி** - **சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113. மு.ப.2009.

7. **காந்தி.க. முனைவர்** - **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை-600 113. மு.ப.2008 .

8. **காவ்யா சண்முகசுந்தரம் பல்லடம் மாணிக்கம் (தொ.ஆ)** - **சங்கத்தமிழ் .தெ.பொ.மீ.களஞ்சியம் V,** காவ்யா பதிப்பகம், டிரஸ்ட்புரம், சென்னை-24. மு.ப.2007.

9. **கோவிந்தன்.கா. புலவர்** - **தமிழர் வரலாறு,** பூம்புகார் பதிப்பகம், 127, பிரகாசம் சாலை, சென்னை-108. மு.ப.2010.

10. **குலசேகரன்.S.டாக்டர்** - **சைவ சமய மறுமலர்ச்சி** திருமகள் வெளியீடு, இ.113, 16வது குறுக்குத்தெரு, பெசண்ட் நகர், சென்னை-90. மு.ப.1993.

11. **சுப்பு ரெட்டியார்.ந. டாக்டர். பேராசிரியர்** - **அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்,** பழனியப்பா பிரதர்ஸ் வெளியீடு, சென்னை. மு.ப.2001.

12. **சுந்தரமூர்த்தி.சி. இரா.ஜெகதீசன் (ப.ஆ)** - **தொல்காப்பிய ஆய்வுக்கோவை, (கட்டுரைகள்)** (தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அகம், புறம் - ஓர் இயங்கியல் பார்வை, ப.181) குறிஞ்சிப் பதிப்பகம், 11, காந்தி வீதி விரிவு, செங்குட்டை, காட்பாடி, வேலூர்-632 007. மு.ப.2015.

13. **சுந்தரமூர்த்தி.சி. வெண்ணிலா.அ. முனைவர்** (ப.ஆ) **தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களில் பொருளியல் சிந்தனைகள் (கட்டுரைகள்)** (தமிழ்ச் சமூகத்தின் நில உடைமை பொருளாதாரக் கட்டமைப்பு ப.275) பொருளியல் துறை, இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி), சென்னை-4. மு.ப.2013.

14. **ஞானி (தொகுப்பு)** - **இந்தியாவில் தத்துவம் கலாச்சாரம்,**
காவ்யா பதிப்பகம்,
14, முதல் குறுக்குத் தெரு,
டிரஸ்ட்புரம், சென்னை-24.
மு.ப.2000.

15. **தேவநேயப் பாவாணர்.ந.** - **பண்டைத்தமிழ் நாகரீகமும் பண்பாடும்,**
ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,
328, கிருஷ்ணா நகர், பாண்டி பஜார்,
தி.நகர், சென்னை-17.
மு.ப.2011.

16. **தேவிபிரசாத் சட்டோபாத்யாயா (தமிழில்: கரிச்சான் குஞ்சு)** - **இந்தியத் தத்துவ இயலில் நிலைத்திருப்பனவும் அழிந்தனவும்,**
விடியல் பதிப்பகம்,
கோயம்புத்தூர்-15.
மு.ப.ஜீலை 2016.

17. **தோதாத்ரி.எஸ்** - **இந்தியத் தத்துவம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை-98
மு.ப.2012.

18. **பக்தவத்சல பாரதி** - **பண்பாட்டு உரையாடல்,**
அடையாளம் பதிப்பகம்,
1205/1, கருபூர் சாலை,
புத்தாநத்தம்-621310
மு.ப.2017.

19. **பாமயன்** - **திணையியல் கோட்பாடுகள்,**
தடாகம் வெளியீடு,
112, திருவள்ளுவர் சாலை,
திருவான்மியூர், சென்னை-41.
மு.ப.2012.

20. **பாஸ்கரன். நா.முனைவர்.** - **தமிழில் தத்துவ நூல்கள்,**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
தரமணி,
சென்னை-600113.
மு.ப.2008.

21. **பிரகாஷ்.வெ.** - **திணை உணர்வும் பொருளும்,**
பரிசல் புத்தக நிலையம்,
அரும்பாக்கம்,
சென்னை-106.
மு.ப.2016.

22. **பிரேம்நாத் பசாஸ்** - **இந்திய வரலாற்றில் பகவத் கீதை,**
விடியல் பதிப்பகம்,
கோயம்புத்தூர்-15.
மு.ப.2017.

23. **புரட்சிதாசன்.டாக்டர்** - **சமயமும் சங்கத்தமிழும்,**
பசும்பொன் பதிப்பகம்,
தி,நகர், சென்னை-17.
மு.ப.1994.

24. **பெருமாள்.அ.கா.** - **பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை-98.
மு.ப.2018.

25. **மாதவன். சு** - **தமிழ் அறஇலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர்,
சென்னை-98.
மு.ப.ஜூலை 2017.

26. **மாதையன். பெ** - **சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-14.
மு.ப.டிச.2014.

27. **மாதையன். பெ** - **அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும்,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-14.
மு.ப.டிசம்பர் 2009

28. **ராஜிவ் மல்ஹோத்ரா (தமிழில்:அரவிந்தன் நீலகண்டன்)** - **உடையும் இந்தியா,**
கிழக்கு பதிப்பகம்,
லாயிட்ஸ் சாலை, ராயப்பேட்டை,
சென்னை-14.
மு.ப.2010.

29. **ராகுல் சாங்கிருத்யாயன் (தமிழில்: ஏ.ஜி.எத்திராஜுலு)** - **இந்தியத் தத்துவ இயல்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை-98.
மு.ப.1985.

30. **ராகுல் சாங்கிருத்தியாயன் (தமிழில்: கண.முத்தையா)** - **வால்காவிலிருந்து கங்கை வரை,**
தமிழ்ப் புத்தகாலயம்,
தி.நகர், சென்னை-17.
மு.ப.1949.

31. **வானமாமலை.நா** - **இந்தியத் தத்துவ மரபும் மார்க்சிய இயக்கவியலும்,**
அலைகள் வெளியீட்டகம்,
4/9, 4வது முதன்மைச் சாலை,
கோடம்பாக்கம், சென்னை-600 024.
மு.ப.2009.

32. **வேலுப்பிள்ளை.ஆ** **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,**
குமரன் புத்தக இல்லம்,
கொழும்பு-10.
மு.ப.1969.

| சான்றோர் செய்யுட் கால ஆய்வும்<br>தொல்காப்பியத் திணைக் கோட்பாடும் (சமூகப் படிநிலை வளர்ச்சி) | | |
|---|---|---|
| **நாகரிகம்** | | **காலம்** |
| **சிந்துவெளி நாகரிகம்** (மொகஞ்சதாரோ ஹரப்பா) | சிவ வழிபாடு, லிங்க வழிபாடு, முருக வழிபாடு, மூன்று கண்ணுடைய தாய் தெய்வ வழிபாடு, திராவிட (தமிழ்) நாகரிகம்.<br>**- மார்ஷல், கைலாசபதி, மா.ராசமாணிக்கனார், டி.டி.கொசாம்பி, டி.என்.ஜா**<br>மொகஞ்சதாரோ, ஹரப்பாவை சுற்றியுள்ள ஊர் பெயர்கள், தமிழகத்தின் ஊர்ப் பெயர்கள்.<br>**- இ.பாலகிருஷ்ணன்**. IAS<br>மற்றும் கீழடி, ஆதிச்சநல்லூர் தொல்பொருள் ஆய்வுகள் சிந்துவெளிக்கும், தமிழகத்திற்கும் தொடர்பு உண்டென உறுதிப்படுத்துகின்றன. ஆனால் நேரடி இலக்கிய தொடர்பில்லை. | **கி.மு.3500** |
| **வேத இலக்கியங்கள்** (ரிக், யசூர், சாமம், அதர்வணம்) | கி.மு.1500 முதல் 1000 வரை ஆரம்ப வேத காலத்தில் ரிக் வேதப்பாடல்கள் இயற்றப்படுதல் மற்ற மூன்றும் அதன் கிளைகள், உபநிடதங்கள், கிருஷ்ண அவதாரத் தோற்றம், பகவத்கீதை தோற்றம், வேதத்திலிருந்து முரண்பட்ட சமண, பௌத்த தோற்றம் கி.மு.1000 முதல் கி.மு.600 வரை.<br>வெட்சி இனக்குழு சமூகத்தின் ஒழுக்கமாகிய ‘ஆநிரை கவர்தலை’ ரிக் வேதமும் குறிப்பிடுவதால் இரண்டும் சமகால இனக்குழு சமூகத்தை சுட்டுவதாக உள்ளது. | **கி.மு.1500 முதல் கி.மு.600 வரை** |

| திணையும், ஒழுக்கமும் | துறைகள் | காலம் |
|---|---|---|
| **வெட்சியது புறன் குறிஞ்சி**<br>(புணர்தல், புணர்தல் நிமித்தமும்)<br>இயற்கைப் புணர்ச்சி<br>இரவுக்குறி, பகற்குறி | வேட்டைச்சமூகமான இனக்குழு சமூகத்தின் இறுதிக் கூறுகள், தாய்வழிச் சமூகத்தின் எச்சமாகிய தாய் தெய்வ வழிபாடு, கொற்றவை வழிபாடு மேலும் தந்தை வழி சமூகத்தின் தொடக்கமாகிய முருக வழிபாடு, நடுகல் வழிபாடு போன்றவற்றின் வளர்ச்சியை சுட்டும் திணை<br>**- தொல்பொருள்**<br><br>வேத வைதீகத்தின் தாக்கம் இல்லை. தமிழர்களின் தனித்த நாகரிகம். | **கி.மு.1500<br>-<br>கி.மு.1000<br>(இருக்கலாம்)** |
| **வஞ்சியது புறன் முல்லை**<br>(இருத்தல், இருத்தல் நிமித்தமும்)<br>எல்லை விரிவாக்கப் பிரிவு | குடும்பம், தனிச்சொத்து, அரசு தோற்றத்தை விளக்கும் திணையாக உள்ளது. கொல்லை செய்கை, மாடு மேய்த்தல், விலங்குகளைப் பாதுகாத்தல், மண்ணாசை நிமித்தமாக போர் தொடங்கல். 'மால்' தெய்வ தோற்றம், காட்டு விலங்கை அடக்கி, பழக்கி வீட்டு விலங்காக மாற்றுதல் (ஏறுதழுவுதல்), விவசாய தொடக்கம்.<br>**- தொல்பொருள், கா.சிவத்தம்பி, க.கைலாசபதி**<br><br>வேத வைதீகத்தின் தாக்கம் இல்லை. தமிழர்களின் தனித்த நாகரிகம். | **கி.மு.1500<br>-<br>கி.மு.800<br>(இருக்கலாம்)** |
| **உழிஞையது புறன் மருதம்**<br>(ஊடலும், ஊடல் நிமித்தமும்)<br>உடமைச்சமூக அமைப்பால் உருவாகும் பிரிவு | 'எயில் அழித்தல்', 'எயில் காத்தல்', வளர்ந்த போர்முறை. 'குடைநாட்கோள்', 'வாள்நாட்கோள்' ஆரிய சோதிட கலப்பு. 'மதிற்குள் இருக்கும் செல்வம்' (உபரிச்செல்வம்), கற்பு நிலைநிறுத்தப்படுதல், வேளாண்மை வளர்ச்சி, தமிழகத்தில் வேள்வி வழிபாடு நிலைபெறுதல், வேத ஆரியர்கள் பெருநிலக்கிழார்களாக உருவாதல், சொத்துடமை நிலைபெறுதல்.<br>**- தொல்பொருள்** | கி.மு. ஏழாம் நூற்றாண்டு அளவில் மெல்ல மெல்ல ஆரிய மக்களுடைய தொடர்பு தமிழ் மக்களுக்கு ஏற்படலாயிற்று.<br>**- கைலாசபதி, ஆ.வேலுப்பிள்ளை, மற்றும் அறிஞர் பெருமக்கள்** |

| திணையும், ஒழுக்கமும் | துறைகள் | காலம் |
|---|---|---|
| **தும்பையது புறன் நெய்தல்**<br>(இரங்கலும், இரங்கல் நிமித்தமும்)<br>வணிகப் பிரிவு | பேரரசு உருவாக்கத்திற்கான போர் (மூவேந்தர் போர்), தானை, யானை, குதிரைப் படையென்று வலிமையான படை அமைப்பு. வணிகத் தொழில் வளர்ச்சியினை காட்டும் திணை, வெளிநாட்டு வணிகத் தொடர்பு வளர்ச்சியடைதல்<br>- **தொல்பொருள், மயிலை சீனி.வேங்கடசாமி** | **கி.மு.700**<br>**-**<br>**கி.மு.400** |
| **வாகை தானே பாலையது புறன்**<br>(பிரிதலும் பிரிதல் நிமித்தமும்)<br>பொருள்வயிற் பிரிவு, கல்வி பிரிவு | 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்..... அனை நிலை வகை'<br>நால்வருண பாகுபாடும் சாதியமும் இறுக்கமடைதலைக் காட்டும் திணை.<br>'பகட்டினானும்...... இருபாற்பட்ட ஒன்பதின் துறைத்தே' சமண சமயத்தின் தாக்கம். மேற்கண்ட எந்த திணையிலும் பேசப்படாத அறத்துறை பேசப்படுகிறது. அறம் சமணத்தின் உயிர்நாடி.<br>- **தொல்பொருள்** | **கி.மு.317-கி.மு.397**<br>பத்திர பாகு முனிவரின் சீடர் வைசாக முனிவரால் சமணம் பரவுதல். மதுரையில் சமண பிராமிக் கல்வெட்டுக்கள்<br>வடபுலத்தில் ஏற்பட்ட பஞ்சம்.<br>**- மயிலை சீனி.வேங்கடசாமி, ஆ.வேலுப்பிள்ளை, தத்துவ தரிசனம்** |

| திணையும், ஒழுக்கமும் | துறைகள் | காலம் |
| --- | --- | --- |
| **காஞ்சியது புறன் பெருந்திணை** (பொது ஒழுக்கம்) | நிலையாமையை வலியுறுத்தும் திணை. பொருந்துகின்ற நெறியைக் கூறுதல். ஐந்து நில மக்களும் மருத உற்பத்தி சார்ந்த பண்பாட்டு வாழ்வியலுக்கு மாற்றமடையும் திணை. அறம், பொருள், இன்பத்தின் தொடக்கம்.<br>**- தொல்பொருள்** | **கி.மு.350**<br>அசோகன் காலம். பௌத்தத்தைப் பரப்பியவர் மகேந்திரன். பாலி மொழியில் 'மகிந்தன்' என்று குறிக்கப்படுகிறார். தென்னிந்தியா, இலங்கையில் பௌத்தம் பரவுதல்.<br>**- மயிலை சீனி.வேங்கடசாமி, நா.வானமாமலை** |
| **பாடாணது புறன் கைக்கிளை** | 'கொடுப்போர் ஏத்திக்<br>கொடாஅர்ப் பழித்தல்'<br>மூவேந்தர் சிதைவைக் காட்டும் திணை அல்லது களப்பிரர்களின் தொடக்கக் காலம்.<br>'ஞாலத்து வரூஉம் நடக்கை' என்பதால் தன் காலத்து நடப்பியலையும், நெறிகளையும், மரபுகளையும் தொல்காப்பியர் துறையாக்கியுள்ளார் என்பதால் தொல்காப்பியர் காலமாக இருக்கலாம்.<br>**- கு.வே.பாலசுப்பிரமணியன்** | **கி.மு.1 - கி.பி.1**<br>கரிகாலச்சோழன் காலம் |

